# திருவள்ளுவர்

## கலை மற்றும் அறிவியல் மகளிர் கல்லூரி,

(மதுரை காமராசர் பல்கலைக்கழக இணைவு பெற்றது)
சூலப்புரம், எழுமலை - 625 535,
மதுரை மாவட்டம், தமிழ்நாடு, இந்தியா

&

## முத்தரசி — கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்,

மதுரை - 625016, தமிழ்நாடு, இந்தியா

# தமிழ்ச் சமூகச் சிந்தனைவெளியில் சுதந்திரம் - சமத்துவம் - சகோதரத்துவம்

பன்னாட்டுக் கருத்தரங்கம்

தொகுதி 1

*இதழ்ப் பதிப்பாசிரியர்*
**முனைவர் சு.தங்கமாரி,**
*முதன்மை ஆசிரியர், முத்தரசி ஆய்விதழ்,*
*மதுரை, தமிழ்நாடு, இந்தியா*

பதிப்பாசிரியர்
**முனைவர் ச.இந்திராமேரி,**
முதுகலைத் தமிழ்த் துறைத்தலைவர்,
திருவள்ளுவர் கலை மற்றும் அறிவியல் மகளிர் கல்லூரி, சூலப்புரம்

*பதிப்புக்குழு*
திருமதி A. பாண்டிச்செல்வி,
முனைவர் A. ஜீவா,
செல்வி R. சண்முகப்பிரியா,
திருமதி N. சந்திராதேவி,
முனைவர் M. கோமதி

திருவள்ளுவர்
கலை மற்றும் அறிவியல் மகளிர் கல்லூரி,
(மதுரை காமராசர் பல்கலைக்கழக இணைவுபெற்றது)
சூலப்புரம், எழுமலை - 625 535, மதுரை மாவட்டம்,
தமிழ்நாடு, இந்தியா
&
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்,
மதுரை - 625016, தமிழ்நாடு, இந்தியா

SPECIAL EDITION : I VOLUME - I

# தமிழ்ச் சமூகச் சிந்தனைவெளியில்
# சுதந்திரம் - சமத்துவம் - சகோதரத்துவம்

## பன்னாட்டுக் கருத்தரங்கம்

**இதழ்ப் பதிப்பாசிரியர்**
**முனைவர் சு.தங்கமாரி**,
முதன்மை ஆசிரியர்,
முத்தரசி ஆய்விதழ்,
மதுரை, தமிழ்நாடு,
இந்தியா.

**பதிப்பாசிரியர்**
**முனைவர் ச. இந்திராமேரி**,
முதுகலைத் தமிழ்த் துறைத்தலைவர்,
திருவள்ளுவர் கலைமற்றும் அறிவியல்
மகளிர் கல்லூரி, சூலப்புரம்.

**பதிப்புக்குழு**
திருமதி A.பாண்டிச்செல்வி,
முனைவர் A.ஜீவா,
செல்வி R. சண்முகப்பிரியா,
திருமதி N. சந்திராதேவி,
முனைவர் M.கோமதி,

**MUTHTHARASI – Art Literary Culture Tamil Journal**
**E-ISSN : 2584-1238**

## நூல் விவரம்

| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | **தமிழ்ச் சமூகச் சிந்தனைவெளியில் சுதந்திரம் - சமத்துவம் - சகோதரத்துவம் (பன்னாட்டுக் கருத்தரங்க ஆய்வுக்கோவை)** |
| முதற்பதிப்பு | : | மார்ச்சு, 2024 |
| பதிப்புரிமை & வெளியீடு | : | தங்கமாரி சுடலை,<br>12/6, மேலப்பொன்னகரம்<br>8வது தெரு,<br>4வது குறுக்கு, ஆரப்பாளையம்,<br>மதுரை - 625016. |
| மின்னஞ்சல் முகவரி | : | laks@muththarasi.org |
| வலைதளம் | : | https://muththarasi.org/ |
| E.ISSN No | : | 2584 – 1238 |
| புத்தக அளவு | : | A4 |
| பக்கங்கள் | : | 274 |
| விலை | : | ₹ 550/- |
| அச்சிட்டோர் | : | லேசர் பாயிண்ட்,<br>வசந்த நகர் முதன்மைச் சாலை,<br>மதுரை – 625 003 |

# பதிப்புரை

“இன்னா தம்ம இவ்வுலகம் இனிய காண்ப; இதன் இயல் புணர்ந்தோரே” - என்ற பக்குடுக்கை நன்கணியார் வரிகளுக்கு ஏற்ப இவ்வுலகின் இயல்பினை உணரத் தான் ஆசை. ஆனால் இன்னாது யாருக்கு? என்ற கேள்வி இயல்பாக எழும் அல்லவா? சுதந்திரம் வேண்டும் எனக் கேட்போர் பலர்; எது சுதந்திரம்? என்ற இணைக்கேள்வியும் இயல்பாக உடன் வருகின்றது. எழுத்தாளர் ஜெயகாந்தன், “அவரவர் நியாயம் அவரவருக்கு” என்று சொல்வது போல, பெண் சுதந்திரத்தைப் பேசினால், ஆணாதிக்க மனப்பான்மையினர் சமூகக் கட்டுப்பாடுகளைக் காரணமாக்கி, சுதந்திரத்தை மறுதலிப்பர். இங்கே ஆணாதிக்கம் என்று சொல்வது கூட ஒருவித எதிர் வன்முறை தானே! இப்படிச் சமூகத்தின் ஒவ்வொரு கூறிலும் எதிரெதிர் கருத்தாக்கங்களை அடிக்கிக் கொண்டே போகலாம்.

‘சுதந்திரம்-சமத்துவம்-சகோதரத்துவம்’ என்ற கருத்தியல் மையமிட்டு மிக நீண்ட தமிழ்ச் சிந்தனைவெளியில் எத்தனை வகையான கருத்துக்கள் வெளிப்பட்டுள்ளன என்பதைப் பதிவு செய்யும் நோக்குடனே, “தமிழ்ச்சமூகச் சிந்தனைவெளியில் சுதந்திரம்-சமத்துவம்-சகோதரத்துவம்” என்ற தலைப்பினைத் தெரிவு செய்து ஆசிரியர்குழு. இந்தத் தலைப்பினை மையமிட்டுக் கருத்தரங்கம் நடத்தலாம் என்று சில கல்லூரிகளை அணுகிய பொழுது, அவர்கள் நடத்த முன்வரவில்லை. மாறாக, ‘ஒருமுனை நோக்கிய தலைப்பாக உள்ளதே!’ - ‘இந்தத் தலைப்பில் கருத்தரங்கம் நடத்தினால் கட்டுரை எண்ணிக்கை வராது’ - ‘பொதுத்தலைப்பில் நடத்தலாம் . . . அப்படி என்றால் தான் ஏதாவது ஒரு தலைப்பில் கட்டுரை வாங்கலாம். ஏனென்றால் இப்பொழுது வாசிப்புக் குறைந்துவிட்டது’. இப்படி இப்படியான பதில்களே வந்தன.

ஒரு கட்டத்தில் தலைப்பைத் தேர்ந்தெடுத்து வைத்தது கூட வன்முறையோ! என்று கூட நினைத்துவிட்டோம். அந்த வேளையில் பெரும் மதிப்பிற்குரிய திருவள்ளுவர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி தமிழ்த்துறைத்தலைவர் முனைவர் ச. இந்திராமேரி அவர்களிடம் பேசிய பொழுது கட்டாயம் நடத்துவோம் என்றார். அப்படித்தான் தொடங்கியது இந்தக் கருத்தரங்கப் பணி.

எத்தனைக் கட்டுரைகள் வந்தாலும் சரி என்று தொடங்கிய இக்கருத்தரங்கிற்கு இப்பொழுது 88 கட்டுரைகள் வந்துள்ளன. இந்தத் தமிழ்ச் சமுகத்தின் சிந்தனைவெளியில் முளைத்த இக்கட்டுரையாளர்களுக்கு நன்றிகள் பல.

உங்கள் கையிலே, தவழும் இந்தப் பன்னாட்டுக் கருத்தரங்கின் ஆய்வுக்கோவை நன்கு மலரக் காரணமான, “முத்தரசி-கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழாய்விதழ்” ஆசிரியர் குழு அனைவருக்கும் நன்றி.

கட்டுரைகளை வாங்கி நன்முறையில் கருத்தரங்கம் நடத்த உதவிய திருவள்ளுவர் கலை மற்றும் அறிவியல் மகளிர் கல்லூரியின் நிர்வாகிகள் முதல்வர் தமிழ்த்துறைத்தலைவர் மற்றும் பேராசிரியர்கள் அனைவருக்கும் நன்றி.

மேலும், இந்தக் கோவையை அழகாக வடிவமைத்துத் தந்த மதுரை லேசர் பாயிண்ட் அச்சகத்தார்களுக்கும் நன்றி.

# THIRUVALLUVAR
## ARTS & SCIENCE COLLEGE FOR WOMEN

Soolapuram-Elumalai-625 535, Madurai Dt,

Govt. of Tamilnadu GO.No:178 Dept.of Higher Edn. (EI) dated : 30-08-2012
MKU Affiliation Order NO: CDC-3/Further Affin./2012-13, dated : 30-11-2002

**Dr. A.Selvakumari** M.A., M.Ed., M.Phil., Ph.D.,
Principal


Date : 16.02.2024

## வாழ்த்துரை

இலக்கியமும், இலக்கணமும் கொண்டு காலத்தை வென்று பல்வேறு நூற்றாண்டுகள் கடந்து இன்றும் இனிமை குறையாமல் கற்போர் நெஞ்சத்தை நெகிழச் செய்யும் அருந்தமிழ் வளர்ச்சிக்கு தன்னிகரற்ற பணியாற்றி வருகின்ற தமிழ்த்துறைக்கு எனது வாழ்த்துக்களைக் கூறிக்கொள்கிறேன்.

உலக மொழிகளுள் முதன்மையான மொழி தமிழ்மொழி அதுபோல் எமது கல்லூரியில் முதன்மையாகவும், பிறதுறைகளுக்கு முன்மாதிரியாகவும் செயல்படுகின்ற தமிழ்த்துறையானது தற்கால மனித சமூகத்திற்கு மிகவும் தேவையான இன்றியமையாத சிந்தனைகளை மையமாகக் கொண்டு தமிழ்ச்சமூகச் சிந்தனை வெளியில் சுதந்திரம் - சமத்துவம் - சகோதரத்துவம் என்னும் பொருண்மையில் பன்னாட்டுக் கருத்தரங்கம் நடத்துவதை பெரிதும் வரவேற்கிறேன்.

ஒரு ஜனநாயக சமூகத்தில் மனிதர்களின் உரிமைகளை பாதுகாப்பதற்காகவும் வாழ்வியலை நிலைநாட்டிக் கொள்வதற்காகவும் பின்பற்றப்படும் கருவிகளாகவே சுதந்திரம், சமத்துவம் மற்றும் சகோதரத்துவம் காணப்படுகின்றன. தற்கால சமூகங்களில் ஒரு தனி மனிதன் தன்னுடைய தேவைகளை நிறைவேற்றுவதற்கு சுதந்திரம் எவ்வளவு முக்கியமானதாக காணப்படுகின்றதோ. அதே அளவுக்கு அச்சமூகத்தில் சமத்துவத்தையும், சகோதரத்துவத்தையும் பேணுவது ஒவ்வொரு தனிமனிதனுடைய கடமையாகும்.

இன்றைய மனிதன் பொருளாதார வேட்கை கொண்டு வாழ்வியல் விழுமியங்களையும், மனித மதிப்பீடுகளையும் தொலைத்து நிற்கின்ற காலகட்டத்தில், "வாழ்க்கைக்கு பொருள் வேண்டும், வாழுகின்ற வாழ்க்கைக்கும் பொருள் வேண்டும்" என்ற உயரிய நோக்கில் தமிழ்ச்சமூகச் சிந்தனை வெளியில் சுதந்திரம் - சமத்துவம் - சகோதரத்துவம் என்னும் தலைப்பினை மையப்பொருளாகக் கொண்டு நடைபெறும் இப்பன்னாட்டுக் கருத்தரங்கம் சிறக்க வாழ்த்துகிறேன்.

"வாழ்க தமிழ்! வளர்க தங்களின் தமிழ்ப்பணி!"

அன்புடன்,

அ. செல்வகுமாரி 16/2/24

முதல்வர்

# இதழ் ஆசிரியர்குழு

## பொருளடக்கம்


| எண் | கட்டுரையாளர் பெயர் | பக்கம் |
|---|---|---|
| 01 | புறநானூற்றில் சமத்துவச் சிந்தனைகள்<br>தை.அந்தோணி ராஜ் | 1 |
| 02 | மணிமேகலைப் பாத்திரங்களின் சுதந்திர உணர்வு<br>முனைவர் பா. பொன்னி | 6 |
| 03 | வைரமுத்து கவிதைகளில் மார்க்சியத் தாக்கம்<br>முனைவர் சி.தேவி | 11 |
| 04 | பாலினச் சமத்துவம்<br>முனைவர் வி. அன்னபாக்கியம் | 17 |
| 05 | பாரதிதாசனின் பொதுவுடைமைச் சிந்தனைகள்<br>முனைவர் கு.வளர்மதி | 24 |
| 06 | எட்டுத்தொகையில் பாதீடு<br>திருமதி மா.முத்துச்செல்வி, | 28 |
| 07 | சென்னைக்கு மிக அருகில் புதினத்தில் சமுதாய மதிப்புகள் - கட்டமைப்பும் கட்டுடைப்பும்<br>திருமதி.மு.பூங்கோதை | 34 |
| 08 | சமத்துவ நோக்கில் நேயர்விருப்பம்<br>திருமதி பெ.ஆனந்தி | 44 |
| 09 | சிலப்பதிகாரத்தில் சமத்துவநீதி<br>திருமதி வீ.வெள்ளைத்துரைச்சி | 50 |
| 10 | பாரதம் சிறக்க பன்முகவழிகள்<br>முனைவர் கீழடி கருமுருகேசன் | 57 |
| 11 | நிலையாமை குறித்த சித்தர் பாடல்களும் - வேதாகம வசனங்களும்<br>செ.மெல்வின் ராஜா | 63 |
| 12 | கல்வியும் சமுதாய மாற்றமும்<br>சு. ஜெயா, முனைவர் கு. இளங்குமார் | 68 |
| 13 | பாரதிதாசனின் பெண்கல்விச்சிந்தனையும் 21-ஆம் நூற்றாண்டிற்கான பெண்களின் கல்விச் சிந்தனையும் - ஓர் ஆய்வு<br>திருமதி.தே.ஸியாணி, திருமதி.ரா.தக்ஷாயினி | 74 |
| 14 | ஆற்றுப்படை இலக்கியங்கள் சுட்டும் தமிழர்களின் வாழ்வியல் நெறிகள்<br>ப. ரதிதேவி | 85 |
| 15 | பாரதியாரின் பாலியல் சமத்துவச் சிந்தனைகள் இலங்கையின் தற்காலக் கல்வி மரபினுள் உட்புகுத்தப்பட்டுள்ள விதம் பற்றிய விவரணப் பகுப்பாய்வு.<br>டி. விதுக்ஷனா மற்றும் ரா. தக்ஷாயினி | 90 |

| | | |
|---|---|---|
| 16 | ஆண்டாள் பாடல்களில் சமத்துவச் சிந்தனைகள்<br>.முனைவர் செ.ஞானேஸ்வரன் | 95 |
| 17 | உமா மகேஸ்வரியின் இருத்தலிய நோக்கில் தற்கொலை என்னும் சிறுகதை<br>பு. வினோதா | 101 |
| 18 | கலைஞரும் சமத்துவமும்<br>முனைவா் ப.தேவராஜ் | 108 |
| 19 | குறுந்தொகையில் பெண்பாற் புலவர்களும் பெண் சுதந்திரமும்<br>முனைவர் ந. ரேவதி | 119 |
| 20 | சங்க இலக்கிய மாந்தர்களின் ஆளுமைக் கூறுகள்<br>முனைவர் அ.இராஜலட்சுமி | 126 |
| 21 | சங்க இலக்கியங்களில் பெண்கவிஞர்களின் சமூக உணர்வுகள்<br>முனைவர் செ.சரண்யா | 134 |
| 22 | தொடக்ககாலக் கவிஞர்களின் புதுக்கவிதைகளில் 'தேசிய ஒருமைப்பாடு<br>நா. மணிகண்டபிரபு | 140 |
| 23 | பண்டைய தமிழரின் கைக்கிளை மரபு<br>முனைவர் ப.மணிகண்டன் | 147 |
| 24 | பாரதியும் சமத்துவச் சிந்தனைகளும்<br>முனைவர் எம் எஸ் ஸ்ரீலக்ஷ்மி | 150 |
| 25 | புறநானூறு கூறும் மன்னர் புலவர் உறவு சுதந்திரம்<br>ச.முருகலெட்சுமி | 156 |
| 26 | ஆலடி பஸ், அவரவர்பாடு சிறுகதையின் வழி பெண்ணிய உளவியல்<br>ஜெ.கங்காதேவி | 161 |
| 27 | ஒப்பீட்டு நோக்கில் வினயா நளினி ஜமீலா தன்வரலாறுகளில் குடும்பத் தலைவிகளுக்கு சமத்துவமின்மை (மலையாள மொழிப்பெயர்ப்புகள்)<br>அ.சரண்யா | 165 |
| 28 | பா.கவிதாவின் 'புத்தரின் ஆசை' கவிதைத் தொகுப்பில் பன்முகச் சிந்தனைகள்<br>முனைவர் மு.செந்தில்குமார் | 173 |
| 29 | இறையன்புவின் முகத்தில் தெளித்த சாரல் - ஓர் சமூகப்பார்வை<br>முனைவர் ஸ்.த.சிமி | 179 |
| 30 | குறிஞ்சித்தேன் நாவல் காட்டும் சமுதாயம்<br>ரா.சண்முகப்பிரியா | 185 |

| | | |
|---|---|---|
| 31 | வள்ளலார் காட்டும் சாதியச் சமத்துவச் சிந்தனைகள்<br>உ.ச.எ.தமிழரசன், | 190 |
| 32 | சிறுதெய்வ வழிபாட்டில் சமத்துவச் சிந்தனை<br>முனைவர் அ.ஜீவா | 196 |
| 33 | வள்ளுவர் காட்டும் சமத்துவம்<br>திருமதி அ. பாண்டிச்செல்வி | 202 |
| 34 | மானுட மேம்பாட்டு சிந்தனைகள்-ஆசாரக் கோவையில்<br>முனைவர் மா.சுகன்யா | 206 |
| 35 | மு.வரதராசனாரின் சிறுகதையில் மனிதநேயம்<br>நா.சந்திராதேவி | 211 |
| 36 | தலைவன் தலைவி சமத்துவ உறவும் சுதந்திர இயல்பும்<br>பேரா.சோ.ஹரிபாண்டிராஜன் | 216 |
| 37 | பெரியாரின் சுதந்திரப் பார்வையில் புராணக் கதையாடல்கள்<br>முனைவர் F.மலர்விழி | 221 |
| 38 | பெண் தெய்வ வழிபாடும் சமத்துவச் சிந்தனையும்<br>முனைவர் ஜெ.குணசீலி | 225 |
| 39 | வீரப்பெண்ணும் விடுதலை ஆணும்<br>தி. பாலமுருகன் | 229 |
| 40 | பாரதியும் பொதுவுடைமையும்<br>முனைவர் ப.கலைவாணி | 233 |
| 41 | குறுந்தொகைப் பாடல்களில் சமத்துவச் சிந்தனைகள்<br>ப.வேணி, முனைவர் உ. கருப்பத்தேவன் | 239 |
| 42. | பாரதி, பாரதிதாசன் பாடல்களில் பெண், சாதியச் சமத்துவச் சிந்தனைகள்<br>பேரா. உ.ச.எ.முகிலன் | 246 |
| 43 | சுற்றந்தழால்<br>முனைவர் லெ. அலமேலு | 252 |
| 44 | பெண் சுதந்திரச் சிந்தனைகள்<br>த. காளீஸ்வரி | 257 |

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 01. புறநானூற்றில் சமத்துவச் சிந்தனைகள்

**தை.அந்தோணி ராஜ்**
**உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை, அண்ணா பல்கலைக்கழக மண்டல வளாகம், மதுரை.**

DOI 10.5281/zenodo.10699471

**Abstract:**

"Brotherhood, Equality, Humanity" in Puruna Hundred years, Sangha poets have composed many songs using the concepts of equality between men and women, God who can help others, love for life, and a sense of balance.

**Key Words: Sangam literature – Poets – Equality**

புறுநானூற்றில் சகோதரத்துவம், சமத்துவம், மனிதநேயம்? ஆண், பெண் சமத்துவம், பிறருக்கு உதவக்கூடிய கடவுள் புலம், ஆருயிர் நேயம், சமநிலை உள்ள உணர்வு ஆகிய கருத்தியல்களை உட்கொண்டு பல பாடல்களைச் சங்கப் புலவர்கள் இயற்றியுள்ளனர். இதன் வாயிலாக சமத்துவம் குறித்த தலைப்பில் அதற்கு ஏற்புடைய கருத்தியல்களை ஆய்ந்து செல்ல விழைகிறது இக்கட்டுரை.

### நேய வாழ்க்கை

அன்புள்ள உள்ளமே ஊற்றெடுக்கும் தளம். அது கள்ளம் கபடற்ற குழந்தை உள்ளமாய் மாறி அன்பானவர்கள் நேய வாழ்க்கையில் ஒன்றுபடுகிறார்கள். பின்பு அவர்களிடையே உயர்வு தாழ்வு உணர்வு தோன்றுவதில்லை. அருள் நிலையில் உயர்ந்து செல்கின்றனர்.

**“யாழொடும் கொள்ளா பொழுதொடும் புணரா**
**பொருள் அறிவாரா ஆயினும் தந்தையார்க்கு..........**
**நெடுமான் அஞ்சி நீ அருளன் மாறே.” (புறம். 92)**

இயல்பாகவே அன்புடைய உள்ளம் கலக்கமற்று பளிங்குபோல் இருக்கிறது. அந்த உள்ளத்திலிருந்து தோன்றும் சொற்கள் எத்தன்மையாதனாலும், அவை பலரையும் தன்வயமாக்கி இன்பம் பயக்கின்றன. முகமலர்ச்சியோடு பிறக்கும் சொற்களும் இவ்விதமாக அன்புளத்தில் அரும்பும் மலர்களே ஆகும். எவ்வளவு வறியவர்களே ஆனாலும் அவர்கள் உள்ளத்தில் அன்பு வெள்ளம் ஊற்றெடுத்து விட்டால், அந்த உள்ளம் உடனே கபடமற்ற உள்ளமாய், இனிய உள்ளமாய், குழந்தை உள்ளமாய் இளகிய நிலைபெறுகிறது.

அவர்கள் உடனே குழந்தைகளைப் போலவே நடந்து கொள்கின்றனர். தமக்குத் தாழ்ந்தவர்களிடத்திலும் அன்புரிமை கொண்டு அவர்கள் ஒத்து வாழ்கின்றனர். தமக்கு வேறானவரிடத்திலும் இயல்பான உரிமை உடையவர்கள் போல் அணுக்கம் கொள்கிறனர். நினைவுகள் இங்ஙனம் ஒருமைப்பட்ட, மொழிகள் பணிவுடையனவாய் உரிமை மேவி ஒன்றாகி விடுகின்றன. இந்நிலையில் அவர்கள் கூறும் சொற்கள் சில வேளைகளில், உரிமை மிகுதியால் இனிமை இல்லாமலும் காலம் கருதாமலும் பொருள் பொருந்தாமலும் இருக்கலாம். அவ்வாறிருந்தாலம் ஒருவர் மேல் ஒருவர் கொண்ட அன்பு மிகவும் முதிர்ந்திருத்தலால் அது

உடனே அருளாகத் தோன்றி அவற்றை ஏற்றுக் கொள்ளும். இங்ஙனம் ஒருவரையொருவர் உயர்வு தாழ்வு கருதாமல் அன்பால் ஒன்றுபட்டு நேய வாழ்க்கை வாழ்தலை விட உலகில் வேறு என்ன பெருமை இருக்கிறது? வேறு என்ன உயர்வு இருக்கிறது?

அவ்வையாரும் அதியமான் நெடுமான் அஞ்சியும் அத்தகைய அழகியல் தகைமையில் வாழ்ந்துள்ளனர். அன்பினால் அளவளாவி மகிழ்ந்திருந்த மேன்மை இந்தப் பாட்டின் வழி தெளிவாகின்றது.

"குழந்தைகளின் மழலைமொழிகள் யாழிசைபோல் இனிமை கொள்ளாமல், காலத்தோடும் இயையாமல் பொருளும் பொருந்தாமல் போனாலும், தந்தைமாருக்கு அவை அன்புடையவனாக அமைவதை உலகியலில் காண்கின்றோம். பகைவருடைய காவல் பொருந்திய மதில் சூழ்ந்த அரண்கள் பலவற்றை எதிர்த்தும் செருநரை வென்றும் தறுகண் ஆண்மையை நிலைநாட்டிய அஞ்சியே அவ்வப்போது என்மீது அருள் கொள்ளுதலால் எனது வாய்ச் சொல்லும் தகைமை சான்றனவாய் இருக்கின்றன" என்று அவ்வையார் உள்ளபடியே குழந்தைகள் போலவே பேசியிருக்கின்றார்.

இப்பாடலில் சமத்துவத்திற்கு அடிப்படையான எதார்த்தமான நேயமும் அதன் பரிணாமங்களும் மாண்புற்று மிளிர்வது தெரிகிறது.

## சமத்துவத்தில் கடவுள்

அருட் குணமே கடவுட் பண்பு, வேற்றுமை கருதாத இயல்பு எனச் சிறப்பாகக் கூறலாம். கடவுள் வழிபாடு என்பது அவன் குணங்களைப் பின்பற்றுவதே. அவ்வாறு பின்பற்றுவோர் கடவுட்குணம் உடையவர்கள் எனப்படுவர். பாரி மன்னன் அத்தகைய குணம் படைத்தவன் என்பதை

**"நல்லவும் தீயவும் அல்ல குவியிணர்ப்**
**புல்லிலை எருக்க மாயினும் உடையவை**
**கடவுள் பேணேம் என்னா ஆங்கு**
**மடவர் மெல்லியர் செல்லினும்**
**கடவுள் பாரி கைவண் மையே" (புறநானூறு : 106)**

இப்பாடலின் வழி அறியமுடிகிறது. கடவுளைப் பலரும் வழிபடுகின்றனர். வழிபாடு என்பதன் உண்மைக் கருத்து, பின்பற்றுதல் ஆகும். இறைவனின் குணங்களும் செயல்களும் செல்லும் வழி, வழிபடுவோர் குணமும் செயல்களும் செல்லுமாயின் அந்த வழிபாடு பயனுடையதாக இருக்கும். பலரும் விரும்புகின்றனர். ஆனால் கடைப்பிடித்தல் அருமையாயிருக்கின்றது. கடவுளின் ஓர் இயல்பு இங்கே எடுத்துக் காட்டப்படுகின்றது.

சூடும் பூக்களிலே நல்லனவும் தீயனவும் உண்டு. இவை இரண்டுமல்லாத எவராலும் சூடாத பூ எருக்கம் பூ. அவ்வெருக்கம் மலரை தனக்குப் படையலாக வழங்கும் போது கடவுள் விருப்பமில்லை என்று ஒதுக்கிவிடுவதில்லை. சூடும் பூக்களை விரும்பி அணிதல் போலவே

அச்சூடாத எருக்கம் பூவினையும் விரும்பி ஏற்றுக்கொள்வார். கடவுளிடத்தில் காணப்படும் இவ்வியல்பினை யார் பின்பற்றினாலும் பின்பற்றாவிட்டாலும் பாரிவேள் அதனைப் பின்பற்றுதலில் சிறப்புடையவனாக விளங்குகின்றான் என்று கபிலர் எடுத்துக் காட்டுகிறார். இதனால் பாரிவேள் கடவுட்குணம் உடையவர் என்பது தெளிவாகிறது.

வேற்றுமையை காணல் அறிவு முனைப்பின் நிகழ்வு. அருட்குணம் எழுகின்ற போது அதன்முன் வேற்றுமை இயல்பு தோன்றாது. எனவே தனிமனித, குடும்ப, சமுதாய, அரசியல், பொருளாதாரம் சார்ந்த உலகியல் வாழ்வில் வேறுபாடுகளற்று கடவுட்குணம் போன்று ஒத்த சமத்துவ குணங்களை உட்கொண்டவராக வாழ்தல் வேண்டும்.

### ஆருயிர் நேயத்தில் சமத்துவம்

சோழமன்னன் குளமுற்றத்து துஞ்சிய கிள்ளிவளவன். அவனது நாட்டைச் சேர்ந்த சிறுகுடிகிழான் பண்ணன் என்பவன், மன்னன் கீழ் வாழ்ந்தவன். அவன் மீது மிகுந்த அன்புடையவனாய் கிள்ளிவளவன் இருக்கின்றான். அதற்கான காரணத்தைப் பின்வரும் இச்செய்யுள் விளக்குகின்றது.

**“யான் வாழும் நாளும் பண்ணன் வாழிய**
**பாணர் காண்க, இவன் கடுப்பினது இடுப்பை......**
**பசிப்பிணி மருத்துவன் இல்லம்**
**அணித்தோ? சேய்த்தோ? கூறுமின், எமக்கே”** **(புறநானூறு : 173)**

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், சோழ நாட்டின் பெருமன்னன் சிறந்த கொடையாளி: வீரன்;: கோவூர்க்கிழார் முதலிய பெருமக்கள் பலரால் மணமகிழ்ந்து பாடும் பேறு பெற்றவன். அவனும் அழகாகச் செய்யுள் பாடுவதில் வல்லவனாக இருந்திருக்கிறான். மேற்கண்ட பாடலை பாடியதும் இவனே ஆவான்.

நான் உயிர்வாழும் ஆயுள் நான்கையும் பெற்று பண்ணன் நீடுவாழ்வானாக. இந்தப் பரிசில் பெறும் சுற்றத்தவர்களின் வறுமைத் துயரைப் பாருங்கள். பழங்கள் நிறைந்த மரங்களில் பறவைகள் கூடி ஒலி எழுப்புவது போன்று பண்ணனிடத்தில் உணவு பெறுகின்ற ஏழைகளின் ஆராவரா ஒலி எங்கும் கேட்கின்றது. மேலும் மழை பெய்யும் காலங்கருதி அதற்கு முன்பே உணவு சேகரிக்க முட்டைகளை எடுத்துக் கொண்டு மேட்டு நிலத்தை நோக்கி வரிசையாகச் செல்லும் சிறிய எறும்புகளின் ஒழுங்கைப்போல, வெண்ணிறமான சோற்று உருண்டைகளைக் கையில் ஏந்தி பண்ணன் இருப்பிடத்திலிருந்து தம் நெருங்கிய சுற்றத்தாருடன் வரிசையாகச் செல்லும் இரவலரைப் பார்க்கின்றோம். இங்ஙனம் நேரில் பார்த்ததும் பசிப்பிணிக்கு மருத்துவனான அப்பண்ணனின் இல்லத்தை விரைந்து அடைய வேண்டும் என்னும் கருத்தில் மீண்டும் மீண்டும் அது அண்மையில் உள்ளதோ தொலைவில் உள்ளதோ என எங்களுக்குச் சொல்லுங்கள் என்று பாணர்களை நோக்கிக் கேட்கின்றான்.

பசிப்பிணிக்கு மருத்துவனாய், அருள் உள்ளம் உள்ளவனாய் இங்ஙனம் ஏழைகளுக்கு இடைவிடாது உதவும் கொடைப்பண்பை உடையவனே சிறுகுடிகிழான். அதுவே பண்ணனது பெருமைக்கெல்லாம் காரணம் எனத் தெரிகின்றது. ஆருயிர் நேயத்தினும் பெருந் தகுதி உலகத்தில் வேறு என்ன இருக்கின்றது என்பதை மேற்கண்ட பாடல் நிறுவுகிறது.

### சமத்துவ உண்மை

தெளிந்த உணர்வு சமநிலைத் தன்மையுடையது. அத்தன்மையுடையோர் செயல்கள், உடமைச் செயல்களாய் நிகழ்வன எத்தகைய உலகியல் அலைகளிலும் வேறுபாடுகளிலும் இவ்வுள்ளம் சமத்துவநிலை பிறழாமல் பணிபுரியவல்லது. இத்தகைய உள்ளம் படைத்த அரசச் சான்றோர் பண்பு பாங்கோடு விளங்கியிருந்தனர். தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் அத்தகைய மேம்பாடு உடையவருள் ஒருவன் இத்தகைய நிலையை பின்வரும் பாடல் விளக்குகிறது.

**கிண்கிணி களைந்த கால் ஒண் சுழல் தொட்டு,**

**குடுமி களைந்த நுதல் வேம்பின் ஒண் தளிர்...........**

**மகிழ்ந்தன்றும் மலிந்தன்றும் அதனினும் இவனே” (புறநானூறு : 77)**

குழந்தைப் பருவம் இன்னும் கழியவில்லை என்பதை காட்டுகின்றார் புலவர். மார்பில் ஐம்படைத் தாலி என்னும் அணிகலன் களையவில்லை: பால் உண்டு கொண்டிருத்தலை விடுத்து உணவு இப்பொழுது தான் உண்ணத் தொடங்கியிருக்கின்றான் என்று இடைக்குன்றூர் கிழார் நெடுஞ்செழியனின் இளமையைக் கூறி அவன் தலையாலங்கானத்துச் செருவில் வலிமை மிக்க இளைஞனாய் தோன்றிய காட்சியினை வியந்து எடுத்துரைக்கின்றார்.

தலையாலங்கானத்தில் எழுவர் மாற்றரசர் தன்மேல் படையெடுத்து வந்தோரைப் பாண்டியன் நெடுஞ்செழியன் தான் ஒருவனாக இருந்து போர்களத்தில் எதிர்த்துத் தோல்வியுறச் செய்தான். அப்போது அவன் மிகவும் இளைஞனாகத் திகழ்ந்தான்.

தன்மேற் சினந்து முறையாகப் படையெடுத்து வந்த புதிய வீரர்களை நெடுஞ்செழியன் மதிக்கவும் இல்லை. அவமதிக்கவும் இல்லை. அதைவிட, அவர்கள் அத்தனை பேரையும் தான் ஒருவனாகவேயிருந்து இறுகப் பற்றி அழித்ததற்கும் மகிழ்ச்சியும் கொள்ளவில்லை. அதற்காகத் தன்னைப் பெருமையுடையவனாகவும் கொள்ளவில்லை.

இவ்வளவு அழகான சமநிலை உள்ளம் கொண்டவனாக பாண்டியன் நெடுஞ்செழியன் தன் கடமையை மட்டுமே செய்ததாக கருதினான் என்பதை உணர முடிகிறது. மிக்க பச்சிளம் பருவத்திலே இந்த சமநிலை உள்ளம் கொண்டவானக இருக்கிறான் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

### புலவர்களின் பொருட் செலவு

புலவர்கள் பெரும் செலவாளிகள். காரணம் பலருக்கு உதயவியவர்களாய் இருப்பதுதான். பிறர் நோயைத் தம் நோயாக காண்பவர்கள். அவர்கள் பொருள் கிடைத்த பொழுதே

செலவழித்துவிடுவார்கள். வருங்காலத்திற்கென்று சேமிப்போ சிக்கனமோ அவர்களிடம் இருந்ததில்லை. எப்போதும் அவர்களுக்குப் பொருள் தேவையாகவே இருக்கும் என்பதை கீழ்வரும் பாடல் விளக்குகிறது.

**"சுவல் அழுந்தப் பல காய**

**சில் ஓதிப் பல் இளைஞருமே.....**

**வருத்தலும் உண்டு, என்பைதல் அம்கடும்பே"** **(புறநானூறு : 139)**

நாஞ்சில் மலைக்குத் தலைவன் நாஞ்சிவ் வள்ளுவன். அவனது ஈரமுள்ள நெஞ்சினை அணுகி மருதனிளநாகனார் என்னும் புலவர் பரிசில் விரும்பிய போது பின்வரும் காரணத்தை எடுத்துக்காட்டி பரிசில் பெற விரும்புகிறார்.

"இளைஞரும் விறலியருமாக என்னைச் சூழ்ந்திருப்போர் பலரும் வருத்தமில்லாது வாழ வேண்டும் என்பதற்காக நான் உன்னிடம் பொய் கூறமாட்டேன். மெய்யே கூறுவேன். அவர்களுக்கு உதவுவதற்கு என்னிடம் ஒரு பொருளும் இல்லை என வெளிப்படையாகக் கூறுகிறார் புலவர்." நாஞ்சில் தலைவா உன்னிடம் பரிசலுக்கு வந்து தங்கி உன் உள்ளம் நெகிழ்வதைப் பார்த்துக் கேட்கும் நேரமாக இல்லை என்பது நிலை. உண்மையைச் சொன்னேன். மேலும் நிலம் அதிர்ந்தாற்போல ஒரு நாள் உனக்குப் போர் வந்து நேருமானால், நீ வேறு எதனையும் கவனிக்க மாட்டாய். பசித்துன்பத்தை உடைய என் சுற்றங்கள் வருந்துதலும் நேரும்.

பண்டைய காலத்தில் புலவர்கள் இவ்வாறு பற்றற்ற மெய்ஞ்ஞானிகளாய், அவ்வப்போது ஈகையாளர்களாய் கிடைக்கும் பொருளை மக்கள் பலருக்கும் உதவி அருள் ஒழுக்கம் பூண்;டு விளங்கினார். அத்தகையர்களுக்கு நாடெல்லாம் உரிமைதானே. நாஞ்சில் வள்ளுவனை மருதனிள நாகனார் எவ்வளவு சிறப்பான தகைமையோடு இச்செய்யுளில் கேட்டிருக்கின்றார். இத்தகைய திறத்தோடு சங்க இலக்கியப் பாங்கொடு வாழ்ந்து தனக்கென வாழாது பொதுமை நோக்கோடு, சமத்துவப் பாங்கோடு வாழ்ந்து வந்துள்ளனர். இன்று அவர்கள் இல்லையாயினும் அவர்களது உயர்ந்த கருத்தியல்கள் நம்மிடையே பதிவாகியிருக்கின்றன.

சிறந்த புலவர்கள் பலர் அவ்வப்போது கையில் பொருளில்லாதவர்களாய் இருப்பது வழக்கம். கையில் பொருள் கிடைக்கும் பொழுது இறுக்கிப்பிடித்து சேமித்து வைப்பது அவர்களுக்கு பழக்கமில்லை. பொருளைப் பெருக்குவதும் அவர்களது நோக்கமாகவும் இருந்ததில்லை. மிக்க அருள் உள்ளம் கொண்ட கிடைக்கும் பொருட்களை அனைவருக்கும் கொடுத்து புண்ணியத்தைத் தேடிக் கொண்டனர். தம்மைச் சூழ்ந்திருக்கும் மகளிரும் ஆடவரும் வருந்துவதை அவர்களது உள்ளம் தாங்காது. அன்பும் இரக்கமுமே உருவானவர்கள். இவ்வாறு சங்ககாலத்தில் எந்தவொரு நிகழ்வையும் ஏற்றத் தாழ்வின்றி சமமாகவே கருதினர் என்பதை மேற்கண்ட பாடல்களின் வழி அறிந்து கொள்ள முடிகிறது.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 02. மணிமேகலைப் பாத்திரங்களின் சுதந்திரஉணர்வு

**முனைவர் பா.பொன்னி**
இணைப்பேராசிரியர்& துறைத்தலைவர் முதுகலை மற்றும் தமிழாய்வுத்துறை,
தி ஸ்டாண்டர்டு ஃபயர்ஒர்க்ஸ் இராஜரத்தினம் மகளிர் கல்லூரி(தன்னாட்சி),சிவகாசி.

DOI 10.5281/zenodo.10699500

**Abstarct:**

Freedom is not given by others. Freedom is the right to make one's own decisions without being controlled by others. Liberty, equality, and fraternity all have common characteristics underlying society. These will be adapted to the respective times. In Manimekalai Kappiyam, this article examines the characters of Madhavi and Manimekalai, who despite being born in Parathamaikulam, are free to live according to their own will and succeed in that way of life.

**Key Words : Freedom – Kappiya Ilakkiyam – Manimegalai**

சுதந்திரம் என்பது பிறர் கொடுத்துக் கிடைப்பது அல்ல. பிறருடைய கட்டுப்பாட்டில் இல்லாமல் தன்னுடைய முடிவுகளைத் தானே எடுக்கக்கூடிய உரிமையே சுதந்திரம் எனலாம். சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் இவை அனைத்திற்கும் சமூகத்தின் அடிப்படையிலான பொதுப்பண்புக்கட்டமைப்புகளும் உண்டு. இவை அந்தந்தக் காலச்சூழலுக்கு ஏற்பமாற்றம் பெற்று அமையும் .மணிமேகலை காப்பியத்தில் பரத்தமைக்குலத்தில் பிறந்திருந்தாலும் சமூகக்கட்டமைப்புக்கு மாறாகத் தம்முடைய எண்ணம் போல வாழும் சுதந்திரஉணர்வு பெற்று அவ்வாழ்க்கை முறைமையில் வெற்றி பெற்ற மாதவி மற்றும் மணிமேகலை பாத்திரங்களை ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

## மாதவி

சிலப்பதிகாரம், மணிமேகலை எனும் இரண்டு காப்பியங்களிலும் இடம்பெறும் முதன்மைப்பாத்திரம் மாதவி. பரத்தைக் குலத்தில் பிறந்தாலும் ஒருவனுக்கு ஒருத்தி என்ற சிறந்த ஒழுக்கமுறையில் வாழ்ந்தவள்.

கோவலனும் மணிமேகலையைத் தன் மகளாகவே எண்ணி இருக்கிறான்." குழவியீன்று எடுக்க மாமுதுகணிகையர் மாதவி மகட்குப் பெயரிட வேண்டும் என்று கூறினர். உடன் கோவலன், முன்பு எம்குலதெய்வமாகிய மணிமேலையின் பெயரினை இடுவீர்களாக என்று கூறினான். மேலும், அவன் மாதவியோடு கூடிச் 'செம்பொன்னை மாரி போலப் பொழிந்தான்.'(சிலம்பு-15:22-41)

மேல் செய்தியில் குலதெய்வத்தின் பெயரை மாதவி மகளுக்கு இடுவதும், மாதவியோடு கூடித் தானம் செய்வதும் எளிய இயல்பான செயல்கள் அல்ல. இச்செயல்கள், தொன்முறைக் கிழத்தியோடு தொடர்புறுத்திப் பேசப்பெறுதல் வேண்டும். ஆயின், இவை மாதவியோடு தொடர்புபடுத்திப் பேசப்பெறுவதால் மாதவி கோவலனின் மனைவி என்ற நிலைக்கு உயர்த்தப் பெறுகின்றாள்"[1] எனும் கருத்து உறுதுணையாக அமைகிறது.

கோவலன் மாதவி ஊடலுக்குப் பின், மாதவி இருமடல்களைக் கோவலனுக்கு வயந்தமாலை, கோசிகன் மூலம் அனுப்புகின்றாள். ஆனால் இறுதியில் கோவலன் கண்ணகி இருவரும் இறந்துவிட்டார்கள் என்ற செய்தியே அவளுக்குக் கிடைக்கிறது. அதன் பிறகு மாதவி துறவுநிலைக்கு அறவணடிகளின் அறச்சிந்தனையின் மூலம் செல்கின்றாள்.

ஊர் மக்களின் அலருக்கும் அஞ்சாது தன் மகளையும் துறவுநிலைக்குக் கொண்டு செல்கின்றாள். மாதவி மணிமேகலையை கண்ணகியின் மகள் என்று கூறுகின்றாள். இதன்வழி மாதவி சுதந்திர சிந்தனையுடன் செயல்படுவதனை அறியலாகின்றது.

## துறவு பூணுதல்

மாதவி கோவலன் மீது தான் கொண்ட அன்பினை துறவறத்தின் மீது மாற்றிக் கொள்கிறாள். தற்காப்பு இயங்குமுறைகளுள் ஒன்றே பதிலீடு (அ) மடைமாற்றம் என்பதாகும். ஒன்றின் மீது நாம் கொண்டுள்ள உணர்வின் வேகத்தை மாற்றிப் பிறிதொன்றில் செலுத்துவதே மடைமாற்றம் ஆகும். பதிலீடு (அ) மடைமாற்றம் பற்றி உளவியலாளர், "மனிதன் ஒருவன் தன்னிடம் ஒரு குறைபாடு இருப்பதாக உணர்ந்து அதனைப் போக்கிக் கொள்ள முயல்கிறான். அது முடியாத போது அதற்குப் பதிலாக வேறொரு புதிய ஆற்றலைப் பெருக்கிக் கொள்ள முயல்கிறான்"[2] என்று குறிப்பிடுகின்றனர். கோவலனின் இறப்பிற்குப் பிறகு மாதவி தன்னைத் தானே ஆற்றிக் கொண்டு தன்மனநிலையை மடைமாற்றம் செய்து தன்னிச்சையாக முடிவெடுக்கிறாள்.

மாதவியின் இந்நிலை குறித்து "மற்றைய பெண்களைப் போல மகள் ஒருத்தியைப் பெறுகிறாள். எனினும் அது அங்கீகரிக்கப்படவில்லை. கோவலன் பெற்றோர்கள் வந்து அன்பு காட்டவே இல்லை. பிரிந்து வருந்தியிருந்த நிலையிலும் அவா்கள் வந்து ஆதரவு காட்வில்லை. அன்பு என்பதைப் பெற முடியாமல் போய் விடுகிறது. வாழ்க்கையில் ஒதுங்க வேண்டி நோகிறது. அதற்குத் தான் துறவு என்று பெயா வழங்கப்பட்டது"[3] என்று குறிப்பிடுவா கோவலனின் இறப்பினை ஏற்கும் நிலையில் மாதவி தன்மனத் துயரத்தினை மாற்றிக் கொள்ள முடிவெடுக்கும் திறத்தினை,

"கோவலன் இறந்த பின்கொடுந் துயரெய்தி
மாதவி மாதவர் பள்ளியுள் அடைந்தது"

(மணி.,உதயகுமரன்அம்பலம்புக்ககாதை: 7-8)

என்ற அடிகளால் அறியமுடிகிறது. கோவலனின் இழப்பினை ஈடுசெய்யும் விதமாகவும், உலகத்தாரால் தவறான கண்ணோட்டத்தில் பார்க்கப்படுவதினின்று நீங்கவும் 'துறவு' என்ற வலிமையான செயலினைப் பின்பற்றி சுதந்திரமாக முடிவெடுத்துத் தன்னைத்தானே தற்காத்துக் கொண்ட மாதவியின் திறனை இதன்வழி அறியலாகிறது.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

## மணிமேகலையையும் துறவு மேற்கொள்ளச்செய்தல்

மாதவி தான் துறவினை மேற்கொண்ட தோடுநில்லாமல் மணிமேகலையையும் துறவு பூணச் செய்கின்றாள். மனிதனின் மனம் இடத்திற்கு இடம் மாறுபடக்கூடியது. மேலும், மனிதன் மனதினைத் தனக்குச் சாதகமான சூழலுக்கு ஏற்ப மாற்றுவதிலும் வல்லவன். இத்தகைய திறனை அறிவார்ந்த செயல்பாடு(Rationalisation) என்பர் உளவியலாளர் அறிவார்ந்த செயல்பாட்டினை, “கவலைகள் துன்பம் ஆகியவற்றிலிருந்து விடுபட்டுச் சூழ்நிலைக்கு ஏற்றவாறு உண்மையான காரணங்களைக் கூற விழைவதாகும்”[4] என்று குறிப்பிடுவர்

மாதவியின் தாய் சித்ராபதி, ஊர்மக்களின் அலரைக் கூறி மணிமேகலையைக் கணிகையர் தொழிலில் ஈடுபடுத்த பல முயற்சிகளைச் செய்கிறாள். மாதவியோ மணிமேகலையைத் தன்குல ஒழுக்கத்தைப் பின்பற்றாமல் அறத்தை மேற்கொள்ளக் கூடியவளாக வளர்க்க விரும்புகிறாள்.

**“மாபெரும் பத்தினிமகள் மணிமேகலை**
**அருந்தவப்படுத்தல் அல்லதியாவதும்**
**திருந்தாச்செய்கைத்தீத் தொழிற்படாஅள்”**

**(மணி., ஊரலருரைத்தகாதை: 55 - 57)**

என்று மணிமேகலையைக் கண்ணகியின் மகளாகவே காட்டுகிறாள்.

எனவே மணிமேகலை போற்றத்தகாத ஒழுக்கத்தை மேற்கொள்ளமாட்டாள் எனக் கூறியதோடு, அவளையும் துறவியாக்கினாள் என்பதை,

**“மாதவிநற்றாய்மாதவிக்குரைப்ப**
**வருகவென்மடமகள்மணிமேகலையென்று**
**உருவிலாளனொருபெருஞ்சிலையொடு**
**விரைமலர்வாளிவெறுநிலத்தெறியக்**
**கோதைத்தாமங்குழலொடுகளைந்து**
**போதித்தானம்புரிந்தறம்படுத்தனள்”**

**(சிலம்பு., வரந்தருகாதை: 23-28)**

என்ற அடிகளால் அறியமுடிகிறது. மாதவி அறவணஅடிகளிடம் தான்பெற்ற போதனையால் மணிமேகலையையும் பந்தபாசத்திற்கு அடிமையாக்காமல் துறவியாக்கிய அறிவார்ந்த செயல்பாடு உடையவளாக சுதந்திரத்தன்மையுடன் மாதவி திகழ்வதனை அறியலாகின்றது.

## மணிமேகலை

கோவலன் மாதவியின் மகள் மணிமேகலை. மணிமேகலைக் காப்பியம் முழுவதும் இவளைச்சுற்றி அமையும் மேகலையாக அமைகின்றது. “(பௌத்ததுறவிகள்) எவ்வுயிர்க்கும்

துன்பம் செய்யாதவர்கள். தனக்கு துன்பம் செய்தார்க்கும் நல்லனவே செய்பவர்கள். எவ்வுயிராயினும் அதனைத் தன்னுயிர் போல எண்ணி இறங்க வேண்டும். உணவு, உடை, உறையுள் கொடுத்தலே தலைசிறந்த அறம் என்று மணிமேகலை சுட்டுகிறது"[5] என்பா மணிமேகலை மன்னுயிர் காக்க புத்தசமயத் துறவியாக மாறுகிறாள். தன் முன்பிறவி பந்தத்தால் உதயகுமாரன்மீது காதல்வயப்படுகின்றாள். பின் இப்பிறவியின் நோக்கத்தினை அறிந்து அதிலிருந்து விடுபட்டுத் தன் கடமையை ஆற்ற முற்படுகின்றாள். உதயகுமரனின் விருப்பத்தில் இருந்து தப்பிப்பதற்காக மந்திரங்களின் வழி காயசண்டிகை வடிவம் கொள்கிறாள். காயசண்டிகையின் கணவன் காஞ்சனன் மணிமேகலையைத் தன் மனைவி என்று தவறாக எண்ணிக் கொள்கிறான். அதன் விளைவாக உதயகுமரனைக் கொலை செய்கின்றான். இதனால் மணிமேகலை இராசமாதேவியின் கோபத்திற்கு ஆளாகின்றாள். இராசமாதேவியின் சூழ்ச்சியில் இருந்து தப்பி சிறைக்கோட்டத்தினை அறக்கோட்டம் ஆக்குகிறாள். தன்னுடைய செயல்களைத் தானே முடிவெடுக்கும் திறன்பெற்றவளாக மணிமேகலை அமைவதனைக் காணமுடிகிறது.

## காயசண்டிகை வடிவம் கொள்ளுதல்

சிந்தனைத் திறன் என்பது ஆறறிவு உடைய மனிதருக்கே உரியதாகும். மனிதனுக்கு ஏற்படக்கூடிய இன்னல்களுக்கு உரிய தீர்வு காண அவனது சிந்தனைத்திறன் உதவுகிறது. மணிமேகலையும் தனக்கு ஏற்பட இருந்த பெரும்பான்மையான சிக்கல்களுக்குத் தன் சிந்தனைத்திறனால் தீர்வு கண்டு தன்னளவில் முடிவெடுக்கிறாள். உதயகுமரன் தன்னை அடைவதற்காக காத்திருப்பதனை அறியும் மணிமேகலை தன் சிந்தனைத்திறனால் மந்திரம் ஓதி காயசண்டிகை வடிவம் கொள்கிறாள்.

**"மாயவிஞ்சைமந்திரம்ஓதிக்**
**காயசண்டிகையெனுங்காரிகைவடிவாய்**
**மணிமேகலைதான்வந்துதோன்ற"**

**(மணி., உதயகுமரன்அம்பலம்புக்ககாதை: 148-150)**

என்ற அடிகள் மணிமேகலை உதயகுமரனிடமிருந்து தப்பிக்க மேற்கொண்ட உத்தியை விளக்குகின்றன. இதன்வழி தனக்குக் கிடைத்த வேற்றுவடிவம் கொள்ளக்கூடிய வரத்தினை உரியநேரத்தில் பயன்படுத்திய மணிமேகலையின் சிந்தனைத்திறனை அறியலாகின்றது.

## துறவு மேற்கொள்ளுதல்

மணிமேகலை அவளது குலத்தொழிலை மேற்கொள்ள வேண்டும் என்று சித்ராபதி விரும்புகின்றாள். அவளது விருப்பத்தை ஏற்கவிரும்பாத மணிமேகலை துறவு அறத்தை மேற்கொள்ள முனைகிறாள். கோவலன், கண்ணகியின் மரணச்செய்தியை அறிந்து துன்பமுற்று வருந்துகிறாள். இவ்வுலகப் பற்றினால் துன்பம் வரும் என்பதை அறிந்து புத்தனது திருவடியை விரும்பி துறவு கொள்கிறாள். புத்தமதக் கொள்கையின்படி பிற

உயிர்களுக்குத் துன்பம் விழைவிக்கக்கூடாது என்ற அறச்சிந்தனை மிக்கவளாகவும், தன்னால் முடிந்த உதவியைப் பிறருக்குச் செய்யக்கூடிய இயல்பினளாகவும் தன்இலக்கினை அடையக்கூடிய ஆளுமைப்பண்புடையவளாகவும் திகழ்கிறாள்.

**“ஆசனத்தேற்றியறுசுவைநால்வகைப்**
**போனகமேந்திப்பொழுதினிற்கொண்டபின்**
**பாசிலைத்திரையலும்பளிதமும்படைத்து**
**வாய்வதாகவென்மனப்பாட்டறமென**
**மாயைவிட்டிறைஞ்சினள்மணிமேகலை”**

**(மணி., கச்சிமாநகர்புக்ககாதை: 241-245)**

என்ற பாடல் அடிகளின் வாயிலாக மணிமேகலை தான் கொண்ட குறிக்கோளை அடைவதற்காகப் பல்வேறு உத்திகளைக் கையாளுவதனை அறியலாகின்றது. உயிர்களின் பசிப்பிணியைப் போக்குவதற்காக சிறைச்சாலையை அறச்சாலையாக மாற்றுதல். தான் பெற்ற மந்திரத்தினால் மாற்று உருவம் பெற்றுதான் கொண்ட குறிக்கோளாகிய பசிப்பிணி நீக்குதல், பிற உயிர்களுக்குத் துன்பம்செய்யாமை போன்ற தான்கொண்ட கொள்கையில் மாறுபடா இயல்பு பெற்று விளங்குவதனை அவளது செயல்பாடுகள் விளக்குகின்றன.

## முடிவுரை

மாதவி கணிகையார் குலத்தைச் சார்ந்தவள். கோவலனின் இறப்பிற்குப்பின் அவள் பரத்தமைத் தொழிலை வெறுத்துப் புத்தசமயத்தைச் சார்கிறாள். தன்மகள் மணிமேகலையையும் புத்தசமயத்தைத் தழுவச்செய்கிறாள். மணிமேகலையும்த வவாழ்வினையே விரும்புகிறாள். தவறு செய்பவர்களின் தண்டனைக் கூடமாகிய சிறைக்கோட்டத்தினை அறக்கோட்டமாக மாற்ற முயல்கிறாள். இதன்வழி மணிமேகலை, மாதவி இருவரும் அக்காலச் சட்டதிட்டங்களுக்கு மாறாக தங்களுடைய வாழ்க்கைமுறைமையினைத் தாங்கள் விரும்பியபடி செம்மையாகத் தேர்ந்தெடுத்து அதில் எத்தகைய துன்பம் வந்தநிலையிலும் அதனை எதிர்த்துப் போராடி வெற்றிபெற்ற தன்மையை அறியலாகிறது.

சான்றெண் விளக்கம்

1. இராம.குருநாதன், ப.முத்துக்குமாரசுவாமி, சிலப்பதிகாரம்ஆய்வுக்கோவை, ப.51.
2. இரா. காஞ்சனா, இலக்கியமும்உளவியலும், ப.154
3. ரா. சீனிவாசன், சிலப்பதிகாரமூலமும்திறனாய்வும், ப.211
4. இரா. காஞ்சனா, ஆளுமைவளர்ச்சியும்ஆளுமைக்கோட்பாடுகளும், ப.114
5. ஆ.ஜெகதீசன், இலக்கியத்தில்மனிதஉரிமைக்கோட்பாடுகள்,ப.63

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 03. வைரமுத்து கவிதைகளில் மார்க்சியத்தாக்கம்

முனைவர் சி.தேவி
உதவிப்பேராசிரியர், முதுகலை & தமிழாய்வுத்துறை,
தி ஸ்டாண்டர்டு ஃபயர்ஒர்க்ஸ் இராஜரத்தினம் மகளிர் கல்லூரி, சிவகாசி.

DOI 10.5281/zenodo.10699509

Abstract :

The Creator is reflected in the creation. A creation is the creator, the creator is the time, the universe is created. Vairamuthu is a good example of the author recording his life experiences, what he saw and read in literature. Accordingly, the influence of Marxism is more visible in Vairamuthu's poems. “Politics comes first in Marx's thought. To understand a particular philosophy is to understand the politics of identity”1 There are no non-political social phenomena. Politics is both the ruling class and the class that fights against it.

**Key Words : Vairamuthu – Poets – Marxism**

படைப்பாளன் படைப்பில் பிரதிபலிப்பான். ஒரு படைப்பு படைப்பாளன், படைப்பாளன் காலம், ஆகியவற்றைத்தழுவி அமையும். படைப்பாளன் தனது வாழ்க்கை அனுபவங்களை, தான் பார்த்தவற்றை, படித்தவற்றை இலக்கியத்தில் பதிவு செய்வான் என்பதற்கு வைரமுத்து நல்ல உதாரணம். அதற்கேற்றவாறு வைரமுத்து கவிதைகளில் மார்க்சியத்தாக்கம் அதிகம் தென்படுகிறது. “மார்க்சின் சிந்தனையில் அரசியல் முதலிடம் பெறுகிறது. குறிப்பிட்ட ஒரு தத்துவத்தைப் புரிதல் என்பது அத்தத்துவத்தின் அரசியலைப் புரிந்து கொள்வது தான்”1 அரசியல் சாராத சமூக நிகழ்வுகள் எதுவுமில்லை எனலாம். அரசியல் என்பது ஆளும் வர்க்கத்திற்கும் அதை எதிர்த்துப் போராடும் வர்க்கத்திற்கும் ஏதுவாக உள்ளது.

தாய்வழிச்சமூக மரபிலிருந்து தந்தை வழிச் சமூக மரபாகத் தோற்றம் பெற்றபோது நிலவுடைமைக்கான போட்டி ஏற்படுகிறது. இதனால் ஒருதார மணம் என்ற வழக்கம் தொடங்குகிறது. நிலவுடைமைச் சமுதாயத்தில் குறைவாக இருந்த உழைப்புச் சுரண்டல் அதிகார மையத்தைத் தனது கையில் வைத்திருந்த நிலப்பிரபுத்துவக் காலகட்டத்திலும் உழைப்புச்சுரண்டல் நடைமுறைப்படுத்தப்பட்டது. இந்த உழைப்புச் சுரண்டலைப்பற்றி பேசும்பொழுது தான் வர்க்கப் போராட்டங்களுக்கான களம் அமைக்கப்படுகிறது. இந்த வர்க்க இடைவெளியை காரல்மார்க்சு கண்டறிந்ததால் மார்க்சியம் என்ற கோட்பாடு உருவானது.

“கம்யூனிஸ்ட்டுகள் தமது கருத்துக்களையும் நோக்கங்களையும் மூடிமறைக்க மனம் ஒப்பாதவர்கள். இன்றுள்ள சமுதாயத்தின் நிலைமைகள் யாவற்றையும் பலவந்தமாய் வீழ்த்த வேண்டும், அப்போதுதான் தமது இலட்சியங்கள் நிறைவேறும் என்று கம்யூனிஸ்ட்டுகள் ஒழிவு மறைவின்றிப் பறைசாற்றுகிறார்கள். அஞ்சி நடுங்கட்டும் ஆளும் வர்க்கங்கள் கம்யூனிசப் புரட்சி வருகிறதென்று. பாட்டாளிகள் தமது அடிமைச்சங்கிலியைத் தவிர இழப்பதற்கு ஏதும் இல்லாதவர்கள். அவர்கள் வென்று பெறுவதற்கு அனைத்து உலகும் இருக்கிறது. உலகத் தொழிலாளர்களே ஒன்று சேருங்கள்” 2 இப்படி மார்க்ஸ், ஏங்கெல்ஸின் கம்யூனிஸ்ட் கட்சி அறிக்கை முடிகிறது. கவிஞர் வைரமுத்து மார்க்சியத் தாக்கத்தால் இந்த செய்திகளை

அறிந்திருக்கிறார். கொள்கை அளவில் அவற்றை ஏற்றுக்கொண்டிருக்கிறார். இவற்றை தம் கவிதைகளில் படைத்தும் காட்டியுள்ளார்.

**வைரமுத்து கவிதைகளில் முதலாளித்துவ எதிர்ப்பு**

இந்திய அசியல் சட்டத்தில் இந்தியா ஒரு ஜனநாயக சோசலிசக் குடியரசு என்று பொறிக்கப்பட்டிருககிறது. ஆனால் உண்மையில் இங்கே நிலவுவது முதலாளித்துவ ஜனநாயகம் ஆகும். இங்கு வேட்டையாடுகிறவர்கள் முதலாளிகள், வேட்டையாடப்படுபவர்கள் தொழிலாளர்கள். உயிர்கள் தோன்றிய காலந்தொட்டு உலவுவதாகத் தெரிவிபபதிலும் வர்க்கப் போராட்டம் அன்றிலிருந்து இன்று வரை இடைவிடாமல் நடந்து கொண்டிருக்கிறது எனபதைக் கவிஞர் மறைவாக தனது படைப்பிலே சுட்டுகிறார்.

“வலையில் மாட்டிய மீனும் - அரசியல்
வாதியிடம் மாட்டிய பணமும் ஒன்றுதான்
சிக்கினால் மீளாது”3

என்று முதலாளித்துவ அரசியல்வாதிகள் பணமுட்டை, இலஞ்சம், பெரும் சொத்துச் சேர்த்தல் போன்ற சுரண்டல் குணம்; படைத்தவர்கள் என்பதைச்சுட்டிக்காட்டி, வலையில் சிக்கிய மீன்கள் மீளாது, அதே போல் அரசியல்வாதிகளிடம் சிக்கிய பணமும் மீளாது என்கிறார் வைரமுத்து. மனிதன் தேவைக்கு அதிகமாகப் பேராசைப்பட்டுச் சொத்துச் சேர்ப்பதைக் கண்டிக்கறிhர் கவிஞர். புறவை கூடுகட்டி வாடகைக்கு விடுவதில்லை. விலங்குகள் நிலம் திடுவதில்லை. பணத்தாசை கொண்ட மனிதன் இரண்டையும் செய்கிறான். பறவை, விலங்குகளுக்கு இருக்கும் நேர்மை கூட மனிதனிடம் இல்லை என்று சாடுகிறார்.

நிலப்பிரபுத்துவ குணம் தான் ஆடம்பரம். குடிகளில் தீ வைத்தால் எறியாது. அவர்களுக்கு எந்த பாதிப்பும் ஏற்படாது. ஆனால் மாடித்தீ குடிசைக்கு வந்தால் எரிந்துவிடும். மாடியைச் சுரண்டலின் குறியீடாகவும் குடிசையை சுரண்டப்படும் மக்களின் குறியீடாகவும் அமைத்து ஒரு கவிதை படைத்துள்ளார்.

ஆங்கிலேயர்கள் ஆட்சி செய்வதற்கு வசதியாக இந்தியாவை ஒரே நாடாக்கினர். அவர்கள் ஒன்றுபடுத்திய இந்தியா, இன்றைய அரசியல்வாதிகளாலும், நமது ஆட்சியாளர்களாலும் பிரிவினைக்கு உள்ளாகியுள்ளது. பதவிப்பிரமாணத்தில் உறுதி எடுக்கும் அரசியல்வாதிகள் அதன்படி நடப்பதில்லை. வாக்குறுதியைக் காற்றில் பறக்கவிடுகின்றனர். கட்சிகளின் எண்ணிக்கை மட்டுமே பெருகுகின்றது. மகள் அடையும் பயன் பெருகுவி;ல்லை. அரசியல் தலைவர்கள் யாரும் உயிர்ப்போடு உணர்வோடு கொள்கைப்பிடிப்போடு இயங்குவதில்லை. எனவே அரசியலைப் பிணம் என்று சாடுகிறார் வைரமுத்து.

“அரசியல் பேசவும்
ஆசையில்லை
பிணத்தோடு என்ன
பேச்சுவார்த்தை” 4

என்ற கவிதை மூலம் முதலாளித்துவ அரசியல்வாதிகள்; மக்கள் பிரச்சினைகளைக் கவனிக்காமல் பிரக்ஞை அற்று உள்ளனர். அதனால் பிணத்தோடு என்ன பேச்சு வார்த்தை என்று விளிக்கிறார்.அரசியல்வாதிகள் தங்களின் கவர்ச்சிப்பேச்சால் காதினிக்கப் பேசி கவர்ந்து கொள்ளும் கயமைத் தனத்தைக் கொண்டிருக்கிறார்கள். ஆங்கிலேயர்கள் கிழக்கிந்தியக் கம்பெனியை கி.பி.1600 இல் தொடங்கி வியாபாரம் செய்ய வநதார்கள். இந்திய்களின் ஒற்றுமையின்மையைப் பயனபடுத்தி இந்தியாவின் ஆட்சியாள்களாக மாறினார்கள். இந்திய 1947 - இல சுதந்திரம் பெற்றபின் அரசியல் நடத்துகிறோம் என வந்தவர்கள் அரசயிலை வியாபாரமாக்கி நாட்டை விற்பனைக் கூடமாக்கிக் கொண்டிருக்கிறார்கள். கோடிக்கணக்கில் நூறு கோடி, ஆயிரம் கோடி, லட்சம் கோடி, கோடி கோடி என இலஞ்சம், ஊழல் செய்து வணிக அரசியல் நடத்துகிறார்கள். இவ்வாறு சுரண்டி வாழும் வர்க்கத்தினரைக் கவிஞர் மாளிகை மனிதர்கள் எனச்சுட்டுகிறார்.

“மாளிகை மனிதர்களே
உங்கள்
மனசாட்சிகளெல்லாம்
பொய் சாட்சிகளோ” 5

ஏழை,மக்கள் குறித்து கவலைப்படாத மனசாட்சி பொய்சாட்சியோ?எனக் கலங்குகிறார்.

**வைரமுத்து கவிதைகளில் பட்டாளி வர்க்கச் சிந்தனைகள்**

“சோசலிசப் பாட்டாளி வர்க்கத்திற்கு இலக்கியம் என்பது தனியார்களோ அல்லது குழுக்களோ தத்தம் செல்வத்தைப் பெருக்கிக் கொள்ளும் கவியாக இருக்க முடியாது என்பது மட்டுமல்ல, பாட்டாளி வர்க்கத்தின் பொது இலட்சியத்திற்குத் தொடர்பில்லாத தனியார் முயற்சியாக அது இருக்க முடியாது. கட்சி சார்பு கடந்த எழுத்தாளர்கள் வீழ்க. இலக்கிய அதிமானுடர்கள் வீழ்க! இலக்கியம் பாட்டாளி வர்க்கத்தின் பொதுப்படையான குறிக்கோளின் பகுதியாக வேண்டும், சோசலிச ஜனநாயகத்தின் பல்லும் சக்கரமும் ஆக வேண்டும்” 6 என்று இலெனின் கூறுகிறார்.

இந்தியாவின் அச்சாணி என்று பாராட்டப்படுகிற உழவனே, அதிகம் நசுக்கப்படுகிறான் என்று கவிஞர் பாட்டாளிச் சிந்தனைச் சார்போடு தம் கவிதைகளில் சில செய்திகளைப் பதிவு செய்கிறார். ‘போகி’ நெருப்பு பற்றியும், உழவன் நிலை பற்றியும் கவிஞர் தம் கவிதையில் பதிவு செய்துள்ளார். உலகத்திற்கு உணவிடம் உழவனின் அவலநிலையை,

“போகி என்பது
வீட்டுக்குக் குப்பை எரிக்கும்
விழாவல்ல.
அதை
தேசத்தின் குப்பைக்குத்

தீயிட்டுப் பார்க்கும்
தேசிய விழா என்று
செய்துவிடுவோம்
இது உழவனின் விழாவாம்
ஒப்புக்கொள்ளுவோம்
கொளுத்துவதற்கு
இவனிடம் பழசாய்
என்ன இருக்கிறது?
அவன்
வீட்டுக் கூரையின் வயது
வேட்டிக்கும் ஆகிறது.
மண் பாண்டங்களும்
குழந்தைகளும் தான் அவனது வீட்டில் அதிகம்."7

பழைய வேட்டி, மண்பாண்டம், தரிததிரம், பசி, வறுமை, இருட்டு என இவையெல்லாம் உழவனின் உடைமைகள் என்ற அவல நிலைக்குக் காரணமான விதி என்ற மூடநம்பிக்கையில் மூழ்கி ஏழ்மையில் உழன்று கொண்டிருக்கிற உழவனின் நிலையை மாற்ற வேண்டும், தீயில் சுட்டுப் பொசுக்கிட வேண்டும். புதிய வாழ்வு தர வேண்டும் என்பது கவிதையில் உட்பொருளாக அமைந்துள்ளது.

உழவன் உழைத்த பிறகும் அவன் வாழ்வு நிறைவடையவில்லை. கிழக்குநாடுகளில் சோசலிசம் வந்து, அங்கே விடிந்துவிட்டது. இங்கே எதிர்த்துப் போரிடாத மானுட மந்தையாக மக்கள் இருப்பதுவே இந்நிலைக்குக் காரணம் என்கிறார். நெசவாளிக்கு உடையில்லை, குயவனுக்குப் பாண்டமில்லை, உழவனுக்கு உணவில்லை, விறகு வெட்டிக்கு விறகில்லை. மக்கள் தாகத்திற்குத் தண்ணீரில்லை. இதுதான் முதலாளித்துவத்தின் முரண்பாடு என்கிறார் வைரமுத்து.

முதலாளித்துவத்தின் உடன்பிறந்த நோய் லஞ்சமும் ஊழலும். வைரமுத்து ஏழைமக்களுக்காகத்தான் தமது படைப்புக்களை உருவாக்குகிறார். பாட்டாளிகளை நேசிக்கிறார். மே தினத்தைப்பற்றி பாடல் எழுதித் தொழிலாளர் வர்க்கச் சார்பைக் காட்டுகிறார்.

" வையகத்தின் அழுக்குகளை – வேர்வை ஆற்றில்
வாருங்கள் சலவைசெய்வாம் - என்று பாடி
வெய்யிலுக்கு முன்னாலே விழிக்கும் எங்கள்
வீரர்களைச்சிறப்பிக்கும் திருநாள் மேநாள்" 8

'மே நாள் உழைப்பவர் திருநாள்' என்று கவிஞர் குதூகலிக்கிறார். மே தினம் உழைப்பவர் சீதனம் என்றும் சிறப்பித்துள்ளார்.

**வைரமுத்து கவிதைகளில் புரட்சி சிந்தனைகள்**

வைரமுத்து அரசியல்வாதிகளின் லஞ்சம், ஊழல், தேர்தல் தில்லுமுல்லுகள் ஆகியவ்றறைக் கண்டும், சுதந்திரம் ஊமையானதும், ஜனநாயகம் அழுக்கு ஜனநாயகமானதும், மக்கள் கல்வியறிவின்றி கைநாட்டாய் இருப்பதும், தொழிலாளர்கள் சுரண்டப்படுவதும் கண்டு மனம் நொந்து சில கவிதைகள் படைத்துள்ளார். தொழிலாளி வர்க்கம் அரசியல் அதிகாரம் அபற அமைதி வழி போதுமென்றால் அமைதிவழி, இல்லை வன்முறை தேவையென்றால் அதற்கும் தயாராக வேண்டுமென்கிறார்.

"எனக்குத் தெரியும்
உன் முகத்தில்
இரத்தத் துளிகள் தெறிக்கும் வரைக்கும்
உன்
உறக்கம் கலைவதாவது...
மயக்கம் தெளிவதாவது..."9

என்ற கவிதை மூலம் மக்களை இனிமேலும் ஏமாறக் கூடாது. புரட்சிப்பயணம் தயாராக வேண்டும் என்கிறார். இந்திய நாட்டில் தொழிலாளி, விவசாயி, நடுத்தமக்கள் என ஒடுக்கப்பட்ட வர்க்கம் ஓர் அணியாகத் திரண்டு முதலாளி வர்க்கத்தை, ஆளும் வர்க்கத்தை எதிர்க்க வேண்டும்.

பாட்டாளிகளின் சார்பில் நின்று கவிஞர் முதலாளித்துவத்தைச் சாடுகிறார். ஏழைகளைச் சுரண்டி பணக்காரர்களைக் கொழுக்கச் செய்கிற நிலையை எதிர்க்கிறார். அரசியல் பேசுவதில் ஆசையில்லை. பிணத்தோடு நடத்தும் பேச்சுவார்த்தையால் பயனில்லை என முதலாளித்துவத்தை கவிதையின் மூலம் தோலுரித்துக்காட்டியுள்ளார் கவிஞர். உணவு உற்பத்தி செய்த உழவன் பட்டினியால் வாடுவதும், உலகம் உடுத்த நெசவாளன் ஆடையின்றித் திரிவதும், மாடமாளிகை எழுப்பியவன் குடியிருக்க வீடு இல்லாமல் தவிப்பதும் கண்டு வருந்தி இநநதிலை மாற அவர்கள் சார்பில் குரல் கொடுக்கிறார்.

"பெற்ற சுதந்திரம் ஊமைச்சுதந்திரம்" உண்மைச்சுதந்திரம் இன்னொன்று வேண்டுமென்ற விருப்பம் கொண்டு கவிதையை ஆயதமாகப் பயன்படுத்தியுள்ளார். அழுக்கு ஜனநாயகத்தை மாற்றி அழகு ஜனநாயகம் மலர்ந்திட மக்கள் ஜனநாயகம் மலர்ந்திட விரும்பும் வைரமுத்து உழைக்கும் மக்கள் சார்பாக நின்று கவிதை படைத்துள்ளார். சமுதாய மாற்றத்திற்காக, சமூகப் பொதுமைக்காக புரட்சிப்பாதையில் மக்கள் படிப்படியாகப் பயணிக்க வேண்டும் என்பது வைரமுத்துவின் கவிதையின் சாரம் ஆகும்.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

**அடிக்குறிப்பு**

1. ந.முத்துமோகன், இந்தியத் தத்துவங்களின் அரசியல், ப.7
2. மார்க்ஸ் எங்கெல்ஸ், கம்யூனிஸட் கட்சி அறிக்கை, ப.61
3. வைரமுத்து, தணணீர்தேசம், ப. 258
4. வைரமுத்து கவிதைகள் ப. 41

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 04. பாலினச் சமத்துவம்

**முனைவர் வி. அன்னபாக்கியம்**
தமிழ்த்துறை உதவிப்பேராசிரியர்,
தி ஸ்டாண்டர்டு ஃபயர்ஒர்க்ஸ் இராஜரத்தினம் மகளிர் கல்லூரி (தன்னாட்சி), சிவகாசி.

DOI 10.5281/zenodo.10699518

**Abstract :**

The world is made up of two sexes, male and female. Both are one and the same world. The world cannot function properly unless both work together. If you look closely at this beautiful world, you can see the balance of male and female even in nature. If the same balance is followed in the human race, that is, when all the freedoms, rights and privileges given to men are given to women, there will be equality. The country will be well. No doubt the country will be the talk of the world.

**Key Words : Equality – Sex – Human Mentality**

## முன்னுரை

உலகம் ஆண், பெண் என இரு பாலினங்களால் ஆக்கப்பட்டிருக்கிறது. இரண்டும் சேர்ந்த ஒன்றே உலகமாகும். இரண்டும் ஒன்றாக இயங்கினாலன்றி உலகம் நல்வழியில் செயல்படமுடியாது. இந்த அழகிய உலகைச் சற்று உற்று நோக்கினால் இயற்கையிலும் கூட ஆண், பெண் சமநிலையைக் காணமுடியும். இதே சமநிலை மனித இனத்திலும் பின்பற்றப்படுமேயானால், அதாவது ஆண்களுக்குக் கொடுக்கப்படும் அனைத்துச் சுதந்திரமும் உரிமைகளும் சலுகைகளும் பெண்களுக்கும் கொடுக்கப்படும் போது அங்கே சமத்துவம் நிலவும். நாடு நலம் பெறும். அந்த நாடு உலக அளவில் பேசப்படும் என்பதில் ஐயமில்லை. நாட்டில் நிலவும் பாலினச் சமத்துவத்தைப் பற்றி இக்கட்டுரையில் காண்போம்.

## பாலினம் விளக்கம்:

பாலினம் என்றால் வகை, அது பிறப்புறுப்பு மற்றும் குரோமோசோம்களின் அடிப்படையில் ஒரு குழந்தை பிறக்கும் போது ஆணா பெண்ணா அல்லது மூன்றாம் பாலினமா என்பதை தீர்மானிக்கிறது.

பாலினம் என்பது ஒரு ஆண் அல்லது பெண் என்பதோடு தொடர்புடையசமூக, பொருளாதார மற்றும் கலாச்சார பண்புகளையும் வாய்ப்புகளையும் குறிக்கிறது. பாலினம் என்பது ஒருவரின் குணாதிசயத்தின் அடிப்படையிலும் வரையறுக்கப்படுகிறது. இந்த பாலின பண்புக் கூறுகள் சட்டப்பூர்வமாக கட்டமைக்கப்பட்டுள்ளன.

## பாலினச் சமத்துவம்:

பாலினச் சமத்துவம் என்பது ஆண்களும் பெண்களும் ஒரே மாதிரியாக மாறுவது என்ற அர்த்தமல்ல. மாறாக, அது மனிதனின் அடிப்படை உரிமைகளைக் குறிக்கிறது.

யுனிசெஃப் நிறுவனக் கருத்துப்படி, பாலினச் சமத்துவம் என்பது அனைத்து ஆண்கள்,பெண்கள் மற்றும் குழந்தைகளும் நாட்டின்எல்லா வளங்கள், வாய்ப்புகள் மற்றும்

பாதுகாப்பை ஒரே மாதிரியாக அனுபவிக்கிறார்கள் அல்லது சமமாக நடத்தப்படுகிறார்கள் என்பதாகும்.

பாலினச் சமத்துவம் என்பது கல்வி, பணி ஆகியவை தொடர்பாகச் சமுதாயத்தில் அனைத்து நிலைகளிலும் காணப்படும் சமத்துவமும் வாழ்வின் பிற நிலைகளில் நிலவும் சமத்துவமும் பால் சமத்துவம் எனக் குறிக்கப்படுகிறது.

**பாலினச் சமத்துவத்தை அளவிடும் குறியீடுகள்:**

பாலினச் சமத்துவத்தை அளவிடுவதற்குச் சில குறியீடுகளைப் பயன்படுத்துகின்றனர். அதாவது, நாட்டின் பொருளாதாரத்தில் பெண்களுக்கான வாய்ப்பும், பங்கு வகித்தலும்,பெண்களின் கல்வியறிவு, பெண்களின் ஆரோக்கியம் மற்றும் ஆயுட்காலம், பெண்கள் அரசியல் அதிகாரம் பெறுதல் ஆகிய நான்கு முக்கிய துறைகளில் உள்ள பாலின அடிப்படையிலான இடைவெளிகளைக் கணக்கில் எடுத்துக்கொண்டு சமத்துவத்தை அளவிடுகிறார்கள்.

அதன் அடிப்படையில்,சமீபத்தில் வெளிவந்த உலகப் பொருளாதார அமைப்பு உலகளாவிய பாலினச் சமத்துவமின்மைக் குறியீடுகள் - 2020 அறிக்கையைப் பார்க்கும்போது, அரசுகள் தங்கள் நாட்டுப் பெண்களின் முன்னேற்றத்தில் உண்மையிலேயே அக்கறை காட்டுகின்றனவா என்ற கேள்வியே எழுகின்றது. பாலினச் சமத்துவத்தில் 2018 ஆம் ஆண்டில் 108 வது இடத்தில் இருந்த இந்தியா நான்கு புள்ளிகள் குறைந்து 112-வது இடத்திற்குச் சென்றுள்ளது. (இந்து தமிழ் இயக்கம், ஜன.07, 2020). பாலின சமத்துவத்தில் முன்னேற்றம் இல்லாததை இந்த அறிக்கை காட்டுகிறது. இந்நிலை நாட்டில் நீடித்தால் இன்னும் நூறு வருடங்களில் பாலின சமத்துவம் ஏற்படுமா என்பது கேள்விக்குறியே.

**பாலின சமத்துவத்திற்கான சட்டங்கள்:**

நாட்டில் அனைத்து பாலினருக்கும் பொதுவான சில சட்டங்கள் இருப்பதை நாம் அறிவோம். அவற்றில் 14 முதல் 18 வரையிலான அரசியலமைப்பு கூறுகள் சமத்துவ உரிமைகளை வலியுறுத்துகின்றன. 14 ஆவது கூறு மனிதர்களிடையே அவர்களது சமூக மதிப்பு, பாலினம் அல்லது படிநிலை ஆகியவற்றின் அடிப்படையில் எந்த வேறுபாடுகளையும் அரசாங்கம் காட்டக்கூடாது என்பதை வலியுறுத்துகிறது. இந்த உரிமை இருபாலருக்கும் பொதுவானது.

15வது கூறு இனம், பாலினம், மதம் அல்லது பிறந்த இடம் ஆகியவற்றின் அடிப்படையில் பாகுபாடு காட்டுவதைத் தடை செய்கிறது. இந்த பிரிவின் 4வது உட்பிரிவு, நாட்டின் பொருளாதார மற்றும் சமூக கல்வி நிலையில் பின்தங்கிய மற்றும் பழங்குடியின பெண்களின் வாழ்க்கையை மேம்படுத்தும் வகையில் கல்வி நிறுவனங்கள், வேலை வாய்ப்புகள் மற்றும் பயிற்சி ஆகியவற்றில் இடஒதுக்கீடுகளை அறிவிக்கிறது. 16 ஆவது கூறு பொதுப் பணிகளில் பெண்களுக்கு சம உரிமை வழங்கப்பட வேண்டும் என்று கூறுகிறது. 17 ஆவது கூறு தீண்டாமையைக் கடைப்பிடிப்பதைத் தடை செய்கிறது. 18 ஆவது கூறு

இராணுவத்திலும் கல்வித்துறையிலும் சாதனை புரிவோர்க்குச் சில சிறப்பு சலுகைகள், சமூக மற்றும் கல்வி அடிப்படையில் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கும் பழங்குடியினருக்கும் சிறப்புச் சலுகை மற்றும் இடஒதுக்கீடு வழங்குவதைத் தடை செய்யக்கூடாது என்பதை வலியுறுத்துகிறது.

**தமிழ்ச்சமூகத்தில் காலந்தோறும் பாலின சமத்துவம்:**

நம் நாட்டில் ஆண்கள் பெரும்பாலும் பெண்களைப் பேதையர்கள் என்றும் மூளையில்லாதவர்கள் என்றும் கூறுவது வழக்கம். சமையலறையில் சட்டிச் சுரண்டும் பெண்களைத்தான் இவ்வாறு கூறுகிறார்கள் என்றால் இல்லை. தங்களுக்கு இணையாக தங்களை விடவும் அதிகமாகப் படித்துப் பணிபுரிபவர்களையும் கூட பெண்புத்தி பின்புத்தி தானே என்றும் பேதைமை என்பது மாதர்க்கு அணிகலன் என்றும் கூறி அலட்சியப்படுத்துவதுண்டு. வேத காலம் முதல் இன்று வரை பெண்கள் தங்கள் வாழ்வின் எல்லாப் பருவங்களிலும் ஒரு ஆணின் கட்டுப்பாட்டில் இருந்தாலும், கல்வியிலும் சமூக பொருளாதாரத்திலும் ஆண்களுக்கு இணையாகப் பெண்கள் அனைத்துத் துறைகளிலும் சமமான தகுதியுடன் ஒளிர்வதை யாராலும் மறுக்க முடியாது.

**வேத காலம்:**

வேத காலத்தில், வேதம் கற்பது என்பது ஆண்களுக்கும் பெண்களுக்கும் பொதுவானது. பெண்களுக்கான கல்விக்கூடங்கள் இல்லை என்றாலும், அந்த நாட்களில் அவர்கள் தங்கள் பெற்றோர், கணவர் மற்றும் தங்கள் குருவிடம் கற்றுக்கொண்டனர். அவர்கள் அறிவில் ஆண்களை விட எந்த விதத்திலும் குறைந்தவர்கள் அல்ல. சான்றாக, ரிக் வேதத்தில் விஸ்வவரா கோஷா, அபலா, லோப முத்ரா, சரஸ்வதி போன்ற பெண்களால் பல பாடல்கள் பாடப்பட்டுள்ளன. தற்காப்புக் கலையில் சிறந்து விளங்கிய விஷ்பாலா, முக்தகலானி போன்றோர் வேதகால வீரப் பெண்களாகும். பழங்காலத்தில் சதி எனும் உடன்கட்டை ஏறுதல், குழந்தை திருமணம், விதவை கொடுமை, பெண் சிசுக்கொலை போன்ற சில அவலங்கள் குறைந்து காணப்பட்டன. பெண் குழந்தை பிறப்பு விரும்பப்படவில்லை என்றாலும் வெறுக்கப்படவில்லை.

வேதகாலத்தின் இறுதிக்காலம் மற்றும் இதிகாச காலங்களில் பெண்களின் நிலை சற்று நலிவடைந்தது. ராமாயணத்திலும் மகாபாரதத்திலும் இடம்பெற்றுள்ள பெண்களான சீதை, அகல்யா, திரௌபதி, தாரா, மண்டோதரி ஆகியோர் மதிப்பிற்குரியவர்களாகக் கருதப்பட்டனர்.

**சங்க காலம்:**

சங்க காலத்தில், பெண்களின் நிலை மற்றும் அவர்களின் பங்களிப்புகளைச் சங்கஇலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. சங்ககால பெண்கள் வெளியே செல்ல அனுமதி வழங்கப்பட்டது. கல்வியிலும் வீரத்திலும் சிறந்து விளங்கினர். அவ்வையார், ஆதிமந்தியார்,

காக்கைப் பாடினியார், காவற்பெண்டு, பாரி மகளிர், பெருங்கோப்பெண்டு, வெண்ணிக்குயத்தியார், வெள்ளிவீதியார் போன்றோர் புலவர்களாகத் திகழ்ந்தள்ளனர்.

**மன்னர்கள் காலம்:**

இடைப்பட்ட மன்னர்களின் காலத்தில் (கி.பி. 9ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 18ஆம் நூற்றாண்டு வரை) பிற்காலச் சோழர்கள், பிற்காலப் பாண்டியர்கள் மற்றும் டெல்லி சுல்தானியர்கள் மற்றும் நாயக்கர்கள் ஆட்சி செய்தனர். இக்காலங்களில் அரசிகளும் அரசர்களுடன் சமமாக அமர்ந்து நன்கொடை அளித்தனர் (திருமழப்பாடி கோயில் கல்வெட்டுகள்). சில பெண்கள் அதிகாரிகளாக (திருப்புகளூர் கோயில் கல்வெட்டுகள்), சில பெண்கள் திருமுறை மந்திரங்களை (பராந்தகச் சோழனின் கல்வெட்டுகள்) ஓதுபவர்களாக நியமிக்கப்பட்டுள்ளனர்.

அரச வம்சத்தைச் சேர்ந்த சில பெண்கள் அரியணையில் ஏறி ஆட்சி செய்தனர் என்றாலும், இக்காலத்தில் மற்றப் பெண்களின் நிலை சற்று நலிவடைந்தமையைக் கல்வெட்டுகளும் இலக்கியங்களும் காட்டுகின்றன.

**ஐரோப்பியர் காலம்:**

காலனி ஆதிக்கக் காலத்தில் இந்திய சமூக, பொருளாதார அமைப்பில் ஆங்கில அரசு பல மாற்றங்களைக் கொண்டு வந்தது. சமூகத்தில் மதச் சீர்திருத்தம், பெண் சமத்துவம், விதவை மறுமணம், குழந்தைத் திருமணம், பெண் சிசுக்கொலை ஆகியவற்றைச் சீரமைப்பதையே கொள்கையாகக் கொண்டிருந்தனர். பெண்கள் அரசக்குழுவின் முன்னோடிகளாக மார்கரெட் கசின்ஸ், சரோஜினி நாயுடு, பேகம் ஷா நவாஸ் ஆகியோர் ஆண்களுக்கு நிகரானப் பெண்களுக்கும் வாக்குரிமை வழங்கப்படும் வரை அயராது உழைத்தனர். சுதந்திரப் போராட்டங்களில் பெண்கள் பங்கேற்றபோது, ஆண்களுக்கு இணையான சமத்துவ உணர்வு தங்களுக்கு ஏற்பட்டதை உணர்ந்தார்கள்.

**தற்காலம்:**

இன்று பெண்கள் காடு முதல் வானம் வரை அனைத்து துறைகளிலும் முன்னேறி வருகின்றனர். பெண்கள் சுயவேலைவாய்ப்பு குழுக்கள் இந்தியாவின் பல பகுதிகளில் வளர்ந்து வருகின்றன. வரதட்சணை, பாலியல் கொடுமை போன்றவற்றில் பல சட்டத் திருத்தங்களை அரசால் கொண்டு வரப்பட்டன. பெண்களுக்கான பல இயக்கங்களும் உருவாகியுள்ளன.

ஆரம்பத்தில் மருத்துவம், பொருளாதாரம், தொழில் மேலாண்மை என அனைத்தும் ஆண்களின் சொந்தச் சொத்தாக இருந்த நிலையில், இன்று பெண்களும் அத்துறைகளில் சாதித்து வருகின்றனர். இவை தவிர, பொறியியல் துறை, அறிவியல் துறை, மின்சாரத்துறை, எழுத்துத் துறைகள், விளையாட்டு, விமானப் போக்குவரத்து, ஊடகம் என அனைத்துத் துறைகளிலும் பெண்கள் பணிபுரிவதைக் கண்டு பெருமை கொள்கிறோம். இந்திய இராணுவத்தில் ஆண்களுக்கு நிகராகப் பெண்களுக்கு பணி வாய்ப்பு மற்றும் பதவி உயர்வு வழங்குவது தொடர்பான (பிப்ரவரி 2020) உச்ச நீதிமன்றத் தீர்ப்பு குறிப்பிடத்தக்கது.

ஆம்! விமானப்படையில் ஷாலிஜா தாமி இந்திய முதல் பெண் விமானப்படை தளபதியாகவும் அவனி சதுர்வேதி இந்திய முதல் பெண் போர் விமானியாகவும் சாதனைப் படைத்துள்ளனர். கடற்படையில் தாரணி என்ற கப்பலில் பயணம் செய்த பெண்கள் உச்சத்தைத் தொட்டிருக்கிறார்கள். சில பெண்கள் நீதிபதிகளாகவும் பணியாற்றுகின்றனர். பாதுகாப்புக்கான அமைச்சரவைக் குழுவில் நான்கு பெண் அமைச்சர்கள் பணியாற்றியுள்ளனர்.

இவ்வாறாக எந்த ஒரு துறையாக இருந்தாலும் அது பாலினத்தைச் சார்ந்தவை அல்ல; திறமைகளைச் சார்ந்தவை என்பதைப் பெண்கள் நிரூபித்துக் கொண்டிருக்கிறார்கள். என்றாலும் கூலி வேலை பார்ப்பவர்களுக்கு ஒரே விதமான உடல் உழைப்பிற்கு நாள் ஒன்றுக்குப் பெண்களை விட ஆண்களுக்கு 33% அதிக கூலிவழங்கப்படுகிறது. ஐ,டி. நிறுவனங்களில் பணிபுரிபவர்களுக்கும் சம பதவியில் சம ஊதியம் வழங்கவில்லை.

பாலின சமத்துவம் கடந்து வந்த பாதைகளைப் பார்க்கும்போது சில ஏற்ற தாழ்வுகள் உள்ளன என்பதை வரலாறுகள் நமக்குக் காட்டுகின்றன. ஆனாலும் முன்பை விட இப்போது பாலின சமத்துவத்தில் ஓரளவு முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது.

**மகளிர் தினம் -சமத்துவத்தின் அடையாளமா? / சமஉரிமையாகுமா?**

ஐக்கிய நாடுகள் சபை 1975 ஆம் ஆண்டை பன்னாட்டு மகளிர் ஆண்டாக அறிவித்தது. அந்த நேரத்தில், ஆண்களுக்கும் பெண்களுக்கும் சம உரிமைகள், குடும்பத்திலும் சமூகத்திலும் சம வாய்ப்புகள், சம வேலைக்கு சம ஊதியம். சமூக-பொருளாதார கலாச்சார அமைப்புகளில் முழுமையாக ஈடுபடும் உரிமை, பெண்களுக்கு எதிரான ஆண்களின் உரிமைகளை ஒழித்தல் போன்ற தீர்மானங்களை நிறைவேற்றியது. அதைத் தொடர்ந்து மார்ச் 8, உலக மகளிர் தினமாக அறிவிக்கப்பட்டது. அதன்பின்பு வந்த முதல் மகளிர் தினத்தின் முழக்கம் சமத்துவத்தைப் பற்றி சிந்தியுங்கள், அறிவுப்பூர்வமாக உருவாக்குங்கள் மற்றும் மாற்றத்திற்காக புதுமையாக சிந்தியுங்கள். இப்படி ஒவ்வொரு ஆண்டும் முழக்கம் வெளியிடப்படுகிறது.

சமூக ஒடுக்குமுறைக்கு எதிராக பெண்கள் ஒன்றுபட்டு நிற்க வேண்டும் என்பதை உணர்த்துவதற்காகவே கொண்டாடப்பட வேண்டிய ஒன்று. இன்று அது ஒரு பண்டிகை போல பார்க்கப்படுவதே இன்றைய நடைமுறையாகவே உள்ளது. .

கிராமப்புறங்களில் உள்ள பெண்களுக்கு, மார்ச் 8 மற்ற நாட்களைப் போலவே தான் கழிந்திருக்கும். நாம் மகளிர் தினத்தைக் கொண்டாடுவதால், மட்டுமே நாட்டில் பாலினச் சமத்துவம் நிலவுகிறது என்றும், இங்கு பெண்களின் உரிமைகள் மற்றும் பெண்கள் சுதந்திரம் ஆகியவற்றில் ஏகபோக உரிமை உள்ளது என்றும் நினைத்துவிட முடியாது. கொண்டாட்டம் முடிந்த கையோடு சமூகத்தின் அனைத்து தாக்குதல்களையும் நிராயுதபாணியாக எதிர்கொள்ளவோ அல்லது அவற்றைச் சமாளிக்கவோ பெண்கள் ஆயத்தமாகிவிடுகிறார்கள்..எனவே, ஒவ்வொரு ஆண்டும் ஒவ்வொரு முழக்கத்துடன் கொண்டாடப்படும் மகளிர் தினத்தை பெண்களுக்கான சம உரிமை என்று கூறிவிட முடியாது.

**பாலின சமத்துவமின்மை:**

பெண்கள் அனைத்து துறைகளிலும் சாதித்தாலும், மறுபக்கம் பெண்களின் நிலை கேள்விக்குறியாகவே உள்ளது. ஆணாதிக்க சமூகத்தில் ஆண்களுக்கு உயர்ந்த அந்தஸ்தும், பெண்களுக்கு தாழ்ந்த அந்தஸ்தும் வழங்கப்படுவதை நமது கலாச்சாரம் தெளிவுபடுத்துகிறது.கருவறை முதல் கல்லறை வரை பெண்களின் வாழ்வில் பாகுபாடு இருப்பதைக் காணலாம்.

குடும்பத்திலும் பணியிடத்திலும் பெண்கள் பாகுபடுத்தப்படுகிறார்கள். வாழ்க்கையின் முதல் கட்டமான பிறக்கின்ற உரிமை கூட சில நாடுகளில் பெண் குழந்தைக்கு மறுக்கப்படுகிறது. இவை தவிர, குழந்தை பராமரிப்பு, கல்வி பெறும் வாய்ப்பு, அரசியல், சமூக மற்றும் மத நடவடிக்கைகள் தொடர்பான அனைத்து துறைகளிலும் பெண்கள் பாகுபடுத்தப்படுகின்றனர்.

இன்றும் ஆண்கள் சில சமயங்களில் பெண்கள் மீது அதிகாரம் செலுத்தி ஒடுக்குகிறார்கள். மிருகத்தனமான அடித்தல், கற்பழிப்பு, கொலைகள், கட்டாயக் கருக்கலைப்பு, பெண்களின் இனப்பெருக்கத்திறனை அவர்களின் அனுமதியின்றி அழித்தல் போன்றவை உதாரணங்களாகும். இவை அனைத்தும் உலகின் ஏதோ ஒரு மூலையில் தினமும் நடந்து கொண்டு தான் இருக்கிறது. எல்லா பெண்களின் வாழ்க்கையையும் ஆழமாகப் பார்த்தால், நம் நாட்டில் பாலின சமத்துவமின்மை நிலவுவதை உணர முடியும்.

**பாலின சமத்துவத்திற்கான வழிமுறைகள்**

நாட்டில் பாலின சமத்துவம் நிலவ வேண்டுமானால், அதற்கான மாற்றங்களை முதலாவது நாம் வாழும் வீட்டிலிருந்தே தொடங்க வேண்டும்.

1. பாலின சமத்துவத்தை அளவிடும் குறியீட்டில் கவனம் செலுத்த வேண்டும்.
2. ஆண் குழந்தை மோகத்தால் கருப்பையில் இருக்கும் பெண்களை அழிக்கும் கொடுமை மாற வேண்டும்.
3. வீடுகளில் பெற்றோர் தங்கள் ஆண், பெண் குழந்தைகளை வளர்க்கும் போதே சமஉரிமை கொடுத்து வளர்க்க வேண்டும் குழந்தைகளின் கல்வி, விளையாட்டு, பேச்சுரிமை, கருத்துச் சுதந்திரம் என எல்லாவற்றிலும் பெற்றோர்கள் சமஉரிமையும் சமவாய்ப்பும் கொடுக்க வேண்டும். அப்போது தான் நம்முடைய அன்றாட வாழ்வில் அனைத்துப் பாலினத்தவரையும் சமமாக மதித்தல், மரியாதை கொடுத்தல் போன்ற நல்ல குணநலன்களுடன் கூடிய ஓர் எதிர்காலத் தலைமுறையை உருவாக்கமுடியும்.
4. குடும்பங்களில் பெற்றோரும் (கணவன், மனைவி) சமஉரிமையுடன் வாழ்ந்து தங்கள் குழந்தைகளுக்கு முன்மாதிரியாக வாழ வேண்டும்.
5. பாலின சமத்துவம் பற்றிய சிந்தனைகளைப் பாடத்திட்டங்கள் வாயிலாக மாணவப் பருவத்திலேயே உருவாக்க வேண்டும்.
6. ஒரு குறிப்பிட்ட வயது வந்த பிள்ளைகளிடம் பாலினச் சமத்துவம் பற்றிய கருத்துக்களைப் பெற்றோரும் ஆசிரியர்களும் வெளிப்படையாக விவாதிக்கலாம்.

இதன் வாயிலாக பாலினச் சமத்துவம் பற்றிய புரிதலும் தெளிவும் கிடைக்க வாய்ப்புள்ளது.

7. பெண்களே பெண்களை விமர்சிக்கும் நிலை மாற வேண்டும். பெண்கள் துணிந்து எடுக்கும் முடிவுகள் சரியாக இருக்கும் பட்சத்தில் அதனை ஊக்குவிக்க வேண்டும்.

நமது வாழ்க்கையைச் சிறப்பாக நடத்துவதற்கு வீட்டிற்குள் செய்ய வேண்டிய வேலைகள், வீட்டிற்கு வெளியே சென்று செய்யும் வேலைகள் என்று இரண்டு வகையான வேலைகளை உள்ளன. பொதுவாக ஆண்கள் பெரும்பாலும் வெளியில் சென்று செய்யும் வேலைகளையே தேர்ந்தெடுப்பார்கள். இவற்றில் வெளியில் சென்று செய்யும் வேலைகளைப் பொறுத்தே ஒருவருவரின் மதிப்பும் முன்னேற்றமும் அமைவதால், இருபாலினரும்இரண்டு வகையான வேலைகளையும் சமமாகப் பிரித்துக் கொண்டாலே போதும். அனைத்து துறைகளிலும் இருபாலினரின் எண்ணிக்கையும் சரிசமமாக மாறிவிடும் என்பதில் ஐயமில்லை.

**முடிவுரை:**

ஆண்களும் பெண்களும் தங்கள் உடலமைப்பில் மட்டுமல்ல; சிந்தனைகளாலும் வேறுபட்டவர்கள். ஆனால் சமமானவர்கள். பெண்களை விட ஆண்களோ அல்லது ஆண்களை விட பெண்களோ மேலானவர்கள் அல்ல, இறைவனின் படைப்பில் யாரும் யாரை விடவும் உயர்ந்தவர்கள் அல்ல என்பதே உண்மை. இறைவன் படைப்புகளான பெண்களைத் தண்மை என்றும் ஆண்களை வெம்மை என்றும் கூறுதுல் உலகோர் இயல்பு. நம் உடலிலும் கூட தண்மையும் வெம்மையும் கலந்திருப்பதே ஆரோக்கியமாகும். அண்டமாகிய உலகம் பெண் ஆணாக அமைந்திருப்பது போல பிண்டமாகிய நம் உடம்பிலும் இடது பக்கத்தில் தண்மை (குளிர்) நாடியும் வலது பக்கத்தில் வெம்மை(சூடு) நாடியும் ஓடுவதைச் சித்தர் பாடல்களும் உடற்கூறு நூல்களும் தெளிவுபடுத்துகின்றன. இவ்வாறாக இறைவன் படைப்பில் இயல்பாகவே சமத்துவம் நிறைந்திருப்பதைக் காணும் நாமும் கூட நடைமுறை வாழ்க்கையில் பெண்களைக் குறைவாக மதிப்பிடாமல் சமத்துவத்தைக் கடைபிடிப்போம். பெண்களுக்குத் தேவை புனிதத்துவம் அல்ல சமத்துவமே என்பதை உணர்ந்துச் செயல்படுவோம்.

**துணைநின்ற நூல்கள்:**

1. திரு. வி. கல்யாண சுந்தரனார், பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத்துணை
2. கே. கல்யான சுந்தரி, மகளிர் மேம்பாடு.
3. திருமதி விஜயலஷ்மி கிருஷ்ணன், பெண்கல்வி - .
4. ப.சு. சந்திரபாபு, இல. திலகவதி, பெண் வரலாறும் விடுதலைக்கான போராட்டமும்

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 05. பாரதிதாசனின் பொதுவுடைமைச் சிந்தனைகள்

**முனைவர் கு.வளர்மதி**

உதவிப்பேராசிரியர் முதுகலை & தமிழாய்வுத்துறை,

தி ஸ்டாண்டர்டு ஃபயர் ஒர்க்ஸ் இராஜரத்தினம் மகளிர் கல்லூரி,சிவகாசி.

DOI 10.5281/zenodo.10699557.

**Abstract :**

Bharathidasan is one of the most unique poets in the history of Tamil literature. Bharathidasan was at the forefront of the rising army that set out to see the new world. Marxism, proposed by Karl Marx and Friedrich Engels, is one of the most important theories of socialism. Communism was born out of the Russian Revolution of 1917. This article examines the manifestation of common ownership ideas in the works of Bharathidasan who came through Bharati.

**Key Words : Modern Literature – Bharathidasan – Marxism**

தமிழ் இலக்கிய வரலாற்றில் ஒப்பற்ற கவிஞர்களுள் ஒருவராகத் திகழ்பவர் பாவேந்தர் பாரதிதாசன் ஆவார். புதியதோர் உலகு காணப் புறப்பட்ட எழுச்சிப் படையில் முதன்மையாகத் திகழ்ந்தவர் பாரதிதாசன். காரல்மார்க்சு மற்றும் பிரெடரிக் ஏங்கெல்சு ஆகியோரால் முன்மொழியப்பட்ட மார்க்சியம், பொதுவுடைமைக் கோட்பாடுகளில் முக்கியமான ஒன்றாகும். 1917-ஆம் ஆண்டு ரஷ்யாவில் நிகழ்ந்த புரட்சியின் காரணமாகப் பொதுவுடைமைக் கொள்கை உருவானது. பாரதியின் வழி வந்த பாரதிதாசனின் படைப்புகளில் பொதுவுடைமைச் சிந்தனைகள் வெளிப்படுவதை ஆராய்வதாகவே இக்கட்டுரை அமைகின்றது.

## புரட்சிக்கவிஞரின் பொதுவுடைமைக் கொள்கை

தமிழகத்தைப் பிணித்திருக்கும் சாதி இருட்டு, தீண்டாமைக் கொடுமை, மூடத்தனத்தின் முடைநாற்றம், மதத்தைக் கட்டிய வைதீகம், பெண்ணடிமை, கைம்மை வேதனை, உழைப்பாளர் துயர், சிந்தனை முடக்கம், மொழிப் பற்றின்மை, விதியின் பெயரால் மதிமயக்கம், எல்லாம் கடவுள் செயல் என்ற பொல்லாங்கு ஆகிய வலிமைமிக்க சங்கிலிகளை உடைத்தெறியக் காலம் தோற்றுவித்த புரட்சிக்கவிஞர். மக்களுக்காக மக்கள் மொழியில் மக்களைப் பாடிய மாபெரும் கவிஞர்.

**“பொதுவுடைமைக் கொள்கை திசையெட்டும் சேர்ப்போம்**
**புனிதமோடதை எங்கள் உயிரென்று காப்போம்”**[1]

பொதுவுடைமைக் கொள்கையை மூலைமுடுக்குகள் எங்கும் பரப்புவோம் என்றும் அதனை உயிராகக் காப்போம் என்றும் பொதுவுடைமையின் முக்கியத்துவத்தைப் பாரதிதாசன் வலியுறுத்துகின்றார். கவிஞருடைய பொதுவுடைமை பற்றி டாக்டர் மு.கோவிந்தசாமி தனது “பாரதிதாசன் கவித்திறன்” என்ற நூலில் “பல குறிக்கோள்கள் இருப்பினும் காவியம் ஒவ்வொன்றுக்கும் ஒப்பற்ற குறிக்கோள் ஒன்றும் இருக்கும். இவர் காவியம் பலவற்றினும்

பொதுவுடைமை அவ்வொரு குறிக்கோளாக இருக்கிறது." என்று கூறியுள்ளமை சிந்திக்கத்தக்கது.

**சமுதாயத்தில் பொதுவுடைமை**

பொதுவுடைமை என்பது எல்லாரும் எல்லாமும் பெற வேண்டும். ஏழை, கோழையாக இருக்கும் வரை தான் அவன் பணிந்து வாழும் நிலை இருக்கும். அவன் நிமிர்ந்தால் ஒரே நொடியில் உலகம் மாறி விடும் என்கிறார், பாரதிதாசன். கையிலே திருவோடு தான் உண்டு என்று கூறும் ஓடப்பர் ஒருபுறம்; செல்வநிலையின் உச்சியிலே இருக்கும் உயரப்பர் மற்றொருபுறம். ஏழையப்பராக இருக்கும் ஓடப்பரும், உயரப்பரும் ஒன்றாக முடியுமா? முடியும் என்கிறார், கவிஞர்.

*"ஓடப்பராய்இருக்கும்ஏழையப்பர்*
*உதையப்பர்ஆகிவிட்டால்ஓர்நொடிக்குள்*
*ஓடப்பர்உயரப்பர்எல்லாம்மாறி*
*ஒப்பப்பர்ஆகிவிடுவார் உணரப்பாநீ"*[2]

என்ற பாடலின் மூலம் ஒத்தநிலை ஏற்பட வேண்டும். ஆண்டான் - அடிமைச் சிந்தனை மாற வேண்டும். ஏழை என்றும் பணக்காரன் என்றும் பாகுபாடு இருக்கக் கூடாது என்கிறார். பொருளாதார நிலையில் ஒரு சமத்துவம் நிலவும் சமுதாயத்தையே பாரதிதாசன் காண விரும்பினார்.

**"உலகினில் மக்கள் எலாம்சமம் என்பாய்**
**துயருறத் தாழ்ந்தார் உள்ளார் என்று**
**சொல்லிடுந் தீயரைத் தூவென் றுமிழ்வாய்"**[3]

என்று உலகளாவிய சமத்துவத்தைப் பாரதிதாசன் எடுத்துரைக்கின்றார். மக்கள் அனைவரும் சமம். சமுதாயத்தில் ஏழை என்றும் செல்வந்தர் என்றும் பாகுபாடு ஏற்படுத்தி, ஏழைகளின் உழைப்பினை உறிஞ்சிப் பிழைக்கும் செல்வந்தர்களைக் காரி உமிழும்படி கூறுகின்றார், கவிஞா

உலகத்தின் நலங்கள் எல்லாம் இயற்கையின் கொடை. அவற்றைப் பயன்தர அமைத்தனர் தொழிலாளத் தோழர்கள். எல்லோரும் அவற்றைத் துய்த்தல் வேண்டும். "உலகம் உண்ண உண்; உடுத்த உடுப்பாய்" என்பது பாரதிதாசன் கூற விரும்பும் அறிவுரை.

**"எல்லார்க்கும் எல்லாம் என்று இருப்பதான**
**இடம் நோக்கி நடக்கின்றது இந்த வையம்"**[4]

என்கிறார், பாரதிதாசன். எல்லார்க்கும் எல்லாம் என்று கருதுகின்ற உள்ளமே தாயுள்ளம் என்கிறார்.

"உலகம் உன்னுடையது" எனும் கவிதையில்,

**"பிரிவிலை எங்கும் பேதமில்லை**
**உலகம் உண்ணஉண்! உடுத்த உடுப்பாய்!**
**புகல்வேன், உடைமை மக்களுக்குப் பொது**
**புவியை நடத்து பொதுவில் நடத்து"[5]**

கவிஞர் உயர்வு - தாழ்வு, சாதி மத பேதம் என்ற வேறுபாடு அனைத்தும் இல்லாத சமுதாயம் மலர வேண்டும் என்று எண்ணுகின்றார்.

**"புதியதோர் உலகம் செய்வோம் - கெட்ட**

**போரிடும் உலகத்தை வேரொடு சாய்ப்போம்"[6]**

பல்வேறு பாகுபாடுகளால் பிரிவுற்றுக் கிடக்கும் இன்றைய சமுதாயத்தின் நிலையை மாற்ற வேண்டும். அனைவரும் சமம் என்ற புதியதோர் உலகினைப் படைக்க வேண்டும் என்கிறார்.

**நாட்டில் பொதுவுடைமை**

தமிழ்நாட்டினைப் பொதுவுடைமை நாடாக உருவாக்க வேண்டும் என்ற எண்ணத்தின் வெளிப்பாடாகப் பாரதிதாசன், "வீரத்தாய்" காவியத்தின் இறுதியில் சுதாமின் மணிபுரி நாட்டைப் பொதுவுடைமை நாடாகக் காட்டுகின்றார்.

**"எல்லார்க்கும் தேசம் எல்லார்க்கும் உடைமைஎலாம்**
**எல்லார்க்கும் எல்லா உரிமைகளும் ஆகுகவே"[7]**

மற்றொரு காப்பியமான புரட்சிக்கவியின் முடிவிலும் நாட்டு மக்கள் கிளர்ந்தெழுந்து மன்னர் ஆட்சியை ஒழித்து மக்கள் ஆட்சியை மலரச் செய்யுமிடத்து,

**"செல்வமெலாம் உரிமையெலாம் நாட்டாருக்கே**
**நவையின்றி யெய்துதற்குச் சட்டம்செய்தார்!**
**நலிவில்லை! நலமெல்லாம் வாய்த்த தங்கே!"[8]**

என்று மன்னனே முந்திக்கொண்டு அறிவிப்பதாகக் காட்டுகின்றார்.

**உலக ஒற்றுமை**

பாரதிதாசன், உலக ஒற்றுமையைப் பற்றிக் கூறும் போது,

**"தூயஉள்ளம் அன்புள்ளம் பெரியஉள்ளம்**
**தொல்லுலக மக்களெல்லாம் "ஒன்றே" என்னும்**
**தாயுள்ளம் தனிலன்றோ இன்பம்! ஆங்கே**
**சண்டையில்லை தன்னலம்தான் தீர்ந்ததாலே"[9]** என்கிறார்.

### இயற்கையிலும் பொதுவுடைமையை வலியுறுத்துதல்

இயற்கை அழகில் தன்னை மறப்பது கவிஞர்களின் இயல்பு. ஆனால், பாரதிதாசன் பசுமையான சோலையைக் காணும் போதுகூட அதனை உருவாக்கப்பாடுபட்ட தொழிலாளர்களின் நிலையை, துயரத்தை எண்ணிப் பார்க்கின்றார். இதனை,

**"சித்திரச்சோலைகளேஉமைநன்கு**
**திருத்தஇப்பாரினிலே - முன்னர்**
**எத்தனைதோழர்கள்ரத்தம்சொரிந்தனரோ**
**உங்கள் வேரினிலே"**[10]

என்ற கவிதை வரிகளால் அறிய முடிகிறது. அதுமட்டுமன்றி, நிலவைக் காணும் மகிழ்ச்சியின் பெருக்கில் ஓர் உவமையைக் கூறவரும் கவிஞரின் உள்ளத்தில் வறுமையில் வாடும் பாட்டாளிகளின் நிலையே காட்சித் தருகின்றது.

**"நித்தியதரித்திரராய் உழைத்துழைத்துத்**
**தினைத்துணையும் பயனின்றிப் பசித்தமக்கள்**
**சிறிது கூழ்தேடுங்கால் பானை ஆரக்**
**கனத்திருந்த வெண்சோறு காணும் இன்பம்**
**கவின்நிலவே உனைக்காணும் இன்பம் தானோ?"**[11]

வறுமையை மட்டுமே சொந்தமாகக் கொண்ட பாட்டாளி வெண்சோற்றைக் கண்டால் எவ்வாறு மகிழ்ச்சி கொள்வானோ, அவ்வகையில் நிலவைக் கண்டு மகிழ்ச்சி கொள்வதாகக் கூறுகின்றார்.

### தொகுப்புரை

பாரதிதாசனே பணக்காரர்களுக்கு எச்சரிக்கை விடுக்கும் குரலில் பொதுஉடைமையை ஒத்துக்கொள்ளுமாறு பாடியவர் ஆவார். ஏழைகளின் இரத்தம் கொதிப்பேறும் முன் குவித்து வைத்திருக்கும் சொத்துக்களைத் தொழிலாளர்களிடம் ஒப்படைக்க வேண்டும் என்கிறார். தமிழனே! நீ புலிக்குணம் உடையவன் என்று வரலாறு கூறுவது பொய்யாய்ப் போகலாமா? உனது அதிகாரத்தை நிறுவக் கொலைவாளினை எடு என்கிறார். பாவம், புண்ணியம், மேல்உலகம், கீழ்உலகம், சொர்க்கம், நரகம் என்றெல்லாம் கூறி அறியாமைப் பள்ளத்தில் பலரைப் புதைத்துவிட்டச் சூழ்ச்சியைப் பாரதிதாசன் போல யாரும் வெளிப்படுத்தவில்லை. பாரதிதாசன் காண விரும்பியச் சமுதாயத்தில் உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற பேதம் நிலையாக நீங்கிச் சமத்துவம் இடம் பெற வேண்டும் என்கிறார். சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வு மறைந்து பொதுவுடைமைக் கொள்கை நிலைநாட்டப்பட வேண்டும். எல்லாருக்கும் எல்லாம் எனும் பொதுமைஉணர்வு சமுதாயத்தில் நிலவும் நாளே மனிதஉரிமை நிலவும் நாளாகும்.

**அடிக்குறிப்புகள்**:

1. பாரதிதாசன் கவிதைகள், பக்.112
2. பாரதிதாசன், உலகப்பன்பாட்டு, முதல்தொகுதி, 37-40
3. பாரதிதாசன் கவிதைகள், பக்.102
4. பாரதிதாசன் ,பாண்டியன்பரிசு, 56:4

# 06. எட்டுத்தொகையில் பாதீடு

**திருமதி மா.முத்துச்செல்வி**
**உதவிப்பேராசிரியர்**, முதுகலை & தமிழாய்வுத்துறை,
**தி ஸ்டாண்டர்டு ஃபயர் ஒர்க்ஸ் இராஜரத்தினம் மகளிர் கல்லூரி**, **சிவகாசி**.
DOI 10.5281/zenodo.10699608.

**Abstract :**

Society is a group of people living together. Community charity is the act of charity done by many individuals to the community. Virtues that seed not only individual life but also social development become social virtues. In the early days, man did not enjoy what he got only, but distributed it to everyone and maintained equality. Thus the characteristic of distributing to all is Patheedu. This article is also a study on the contribution made in Sangam literature.

Key Words : Sangam literature - Patheedu

மனிதன் இணைந்து ஒரு கூட்டமாக வாழ்வதே சமூகமாகும். அச்சமூகத்தில் பல தனிமனிதர்கள் இணைந்து அக்கூட்டத்திற்கு செய்யும் அறச்செயலே சமூக அறமாகக் கொள்ளப்படுகிறது. தனி மனித வாழ்க்கைக்கு மட்டுமன்றிச் சமூக வளர்ச்சிக்கே வித்திடும் அறங்கள் சமூகம் சார்ந்த அறங்களாகின்றன. ஆதிகாலத்தில் மனிதன் தனக்கு கிடைத்தவற்றை தான் மட்டும் அனுபவிக்காது அனைவருக்கும் பகுத்துக் கொடுத்து சமத்துவம் பேணியுள்ளான். இவ்வாறுஅனைவருக்கும் பகிர்ந்தளிக்கும் பண்பே பாதீடாகும். இக்கட்டுரையும் சங்க இலக்கியத்தில் மேற்கொள்ளப்பட்ட பாதீடு குறித்து ஆய்வாதாக அமைகின்றது.

## பாதீடு

பாரோர் போற்றும் சிறந்த அறங்களுள் ஒன்று பகுத்துண்ணல். அறநூலார் தொகுத்துரைத்த அறங்களுள் தலைமை சான்றதும் அதுவேயாகும். இதனை,

**"பகுத்துண்டு பல்லுயி ரோம்புதல் நூலோர்**
**தொகுத்தவற்று ளெல்லாம் தலை."[1]**

என்பார் வள்ளுவர். கிடைத்தற்கரிய பொருளாயினும் பிறர்க்குக் கொடுக்காது தனித்து உண்ணுதல் தகுதியுடைய செயல் ஆகாது. இந்திரர்க்குரிய அமிழ்தமே கிடைப்பினும் இனிது என்று எண்ணி பண்டைய தமிழர்கள் தனித்து உண்ணுதலைச் செய்யார் என்று புறநானூறு குறிப்பிடுகின்றது. நம்மிடம் உள்ளதைக் கொண்டு பிறர்க்கும் நன்மை செய்து வாழ்தல் வேண்டும் என்ற கருத்தை இவ்வறம் வலியுறுத்துகின்றது. "இனக்குழு சமுதாயப் பண்புகளில் தலையாயது ,பொதுவில் வைத்து உண்ணுதல் என்பது. சங்கப்பாடல்கள் இதைக் கூட்டுண்ணுதல் எனக் குறிப்பிடுகின்றன. சீறூர் மன்னர் சமுதாயத்தின் விருந்து பேணும் பண்பும், ஊரொடு தலை விபசித்திருந்தாள் என்பதும் இக்கூட்டுண்ணுதலின் எச்சங்கள் ஆகும்"[2]

குழுவாக வாழ்ந்த மக்களின் சமூகப்பண்புகளுள் இன்றியமையாதது பாதீடு ஆகும். பாதீடு என்பதனை பகிர்ந்துண்ணுதல், கூட்டுண்ணுதல் என்று சங்கப்புலவர்கள் குறிப்பிட்டுள்ளனர். கூட்டமாகச்சென்று தேடிய பொருளை அனைவருக்கும் பகிர்ந்தளித்து

உண்ணுதலே இப்பாதீடாகும்."இனக்குழு வாழ்வில் மிகைபொருட்களோ, உபரியோ, சேமிப்போ வைத்துக்கொள்வதில்லை. அன்றாட உணவுக்கான ஆதாரங்களை நாளும் ஈட்டிக்கொள்வார்கள். அதனால் தான் வேட்டையாடி உணவு சேகரிக்கும் பொருளாதார முறையைப் "பிழைப்புப் பொருளாதாரம்"[3] என மானிடவியலாளர்கள் வகைப்படுத்துவார்கள்." ஆக, இப்பாதீடுதல் இனக்குழு சமூகத்தின் எச்சம் எனலாம்.

**குறவர் வாழ்வில் பாதீடு**

குறவர்கள் தினைப்புனத்தை மேய வந்த காட்டுப்பன்றி, முள்ளம்பன்றி, யானை முதலிய விலங்குகளை அகற்றுவதற்கு வேட்டையாடினர். அவ்வேட்டையில் சிக்கிய விலங்கின் இறைச்சியை, பாதீடுதல் முறையில் பகிர்ந்து உண்டமையை,

**"பிணர் சுவற் பன்றி தோல் முலைப் பிணவொடு**
**கணைக்கால் ஏனல் கைம்மிகக் கவர்தலின்,**
**கல் அதர்அரும் புழை அல்கி கானவன்,**
**வில்லின் தந்த வெண்கோட்டு ஏற்றை,**
**புனை இருங் கதுப்பின் மனையோள் கெண்டி,**
**குடி முறை பகுக்கும் நெடுமலை நாட" (நற்.பா.336:1-6)**

என்ற பாடலடிகளின் வாயிலாக அறியலாகின்றது. மேலும், கானவன் வேட்டையாடி கொண்டு வந்த முள்ளம் பன்றியின் கொழுத்த இறைச்சியைக் கிழங்கோடு அவனது மனைவி சிறுகுடியினர் பலருக்கும் பகுத்துக்கொடுத்தாள் என்பதை,

**"கானவன் எய்த முளவு மான் கொழுங் குறை,**
**தேம்கமழ் கதுப்பின் கொடிச்சி, கிழங்கொடு**
**காந்தள்அம் சிறுகுடிப் பகுக்கும்" (நற்.பா.85:8-10)**

என்ற பாடலடிகளின் வாயிலாக அறிய முடிகின்றது. "இனக்குழு சமுதாயத்தில் கள் முக்கிய இடம் பெற்றது. இறப்பு, பிறப்பு, ஆவேசம் பெறுதல், விழாக்கள் போன்ற பல சந்தர்ப்பங்களிலும் கள் அருந்தினர். ஆடவரும் மகளிரும் கள் அருந்தி ஆடிப்பாடிய செய்திகளைப் பல சங்கப் பாடல்கள் விவரிக்கின்றன. இது கூட்டுவாழ்க்கையின் ஒரு அம்சமாகும்"[4] மேலும், நிலத்தில் புதைக்கப்பட்ட மதுவை சிற்றூரில் உள்ள குறவர் குடியினருக்குப் பகிர்ந்தளித்து உண்ணக்கொடுத்தமையை,

**"நிலம் புதைப்பழுனிய மட்டின் தேறல்**
**புல்வேய்க் குரம்பைக் குடிதொறும் பகர்ந்து" (புறம்.பா.120:12-13)**

என்ற பாடலடிகளின் வாயிலாக அறியலாகின்றது. குறவர்கள் கிழங்கைப் பன்றிகள் தோண்டி எடுத்தமையால் ஏற்பட்ட சிறுகுழிகளில் உழாமல் விதைத்து விளைந்த தினையை, மான் இறைச்சி வேக வைத்த புலால் நாறும் பானையில், காட்டுப் பசுவிடம் கறந்த பாலில்

உலை ஊற்றி, சந்தனக் கட்டையை விறகாக எரித்துச் சமைத்த சோற்றை வாழையிலையில் இட்டு பகிர்ந்துண்டமையை,

**"நன்னாள் வருபதம் நோக்கிக் குறவர்**
**உழாஅது வித்திய பரூஉக்குரல் சிறுதினை**
**முந்துவிளை யாணர் நாள்புதிது உண்மார்**
**மரையான் கறந்த நுரைகொள் தீம்பால்**
**மான்தடி புழுக்கிய புலவுநாறு குழிசி**
**வான்கேழ் இரும்புடை கழாஅது ஏற்றிச்**
**சாந்த விறகின் உவித்த புன்கம்**
**கூதளம் கவினிய குளவி முன்றில்**
**செழுங்கோள் வாழை அகல் இலைப் பகுக்கும்" (புறம்.பா.168:5-13)**

என்ற பாடலடிகளின் வாயிலாக அறியலாகின்றது. மேற்குறிப்பிட்ட கருத்துக்களின் அடிப்படையில் சங்கப்புலவர்கள்குறவர் தாங்கள் வேட்டையாடிய விலங்குகள், கள், விளைவித்த தினைகள் போன்றவற்றை பகிர்ந்தளித்து உண்டனர் என்பதன் வழி பாதீட்டினை வலியுறுத்தியமையை அறியமுடிகின்றது.

**இடையர்வாழ்வில் பாதீடு:**

மலைச்சாரலுக்கும் வயல்வெளிகளுக்கும் இடைப்பட்ட நிலப்பகுதி முல்லை நிலமாகும். இப்பகுதியில் வாழ்ந்தவர்கள் கோவலர், ஆயர், இடையர் என்று அழைக்கப்பட்டனர். இந்நிலப்பகுதியில் வாழ்ந்த இடையர்கள் வழிப்போக்கர்களுக்கு தாங்கள் சமைத்த உணவை பகிர்ந்து அளித்தமையை,

**"கோடு உயர் பிறங்கற் குன்று பல நீந்தி**
**வேறு புலம் படர்ந்த வினை தரல் உள்ளத்து**
**ஆறுசெல் வம்பலர் காய் பசி தீரிய**
**முதைச்சுவற்ற கலித்த ஈர் இலைநெடுந் தோட்டுக்**
**கவைக் கதிர் வரகின் கால் தொகு பொங்கழி,**
**கவட்டு அடிப்பொருத பல் சினை உதிர்வை**
**..............................................**
**குடவர் புழுக்கிய பொங்கு அவிழ்ப் புன்கம்,**
**மதர்வை நல்ஆன் பாலொடு, பகுக்கும்" (அகம்.பா.393:1-17)**

என்ற பாடலடிகளின் வாயிலாக அறியலாம். இடையர்கள் வழிப்போக்கர்களின் பசியைத்தீர்ப்பதற்காக மாடுகளின் குளம்புகள் பட்டு உதிர்ந்த வரகினை இடையர் பெண்கள் திரிகையில் இட்டுத்திருகி, சுளகினால் புடைத்து அரிசியாக்கி உரலில் இட்டுத் தீட்டினார்கள். பின்னர் இவ்வரகரிசியை இட்டு சுனைநீரை ஊற்றி, அடுப்பில் உலை ஏற்றி வரகஞ்சோறு சமைத்து பகிர்ந்துண்டார்கள் என்பதற்கு மேற்கண்ட பாடலடிகள் சான்றாகின்றன.

**பரதவர் வாழ்வில் பாதீடு:**

நெய்தல் நிலத்தைச் சாந்த மக்களின் வாழ்வியல் கடலைச் சார்ந்தே அமைந்தது எனலாம். கடலில் கிடைக்கும் மீன்கள், சிப்பிகள், முத்துகள் போன்றவையே அவர்களின் வாழ்வாதாரமாகும். பரதவர்கள் கொம்புச் சுறாவைப் பிடித்துத் துண்டு போட்டுப்பகிர்ந்து கொண்டமைமையை,

**"கொண்டு ஆங்குப் பெயர்தல் வேண்டும் - கொண்டலொடு**
**குரூஉத் திரைப் புணரிஉடை தரும் எக்கர்ப்**
**பழந்திமில் கொன்ற புதுவலைப் பரதவர்**
**மோட்டு மணல் அடைக்கரைக் கோட்டுமீன் கெண்டி**
**மணம் கமழ் பாக்கத்துப் பகுக்கும்"** **(அகம்.பா.10:8-12)**

என்ற பாடலடிகளின் வாயிலாக அறியலாகின்றது. அவ்வாறே ஆழ்கடலில் சென்று முத்துக்களை வாரிக் கொணர்ந்து கடற்கரைச்சோலையில் வைத்துப் பலருக்கும் பகுத்துக்கொடுத்தமையை,

**"தருகுவன் கொல்லோ தானே விரி திரைக்**
**குண் திரள் முத்தம் கொண்டு ஞாங்கர்த்**
**தேன் இமிர் அகன் கரைப்பகுக்கும்**
**கானல் அம்பெருந்துறைப் பரதவன் எமக்கே"** **(அகம்.பா.280:11-14)**

என்னும் பாடலடிகளால் அறியலாகின்றது. இதன் வழி பரதவர்கள் உணவுப்பொருளான மீன்களை மட்டுமல்லாது வணிகப்பொருளான முத்துக்களையும் பாதீடு செய்தமையையும் அறிய முடிகின்றது.

**ஆறலைக்கள்வர் வாழ்வில் பாதீடு:**

பாலை நிலப்பகுதியில் தங்களின் வாழ்வாதாரத்திற்காக வழிப் போக்கர்களின் உடைமைகளைக் கொள்ளையடிப்பதே ஆறலைக்கள்வர்களின் தொழிலாக இருந்தது. அவர்கள் அவ்வாறு கொள்ளையடித்த பொருட்களை தங்களின் கூட்டத்தாரோடு இணைந்து கூட்டுண்டார்கள் என்பதை,

**"நெடுங்கழை திரங்கிய நீர் இல் ஆர் இடை,**
**ஆறு செல் வம்பலர் தொலைய மாறு நின்று**

**கொடுஞ்சிலை மறவர் கடறு கூட்டுண்ணும்,**
**கடுங்கண் யானைக் கானம் நீந்தி" (குறு.பா.331:1-4)**

என்ற பாடலடிகளின் வாயிலாக அறியலாகின்றது.

**புலவர்களின் பகிர்ந்துண்ணும் பண்பு:**

இனக்குழுவாக இருந்து நிலவுடைமைச் சமூகமாக மாறிய பின்பும் இப்பகிர்ந்துண்ணும் முறையானது மக்களிடையே மரபாகப் பின்பற்றப்பட்டு வந்துள்ளமையை சங்கப்புலவர்கள் வழி அறிய முடிகின்றது. வறுமையில் வாடிய புலவர் பெருமக்களும் வள்ளல்களிடம் தாம் பெற்ற பரிசில் பொருளை மற்றவர்களுடன் பகிர்ந்தளித்தே வாழ்ந்து வந்துள்ளனர் என்பதை,

**"பெற்றது மகிழ்ந்து சுற்ற மருத்தி**
**ஓம்பாது உண்டு கூம்பாது வீசி" (புறம்.பா.47:4-7)**

என்ற பாடலடிகளின் வாயிலாக அறியலாகின்றது. குமணனிடம் தாம் பெற்ற பரிசில் பொருளை, 'உன்னை விரும்பி வாழ்பவர்களுக்கும், நீ யாரை விரும்பி வாழ்கிறாயோ அவர்களுக்கும், உன்னைப் பின்பற்றிக் கற்றுக்கொண்டு வாழும் உன் சுற்றத்தார்களுக்கும், உனக்கும் உன் சுற்றதாருக்கும் பசிபோக்கியவர்களுக்கும் இன்னாருக்கு என்று கணக்கு பார்க்காமல், எல்லோருக்கும் வழங்குவாயாக' என்று பெருஞ்சித்திரனார் மனையோளுக்குக் கூறியமையை,

**"நின்னயந் துறைநர்க்கு நீநயந் துறைநர்க்கும்**
**புன்மான் கற்பினின் கிளைமுத லோர்க்கும்**
**கடும்பின் கடும்பசி தீர யாழநின்**
**நெடுங்குறி யெதிர்ப்பை நல்கியோர்க்கும்**
**இன்னோர்க் கென்னா தென்னொடுஞ் சூழாது**
**வல்லாங்கு வாழ்து மென்னாது நீயும்**
**எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழவோயே"(புறம்.பா.163:1-7)**

என்ற பாடலடிகளின் வாயிலாக அறியலாகின்றது.

**புரவலர்களின் பகிர்ந்துண்ணம் பண்பு:**

பிறரோடு பகிர்ந்துண்டு வாழ்வதற்கென்றே பலவற்றையும் தொகுக்கும் முயற்சியில் ஈடுபடுதலே ஆண்மை எனக் கருதிச் சங்கத் தமிழர் வாழ்ந்தமையை,

**"பகுத்தூண் டொகுத்த வாண்மை" (பதி.பா.38:5)**

என்ற பாடலடியின் வாயிலாகப் பதிற்றுப்பத்து குறிப்பிடுகின்றது. தம்மிடம் உள்ளவற்றைப் பகுத்துண்டு வாழும் பண்புடையராகப் புரவலரும் விளங்கினர் என்பதை,

**"உண்டாயிற் பதங்கொடுத், தில்லாயி னுடனுண்ணும்**
**இல்லோ ரொக்கற் றலைவன்"** (புறம்.பா.95:6-8)

என்ற பாடலடிகளின் வாயிலாக அறியலாகின்றது. பண்டைத் தமிழர் பகிர்ந்துண்டு வாழும் வாழ்வே சிறந்தது என்றும் அதுவே இனியது என்றும் மகிழ்ந்தனர் என்பதை,

**"செந்நீர்ப் பொதுவினை செம்மல் மூதூர்த்**
**தமதுசெய் வாழ்க்கையின் இனிய துண்டோ"** (நற்.பா.130:4-5)

என்ற பாடலடிகளின் வாயிலாக அறிய முடிகின்றது. உழுது உண்ணும் புலவர்களின் துன்பத்தைக்கண்டு பகிர்ந்து கொடுத்து உண்ணும் மன்னனின் மக்கள் இவர்கள் என்று கூறுவதை,

**"இவரே புலனுழு துண்மார் புன்க ணஞ்சித்**
**தமது பகுத் துண்ணுந் தண்ணிழல் வாழ்நர்"**(புறம்.பா.46:3-4)

என்ற பாடலடிகளின் வாயிலாக அறியலாகின்றது.

**தொகுப்புரை**

- பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதலே அனைத்து அறத்திலும் தலையாயது என்ற உயர்ந்த குறிக்கோளினை சங்கப்புலவர்கள் பதிவு செய்திருப்பதனை இதன்வழி அறியலாகின்றது.
- இனக்குழுவாக வாழ்ந்த மக்களிடையே இத்தகைய பாதீடானது இயல்பாகவே அமைந்துள்ளது. மேலும், தான் வலியவன் என்பதாலோ, தன் முயற்சியினாலேயே இத்தகைய பொருளைக் கொள்ளையடிக்க முடிந்தது என்ற காரணத்தினாலோ கொள்ளையடித்த பொருளில் அவர்கள் தனக்கும் தன்னைச் சார்ந்தவர்களுக்கும் அதிக பங்கு வேண்டும் என்று கேட்கவில்லை. அனைவரும் எவ்வாறு உண்கிறார்களோ அவற்றைப் போலவே தானும் உண்கின்ற சூழ்நிலை இருந்தது.
- இனக்குழுச் சமூகத்தில் இருந்த பாதீடு பண்பே, நிலவுடைமை சமூகத்தில் விருந்தோம்பல் பண்பாக மாறியது.
- மக்கள் தன்னலம் கருதாது பொதுநலச் சிந்தனையோடு சமத்துவம் பாராட்டி வாழ வேண்டும் என்ற சங்கப்புலவர்களின் பாக்களின் வாயிலாகஅறியலாகிறது.

**சான்றெண்விளக்கம்**

1. திருக்குறள் - 322
2. பெ.மாதையன், சங்ககால இனக்குழு சமுதாயமும் அரசு உருவாக்கமும்,ப.42
3. பக்தவத்சலபாரதி, மானிடவியல் கோட்பாடுகள், ப.34
4. கா.சுப்பிரமணியன், சங்ககாலச் சமுதாயம்,ப.13

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 07. சென்னைக்கு மிக அருகில் புதினத்தில் சமுதாய மதிப்புகள் கட்டமைப்பும் கட்டுடைப்பும்

திருமதி.மு.பூங்கோதை
உதவிப்போராசிரியர், தமிழ்த்துறை,
தி ஸ்டாண்டர்டு ஃபயர் ஒர்க்ஸ் இராஜரத்தினம் மகளிர் கல்லூரி,சிவகாசி.

DOI 10.5281/zenodo.10700060

**Abstract :**

Modern literature talks about the values that exist and are followed in the society and the problems created by the society in them. Different social values exist at many levels like family, education, offices, relationships. Society does not run along a uniform and orderly path forever. This society is also changing in various stages according to the change of time. Change is a law of nature. Nothing in the world remains unchanged. Everything in the world is subject to the process of change. In these hands the society also seems to involve many changes. When that changes, traditional values also change. This article explores the values and issues related to values in the society very close to Chennai.

**Key Words : Modern Literature – Novel – Social Values**

நவீன இலக்கியங்கள் சமூகத்தில் நிலவுகின்ற, பின்பற்றப்படுகின்ற மதிப்புகள் பற்றியும் சமூகத்தால் அவற்றில் உண்டாகின்ற சிக்கல்கள் பற்றியும் கூறுகின்றன. குடும்பம், கல்வி, அலுவலகங்கள், உறவுகள் என்ற பல நிலைகளில் பல்வேறுபட்ட சமூக மதிப்புகள் நிலவுகின்றன. சமுதாயம் என்றென்றும் ஒரே சீர் நிலையில் நெறிபடுத்தப்பட்ட பாதையில் இயங்கிக் கொண்டு இருக்காது. காலமாற்றத்திற்கு ஏற்ப இச்சமூகமும் பல்வேறு நிலைகளில் மாறிக்கொண்டே இருக்கிறது. மாற்றம் என்பது இயற்கையின் நியதி. உலகில் எதுவும் மாறாமல் இருப்பது இல்லை. உலகில் உள்ள அனைத்தும் மாற்றம் என்ற நடைமுறைக்கு உட்பட்டனவே ஆகும். இவ் கையில் சமுதாயமும் பல மாற்றங்களை உள்ளடக்கியதாகத் திகழ்கின்றது. அவ்வாhறு மாறுகின்ற பொழுது மரபு சார்ந்த மதிப்புகளும் மாற்றம் அடைகின்றன. சமுதாயத்தில் நிலவுகின்ற மதிப்புகளையும், மதிப்பு சார்ந்த சிக்கல்களையும் சென்னைக்கு மிக அருகில் புதினம் வழி ஆய்வதாக இக்கட்டுரை அமைகின்றது.

## சமுதாய மதிப்புகள்

சமூகம் மரபுதோறும் பின்பற்றும் ஒழுங்கமைவுகள், விழுமியங்கள், நிலைத்த செயல்பாடுகள் மதிப்புகள் என்று அழைக்கப்படுகின்றன. இத்தகைய விழுமியங்கள் (அ) மதிப்புகள் இன்றியமையாத இடத்தினைப் பெறுகின்றன. தொழில் நுட்பத்தின் வளர்ச்சியால் 21 ஆம் நூற்றாண்டில் சமுதாய மதிப்புகள் மாற்றம் பெற்றுள்ளன. ஆதலால் மதிப்புகள் சிற்சில மாற்றம் பெற்று காலப்போக்கில் வேறு கோணத்தில் பரிணமிக்கின்றன.

மதிப்பு குறித்து அறிஞர் தம் விளக்கங்களை ஆராய்ந்தால்,“சமுதாயம் முழுமைக்கோ அதன் குறிப்பிட்ட ஒரு பிரிவு அல்லது வர்க்கத்திற்கோ உள்ள பொதுவான மனித நடத்தைகளின் நியதிகள் மற்றும் தகவுகளின் தொகுதியே சமுதாய மதிப்புகள்”என்ற விளக்கம் பெறப்படுகின்றது. மேலும், “விழுமியம் ஒரு சமூகத்தின் ஆன்மா” என்று கூறப்படுகின்றது.

மதிப்பானது மாறுகின்ற தன்மை கொண்டது என்று கூறுகிறார் பேராசிரியர் சி.தில்லைநாதன், "விழுமியங்களும் அனுபவங்களும் எல்லாக் காலத்திலும் ஒரே மாதிரி அமைவதில்லை. சமூக நிலைகளுக்கேற்ப அவையும் மாறுபடும்" அவர் கருத்தும் உற்றுநோக்கத்தக்கது. மதிப்புகள் விருப்பு வெறுப்புகளை கொண்டு சமூகமயமாக்கப்படுகின்றன என்பதனை, "தனிமனிதர்களின் குறிப்பிட்ட செயல்கள் விரும்பத்தக்கனவா, அல்லனவா எனச் சமூகமயமாக ஏற்றுக்கொள்ளப்பெறும் நீதிகளைக் குறிப்பனவாய்ச் சமுதாய மதிப்புகள் அமைகின்றன" என்ற கூற்று அமைகின்றது. அவ்வாறு மக்களால் விரும்பப்படுகின்றவையே மதிப்புகளாக உருப்பெறுகின்றன என்பதனை, "விரும்பத்தக்கவை எவை, மதிப்பானவை எவை, பொருத்தமானவை எவை என்பன போன்ற சிந்தனைகளே சமுதாய மதிப்புகள் ஆகும்"என்ற கருத்து வாயிலாக காணமுடிகின்றது. மக்களால் சிந்தித்து பகிர்ந்துகொள்ளப்படுபவை மதிப்புகளாக இருப்பதனை,"எது நல்லது, எது தீயது, எது சரி, எது தவறு, எது விரும்பத்தகாதது என மக்களால் பகிர்ந்து கொள்ளப்பெறும் பொதுவான கருத்துக்களே சமுதாய மதிப்புகள் ஆகும்"என்ற கூற்றின் வழி உணரமுடிகின்றது.

மதிப்பு என்ற சொல்லிற்கு "உயர்வாகக் கருதப்படும் நிலை மரியாதை" என்று க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதியும்,"அளவிடுகை, சிறப்பித்தல், கருத்து," என்று சுராவின் தமிழ் தமிழ் ஆங்கில அகராதி விளக்கம் தருகின்றது.

**சமுதாய மதிப்புகள் வகையும் பிரிவுகளும்**

சமுதாய மதிப்புகள் பல வகைகளையும் பிரிவுகளையும் தன்னுள் கொண்டதாக அமைந்திருக்கின்றது. அவவ் கையில், சமுதாய மதிப்புகளை இரு நிலைகளில் பிரிக்கலாம். அவை,

- உடன்பாட்டு மதிப்புகள் - காதல், கற்பு, தாய்மை, பாசம், பக்தி, கொடை
- எதிர்மறை மதிப்புகள்- பொய்மை, தீமை, பாவம், குடிப்பழக்கம், லஞ்சம், பித்தலாட்டம், தேக்கங்கள், சீரழிவுகள்"என்று தி.சு.நடராசன் பகுத்தாராய்ந்துள்ளார்.

மதிப்பிலிருந்து பிறப்பது மதிப்புணர்வு ஆகும். இதனை, வாழ்வியற் களஞ்சியமானது,"மதிப்புணர்வு என்பது உள்ளத்திலிருந்து எழும் உணர்வு, நடத்தை ஆகியவற்றையும், அந்த உணர்வும் நடத்தையும் மற்றவர்களாலும் மதிக்கப்படுகின்றனவா, ஏற்றுக் கொள்ளப்படுகின்றனவா என்பதையும் குறிக்கின்றது. சிறந்த மதிப்புணர்வு மற்றவர்களாலும் ஏற்றுக் கொள்ளப்படல் வேண்டும். மற்றவர்களுக்கும் நன்மை பயக்கக் கூடியதாக அமைந்திடல் வேண்டும். மனித சமுதாயத்தை வழிநடத்திச் செல்லக் கூடியதாகவும் இருத்தல் வேண்டும்" என்று கூறுகின்றது. மதிப்புணர்வுகளை,

- "தனிமனித மதிப்புணர்வு
- சமுதாய மதிப்புணர்வு
- ஆன்மீக மதிப்புணர்வு

- ❖ நன்னடத்தை மதிப்புணர்வு
- ❖ அறிவாற்றல் மதிப்புணர்வு
- ❖ உடல்நல மதிப்புணர்வு
- ❖ இன்ப மதிப்புணர்வு
- ❖ பொழுதுபோக்கு மதிப்புணர்வு
- ❖ பொருளாதார மதிப்புணர்வு
- ❖ அழகு மதிப்புணர்வு

என்று பட்டியலிடுகின்றனர். இவ்வாறு மதிப்புகள் வகைப்படுத்தப்பட்டு இருப்பினும் இவையாவும் ஒன்றோடு ஒன்று நெருங்கிய தொடர்பு கொண்டவைகள் ஆகும். இத்தகைய மதிப்புணர்வுகளுக்குள் ஏற்படுகின்ற மோதல் சமுதாயச் சிக்கலுக்கு வழிகோலுகின்றது.

சிக்கல் என்பதற்கு பிரச்சினை என்பது பொருளாகும். இலக்கிய உருவாக்கத்தில் இச்சிக்கல்களே பின்னப்படுகின்றன. சிக்கல் என்பதற்கு "எளிமையாக அல்லது எளிதாக இல்லாதது, எளிதில் தொடர்புபடுத்த முடியாத பல கூறுகளைக் கொண்ட தன்மை"என்றும்,"தீர்வு காணப்பட வேண்டியதாக இருக்கின்ற நிலைமை, பிரச்சனை" என்று க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி விளக்கம் அளிக்கின்றது. மதிப்புகள் (விழுமியங்கள்) சார்ந்த சிக்கல்கள் தான் இலக்கிய ஆக்கத்தில் முக்கிய இடம் வகிக்கின்றது. இதனை,"புனைகதையினைப் பொறுத்த வரை அதன் கருவினை அமைப்பதற்கும், சம்பவங்களை வருணிப்பதற்கும், கதைமாந்தர் உறவுகளைச் சித்தரிப்பதற்கும், தேர்ந்த மதிப்பீடுகளுக்கு அழுத்தம் தருவதற்கும் அடிப்படையாக அமைவது மனித சமுதாயமும் அதன் பிரச்சனைகளுமே" என்று பேராசிரியர் சி.தில்லைநாதன் அவர்கள் கூறுவதிலிருந்து அறிந்து கொள்ள முடிகின்றது.

மேற்சொன்ன மதிப்புணர்வுகளில் காணப்படுகின்ற சிக்கல்களை „சென்னைக்கு மிக அருகில்" புதினம் முன்வைக்கின்றன.

**தனிமனித மதிப்புணர்வுச் சிக்கல்கள்**

தனிமனிதன் தன் வாழ்க்கையில் பின்பற்றுகின்ற ஒரு செயல் சமுதாயம் முழுமைக்கும் ஏற்றுக்கொள்ளும் போது அது தனிமனிதமதிப்புணர்வாக உருப்பெறுகின்றது. ஒரு தனிமனிதன் தன் வாழ்க்கையில் எத்தகைய மதிப்புணர்வுகளை தன்னிலைக் கொண்டு செயல்படுகிறான் என்பதை வாழ்வியற் களஞ்சியம் பின்வருமாறு சுட்டுகின்றது.

"நெகிழ்வுறும் திறன், தன்னலமின்மை, துணிவு, மனநிறைவு, ஒழுக்கம், காலம், நாணயம், நேர்மை, முழுநிறைவு, விடாமுயற்சி, எதிர்காலத்தின் மீது நம்பிக்கை, எளிமை, தோழமை, பணிவு சாதிக்கும் திறன், நீதி, உருவாக்கும் திறன், உண்மையுடைமை, ஒத்துணர்வு, அருளுடைமை, அன்பு, பரிவு, அழகுணர்வு, மன்னிக்கும் பண்பு, கடவுள் பக்தி,

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

துறவு, பற்றற்ற வாழ்வு, தன்னடக்கம்" முதலிய மதிப்புணர்வுகள் தனிமனிதச் சார்புடையவை ஆகும் இத்தகைய மதிப்புணர்வுகளில் நடைமுறையில் எவை எவை சிக்கலாக இருக்கின்றது என்று நாவலாசிரியர் பதிவுசெய்துள்ளார்.

**தன்னலமின்மை- மதிப்புச்சிக்கல்**

தன்னலம் இன்றி பிறர் நலனில் அக்கறை கொள்ள வேண்டும். அதுவே தன்னலமின்மை ஆகும். ஆனால் இன்று சமுதாயத்தில் தன்னலம் இல்லாத மனிதர்களைக் காண்பது மிகவும் அரிதாகிவிட்டது. நான், எனது, என்னுடையது என்று மனிதர்களின் சிந்தனை மிகக் குறுகிய வட்டத்தில் சுற்றிக் கொண்டு இருக்கின்றது. மனிதர்களின் மனதில் தன்னலம் விரவிக்கிடப்பதை விநாயமுருகன் அவர்கள் தனது நாவலில் பதிவு செய்துள்ளார். சித்திரை என்ற பெரியவரை அவரது பேரன்கள், மருமகள் என அனைவரும் சேர்ந்து அவர் பெயரில் உள்ள நிலத்தை அவருக்கே தெரியாமல் விற்க ஏற்பாடு செய்கின்றதை பார்த்து ராசுக்குட்டி இரக்கப்பட்டாலும், தன்னுடைய ரியல்எஸ்டேட ; நிலவிற்பனை செய்யும் தொழில் நடைபெறவேண்டும் என்ற காரணத்தால் அவன் மனதிலும் தன்னலம் தான் தலைகாட்டுகின்றது.

"தங்கவேலுவின் குடும்பத்தையும் பெரியவர் சித்திரையையும் நினைத்தால் அவனுக்கு பாவமாகத்தான் இருந்தது. ஆனால் எல்லாரையும் விட நான் பாவம் இல்லையா என்று நினைத்துக் கொண்டான்" (செ.மி.க.ப.24) என்ற நாவலில் இடம் பெறும் வரிகளின் வாயிலாக அறிந்து கொள்ள முடிகின்றது.

புதினத்தில் மற்றொரு ஆண் மாந்தரான மாணிக்கவேலு தன்னலத்துடன் இருக்கின்றான். மக்கள் தொகை பெருக்கத்தை எண்ணிக் கவலை கொள்ளாமல் தான் செய்கின்ற ரியல் எஸ்டேட் தொழிலுக்கு மக்கள் தொகை பெருக்கம் அவசியம் என்று தன்னலத்தோடு மகிழ்ச்சி கொள்கின்றான்.

"வாரநாட்களில்கூட இந்த ஜிஎஸடி; சாலை இப்படி திருவிழாக்கூட்டம் போலத் தெரிவது அடிக்கடி அந்தச் சாலையில் பயணிக்கும் மாணிக்கவேலுவுக்குக் கடுப்பாக இருந்தாலும் இன்னொரு பக்கம் மக்களின் பெருக்கம் சந்தோஷமாக இருந்தது. இவ்வளவு மக்கள் இல்லாவிட்டால் அவர் வண்டி ஓடாதே" (செ.மி.அ.ப.26,27)

என்ற வரிகளின் வாயிலாக வியாபார தந்திரம் கொண்ட மாணிக்கவேலுவின் சுயநலம் வெளிப்படுவதை அறிந்து கொள்ள முடிகின்றது. சுயநலத் தேவைகளை மட்டுமே நினைத்துக் கொண்டு மக்கள் ஓடிக் கொண்டிருக்கின்றனர். தன்னலமின்மை என்ற மதிப்புணர்வு இன்று தன்னலம் என்னும் மதிப்புச் சிக்கலாக மாறியுள்ளது.

**ஒழுக்கம்**

மது அருந்துதல், புகைப்பிடித்தல், பிறபெண்களை நாடுதல் போன்ற ஒழுக்கமற்ற செயல்களில் மக்கள் ஈடுபடுகின்றனர். அதனால் ஒழுக்கம் என்ற சமுதாய மதிப்பானது கேள்விக்குள்ளாகியுள்ளது.

மூர்த்தி, பெரியவர் சித்திரையின் குடும்பத்தைப் பற்றி எண்ணுகையில் அவரது மகன்கள் மது அருந்துவதை நினைத்து துன்பமடைகின்றார்.

"யாரும் இப்போது வயலில் இறங்குவதில்லை. இரண்டு மகன்களும் சாராயக்கடையில் விழுந்துகிடக்கிறார்கள்" (செ.மி.அ.ப.39)

அன்றைய காலத்தில் விவசாய வேலை பார்த்தவர்கள், இன்றைய சூழ்நிலையில் மதுக்கடை வாசலில் நிற்கின்றனர். புகைப்பிடிப்பது உயிர்க்கு கேடு விளைவிக்கின்ற ஒழுக்கமற்ற செயலாகும். ஆனால், இக்காலத்தில் தன்னைவிட வயதில் மூத்தருக்கு மதிப்பு தராது முகத்திலே சிகரெட் புகையை ஊதுகின்றனர். சித்திரையின் பேரன் பாலாஜி அவனது பெரியப்பா மகன் பொன்ராசுவினை அண்ணன் என்று கூட நினையாமல் அவனது முகத்தி;ல் சிகரெட் புகையை ஊதுகின்றான். இதனை, "அண்ணனாச்சே என்று மரியாதை இருக்கா பாரு. சிகரெட்டைக் கீழே போடுடா" என்று ராசுக்குட்டி சொல்ல பாலாஜி "யாரு இவனா?" என்று கேட்டுவிட்டு பொன்ராசு பக்கம் திரும்பி அவனது முகத்திலேயே புகையை ஊதினான்" (செ.மி.அ.ப.218) என்ற வரிகளின் வாயிலாக அறிந்துகொள்ள முடிகின்றது. தவறான தொழில் புரியும் பெண்களைச் சந்தித்து அவர்களிடம் உடலுறவு கொள்வது ஒழுக்கமற்ற செயலாகும். ஆனால் திருமணத்திற்கு முன்பு இத்தகைய தவறுகளை மனிதர்கள் செய்கின்றனர். ராசுக்குட்டி இவ்வhறு பெண்களிடம் செல்வதை, "ராசுக்குட்டி அவனது வடீ ;டிற்குச் செல்லாமல் பைக்கைத் திருப்பிக் கொண்டு பரிமளா குடிசை வாசலில் பைக்கை நிறுத்தினான். எதேச்சையாக குடிசைக்குள்ளிருந்து வெளியில் வந்த பரிமளாவுக்கு துணுக்குற்றது" (செ.மி.அ.ப.241) என்ற வரிகளின் வாயிலாக அறிந்துகொள்ள முடிகின்றது. ஒழுக்கம் உயிரினைவிட மேலானது என்ற மதிப்பு மறைந்துவிட்டது. ஒழுக்கமின்மையே சமூகத்தில் நிலவுகின்றது என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

**நேர்மை**

தனிமனித மதிப்புணர்வுகளில் „நேர்மை" என்பது மிகவும் இன்றியமையாதது ஆகும். எண்ணம், சொல், செயல் ஆகியவற்றில் நேர்மையுடன் செயலாற்ற வேண்டும். ஆனால் இக்காலத்தில் நேர்மையுடன் பணிபுரிகின்றவர்களை காண்பது அரிதாகிவிட்டது. நிலவிற்பனை தரகர்கள் சமுதாயத்தில் அதிகமாக உருவாகியுள்ளனர். அவர்களிடம் நேர்மை இல்லை. அடுத்தவர்களை ஏமாற்றுகின்ற எண்ணமே அதிகமாக இருக்கின்றது.

"தெருவுக்குத் தெரு பெட்டிக்கடை மாதிரி ரியல் எஸ்டேட் கம்பெனிங்க முளைச்சிடுச்சு என்று தங்கவேலு சொன்னார். வாஸ்தவம் தான் கொஞ்சம் அசந்தா நம்மகிட்ட அடிமாட்டு விலைக்கு வாங்கி ஏமாத்திடுவானுங்க திருடனுங்க" (செ.மி.அ.ப.20)

என்ற அடிகளின் வாயிலாக அறிந்து கொள்ள முடிகின்றது. செய்கின்ற தொழிலை தெய்வமாக எண்ணி மனிதன் பணிபுரிந்த காலம் மறைந்து சமூகத்தில் பொய்மை நிலைத்துவிட்டது.

**பணிவு**

சென்னைக்கு மிக அருகில்" புதினத்தில் சித்திரை என்ற வயதான பெரியவரிடம், அவரது மருமகள், மகன், பேரன் முதலியோர்; மரியாதை குறைவாக நடந்து கொள்கின்றனர்.

"சித்திரையின் இரண்டு மகன்களும் எதுவும் கண்டுகொள்வதில்லை. மருமகள்கள் நல்லநாளில் கூட முகம் கொடுத்துப் பேசமாட்டார்கள்" (செ.மி.அ.ப.15)

கணவனின் தந்தையிடம் பணிவில்லாமல் நடந்து கொள்ளும் மருமகள் யசோதா பற்றி அறிந்து கொள்ள முடிகின்றது. பெரியவர் சித்திரையின் நிலத்தை விற்றுப் பணத்தை சொந்தமாக்குவதே அனைவரின் விருப்பமாகும். வீட்டிலுள்ளோர் அவருடைய வயதிற்கு மரியாதை தருவதில்லை. அவரது பேரன் பாலாஜியும் எதிர்த்துப் பேசுகின்றான்.

"ஏன் அந்த நிலத்த வித்துக் கொடேன். அதை வச்சு காலத்துக்கும் மாரடிச்சுகிட்டு அப்படி என்னத்த அதில இருந்து சம்பாதிச்சே" (செ.மி.அ.ப.16)

சித்திரை நிலங்களை விவசாயத்திற்குத்தான் பயன்படுத்துவேன் என்றும் நிலவிற்பனைத் தரகர்களுக்கு விற்க முடியாது என்று பிடிவாதமாக இருக்கின்றார். அதன் காரணத்தினால் அவரது மகன்கள் அவரைத் தரகுறைவாக பேசுகின்றனர்.

"பலமுறை பேசிப் பார்த்துட்டோம். அவரு எதுக்கும் சரிப்பட்டு வரமாட்டாரு. வயசான காலத்துல நந்தி மாதிரி குறுக்க படுத்துக்கிட்டு" (செ.மி.அ.ப.2)

பெரியவர் சித்திரையிடம் அவரது குடும்பத்தில் உள்ளோர் அன்பு செலுத்தாமல் பணிவுடன் நடந்து கொள்ளாமல் இருக்கின்றனர். முதியோர் - இளையோருக்கு இடையிலான „பணிவு" என்ற மதிப்புணர்வு நடைமுறை வாழ்வில் சிக்கலாக மாறியிருப்பதை உணரலாம்.

**உண்மை**

உண்மையுடைமை இக்காலத்தில் நடைமுறையில் இருக்கின்றதா?என்றே கேள்வி எழுகின்றது. தன்னுடைய இன்பத்திற்காகவும், சுயநலத்தேவைகளுக்காகவும் தன் மனதறிந்தே மனிதன் பொய் கூறுகின்றான். பொருளாதார தேவையை நிறைவேற்றவும், சமுதாயத்தில் தனக்கான ஒரு இடத்தை அமைத்துக் கொள்வதற்காகவும் வாயிலிருந்து பொய்கள் மட்டுமே வருகின்றன. இதனை, நாவலாசிரியர் பதிவு செய்திருக்கின்றார். நிலவிற்பனைத் தரகர்கள் உண்மை பேசாதவர்கள், பொய் மட்டுமே அவர்களது வாயில் வருகின்றன என்பதனை தங்கவேலு கூறுகின்றார்.

"ரியல் எஸ்டேட் தரகர்கள் என்றால் வாயை திறந்தாலே ஜேசிபி வாயிலிருந்து மண் கொட்டுவது போலப் பொய்கள் வந்து கொட்டும்" (செ.மி.அ.ப.22)

தொழில் ரீதியாக பணத்தினை ஈட்டுவதற்காக ரியல் எஸ்டேட் தொழில் புர்pகின்ற நபர்கள் பொய் கூறுகின்றனர் என்பதனையும் அறிந்து கொள்ள முடிகின்றது. ரியல் எஸ்டேட் தொழிலுக்கான விளம்பரங்களில் முழுவதும் பொய்களே கூறப்படுகின்றன. அதில் நடிக்கின்ற நடிகன் - நடிகையர் அந்த ரியல் எஸ்டேட் நிறுவனத்தில் பணிபுரின்ற நபராகவே இருக்கின்றனர். அவர்கள் „வீட்டு மனை வாங்கிய பிறகே எனக்கு செல்வம் கிட்டியது" என்;று அடுக்கடுக்காகப் பொய்கள் கூறுவார்கள். உண்மை கூறினால் முன்னேற்றம் அடைய இயலாது என்ற நிலை இன்று மதிப்புச்சிக்கலாக உருவாகிவிட்டது.

**துறவு**

துறவு என்பது சமயம் சார்ந்த மதிப்புணர்வு ஆகும். உலக வாழ்க்கை, ஆசைகள், குடும்பம், இன்பங்கள் போன்றவற்றை விடுத்து இறைவனே ஆதாரம் என்று எண்ணி வாழ்வதே துறவறமாகும். ஆனால், நடைமுறையில் ஆன்மீக வாழ்க்கையில் ஈடுபடுகின்றேன், துறவு வாழ்வு மேற்கொள்கிறேன் என்ற பெயரில் தவறுகள், பித்தலாட்டங்களை மறைக்கத் துறவு என்ற காவிப் போர்வையை மூடிக்கொண்டு தங்களின் பலவனீ ங்களை மறைத்துக் கொண்டு உலகமகா உத்தமர்களாக வேடம் போடுகின்ற போலிச்சாமியார்களின் நடமாட்டம் சமூகத்தில் அதிகரித்துவிட்டது.

துறவு மேற்கொண்டு இருப்பவர்கள் பெண் ஆசையை துறக்க வேண்டும். ஆனால் இக்காலத்தில் துறவு என்ற பெயரில் ஆசாமிகள் அக்கிரமம் செய்கின்றனர். யோகராஜ் சாமியாரும், காவய் hஸ்ரீ என்ற சின்னத்திரை நடிகையும் போலித்துறவு மேற்கொண்டு உல்லாச வாழ்க்கை மறைமுகமாக வாழ்கின்றனா.; இதனை தொலைக்காட்சி செய்திகள் உலகுக்கு வெளிச்சம் போட்டு காட்டுகின்றன.

"மகாமுத்ரா யோகராஜ;சாமியாரும், பிரபல டி.வி.சீரியல் நடிகையும் பெங்களூரில் ஓர் ஆசிரமத்தில் உல்லாசமாக இருக்கும் போது நமது சிறப்பு செய்தியாளர்களால் பிடிபட்டார் (செ.மி.அ.ப.137,138)

துறவு மேற்கொண்டு இருப்பவர்கள் பணம், புகழ் போன்றவற்றின் மீது பற்றற்று இருக்கவேண்டும். நாவலில் வருகின்ற குருஜி ஊடகத்தின் மூலம் புகழ் தேடிக் கொள்ள விரும்புகின்றான். பணத்தாசை உடையவனாகவும் இருக்கின்றான்.

பற்றின்மை தான் துறவு என்ற மதிப்புணர்வு மாறி பணம், புகழ், பெண், பொன் போன்ற உலகப் பொருட்களின் மீது பற்று கொண்டு இருத்தலே துறவு என்று கூறுகின்ற அளவிற்கு போலித் துறவிகள் பலர் சமுதாயத்தில் உருவாகிவிட்டனர். சமுதாயத்தில் போலி ஆன்மீகவாதிகள் பலர் உருவாகிவிட்ட சூழலில் துறவு என்ற மதிப்புணர்வு சிக்கலாக மாறிவிட்டது.

**அன்பு**

அன்புள்ளம் உடையவரின் உடம்பே உயிர் தங்கியுள்ள உடம்பாகும். அன்பில்லாதவரின் உடலில் உயிர் இருந்தும், அவவு;டம்பு வெறும் தோலால் மூடப்பட்ட உயிரற்ற வெற்றுடம்பு ஆகும.; ஆனால் சுயநலம் பெருகிவிட்ட இக்காலத்தில் தான், தன்னுடைய கணவன், பிள்ளைகள் என்று அன்பு காட்டி சுயநலமாக வாழுகின்றனர். குடும்பங்களில் வயதில் முதிர்ந்த பெரியோர்கள் மீது அன்பு செலுத்த அக்குடும்பத்தில் இருப்போர் முன்வருவதில்லை. நாவலில் பெரியவர் சித்திரைக்கு காலில் அடிபட்டு இருக்க, அவரை மருத்துவமனைக்கு அழைத்துச் சென்று கவனிக்க யாரும் முன்வரவில்லை.

புண்ணு செப்டிக் ஆயிருக்கு பெரியரே, நான்தான் சொன்னேன் இல்லையா? வயல்ல இறங்காதீங்க. கால்ல தண்ணி படாம கவனமா வச்சிக்குங்கன்னு. ஏன் உங்க வடீ;ல இருந்து யாரும் வரலையா?" (செ.மி.அ.ப.15)

மேற்கண்ட வரிகளின் வாயிலாக அறியலாம். பெரியவர் சித்திரையின் மகன்களுக்கு மனைவி, பிள்ளைகள் என்று தனியாக குடும்பம் அமைந்த பின்னர் பெரியவர் மீது அன்பு செலுத்தாமல் இருக்கின்றனர். பெரியவர் சித்திரையின் பெயரில் உள்ள இரண்டு ஏக்கர் நிலத்தின் மீதே அவரது குடும்பத்தில் உள்ள நபர்களின் எண்ணமும் செயலும் இருக்கின்றது. சுயநலப் போக்கில் அமைந்த இச்சமூகத்தில் அன்பு சார்ந்த மதிப்புணர்வும், சுயநலத் தன்மையோடு சிக்கலாக உருப்பெற்றுள்ளது.

**நட்பு**

நண்பனின் துன்பத்தில் பங்குபெற்று துன்பத்தை நீக்கும் தன்மைதான் சிறந்த நட்பு என்கிறார் வள்ளுவர். ஆனால் இக்காலத்தில் தன் நண்பனுக்கு ஒரு துன்பம் உண்டாகிறது என்பதை அறிந்தவுடன் அதனால் தனக்கும் துன்பம் ஏற்பட்டு விடுமோ? என்று எண்ணி அஞ்சி வெளியூருக்குச் சென்று விடுகின்றனர். நாவலில் ராசுக்குட்டி, ; அவனது நண்பன் பொன்ராசு பெண் விஷயத்தில் போலீஸில் பிடிபட்டவுடன் வடீ;டை பூட்டி விட்டு வெளியூருக்குச் செல்வதைக் காணலாம்.

"ராசுக்குட்டி சாமர்த்தியமாக அவனது அறையைப் பூட்டிக் கொண்டு ஊரைவிட்டு வெளியே சென்று விட்டான். அவனையும் சந்தேக கேஸில் விசாரித்தால்?" (செ.மி.அ.256)

„உயிருக்கு உயிரான நட்பு" என்ற மதிப்பானது தற்காலத்தில் வெறும் கேளிக்கை, பொழுதுபோக்கு, அரட்டை என்பதற்காக மட்டுமே என்று மாறிவிட்டதை நாவலாசிரியர் பதிவு செய்திருக்கின்றார்.

**சமுதாய மதிப்புணர்வுச் சிக்கல்கள்**

மனிதர்கள் வாழ்கின்ற நிலையே சமுதாயமாக உருப்பெறுகின்றது. சமுதாயம் என்பதனை விளக்குகையில் "பொதுவான உ;டற்கூறியல்புகளையும், பொதுவான விருப்பார்வங்களையும், பொதுவான வாழ்க்கை நோக்கங்களையும் பொதுவான விதி

முறைகளையும் கொண்டுள்ள உறுப்பினர்களை ஒன்றிணைக்கும் அமைப்பபைச் சமுதாயம் எனலாம்" என்ற கருத்தானது கிடைக்கின்றது. இச்சமுதாயத்தில் மனிதர்கள் பின்பற்றுகின்ற மதிப்புகள் ஒட்டு மொத்த சமூகம் என்று எண்ணுகையில் சமுதாய மதிப்புணர்வுகளாக பரிணமிக்கின்றது. மக்களின் தொகுதியாக விளங்குகின்ற ஒடட்டு;மொத்த சமுதாயத்திற்கான மதிப்புணர்வுகளை வாழ்வியற் களஞ்சியமானது, "தியாகம், சிறந்த பழக்கவழக்கங்கள், வாய்மை, தவறு செய்யாமை, நன்றியறிதல், நகைச்சுவை உணர்வு, நட்பு, பெருந்தன்மை, தாராள மனப்பான்மை, நன்றியுணர்வு, விருந்தோம்பும் பண்பு, இன்னா செய்யாமை, நாட்டுப்பற்று, குடியுரிமை உணர்வு, சுதந்திர உணர்வு, சுற்றுச்சூழல் பற்றிய உணர்வு, நீதி, அமைதியில் நாட்டம், சமநிலை, சமயச்சார்பின்மை, வகுப்பு ஒருமைப்பாட்டுணர்வு, கூட்டுறவு" வரையறுத்துள்ளது. தனிமனித மதிப்புணர்வுகளும் சமுதாய மதிப்புணர்வுகளும் ஒன்றை ஒன்று சார்ந்து செயல்படுபவை ஆகும். ஏனெனில் தனிமனிதனே சமுதாயமாக வளர்ச்சி அடைகின்றான்.

**சுற்றுச்சூழல் பற்றிய உணர்வு**

மனிதனும் இயற்கையும் இணைந்து வாழும் சூழலே மேம்பட்ட சூழல். சுற்றுச்சூழல் என்பதற்கு "உயிரினங்களும் அவை வாழும் பகுதியில் உள்ள காற்று, நீர் போன்றவையும் அடங்கிய இயற்வை அமைப்பு"என்று அகராதி விளக்கம் தருகின்றது. நிழல் தந்து மழைக்கு ஆதாரமாக இருக்கின்ற மரங்கள், தாகத்தை தணிக்கின்ற நீர் நிலைகள், மண்வளம் போன்றவற்றை காக்க வேண்டியது ஒவ்வொரு மக்களுடைய கடமை ஆகும். ஆனால் இக்காலத்தில் சுற்றுச்சூழலை பாதுகாக்க வேண்டும் என்ற உணர்வு அரிதாகிவிட்டது. மாறாக, நாள்தோறும் சுற்றுச்சூழலை அழித்துக் கொண்டு இருக்கின்றனர். சமுதாயத்தில் மக்களிடம் சுற்றுச்சூழலை பராமரிக்க வேண்டும் என்ற எண்ணம் குறைந்து கொண்டே வருவதையும், இயற்கையை மனிதன் அழித்துக்கொண்டே வருகிறார்கள் என்பதை சென்னைக்கு மிக அருகில் புதினத்தின் ஆசிரியர் விநாயக முருகன் பதிவு செய்துள்ளார். மழைக்கு ஆதாரமாக இருக்கின்ற மரங்கள் அழிக்கப்பட்டு தொழிற்சாலைகளும், வடுPகளும் பெருகி வருகின்றன.

"ஒரு காலத்தில் இந்தச் சாலையின் இரண்டு பக்கங்களிலும் எவ்வளவு மரங்கள் இருந்தன. மேற்குத் தாம்பரம் என்றால் மலைகளும், வனங்களும் நிறைந்த பகுதியல்லவா? இப்போது முடிச்சூர் சாலையின் இரண்டு புறமும் அடையாளம் தெரியாதளவு அடுக்குமாடிக் குடியிருப்புகளும், கடைகளும் முளைத்திருந்தன" (செ.மி.அ.ப.14) என்று பெரியவர் சித்திரை எண்ணுவதின் வாயிலாக அறியலாம். சாலையில் வெயிலுக்கு ஒதுங்குவதற்கு கூட மரங்கள் இல்லாமல் அழிக்கப்பட்டுள்ள அவல நிலையினை நாவல் பதிவுசெய்துள்ளது. "முன்பு சாலையின் இரண்டு புறமும் புளியமரங்களும் வாதாமரங்களும் இருந்தன. இப்போது எதுவும் இல்லை" (செ.மி.அ.ப.15) பெரியவர் சித்திரை இளவயதில் மீன் பிடித்து விளையாடிய ஏரிகள் இப்போது குப்பை மேடுகளாக இருக்கின்றன. "காட்டு முயல்களையும், உடும்பையும் பார்த்தே மாமாங்கம் ஆகின்றன. அவர்கள் மீன்கள் பிடித்த ஏரிகள்தானே இப்போது குப்பை மேடுகளாக உருமாறிக் கிடக்கின்றன" (செ.மி.அ.பக்.288,289) நீர் நிலைகள் வற்றிப் போனதால், மக்கள்

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

அவற்றை குப்பை கொட்டுகின்ற இடமாக மாற்றியுள்ள அவலம் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. இவ்வாறு நீர் செல்லுகின்ற பாதைகளை எல்லாம் அடைத்தால் மழைநீர் ஊருக்குள் தான் வரவேண்டிய நிலை உண்டாகும். தற்போது சென்னையில் ஏற்பட்ட மிகப்பெரிய வெள்ளத்திற்கு காரணம் ஏரியின் சுற்றுச்சூழலை பாதிப்புத் தான். மனிதனின்; சுயநலத்தேவைகளால் சுற்றுச்சூழல் பற்றிய உணர்வு சுருங்கிவிட்டது.

**தொகுப்புரை**

- சமுதாய மதிப்பு பற்றிய சித்திரிப்பில், சமுதாயத்தில் நின்று நிலைத்த விழுமியங்களை பற்றி தெரிந்து கொள்ள முடிகின்றது.
- சமுதாய மதிப்புகள் உடன்பாட்டு மற்றும் எதிர்மறை மதிப்புகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.
- சமுதாயமதிப்புகள் குறித்து அறிஞர்கள் கூறுகின்ற கருத்தினை அறிந்து கொள்ள முடிகின்றது.
- சமுதாயத்தில் சிக்கலான தனிமனித மதிப்புகள்;, சமுதாய மதிப்புகள் பற்றியும் ஆய்வில் தெரிந்து கொள்ள முடிகின்றது. மதிப்புணர்வுகள் எதிர்மறை விளைவுகளை ஏற்படுத்திய பாங்கு புதினம் வழி நிறுவப்பட்டது.

தன்னலமின்மை, ஒழுக்கம், நேர்மை, பணிவு, உண்மை, துறவு, அன்பு, நட்பு, காதல் போன்ற தனிமனித மதிப்புணர்வுகள், சுற்றுச்சூழல் உணர்வு, வகுப்பு ஒருமைப்பாட்டுணர்வு ஆகிய சமுதாய மதிப்புணர்வுகள் சமுதாயத்தில் சிக்கலாக இருக்கின்ற தன்மை சான்றாதாரங்கள் வழி ஆராயப்பட்டது

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 08. சமத்துவ நோக்கில் நேயர்விருப்பம்

**திருமதி. பெ.ஆனந்தி**

உதவிப்பேராசிரியர், முதுகலை & தமிழாய்வுத்துறை,

தி ஸ்டாண்டர்டு ஃபயர் ஒர்க்ஸ் இராஜரத்தினம் மகளிர் கல்லூரி,சிவகாசி.

DOI 10.5281/zenodo.10700204.

**Abstract :**

Literary enjoyment is a sign of Tamil prosperity. In the Tamil literary genres that emphasize virtue and pleasure, the idea of equality that everyone is equal is unique. Pudukavithas have a place in the Tamil literary genres that are pleasant to read. This thesis is set up to record the egalitarian thoughts in one of Abdul Rahman's poetry collections, "Neyar Virupam", which is hailed by Tamil lovers as Kaviko.

**Ket Words : Literature – moderan poetry**

இலக்கிய இன்பம் தமிழின் வளமை அடையாளம். அறத்தையும் இன்பத்தையும் திகட்டதிகட்ட அள்ளித்தரும் தமிழ் இலக்கிய வகைமைகளில் யாவரும் சமம் என்ற சமத்துவ எண்ணம் பிரதிபலித்தல் தனிச்சிறப்பு .படித்ததும் இனிக்கின்ற தமிழ் இலக்கிய வகைகளுள் புதுக்கவிதைகளின் இடம்நிலையானது. கவிக்கோ எனத் தமிழ் அன்பர்களால் வாழ்த்தப்படும் அப்துல்ரகுமானின் கவிதைத்தொகுப்புகளில் ஒன்றான “நேயர்விருப்பம்” என்ற நூலில் நிறைந்திருக்கிற சமத்துவ எண்ணங்களைப் பதிவு செய்யும் வகையில் இவ்ஆய்வுக்கட்டுரை அமைக்கப்பெறுகின்றது.

## சமத்துவம் எனும் அறம்

சமத்துவம் என்ற சொல் தமிழ்கூறும் நல்லுலகில் சங்கம் தொட்டே பயன்பாட்டில் இருந்தது. தமிழ்ப் பண்பாட்டில் பகிர்ந்துண்ணல், விருந்தோம்பல், தன்னைப் போல பிறரை எண்ணுதல், ஈகை, உயிர்நேயம் எனக் குறிப்பிடப்படும் பல அறங்கள் நமக்கு சமத்துவ,சகோதரத்துவ நோக்கையே வெளிப்படுத்துகின்றன.

சமத்துவம் என்ற சொல்லிற்கு க்ரியாவின் தமிழ்அகராதி, “உலகில் மக்கள் அனைவரும் சமம் என்றும் மக்களுக்குச் சமவாய்ப்புகள் கிடைக்கவேண்டும் என்றும் கூறும் கொள்கை” என விளக்கம் தருகிறது. அனைவரும் சமம் என்ற உயரிய கொள்கையை அறிஞர்கள் பலரும் தத்தம் கால இலக்கியங்களில் பதிவு செய்ய தவறியதில்லை.

அப்துல்ரகுமான் கவிதைகள் இலக்கிய வானில் என்றும் ஒளிவீசக் கூடியவை. கவிதை நிலத்திலே விதைக்கப்படுபவை எதிர்கால சந்ததிகளால் அறுவடை செய்யப்படும் நல்ல விளைச்சல் என்பதை மனதில் கொண்டு அடுத்த தலைமுறை மீது அன்பும் அக்கறையும் கொண்டு தம் கவிதைகளிலே சமத்துவ எண்ணத்தை விதைத்துள்ளார்.

## சமூகச் சமத்துவம்

சமூகம் என்ற அமைப்பு மனிதனால் வடிவமைக்கப்பட்டது. “மனிதன் வெளியுலகத்துடன் தொடர்பு கொண்டு பல தரப்பட்ட மக்களுடன் கலந்து வாழும் வாழ்க்கை

சமூக வாழ்க்கை எனப்படும்."[1] அவ்வாறு கட்டமைக்கப்பட்ட சமூகத்தில் சேர்ந்து பயணிக்க உறுதி கொண்ட நாம் எவ்வித ஏற்றத்தாழ்விற்கும் பேதங்களுக்கும் இடமளிக்காமல் சமத்துவ எண்ணம் கொண்டு வாழ வேண்டும் என்பதை,

**"எப்படிக்கூடுவது**
**என்பதிலேபேதங்கள்**
**எப்படிவாழ்வது**
**என்பதிலேகுத்துவெட்டு**
**பயணத்தில்சம்மதம்**
**பாதையிலேதகராறு" (நேயர்விருப்பம். ப.57)**

எனக் கவிஞா எடுத்துரைக்கிறார். மனிதன் சமத்துவத்தைக் கைவிடும் போது வன்முறை பிறக்கிறது. சாதி, சமயம், மொழி, இனக்கட்டுப்பாடுகள் மனிதனால் கட்டுவிக்கப்பட்டவை. தான் காண விரும்பும் ஒப்பிலாச் சமுதாயத்தில் இவையல்லா இனிய வாழ்வைக் காண விரும்புகிறார் கவிஞர்.

**"சாதிகள் இருக்குமங்கே**
**சரித்திரத்தின் ஏடுகளில்" (நேயர்விருப்பம். ப.60)**

எனக் கூறி சாதிய முறையைச் சாடுகிறார். இறை வழிபாட்டிற்கென உருவாக்கப்பட்ட பல்வேறு மதங்களின் பெயராலும் மனிதர்கள் சமத்துவத்தை இழத்தலைக் கண்டு வருந்துகிறார். சமுதாயத்தில் சமத்துவத்தை நிலைநாட்டுவதற்கான சட்டங்கள் இயற்றப்படுதலை,

**"சமுதாய ஒழுங்குக்குச்**
**சட்டங்கள் இருக்குமங்கே**
**இடியாக அல்ல**
**இனிய மழையாக" (நேயர்விருப்பம். ப.60)**

என விமர்சிக்கிறார். எனவே, சமூக சமத்துவம் நாடி சாதி, சமயம் கடந்த ஒப்பிலாச் சமுதாயத்தை உருவாக்கிக் கவிஞர் மகிழ்வடைகிறார்.

**பாலினச் சமத்துவம்**

ஆண் பெண் என்ற பாலினப் பாகுபாடு உயிரியல் சார்ந்தது. இதில்வேறுபாடுபாராட்டக்கூடாது என்ற உயரிய எண்ணமே பாலினசமத்துவம்ஆகும். ஆனால் நம் சமூகத்தில் ஆணுக்கு ஒரு நீதியும் பெண்ணுக்கு ஒரு நீதியுமே கற்பிக்கப்படுகிறது. " சமூகத்தின் சமத்துவம் இன்மை, சமூக எதிர்பார்ப்பாக கோபமாக வெளிப்படாமல் தன்னையும்

தன் இனத்தையும் கசந்து கொள்ளும் கசப்பாக வெளிப்படுவதற்குத் தன்நிலையைக் கேள்வியின்றி ஏற்கும்படியாய்க் காலங்காலமாய்ப் பெண்ணுக்குக் கற்பிக்கப்பட்டு அது அவள் நனவிலிமனம் வரை ஆழமாய்ப் பதிந்திருப்பதும்இன்றியமையாத காரணம் ஆகின்றது”[2] என்பார்எனவே,பாலினச் சமத்துவம் அவசியமானது. அப்துல்ரகுமான்,

**“திரவப் பெண்மைக்குத்**

**திடப்பொருள் கிண்ணமாய்**

**ஆண்மை இருக்குமங்கே” (நேயர்விருப்பம். ப.64)**

என ஆண்மை பெண்மையின் பாதுகாப்பாய்த் திகழ வேண்டுமெனவும்,

**”ஆண்மையுடன்போட்டியிடும்**

**ஆவேசத்தில்அங்கே**

**மெல்லியபெண்மை**

**மீசைவளர்க்காது” (நேயர்விருப்பம். ப.64)**

எனப் பெண்மை மற்றும் ஆண்மையின் உண்மையான புரிதலையும் விளக்கிச் செல்கிறார். ஆணுக்கு நிகராய்ப் பெண்மையை முன்னேற்றச் செய்யும் முயற்சி சமூகத்தின் வளர்ச்சியாகப் பார்க்க முடிகிறது. எனவே, கவிஞர் பாலினச் சமத்துவத்தை விரும்பி அடுத்த தலைமுறைக்கும் அதை விதைத்துள்ளமை அறியமுடிகிறது.

**அரசியல் சமத்துவம்**

மக்களுக்காகச் செயல்பட வேண்டிய அரசு,மக்களிடையே சமத்துவத்தை ஏற்படுத்த வேண்டிய அரசு, பிளவுபட்டதாயும் அரசியல்கட்சிகள் தத்தமக்குள் வெறுப்பு கொண்டதாயும் இருத்தல் கண்கூடு .அரசியலில் சமத்துவம் இருந்தால் மட்டுமே ஆட்சியில் சமத்துவம்நிகழும். “ஒரு சமுதாயத்தில் எழுகின்ற பிரச்சனைகளுக்கெல்லாம் காரணம் அந்தச் சமுதாயத்தின் அடிப்படைகளே ஆகும். அந்த அடிப்படைகளின் தரத்திற்கேற்பவே அந்தச் சமுதாயத்தின் பிரச்னைகளும் அமையும். நமதுநவீனசமுதாயஅடிப்படை சுரண்டல்!”[3] என்ற கருத்தும் ஈண்டு எண்ணத்தக்கது.

**பேனாக்களே!**

**கிரீடங்களைக்கழற்றிவிட்டுத்**

**தலைகுனியுங்கள்**

**நீங்கள்இருப்பது**

**தாள்களுக்காக**

**பைகளுக்காகஅல்ல! (நேயர்விருப்பம். ப.86)**

என அப்துல்ரகுமான் சாடியிருப்பது இன்றைய அரசியல்வாதிகளையே. நமது பணி என்ன என்பதைச் சிந்தித்து வேற்றுமை பாராட்டாது மக்கள் நன்மையை மட்டுமே விரும்பும் அரசியல் தலைவர்கள் அரசியல் சமத்துவம் கொண்டவர்களாகின்றனர். இத்தகைய சமத்துவத்தோடு இயங்குகிற அரசியல்வாதிகளாலே நாட்டுமக்களை நல்வழிப்படுத்த இயலும். வாக்கு எண்ணிக்கையை மாற்றி மக்களை ஏமாற்றி தலைவர்களாகிற போலி அரசியல்வாதிகளைக் கடிந்து அப்துல்ரகுமான்,

**“வாக்குப் பெட்டிகளைச்**

**செயற்கை முறையால்**

**சினையாக்க முடியாது**

**கருச்சிதைவு செய்யும்**

**காரியமும் நடக்காது”(நேயர்விருப்பம்.ப.61)**

எனக் கவி பாடியுள்ளார். மக்களின் வாக்குகளைத் தவறாகப் பயன்படுத்தி ஊழல் விளைவிக்கும் போலி அரசியல்வாதிகளைக் கண்டுமனம் வருந்தி அரசியலிலும் சமத்துவம் காண விழைகிறார்.

**பொருளாதாரச் சமத்துவம்**

பொன் பொருளோடு இருப்பவர்களே உயர்ந்தவர்களாகப் பார்க்கப்படுகிற சமத்துவமற்ற சமூகத்தில் பொருளாதாரச் சமத்துவம் அதிகம் தேவைப்படுகிறது. “எல்லாருக்கும் எல்லாம் என்றிருப்பதான இடம் நோக்கி நடக்கின்றது இவ்வையம்” [4] என்ற பொதுமைத்துவம் அனைவர் மனதிலும் விதைக்கப்பட வேண்டியதாகும்.

உழைப்பை முதலீடாகக் கொண்டவர்கள் முன்னேற்றம் காணாமல் பொருளாதாரப் பின்னடைவைச் சந்தித்தலை அப்துல்ரகுமான் சாடுகிறார். அவர்தம்,

**“வியர்வை முகவரிக்கு**

**வந்த பணவிடையைப்**

**பொய்க்கை எழுத்துப்**

**போடுவோர்க்கல்லவா**

**கொடுத்து விட்டுப் போகின்றாய்**

**கொடுமை யிது ஒழிவதென்று?” (நேயர்விருப்பம்.ப.30)**

என்ற கவிதை வரிகள் தை மகளைப் பார்த்து நீதி கேட்பதாக அமைகின்றது. உழைக்கும் நபர்களுக்கு வந்த பணவிடையை வேடிக்கை பார்க்கும் நபர்கள் வாங்கிச் செல்லும் அவலத்தை எடுத்துரைக்கிறது. ஆண் பெண் என்ற பாகுபாடு இல்லாமல் உழைக்கும் அனைவருக்கும் பொருளாதாரச் சமத்துவம் மிகவும் தேவையானது.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

**சட்ட சமத்துவம்**

குற்றங்களைக் குறைக்கவும் குற்றம் செய்தோரைத் தண்டிக்கவும் சட்டங்கள் இயற்றப்பட்டன. "சட்டங்கள் என்பது என்ன? ஒருச மூகத்தின் வளர்ச்சிக்கு உகந்தது என்று அந்தச் சமூகத்தின் மேல்நிலையிலுள்ளவர்களால் அங்கீகரிக்கப்பட்ட கொள்கைகளைச் சிதைவுபடாமல் பாதுகாப்பதே சட்டம்." [5]அனைவருக்கும் பொதுவானச் சட்டங்கள் பணமும் அதிகாரமும் படைத்த சிலரை மட்டுமே சார்ந்து இயங்கலாயின. இந்த அவலநிலையினை வெறுத்த அப்துல்ரகுமான்,

**"நீதிமன்றம் இருக்குமங்கே**
**நீதியை விற்கும்**
**சந்தையாக அல்ல**
**சத்தியத்தின் நிழலாக**
**அங்கே விசாரிக்கப்படுவன**
**குற்றங்களல்ல**
**குற்றத்தின் காரணங்கள்" (நேயர்விருப்பம்.**ப.60)

என்று கவி இயற்றியுள்ளார். நீதியை நிலை நாட்ட வேண்டிய நீதிமன்றங்களே சட்டத்தில் ஓட்டையிட்டு கோட்டைவிட்டுக் கொண்டிருக்கிற அவலம் நம் சமூகத்தில் நிகழ்ந்தேறிக் கொண்டிருக்கிறது. இந்நிலைமாறிநல்லதொருசட்டசமத்துவத்தைக்கவிஞர்வேண்டுகிறார். மேலும்,

**"எங்கள்**
**வழிப்பயணவிரைவுக்கு**
**வாகனத்தின்சக்கரமாய்**
**நாணயத்தைச்செய்தோம்**
**அதுவோ-**
**வீதிவிடங்கன்தேர்ச்**
**சக்கரமாய்உருள்கிறது"** (நேயர்விருப்பம்.ப.88)

என்ற வரிகளில் வீதிவிடங்கனாகிய மனுநீதிச்சோழனின் நீதியை நிலைநாட்ட விரும்பியுள்ளார். விரைவுச் சக்கரமாய் மாறிவிட்ட இன்றைய நீதிமுறைமை உண்மையில் தவறு செய்தவருக்குத் தண்டனையையும் குற்றவுணர்வையும் தரவேண்டியது ஆகும். குற்றத்தைக் குறைக்கவும் தர்மத்தை நிலைநாட்டவும் சட்டத்திலும் சமத்துவத்தைக் கடைபிடிக்க வேண்டியது அவசியமாகும்.

**முடிவுரை**

யாவரும் சமம் என்ற உயரிய அறத்தைச் சமத்துவம் என்கிறோம். சமத்துவநோக்கில் அப்துல்ரகுமானின் நேயர்விருப்பம் கவிதைத்தொகுப்பை அணுகினால் பல வகைச மத்துவச் சிந்தனைகளை உணரமுடிகிறது. சாதி, மதம், இனம் கடந்ததாகிய சமூகசமத்துவம் தற்போதைய தேவையாகும். ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்ள வேண்டிய பாலினச் சமத்துவமும் தன்பொறுப்புணர்ந்து செயல்படவேண்டிய அரசியல் சமத்துவமும் முக்கியத்துவம் பெறுகின்றன. தன்னிறைவு பெற்ற பொருளாதாரச் சமத்துவமும் குற்றங்களைக் குறைப்பதற்கான சட்டச் சமத்துவமும் இக்காலச் சூழலில் இன்றியமையாதன.

**சான்றெண்விளக்கம்**

1. க.சிவனேசன், திஜானகிராமன் புதினங்களில் பாலியல் சிக்கல்கள், ப.18
2. பாத்திமாசூசை, தமிழ்ப் புனைகதைகளில் உளவியல், ப.65
3. திலகவதி, ஜெயகாந்தன் சிந்தனைகள், ப.70
4. பாரதிதாசன், பாண்டியன் பரிசு, இயல்56
5. திலகவதி, மேலது, ப. 96

# 09. சிலப்பதிகாரத்தில் சமத்துவ நீதி

**திருமதி வீ.வெள்ளைத்துரைச்சி,**
**உதவிப்பேராசிரியர், முதுகலை & தமிழாய்வுத்துறை,**
**தி ஸ்டாண்டர்டு ஃபயர் ஒர்க்ஸ் இராஜரத்தினம் மகளிர் கல்லூரி, சிவகாசி.**

DOI 10.5281/zenodo.10701048

**Abstract :**

The rule of the king may be the reason for the spread of virtue in the world and the prosperity of others who cultivate virtue. Realizing these reasons, the kings of ancient times ruled with virtues such as system, honesty, and moderation. That is why even though the times have changed, the proud rule of the ancient kings is still admired today. Among the elements that express the culture of a race, the ability to provide system that prevailed among those races is also significant. In this essay we will see that in the ancient times, the kings gave justice with equality through Silapathikaram.

**Key Words : Literature – Silapathikaram – Justice**

## முன்னுரை

உலகில் அறம் தழைக்கவும், அறம் வளர்க்கும் ஆன்றோர் வாழ்வு சிறக்கவும் அரசனின் ஆட்சி முறையே காரணமாக அமையும் எனலாம். அக்காரணங்களை உணர்ந்தே பண்டையகால அரசர்கள் முறைமை, நேர்மை, நடுவுநிலைமை போன்ற நற்பண்புகளோடு விளங்கி நல்லாட்சி புரிந்தனர். அதனால் தான் காலங்கள் மாறினாலும் பண்டையகால அரசர்களின் பெருமைவாய்ந்த அரசாட்சிமுறை இன்றும் போற்றப்படுகின்றது . ஓர் இனத்தின் பண்பாட்டினை வெளிப்படுத்தும் கூறுகளில் அவ்வினமக்களிடையே நிலவிய முறைமை வழங்கும் திறமும் குறிப்பிடத்தக்கதாகும். பண்டைய காலத்தில் அரசர்கள் சமத்துவத்துடன் நீதி வழங்கியதைச் சிலப்பதிகாரத்தின் வழி இவ்ஆய்வுக் கட்டுரையில் காண்போம்.

## உறுபொருள் மீது அனைவருக்கும் சமநீதியை வழங்குதல்

உறுபொருள் என்பது உடையார் இன்மையின் தாமே வந்துற்ற பொருள். "வைத்தார் இறந்து போக நெடுங்காலம் நிலத்தின்கண் கிடந்து பின் கண்டெடுத்ததூஉம், தயத்தார் பெறாததூஉமாம்"[1] என்று பரிமேலழகர் பொருள் தருகிறார். இங்கு உறுபொருள் என்பது புதையலைக் குறிப்பதை அறிய முடிகின்றது. உறுபொருள் கவர்தல் என்பது அரசியலுக்கு மாறான குற்றமாகும். அதற்குச் சிறைத்தண்டனை வழங்கியதைச் சிலப்பதிகாரத்தின் வழி அறிய முடிகின்றது.

சோழநாட்டில் பராசுரன் என்னும் பார்ப்பனன் வாழ்ந்து வந்தான். அவன் தன்னுடைய புலமையைக் காட்டி, உதியஞ்சேரலாதனின் அவையில் உள்ள பார்ப்பன மேதைகளோடு சொற்போட்டுப் பார்ப்பன வாகை சூடினான். உதியஞ்சேரலாதன் அவனுக்குப் பெரும்பொருளையுடைய பரிசிலை வழங்கினான். அதனை வாங்கிக் கொண்டுவரும் வழியில் பாண்டிய நாட்டில் திருத்தங்கல் என்ற ஊரில் உள்ள மன்றின் அருகிலிருந்து அரசமர நிழலில் அமர்ந்து இளைப்பறினான். அப்பொழுது அவனை அவ்வூர்ச் சிறுவர்கள் சூழ்ந்திருந்தனர். அவன் அவர்களிடம், 'எனக்கு இணையாக வேதம் ஓதுபவர்களுக்கு இச்சிறுபொதியைக்

கொடுப்பேன்'; என்று கூறினான். அதைக் கேட்டு வார்த்திகன் மகன் தட்சிணாமூர்த்தி மறையொலி சிறிதும் வழுவாமல் வேகம் ஓதினான். அதனைக் கண்டுமகிழ்ந்த பராசுரன் அவனிடம் பரிசுப்பொதியைக் கொடுத்துவிட்டுச் சென்றான். தட்சிணாமூர்த்தியின் வீட்டார் இவ்வணிகலன்களை அணிந்து மகிழ்ந்தனர்.

இதனைக் கண்ட அரசுப் பணியாளர்கள் சிலர் அரசியல்முறைமைக்கு மாறாக இப்பார்ப்பான் அரசுக்குச் சேர வேண்டிய புதையல் பொருளைக் கவர்ந்து கொண்டான் என்று குற்றம் சுமத்திச் சிறையிலடைத்தனர். இதனால் அவனின் மனைவி கார்த்திகை மனம் வருந்தினாள். இதனைக் கண்ட கொற்றவை தெய்வம் தன்னுடைய கோயிலின் கதவை மூடிக்கொண்டது. இதனை அறிந்த மன்னன் மனம் வருந்தி ஏவலர்களிடம், 'என் ஆட்சியில் கொடுங்கோன்மை ஏதாவது நிகழ்ந்ததா? கொற்றவைக்கு ஏற்பட்ட வருத்தம் என்ன? என்பதை ஆராய்ந்து கூறுங்கள் 'என்று கட்டளையிட்டான். அப்பொழுது ஏவலர்கள் வார்த்திகனை சிறையிலிருந்து விடுத்து மன்னன் முன் நிறுத்தினர். வார்த்திகனின் காலில் விழுந்து மன்னன் மன்னிப்பு கேட்டான். இது என் தவறல்ல என்னுடைய கடமை தவறிய அறிவில்லாத காவலர்களின் தவறு என்று கூறி அவனை சிறையிலிருந்து விடுத்தான். அவனுக்குத் திருத்தங்கல் என்ற ஊருடன் குறைவுபடாத விளைவினை உடைய வயலூர் என்ற ஊரினையும் இறையிலியாக வழங்கினான் என்பதனை,

"கோத்தொழில்இளையவர்கோமுறைஅன்றி

படுபொருள்வெளவியபார்ப்பான்இவன்என

......................................................

செய்வினைக்கதவம்திறவாதாகலின்"

(சிலம்பு.கா.23 : 101-108)

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. பாண்டியன் நெடுஞ்செழியன் இந்நிகழ்விற்குப் பிறகு, பார்ப்பனருக்கு மட்டுமன்றி அனைவருக்கும் புதையலின் மீது சமஉரிமையை ஏற்படுத்தியதை,

"இடுபொருளாயினும்படுபொருளாயினும்

..........................................

கோன்முறையறைந்தகொற்றவேந்தன்"

(சிலம்பு.கா.23 : 128-131)

என்ற பாடலடிகள் சுட்டுகின்றன. இதனை "பிறர்கொடுத்த பொருள் எனில் அது பெற்றவருக்கும், புதையல் எனில் அது எடுத்தவருக்கும் சொந்தமாகும் என்று யானைப்பிடரியிலே அழகிய முரசினை ஏற்றி அரச ஆணையாகப் பறை அறிவித்தான்."[2] என்ற கருத்தும் அரண் செய்கிறது.

உறுபொருளாகிய புதையல் அரசுக்குச் சேர வேண்டியது. அதை எடுப்பவர்களுக்குச் சிறைத்தண்டனை கொடுக்கப்பட்டதை வார்த்திகனை சிறையில் அடைத்தனர் என்பதன் வாயிலாக அறிய முடிகின்றது. மேலும், மன்னன் தனது காவலர்கள் செய்ததவற்றிற்கு மன்னிப்புக்கேட்டு, பார்ப்பனர்கள் அரச குலத்திற்கு மேலாக இருந்த நிலையிலும், அரசன் ஒரு சாராக நீதி வழங்காமல், அனைத்து வர்ணத்தாருக்கும் உறுபொருள் சொந்தம் என நீதி வழங்கியுள்ளது வழியாக அக்கால அரசர்கள் சமத்துவத்துடன் நீதி வழங்கியுள்ளதை அறிய முடிகின்றது.

**நீதி வழங்கும் அரசனே தவறு செய்தாலும் அதற்கான தண்டனை பெறல்**

சிலப்பதிகாரத்தில் அரசியின் சிலம்பினைக் கோவலன் திருடினான் எனக் கருதிய பாண்டிய மன்னன் ஆராயாமல் அவனுக்கு மரணதண்டனை வழங்கினான். அவன் சிலம்பிற்காக மரணதண்டனை வழங்கினான் என்பதன் வழி அன்று அரச பொருள்களுக்கு வழங்கப்பட்ட மதிப்பினை அறிய முடிகின்றது. அரசப்பொருள் அல்லாமல் பிறபொருளாக இருந்திருந்தால் மன்னன் விசாரணை செய்து தண்டனை வழங்கியிருக்கலாம். அவனை மதிமயங்கச் செய்தது அரசப்பொருள் என்பது காரணமாக இருக்க வாய்ப்பு உள்ளது. அரசப்பொருளைத் திருடியவனைக் கொல்வது தவறுஅல்ல என்று கண்ணகியிடம் பாண்டிய மன்னன் கூறுகின்றான். இதனை,

“தாழ்பூங்கோதைதன்கால்சிலம்பு
கன்றியகள்வன்கையதுஆகின்
கொன்றுஅச்சிலம்புகொணர்க…”

(சிலம்பு.கா.16 : 151-153)

என்ற பாடலடியும் விளக்குகின்றன. சிலப்பதிகாரத்தில் கோவலனுக்குத் தவறான தண்டனை வழங்கியதை அறிந்த பாண்டிய மன்னனும் தனக்குத் தானே தண்டனை வழங்கி இறந்ததை,

“யானோஅரசன்யானேகள்வன்
..............................................................
மன்னவன்மயங்கிவீழ்ந்தனனேதென்னவன்”

(சிலம்பு.கா.20 : 75-78)

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. இவற்றின் வாயிலாக தவறான தண்டனை வழங்கியதால் மன்னன் உயிர்துறந்து, தான் செய்த தவற்றிற்கு தனக்குத்தானே தண்டனை வழங்கியதை அறிய முடிகின்றது. நாட்டை ஆளும் அரசனாக இருந்தாலும், குற்றம் புரிந்தால் அதற்குத் தகுந்த தண்டனையைத் தனக்குத் தானே தந்துள்ளான் என்பது பண்டைய மக்களின் சமத்துநீதி விளங்குகின்றது.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

**அனைத்து உயிர்களுக்கும் நீதி ஒன்று**

மனுநீதிச் சோழனின் மகன் தேரில் செல்லும் போது தேர்க்காலில் பட்டு ஒரு பசுவின் கன்று இறந்தது. இதனைக் கண்ட பசு கண்ணீர் வடித்துக் கொண்டு மனுநீதிச்சோழனின் அரண்மனைக்குச் சென்று ஆராய்ச்சி மணியை ஒலித்தது. இதனைக் கண்ட மனுநீதிச்சோழன் நடந்தவற்றைக் கேட்டு அறிந்து நீதி வழங்கும் பொருட்டு, தன் மகன் என்றும் பாராமல் தேர்க்காலில் இட்டு தேரினை ஏற்றிக் கொன்றான். இவ்வாறு அஃறிணை உயிராக இருந்தாலும் நீதி அனைவருக்கும் ஒன்று எனக் காட்டியதை,

“வாயில்கடைமணிநடுநாநடுங்க
ஆவின்கடைமணிஉகுநீர்நெஞ்சுசுடத்தான்தன்
அடும்பெறல்புதல்வனைஆழியில்மடித்தோன்”

(சிலம்பு.கா.20 : 53-56)

என்ற பாடலடிகள் படம் பிடித்துக் காட்டுகின்றன. தனக்குப் பிறந்த குழந்தையைத் தன் உயிரை விட மேலாக அனைத்து உயிர்களுமே நினைக்கும். அதே எண்ணம் தான் அரசாளும் மன்னனுக்கும் இருக்கும். இருந்தும் மன்னன், அஃறிணை உயிராகிய ஒரு தாய்ப்பசுவின் உணர்வுக்கு மதிப்புக் கொடுத்து, தன் மகனைக் கொன்று அந்தப் பசுவின் மனவலியைத் தானும் பெற்றான். இதன் வாயிலாக பண்டைய காலத்தில் அனைத்து உயிர்களுக்கும் சமநீதி வழங்கியதை அறிய முடிகின்றது. ஆனால் இன்று மனிதன் வலியை மனிதனே புரிந்து கொள்ளாமல் மிருகமாக இருக்கிறார்கள். சமநீதி என்பது பேச்சுவழக்கில் மட்டுமே உண்டு.

**பிறன்மனை நயத்தல் குற்றத்திற்குச் சமத்துவத்து நீதி வழங்கல்**

“பண்டைக் காலத்தில் மக்களிடையே நிலவிய வழக்கநெறியை (custom)ஒட்டியே நியாயம் வழங்கப்பட்டது. அரசனும் ஆளப்படும் மக்களும் தருமத்திற்கு அடங்கியே நடக்க வேண்டும்.”[3]குற்றம் புரிந்தவர்கள் யாவராயினும் தண்டிக்கப்பட வேண்டும் என்ற பொதுவான ஒப்பந்த முறையும் அதற்குத் தன்னை ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும் என்ற இயைபு முறையும் அன்று இருந்தது. எவரும் செல்வத்தையும் அதிகாரத்தையும் காட்டித் தப்பித்துக் கொள்ள முடியாது. அரசனும் இதற்கு விதிவிலக்கல்ல. “அனைவருக்கும் பொதுவான பாரபட்சமற்ற வேற்றுமை காட்டாத நீதிமுறையை நிலைநிறுத்த சட்டம் தன் வழிச் செல்கிறது. இதனைச் ‘சட்டத்திற்கு முன் அனைவரும் சமம்’ (Equality before law) என்பர். நீதி சட்டத்தின் வழிச் செல்லுகையை நல்லாட்சி முறையின் அடிப்படை விதியாகவும் கருதுகின்றனர். இதனைத் ‘தருமம் தன் வழிச் செய்கை கடன்’ என்றும் ‘அறநெறியின் செவ்விய திறம்’ என்றும் சேக்கிழார் சுட்டுகிறார்.”[4]

கீரந்தை என்ற அந்தணன் வெளியூருக்குச் செல்லும்போது பயந்த தன் மனைவியிடம் மன்னனின் காவல் உண்டு. அதனால் கவலைப்படாதே என்று கூறிச் செல்கின்றான். திடீரென ஒரு நாள் அவ்வந்தணனின் வீட்டில் உரையாடல் சத்தம் கேட்கவும், மாறுவேடத்தில் சென்ற அரசன் கதவைத் தட்டினான். அப்பொழுது அந்தணனின் மனைவி பயந்து இதுவரைக் காத்த

அரசனின் காவல் இன்று காவாதோ எனக் கேட்டாள். இதனைக் கேட்ட அரசன் கவலையுற்று, தான் செய்ததவற்றுக்கு வருந்தி தனக்குத் தானே தன் கையை வெட்டிக் கொண்டு தண்டனை வழங்கினான் என்பதை,

"உதவாவாழ்க்கைக்கீரந்தைமனைவி
புதவக்கதவம்புடைத்;தனன்ஒருநாள்
..............................................................
இறைக்குடிப்பிறந்தோர்க்குஇழுக்கம்இன்மை"

(சிலம்பு.கா.23 : 42-53)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. மணிமேகலையில், உதயகுமாரன் கொலையுண்ட செய்தியை உதயகுமாரனின் தந்தையான அரசனிடம் துறவி கூறும் போது, ககந்தனுடைய இளையமகன் (இளவரசன்) காவிரியில் நீராடி விட்டு வந்த பார்ப்பினியை(மருதி) 'நீவா' என அழைத்தான். இதனால் வருந்திய அப்பார்ப்பினிப் பெண் சதுக்கப் பூதத்திடம் சென்றாள். பத்தினிப் பெண்டிர் பிறருடைய நெஞ்சில் புகார். நானோ பிறனுடைய நெஞ்சில் புகுந்தேன். தவ மறைந்தொழுகுவோர்,கணவன் அறியாது மறைந்து தீயஒழுக்கத்திலே ஈடுபடுகின்ற ஒழுக்கங்கெட்ட பெண்கள், வஞ்சனை புரியும் அமைச்சர், பிறர்மனை நயப்போர், பொய்க்காயாளர், புறங்கூற்றாளர் ஆகியோரைக் கொல்லும் நீ என்னையும் கொல் என்று வேண்டினாள். சதுக்கப்பூதம் அவள் முன்தோன்றி "நீ கணவரைத் தொழாமல் பிறதெய்வங்களைத் தொழுதாய், பிற சமயத்தார் கூறும் பொய்மொழிகளையும் விடுகதைகளையும் கேட்டு நகைத்தாய், திருவிழாக்களைக் காணவிரும்பினாய். எனவே நீ பெய் என்றால் மழை பெய்யாது. தீய எண்ணமுள்ள பிறர் நெஞ்சைச் சுடும் ஆற்றல் உனக்கில்லை. கற்புடை மகளிர்க்கு வேண்டாத செயல்களை நீக்கினால் நீ பெய் என்றவுடன் மழை பெய்யும்."[5] எனக் கூறியது. இங்கு அப்பெண் கற்புடைய மகளிர்க்குரிய தகுதிகள் இல்லாது இருக்கிறாள் என்று குறை கூறுவதோடு குற்றம் செய்யாத அவளைத் தண்டிக்கவும் மறுக்கிறது. மனம் போனவாறு ஒழுகும் பெண்டிரைக் கட்டுவது போல் என் பாசக்கயிறு உன்னைக் கட்டாது என்றது. பின் ககந்தனின் இளைய மகனை ஏழுநாட்களுக்குள் அரசன் தண்டிப்பான். அப்படி இல்லையென்றால் நான் தண்டிப்பேன் எனக் கூறுகிறது. ஏழாம் நாள் அவனது இளையமகனை வாளால் வெட்டிக் கொல்கின்றான். இதனை,

"தெள்ளுநீர்க்காவிரிஆடினள்வரூஉம்
பார்ப்பனிமருதியை, பாங்கோர்இன்மையின்
......................................................
பூதம்உரைத்தநாளால், ஆங்குஅவன்
தாதைவாளால், தடியவும்பட்டனன்"

(மணி.கா.23 : 39-79)

என்ற பாடலடிகளால் அறிய முடிகின்றது. மேலும், நான்சொல்வதை இன்னும் கேள் என்று துறவி, உதயகுமாரனின் தந்தையான அரசனிடம் கூறினார். தரும தத்தன் என்பவன்

வணிகக்குலத்தைச் சார்ந்தவன். இவனுடைய மாமன் மகள் விசாகை. இவர்கள் காந்தருவ மணம்புரிந்ததாகக் கூறி ஊரார் பழிதூற்றினர். இதனைக் கந்திற் பாவையிடம் முறையிட்டாள். கந்திற் பாவை இவள் குற்றமற்றவள் எனக் கூறியது. பின்வீதியில் சென்ற விசாகையின் அழகில் மயங்கிய ககந்தனின் மகன், மருதி என்னும் பார்ப்பனப் பெண்பொருட்டு இறந்தவனின் தமையனுமாகியவன். இவன் அவனுடைய குடுமியில் இருந்த மாலையை விசாகைக்கு அணிவிக்கும் பொருட்டு தலைக்குக் கை சென்றது. ஆனால் அக்கை திரும்ப கீழே வரவில்லை. இதனை அறிந்த ககந்தன் தன் மகன் என்றும் பாராமல் அக்காமுகனை வெட்டிவாளுக்கு இரையாக்கி கொலைத்தண்டனை வழங்கினான் எனக் கூறுகிறார். இதனை,

“குமரிமூத்தஅக்கொடுங்குழைநல்லாள்
அமரர்அருளால், அகல்நகர்இடூஉம்
...............................................................
மைந்தன்தன்னைவாளால்எறிந்தனன்;”

(மணி.கா.22 : 143-161)

என்ற பாடலடிகளால் அறிய முடிகின்றது.

மேலும், உதயகுமாரன் கொல்லப்பட்டதை அறிந்த அரசன் (கிள்ளிவளவன்), சோழிக வேணாதியைப் பார்த்து “தன் மகனைப் பூமியிலே கிடத்தி அவன்மீது, தேர்க்காலைச் செலுத்தி முறை செய்த அரசர் பிரானுடைய பரம்பரையில் ஒரு தீ வினையாளன் பிறந்தான் என்பதை மற்றைய அரசர்கள் கேட்கு முன்னம் அவனைப் புறங்காடடைவிப்பீர்”[6] என்று கூறுவதிலிருந்து அரசனுடைய நல்லாட்சி திறம் வெளிப்படுகின்றது.

பிறர்மனை நயந்தவனுக்குத் தண்டனையாக பெரும்பாலும் கொலைத்தண்டனையே அளிக்கப்பட்டுள்ளதையும், அரசு ஆளும் அரசனுக்கும் இத்தண்டனையே வழங்கப்பட்டுள்ளதை அறிய இயலுகின்றது. பொற்கைப் பாண்டியன் தவறான எண்ணத்தில் பார்ப்பனனின் கதவைத் தட்டாததால் அவனுக்கு அவனே கைக்குறைப்புத் தண்டனை கொடுத்துள்ளான். பிற பிறன்மனை நயத்தல் குற்றங்கள் எல்லாம் தவறான எண்ணத்துடனே நிகழ்ந்துள்ளதால் அரசாளும் மன்னனின் வாரிசாக இருந்தாலும் கொலைத்தண்டனை வழங்கப்பட்டுள்ளதை அறியஇயலுகின்றது. ஆனால் இன்று பணபலம், பதவிபலம், அரசியல்பலம் உள்ளவர்கள் எக்குற்றம் புரிந்தாலும் அவர்கள் பக்கமே நீதி வழங்கப்படுகிறது.

### தொகுப்புரை

வார்த்திகன் பிராமணன் என்பதால் அவ்வர்ணத்தாருக்கு மட்டுமே உறுபொருளில் (புதையல்) உரிமை உள்ளது என நீதி வழங்காமல், அனைத்து மக்களுக்கும் (நால்வகைவர்ணத்தாருக்கும்) சமஉரிமை உள்ளது என நீதி வழங்கியதன் வாயிலாக அக்கால மன்னர்கள் சமத்துவடன் நீதி வழங்கியதை அறிய முடிகின்றது. நாடாளும் மன்னனாக இருந்தாலும், அவர்தம் வாரிசுகளாக இருந்தாலும் குற்றம் புரிந்தவர்களுக்குத்

தண்டனை வழங்கப்பட்டதை நெடுஞ்செழியன் (தவறான நீதி வழங்கல்), மனுநீதிச்சோழன்(மகனைத் தேர்காலில் இட்டு கொல்லுதல்),ககந்தன் (பிறன்மனை நயத்தலுக்கு இரு மகன்களைக் கொல்லல்), கிள்ளிவளவன் (உதயகுமரன் இறந்தது தவறில்லை எனக் கூறல்) வாயிலாக சிலப்பதிகாரத்தின் வழி அறிய முடிகின்றது. பண்டையகால மக்கள் சமத்துவத்துடன் நீதி வழங்கியுள்ளதைச் சிலப்பதிகாரத்தின் வழி அறிய முடிகின்றது. மேலும் அக்கால மன்னர்கள் செங்கோலாட்சிப் புரிந்ததையும் அறியமுடிகின்றது. ஆனால், இன்றைய சமுதாயத்தில் சமத்துவநீதியானது பேச்சுவழக்கில் மட்டுமே உள்ளதே தவிர நடமுறையில் இல்லை என்பதைப் பல நிகழ்வுகள் மூலம் அறியலாம். இன்று நீதி என்பது பணபலம், பதவிபலம், அரசியல்பலம் படைத்தவர்கள் பக்கமே உள்ளதை நாம் அன்றாடம் பல நிகழ்வுகள் வழி காண்கிறோம்.

**சான்றெண் விளக்கம்**

1. பரிமேலழகர் (உ.ஆ), திருக்குறள், ப.285.
2. ப.சரவணன், சிலப்பதிகாரம் (பதிப்பும் உரையும்), பக்.383-384.
3. மா.சண்முக சுப்பிரமணியன், குற்ற இயல் சட்டம், ப.6-7.
4. மேலது, ப.7.
5. உ.வே.சா(ப.ஆ), மணிமேகலை, ப.LXXXi.
6. மேலது, ப.LXXXiV.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 10. பாரதம் சிறக்க பன்முகவழிகள்

**முனைவர் கீழடி கருமுருகேசன்,**
தமிழ்த்துறைத் தலைவர், அரசு கலை (ம) அறிவியல் கல்லூரி,
கப்பலூர் - 625008, திருமங்கலம், மதுரை மாவட்டம்.
DOI 10.5281/zenodo.10701094.

**Abstract :**

For many years, the glorious ship Bharatdesam has been building and saving its pride, civilization, culture etc. It is enriching itself, enriching the world and enriching the world with its innumerable riches. This action is similar to the Earth revolving around the Sun. This Indian ship is helping its countrymen to cross the ocean of life in many ways. Unceasingly continues the task of taking people to the other side of the ocean of life without suffering. Some pores have appeared in this vessel and the maintenance condition has also developed. In this case, people have to work together and use their skills to repair the ship. This article suggests some methods for that.

**Key Words : Bharath – Motivation – Good Thinking**

## முன்னுரை

பாருக்கெல்லாம் திலகமாகத், திகழும் பாரததேசம் என்னும் கப்பல் பல்லாண்டுகளாக தனது பழம் பெருமை, நாகரிகம், பண்பாடு முதலியவற்றைக் கட்டிக் காப்பாற்றி வருகின்றது.அது, தனது எண்ணற்ற அரும்பெரும் செல்வங்களால் தன்னையும் வளமாக்கி, உலகையும் வளமாக்கி, உலகையும் வளமாக்கி வருகின்றது. இச்செயல், பூமி தன்னைத் தானேச் சுற்றிக் கொண்டு சூரியனைச் சுற்றுவது போலாகும். இந்தப் பாரதக் கப்பல் தன் நாட்டு மக்களின் வாழ்க்கைக் கடலைக் கடக்கப் பன்முறையிலும் நன்முறையில் உதவி வருகின்றது. அம்மக்களை, வாழ்வியல் கடலின் துன்பமற்ற மறுகரைக்கு அழைத்துச் செல்லும் பணியைத் தொய்வின்றித் தொடர்கின்றது. இத்தகுக் கப்பலில் சில நுண்துளைகள் தோன்றிப் பராமரிக்கும் நிலையும் உருவாகி உள்ளது. இந்நிலையில், மக்கள் ஒன்றுபட்டு இயங்கித் தத்தம் திறன்களைப் பயன்படுத்திக் கப்பலின் பழுதுநீக்கும் பணியை மேற்கொள்ள வேண்டும். அதற்குரிய சில வழிமுறைகளை இக்கட்டுரை பரிந்துரைக்கின்றது.

## அகந்தை அகற்றுவோம்

மற்றவர்களைத் துச்சமாகப் பார்க்கும் பழக்கத்தை, முதலில் விட்டொழிக்க வேண்டும்.

ஒரு காட்டில் நான்கு எறும்புகள் நடந்து சென்றன. எதிரே ஒரு யானை வந்தது. அதைப் பார்த்ததும் ஓர்எறும்பு, ‘நம் வழியில் குறுக்கிடும் இவனைக் கொல்லவா என்றது. இரண்டாவது எறும்பு, ‘அவனைக் கொல்ல வேண்டாம். நான்கு கால்களையும் நசுக்கி விடலாம் என்றது. மூன்றாவது எறும்பு, ‘அவனைத் தூக்கித்தூர எறிந்துவிட்டு நம் வழியில் செல்வோம்’ என்றது. நான்காவது எறும்பு, யானையை மேலும் கீழும் அலட்சியமாகப் பார்த்து விட்டு‘ நாம் நாலுபேர், அவன் ஒருவன், நாலு பேர் சேர்ந்து ஒருவனைத் தாக்குவது நம் வீரத்திற்கு அழகல்ல: அவனை மன்னிப்போம்’ என்றது.

மனிதருக்குள் தான் நினைப்பது தான் சரி என்ற அகங்காரம் வந்துவிட்டால் இந்த எறும்புகளைப் போல யானைகளைக் கூடத் துச்சமாகப் பார்க்கும் இழிநிலை ஏற்படும்.

நற்குணங்களை வளர்ப்போம்.

நோய் உண்டாகக் காரணங்கள் இரண்டாகும். ஒன்று வெளியில் உள்ள நச்சுக்கிருமிகள்: இன்னொன்று உடலின்தன்மை. உடல் நச்சுக் கிருமிகளைத் தன்னுள்ளே அனுமதிக்காத எதிர்ப்புச் சக்திகளைப் பெற்றிலங்கும் வரை எந்தக் கிருமிக்கும் நோயை உண்டாக்கும் சக்தி இல்லை. உண்மையில் ஒவ்வொரு நாளும் பற்பலக் கிருமிகள் எல்லாருடைய உடலின் உள்ளேயும் தொடர்ந்து வந்து போய்க் கொண்டுள்ளன. ஆனால், உடல் ஆரோக்கியமாக இயங்கும் வரை அவற்றைப் பற்றிய உணர்வே ஏற்படுவதில்லை. உடல்பலவீனம் அடையும் போது மட்டுமே அக்கிருமிகள் உடலினுள் புகுந்து நோயை உண்டாக்குகின்றன.

பாரதத்தின் நிலையும் இது போன்றதே என்பதை உணர்தல் வேண்டும். மக்களிடையே தியாக மனப்பான்மை, சேவை மனப்பான்மை, பண்பாடு, நாகரிகம், பொறுமை, அன்பு, பணிவு, சகிப்புத்தன்மை, விருந்தோம்பல் முதலிய நற்குணங்கள் இருக்கும் வரை நாட்டிற்குக் கேடு விளைவிக்கும் எந்தக் கிருமிக்கும் இடமில்லை என்பதை அறிதல் வேண்டும்.

சமுதாய மருத்துவரான திருவள்ளுவர்,

**'நோய்நாடி நோய்முதல்நாடி அதுதணிக்கும்**

**வாய்நாடி வாய்ப்பச் செயல்"1**

என மொழிவது பாரத தேசத்திற்கு ஏற்படும் பஞ்சம், வறுமை, பிணி, சோம்பல் முதலிய நோய்களைத் தீர்க்க வழி சொல்லும் குறளுமாகும். மணிமேகலைக் காப்பியம்,

**"பசியும் பிணியும் பகையும் நீங்கி**

**வசியும் வளனும் தரக்கென வாழ்த்தி."2**

எனக் கூறுவது போல, நாடு நற்குணங்களால் வாழ வாழ்த்த வேண்டும். நாடு இருந்தால் தான் வீடு என்பதை நன்கு தெளிதல் வேண்டும்.

**பாமரர் உயர்வு பாரதத்தின் உயர்வு**

பாமர மக்களைப் புறக்கணித்து ஒதுக்கியது மக்கள் செய்த மகாப்பாவங்களுள் ஒன்றாகும். ஒரு நாட்டின் வீழ்ச்சிக்கான காரணங்களுள் இதுவும் ஒன்றாகும். பாரதியார்,

**"காக்கை குருவிஎங்கள் ஜாதி-நீள்**

**கடலு மலையு மெங்கள் கூட்டம்"3**

எனப் பாடியதைக் கவனத்திற் கொண்டு, பாரதத்தின் பாமரமக்களுக்குப் பயிற்றிப் பல கல்வி தந்து இந்தப் பாரை உயர்த்தப் பாடுபட வேண்டும். கல், கடவுள் சிலையானால் புனிதம் பெறுகின்றது. ஆனால், அதைக் கண்டு எல்லாரும் வழிபட சில மனிதம் மறுக்கின்றது. இரைச்சல்களைக் கேட்டோ இடியோசைகளைக் கேட்டோ அஞ்சாது, 'எழுமின் விழிமின்

உழைமின் உயர்மின்' எனச் செயலாற்றப் பழகவேண்டும்; பிறரைப் பழக்கவும் வேண்டும். மனம், மொழி, மெய் எனும் மூன்றாலும் 'பாரதத்தின், 'சீரிளமை திறம் வியந்து செயல் மறந்து வாழ்த்தும்' எண்ணம் வளர வேண்டும் கைகளில் கலப்பை பிடித்த உழவர்களின் குடிசைகளில் இருந்து புதியபாரதம் புத்துணர்வுடன் எழப்பாடுபட வேண்டும். உழைக்கும் கரங்களில் இருந்தும் உருவாக்கும் கரங்களில் இருந்தும் அந்தப் பாரதம் உலகிற்கு வழிகாட்டும் வித்தைகளைக் கற்கும் விந்தைகளைச் செயல்படுத்த வேண்டும்.

**பாரதத்தில் இருப்பதும் இருக்க வேண்டியதும்**

பண்பட்ட பாரதத்தை வலுவாக்க இன்புற்றுச் செய்ய வேண்டிய பணிகள் ஏராளமாக இருக்கின்றன. ஆனால், அவற்றை நடத்தி முடிப்பதற்கு நாட்டில் வசதிகள் குறைவாகவே உள்ளன. மக்களிடம் பண்பட்ட அறிவு நிறைவாக இருக்கின்றது. ஆனால், பணி புரிய கைகள் குறைவாக இருக்கின்றன. தேசத்தின் சித்தாந்தக் கருத்துகள் சிந்தையைக் கவர்கின்றன. ஆனால், அவற்றைச் சீரும்சிறப்புடனும் செயற்படுத்திப் பேரும் புகழும் பெறும் ஆர்வமில்லை. நமது பழம்பெரும் நூல்களில் உலக ஒற்றுமை, சமத்துவம், நல்லிணக்கம் பற்றிய கோட்பாடுகள் மிளிர்கின்றன. ஆனால், மக்களின் நடைமுறை வாழ்க்கையிலோ பெருமளவு வேற்றுமை போற்றப்படுகின்றது. பாரதத்தில் இருந்து தான் உலகிற்கு மிக உயர்ந்த சுயநலமற்ற பயன் கருதாப் பணிகள் பற்றிய உண்மைகள் உரைக்கப் பெற்றன. ஆனால், அவற்றைப் பற்றிப் பேசுவதில் உள்ள ஆர்வம் பின்பற்றுவதில் இல்லை. இவற்றில், நல்லவைகளைப் பின்பற்றினால் அல்லவை தேய்ந்து, அறம் பெருகி, பாரதம், 'விசையுறு பந்தினைப் போல்' விரும்பும் வண்ணம் விழித்தெழும்.

**வானவர் நாடு வழிதிற்கும் வழி**

மக்கட் பிறவியின் அருமைகளைக் கூறி, மனிதர்களை ஆற்றுப்படுத்தும் ஒளவையின் பாடலொன்று, பாரதநாடு, 'பாருக்குள்ள நல்ல நாடாக உயர வழிகூறும் வகையில் அமைந்துள்ளது. அப்பாடல்,

**"அரிது அரிது மானிடர் ஆதல் அரிது**

**……………………………………………………………………….**

**தானமும் தவமும் தான்செய்வர் ஆயின்**

**வானவர் நாடு வழி திறந் திடுமே"4**

என்பதாகும். இருக்கும் போது மண்ணுலகிலும் இறந்த பின் விண்ணுலகிலும் இன்புற்று வாழ தானம் புரியவும் தவம் செய்யவும் இளங்கோவடிகள் வழிகாட்டுவதனை,

"தானம் செய்ம்மின்; தவம்பல தாங்குமின்"5 என்பதாலும் அறியலாம். ஆதலால், வாழுங்காலத்திலும் வருங்காலத்திலும் பாரதநாடு பெருமை பெற்றுத் திகழ வேண்டுமெனின் மேற்கூறிய நற்செயல்களைச் செய்தல் வேண்டும்.

**ஆசிரியர்களின் மேன்மை பாரதத்தின் பெருமை**

ஆசிரியரே வகுப்பறையின் ஆக்ஸிஜன் என்பதைப் பாரத நாடு நன்கு உணரச் செய்தல் வேண்டும். ஆசிரியர் பணி அறப்பணி அதற்கே உன்னை அர்ப்பணி என்ற கூற்றுக்கு ஓர் எடுத்துக்காட்டாக, ஒரு பள்ளியின் வகுப்பறை, அதில் பயிலும் ஒரு பணக்கார மாணவன் அங்கிருக்கும் எல்லாரிடமும் பிரச்சினைகள் செய்து வம்பிற்கு இழுப்பான். அதற்காக, அவனது வகுப்புஆசிரியர் அவனை அடிக்கடி கண்டிப்பார். அம்மாணவனோ, ஆசிரியரை அலட்சியப்படுத்துவான். அவரோ, அவனைப் பற்றி தலைமைஆசிரியரிடம் புகார் செய்தார். அதற்கு அவர், 'பெரிய இடத்துப் பிள்ளை, சற்று அனுசரித்துச் செல்லுங்கள்' என்கின்றார்.

ஆசிரியருக்குப் பொறுக்க இயலவில்லை சிலநாள்களுக்குப் பின் விளையாட்டுத், திடலில் அம்மாணவன் செய்த அக்கிரமங்களைக் கண்டு கடுமையாகத் திட்டுகின்றார். மாணவன் போக்கியோ மாற்றம் ஏதுமில்லை. பெற்றோர் ஆசிரியர் கூட்டத்தில் அவ்வாசிரியர் அம்மாணவன் குறித்துக் கூறி நடவடிக்கை எடுக்க வலியுறுத்தினார். அவர்களோ, 'அவன் பெரிய வீட்டுப் பிள்ளை, நீங்கள் பொறுத்துக் கொள்ள வேண்டும்' என்றனர். வேறுவழியின்றி ஆசிரியர் தன் பணியை இராஜினாமா செய்கின்றார். தலைமை ஆசிரியரோ, 'விரைவில் கூடவுள்ள பெற்றோர் - ஆசிரியர் கூட்டத்திற்குப் பின் வேலையில் இருந்து விலகிக் கொள்ளலாம்' என்றார். ஏற்க இயலாத ஆசிரியர், இராணுவ ஆட்சி நடத்தும் ஜனாதிபதி மாளிகைக்குச் சென்று, தன் புகாரை எழுதித் தருகின்றார். இதை அறிந்த பிறர், மாணவன் மீது குறை கூறிய ஆசிரியருக்கு ஆபத்து நேரப் போகிறது என்றனர்.

பெற்றோர் - ஆசிரியர் கூட்டம் நடந்தது. எல்லாரும் ஆசிரியருக்காகப் பரிதாபப்பட்டனர். கூட்டத்திற்கு வந்த ஜனாதிபதி தன் இருக்கையில் அமர்ந்ததும், நான் அந்த ஆசிரியரைக் காண விரும்புகின்றேன்' என்றார். ஆசிரியர் வந்து நின்றதும் ஜனாதிபதி எழுந்து நின்று, தன் தொப்பியைக் கழற்றி, ஆசிரியரிடம் 'ஐசல்யூட்யூ' எனச் சொல்லி சல்யூட் அடிக்கின்றார். தன்னால் கண்டிக்க முடியாத தன் பெயரனை அந்த ஆசிரியர் நல்வழிப்படுத்த முயற்சி செய்வதற்காகத் தன் மகிழ்வைத் தெரிவிக்கின்றார்.

இதன் மூலம் ஆசிரியத் தொழிலின் மேன்மையும் பெருமையும் விளங்கும் பாரதத்தில் இத்தகைய ஆசிரியர்கள் உருவானால் மாணவர்கள் சிறந்து விளங்குவர். மாணவர்கள் சிறந்து விளங்கினால் பாரத சமுதாயம் சிறக்கும். சமுதாயம் சிறந்தால் பாரத நாட்டுப் பள்ளித்தலங்கள் கோயில்களாகத் திகழும். இத்தகைய ஆசிரியர்கள், தம்மை அனைவரினும் தலைமை உடையோராகச் செய்து கொள்ளத்தக்கவார்கள் என்பதையும் அறிவு முயற்சியே எல்லாவற்றிற்கும் அடிப்படைத் துணை என்பதையும் என்பதை அறிவிக்கும்,

**"நன்னிலைக்கண்தன்னைநிறுப்பானும்தன்னை**

**நிலைகலக்கிக்கீழிடுவானும்நிலையினும்**

**மேன்மேல்உயர்த்துநிறுப்பானும்தன்னைத்**

**தலையாகச்செய்வானும் தான்"6**

E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

என்னும் நாலடியார் பாடல் இங்கு நினைக்கத்தக்கது. இப்பாடல் இப்படிக் கூறக் காரணம்,

**“ . தத்தம்**

**கருமமே கட்டளைக் கல்”7**

என்பதாலேயே எனலாம்.

**உள்ளத்தில் பள்ளம் வேண்டாம்**

ஓர் ஆறு தன் உற்பத்தி இடமாகிய மலையில் இருந்து ஓராயிரம் கல் தொலைவில் கீழே இறங்கி ஓடி வருகின்றது. அந்த ஆறு மீண்டும் தன் உற்பத்தி இடத்திற்குச் செல்ல முடியாது. ஒரு வேளை அப்படிச் செல்ல முயற்சித்தால் அது கறந்த பாலை, சுரந்த மடிக்குள் அனுப்பும் முயற்சி போலாகும்: அந்த ஆறு, சமவெளிகளில் பாய்ந்தோடி கரடுமுரடான நிலங்களில் பாய்ந்து கடலில் கலக்கத் தான் போகின்றது. அது போன்றது தான் பாரத சமுதாயத்தின் வாழ்வியல் அமைப்பு முறையும் ஆகும். இதைத் தவறு என்று சொல்லிக் கேட்டைத் தரும். முரணான புதிய வழிமுறைகளை உருவாக்க முயற்சி செய்தால் அது உள்ளம் இருக்க வேண்டிய இடத்தில் பள்ளம் இருந்தது போலாகும். எனவே பாரத சமுதாயம், பாரதியார் கூறுவது போல,

**“எல்லாரும்ஓர்குலம்எல்லாரும்ஓர்இனம்**

**எல்லாரும்இந்தியமக்கள்**

**எல்லாரும்ஓர்நிறைஎல்லாரும்ஓர்விலை”8**

என வாழ்ந்தால் நாட்டின் மகிமை நன்னிலை எய்தும்.

**முடிவுரை**

பாரத சமுதாய மக்கள் தங்களுக்குள் தீங்கை விளைவிக்கும் சொல்லைச் சொல்ல வேண்டாம். அவர்கள் உதடுகளை மூடிக் கொள்ள வேண்டும். இதயங்களைத் திறந்து வைக்க வேண்டும். ஒவ்வொருவரும் நாட்டின் சுமை முழுவதும் தன் தோள்களின் மீதே சுமத்தப்பட்டிருப்பதாக எண்ண வேண்டும். நாட்டின் உயர்விற்காகவும் உலகின் உய்விற்காகவும் பணியாற்ற வேண்டும். நல்ல நூல்களின் கருத்துகளை வீட்டுக்கு வீடு எடுத்துச் செல்ல வேண்டும். அதன் மூலம் ஒவ்வொருவரிடமும் மறைந்துள்ள தெய்விகத்தன்மையை வெளிப்படுத்த வேண்டும். மனத்தில் உறுதியும் வாக்கில் இனிமையும் நினைவில் நல்லதும் இருப்பின் விரும்பின பொருள் விரைவில் கைவசமாகும் என்பதை நெஞ்சத்தில் நிலை நிறுத்த வேண்டும்.

சான்றெண் விளக்கம்

1. பரிமேலழகர் (உரை.), திருக்குறள், எண் 948, பூம்புகார் பதிப்பகம், சென்னை, ஆறாம்பதிப்பு, ஜீலை 2001.
2. உ.வே .சாமிநாதையரவர்கள் (பதி.), மணிமேகலை, 2:70,71 டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம், சென்னை, ஒன்பதாம்பதிப்பு, 2013.
3. ச.மெய்யப்பன் (பதி.), 'ஜயபேரிகை', பாரதியார் கவிதைகள், ப.105, தென்றல் நிலையம், சிதம்பரம், மூன்றாம்பதிப்பு, பிப்ரவரி, 2002.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 11. நிலையாமைக் குறித்த சித்தர் பாடல்களும் - வேதாகம வசனங்களும்

செ.மெல்வின் ராஜா
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை, அமெரிக்கன் கல்லூரி, மதுரை

DOI 10.5281/zenodo.10701104

**Absract:**

The concept of impermanence is central to all religions. Their purpose is to realize that the body, youth, beauty, pleasure, wealth, etc. are impermanent and before the death of the body, they make their soul stable in the love of God. The purpose of this article is to compare the purpose of such Siddhas with the impermanent concepts stated in the Christian scriptures.

**Key Words : Religion – Comparative – Wealth**

## முன்னுரை

நிலையாமை என்ற கரு அனைத்து சமயங்களின் மையமாகவே விளங்குகிறது. சித்தமரபானது உடல், இளமை, அழகு, இன்பம், செல்வம் போன்றவை நிலையற்றது என்றும் உடலில் உயிர் பிரிவதற்கு முன்னர் இவற்றையுணர்ந்து தன் ஆன்மாவை இறை அன்பில் நிலைக்கச் செய்வதே இவர்களின் நோக்கம் ஆகும். இத்தகைய சித்தர்களின் நோக்கத்தை கிறித்துவ வேதத்தில் கூறுப்படும் நிலையாமைக் கருத்துக்களோடு பொருத்தி இறை சமத்துவத்தை பற்றி ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## யாக்கை நிலையாமை :

உடலானது மனம் செய்கின்ற நினைக்கின்ற நன்மைகளுக்கும் தீமைகளுக்கும் ஒர் கருவியாகவே அமைகின்றது. உடலில் உயிர் ஒட்டி இருப்பது மெய் ஞானத்தை அடைவதற்கே என்பதனை திருமூலர்,

**"உடம்பார் அழியில் உயிரார் அழிவர்**
**திடம்பட மெய்ஞானம் சேரவும் மாட்டார்**
**உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே**
**உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே"1**

இப்பாடல் வழி எடுத்துக்கூறுகிறார். இவ் உண்மைய உணராத மனிதர்கள் உடல் நிலையானது என்று எண்ணி பல்வேறு துன்பங்களிலும் பாவங்களிலும் சிக்கித்தவிக்கின்றனர். உடலைவிட்டு உயிர் பிரிந்தால் உடல் ஒன்றும் இல்லை என்பதை

**"மண்ணொன்று கண்டீர் இருவகைப் பாத்திரம்**
**திண்ணென் றிருந்தது தீவினை சேர்ந்தது**

**விண்ணின்று நீர்விழின் மீண்டுமண் ணானாற்போல்**
**எண்ணின்றி மாந்தர் இறக்கின்ற வாறே.”**2

என்று திருமூலர் கூறுகிறார். எவ்வாறெனில் மண்ணால் செய்யப்பட பாத்திரம் சுடப்பட்டு மழைநீரைத் தாங்கி நிற்கும், சுடப்பாடாத மண் பாத்திரமோ நீரை தங்காமல் மீண்டும் மண்ணுக்கே திரும்புவதுபோல இறைவன்மீது நாம்பிக்கை அற்ற மாந்தர்கள் தீவினைகளுக்கு ஆளாகி மாண்டுபோகினறனர். இறைபற்றை உடையவர்கள் உடலைப்பற்றிய கவலையின்றி வாழ்கின்றனர். எத்தகைய வாழ்வு வாழ்ந்த மனிதனின் உடலும் மண்ணுக்கு திரும்பும் என்பதை திருமூலர் நமக்கு எடுத்து கூறுகிறார்.

கிறித்துவ வேதத்தில் ஆதியாகம் என்ற நூலில் கடவுள் மனிதனை மண்ணில் இருந்து படைத்தார் என்பதை **“தேவனாகிய கர்த்தர் மனுஷனைப்பூமியின் மண்ணினாலே உருவாக்கி, ஜீவ சுவாசத்தை அவன் நாசியிலே ஊதினார், மனுஷன் ஜீவாத்துமாவானான்”**3 என்று இவ்வாசகம் குறிப்பிடுகிறது.

மேலும் **“எல்லாம் ஒரே இடத்துக்குப் போகிறது; எல்லாம் மண்ணிலே உண்டாகிறது, எல்லாம் மண்ணுக்குத் திரும்புகிறது”**4 என்று பிரசங்கி தனது நூலில்உடல் நிலைத்தது இல்லை என்பது எடுத்துக்கூறுகின்றது.

திருமூலர்

**“பண்டம் பொய் கூரை பழகி விழுந்தக்கால்**
**உண்டஅப் பெண்டிரும் மக்களும் பின்செல்லார்**
**கொண்ட விரதமும் ஞானமும் அல்லது**
**மண்டி அவருடன் வழிநட வாதே”** 5

என்ற பாடலில் உடலை கூரை என்றும் அதனை தங்கி நிற்கின்ற கால்களை உயிர் என்றும் குறிப்பிடுகிறார். கால்கள் வலுவிழந்து கூரைவிழுவது போல இளமை நிங்கி முதுமை ஏற்பட்டு மரணம் வருவதற்கு முன்பாக இறைவனை நினை என்கிறார் மூலர். இதனை பிரசங்கியார் தனது நூலில் உள்ள பன்னிரண்டவாது அதிகாரத்தில் ஒன்று முதல் பதினான்கு வரையில் உள்ள வசனங்களில் வாலிபத்தில் கடவுளை நினை என்கிறார். குறிப்பாக மூன்றாவது வசனத்தில் **“வீட்டுக் காவலாளிகள் தள்ளாடி, பெலசாலிகள் கூனிப்போய், ஏந்திரம் அரைக்கிறவர்கள் கொஞ்சமானதினால் ஓய்ந்து , பலகணிவழியாய்ப் பார்க்கிறவர்கள் இருண்டுபோகிறதற்கு முன்னும்”** 6 என்ற இவ் வசனத்தில் காவலாளிகளாக – உடலையும், பெலசாலிகளாக – இளமையையும் , ஏந்திரங்களாக – பற்களையும் பலகாணிகளாக – கண்களையும் குறிப்பிடும் பிரசங்கி மேலும் ஒரு வசனத்தில் “ **இவ்விதமாய் “மண்ணானது தான் முன்னிருந்த பூமிக்குத் திரும்பி ஆவி தன்னைத் தந்த தேவனிடத்தில் மறுபடியும் போகாததற்கு முன்னும், அவரை உன் வாலிபப்பிராயத்தில் நினை”**7 என்று கூறுகிறார்.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

கடவுள் மனிதனைப்பாடைதன் என்ற கூற்றை இருமரபுகளும் ஏற்றுக் கொண்டாலும் மண்ணிலிருந்து மனிதன் படைக்கப்பட்டதை சித்தமரபு கூறவில்லை. இருப்பினும் யாக்கை நிலையாமை என்றக் கருத்தை இருமரபும் நமக்கு தெளிவிகிறது.

**இளமை நிலையாமை**

இளமைப் பருவம் என்பது இறை பக்தியில் தன்மனதை தூய்மையாக வைதிருந்து, உடல் என்றும் இளமையுடன் இருக்காது என்பதனை உணருதல் அவசியம். நீண்ட நாள் வாழ்ந்து இறைவனை அறியாமல் இருப்பதைவிட இளமை மாறி முதுமை அடைவதற்குள் ஆன்மாவில் இறைவனை பற்றிக்கொள்ள வேண்டும் இல்லை என்றால் மரணம் நம்மை பற்றிக்கொள்ளும் இதனை,

**“ஆண்டு பலவுங் கழிந்தன அப்பனைப்**
**பூண்டுகொண் டாரும் புகுந்தறி வாரில்லை**
**நீண்டன காலங்கள் நீண்டு கொடுக்கினும்**
**தூண்டு விளக்கின் சுடரறி யாரே”** 8

என்ற பாடலில் திருமூலர் கூறுகிறார்.

இக்கருத்தை “ **அவன் இரண்டாயிரம் வருஷம் பிழைத்திருந்தாலும் ஒரு நன்மையும் காண்பதில்லை ; எல்லாரும் ஒரே இடத்திற்குப் போகிறார்கள் அல்லவா ?”** 9 என பிரசங்கி உறைகிறார். நாம் எவ்வளவு காலம் வாழ்ந்தாலும் இறைவனைப் அறிகின்ற உண்மையான அறிவே நமக்கு வேண்டும் என்பதனையும் இறைவனை அறியாத வாழ்வு இறப்பின்பாதைக்கு இட்டுச்செல்லும் என்பதனை நமக்கு விளக்குகிறது.

மேற்கூறிய இருகருத்துகளும் மனித வாழ்வுநிலையற்றது என்றும் இறைவனை அடைவதே மெய் ஞானம் என்பதனை நமக்கு மெய்பிக்கிறது.

**செல்வம் நிலையாமை**

செல்வம் மாறும் தன்மையுடையது நிலையற்றது, அது துன்பத்தையும் மன அமைதியையும் தராது என்று முன்னோர் கூறியுள்ளார்கள். நிலையான செல்வம் அறிவு மட்டுமே என்பதை சான்றோர்கள் நன்கு அறிவார்கள் இதனை

**“தேற்றத் தெளிமின் தெளிந்தீர் கலங்கன் மின்**
**ஆற்றுப் பெருக்கில் கலக்கி மலக்காதே**
**மாற்றிக் களைவீர் மறுத்து உங்கள் செல்வத்தைக்**
**கூற்றன் வரும் கால் குதிக்கலும் ஆமே.”** 10

என்ற பாடலில் செல்வத்தைத் துணைக்கொண்டு எமனை வெல்ல முடியாது என்பதனை நன்கு அறியுங்கள். உங்களிடத்தில் உள்ள செல்வம் உங்கள் உள்ளத்தையும் உடலையும், மயக்கி

ஆற்றுவெள்ளம் போலகொண்டுபோய்விடும் என்பதை உணர்ந்துகொள்ளுகள் என திருமூலர் கூறுகிறார்.

**“பணப்பிரியன் பணத்தினால் திருப்தியடைவதில்லை; செல்வப்பிரியன் செல்வப்பெருக்கினால் திருப்தியடைவதில்லை; இதுவும் மாயையே”**11 என்று பிரசங்கி தனது அதிகாரத்தில் பணம் என்பது மாயை அது நிலையற்றது என்ற தத்துவத்தை முன் வைக்கிறார். நிலையானது அன்பு மட்டுமே என்பதை ஒத்தக் கருத்துடன் விளக்குகின்ற சமத்துவபோக்கை நாம் காணமுடிகிறது.

**இறைவனே உயிர்**

இறைவன் நமக்கு உயிர் போன்றவன் என்பதை

**'உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்**
**வள்ளற் பிரானுக்கு வாய் கோபுரவாயில்**
**தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்**
**கள்ளப் புலனைந்தும் காளாமணி விளக்கே”**12

என்ற பாடல் விளக்குகிறது. இப்பாடலில் உயிர் என்பது சிவமே என்பதனை திருமூலர் கூறுகிறார்.**“ஜீவ சுவாசத்தை அவன் நாசியிலே ஊதினார்,”**13 என்ற வேதவசனமும் மனித்தனுக்கு கடவுள் தன் உயிரையே கொடுத்தார் என்பதை நமக்கு உணர்த்துகிறது. ஆக மதனிதன் கடவுளின் சாயல் என்றும் ஆவனது உயிர் இறைவனே என்பதனை இருவரின் கூறுகள் மூலகமாக நமக்கு உணர்த்துகின்றன.

**மறுபிறப்பு பற்றிய நம்பிக்கை**

மறுபிறப்பு பற்றிய நம்பிக்கை மக்களிடையே மிகுதியாக உள்ளது. நாம் செய்கின்ற நன்மை தீமைக்கு ஏற்ப நமக்கு பிறப்பு உண்டு என்பதனை பௌத்த சமண மாதங்கள் கூறினாலும் சித்தர்களும் கிறித்துவமும் இதனை எதிர்க்கின்ற. மரணத்திற்கு பின் ஆன்மா இறைவனை அடைய வேண்டும், இறைவனின் பாதமே ஆன்மா தஞ்சமடைகின்ற இடம் அதற்கு பிறகான வாழ்க்கை இல்லை என்பதனை இருமரபுகளும் நம்புகிறான.

**“கறந்தபால் முலைப்புகா கடைந்த வெண்ணை மோர்புகா**
**உடைந்த போன சங்கின் ஓசை உயிர்களும் உடற்புகா**
**விரிந்தபூ உதிந்த்தகாயும் மீண்டும்போய் மரம்புகா**
**இறந்தவர் பிழைப்பதில்லை இல்லை இல்லை இல்லையே!”**14

பசுவின் மடியில் இருந்து கறந்த பால் மீண்டும் பசுவின்முலைக் காம்புகளில் சேராது, மோரிலிருந்து கடைந்தெடுக்கப்பட்ட வெண்ணெய் மீண்டும் மோராகாது. உடைந்து போன சங்கிலிருந்து ஓசை வராது, அதிலிருந்து வெளிவரும் உயிர் மீண்டும் அவ்வுடலாகிய சங்கில் புகாது. விரிந்த பூ மொட்டாகாது. மரத்திலிருந்து உதிர்ந்த காய் மீண்டும் மரத்தில் ஒட்ட

முடியாது. அது போல்தான் நம் உடம்பை விட்டு உயிர்போய் விட்டால் மீண்டும் அவ்வுடம்பில் சேர்ந்து பிழைக்க வைக்க முடியவே முடியாது. ஆகவே உடம்பில் உயிர் உலாவிக் கொண்டிருக்கும்போதே யோக தியானம் செய்து இறைவனை அடைந்து பிறவா நிலை அடையும் என்பதை சிவவாக்கியர் மூலம் அறிந்து கொள்ளமுடிகிறது. கிறித்துவ வேதத்தில் “ **நாம் தைரியமாகவேயிருந்து, இந்தத் தேகத்தை விட்டுக் குடிபோகவும், கர்த்தரிடத்தில் குடியிருக்கவும் அதிகமாய் விரும்புகிறோம்**”15 என மறுபிறவி இல்லை என்ற இறைதத்துவதை நாம் விளங்கிக்கொள்ள முடிகிறது.

**முடிவுரை**

இக்கட்டுரையில் சித்தர்களின் காலத்தையோ,கிறிஸ்துவத்தின் காலத்தை விளக்கி கூறாமல், முன்னது பின்னது என்ற வேறுபாடுபார்க்காமல் நிலையாமை என்ற மையக்கருத்தை மட்டுமே மையமாக வைத்து இக்கட்டுரை ஆராயப்பட்டுள்ளது. இதில் நிலையாமைக் கருத்தை இருமரபுகளும் மக்களுக்கு புரியும்படியாகவும், மெய் அறிவவை துண்டும் வாயிலாகவும் அமைந்துள்ளன. இறைவன் ஒன்று என்பதனையும் மெய் அறிவினால் இன்றைவனை அடையமுடியும் என்பதனை இக்கட்டுரை விளக்குகிறது. சமயங்கள் வெவ்வேறுராக இருப்பினும் இறைவனை அடைகின்ற நாம்பிக்கை நமக்கு சமத்துவத்தையே போதிக்கின்றன என்பதனை இக்கட்டுரை மூலம் அறிய முடிகிறது.

துணைநூல் பட்டியல்

1. திருமூலர் திருமந்திரம் பாடல் - 724
2. திருமூலர் திருமந்திரம் பாடல் - 143
3. ஆதியாகமம் - 3 ஆம் அதிகாரம் 10 வது வசனம்

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 12. கல்வியும் சமுதாய மாற்றமும்

**சு. ஜெயா**

பதிவு எண்.21213274022006, முனைவர் பட்ட ஆய்வாளர் (முழுநேரம்), தமிழ் தமிழ் உயராய்வு மையம், விவேகானந்தா கல்லூரி, அகஸ்தீஸ்வரம்.

நெறியாளர் : **முனைவர் கு. இளங்குமார்**, தமிழ்த்துறைத் தலைவர், தமிழ் உயராய்வு மையம், விவேகானந்தா கல்லூரி, அகஸ்தீஸ்வரம்.

DOI 10.5281/zenodo.10701107

**Absract :**

Social change involves many people, their common goals, objectives, and values. Society is drifting away due to the changes in social activities and systems that are currently taking place. This is called social change.

**Key Words ; Education – Society – Changing Thots**

## முன்னுரை

சமுதாய மாற்றம் என்பது பல மனிதர்கள், அவர்களுடைய பொதுவான நோக்கங்கள், குறிக்கோள்கள், மதிப்புகள் ஆகியவற்றினை உள்ளடக்கியதாகும். தற்போது நிகழும் சமுதாயச் செயல்கள் மற்றும் அமைப்புகளில் ஏற்படும் மாற்றங்களால் சமுதாயமானது விலகிச் செல்கிறது. இதனையே சமுதாய மாற்றம் எனலாம்.

## சமுதாய மாற்றம் - கருத்து

சமுதாய உறவுகளிலும் ஏற்படும் மாற்றங்களுக்குச் சமுதாய மாற்றம் என்று பெயர். ஒரு குறிப்பிட்ட பகுதியில் வசிக்கும் மக்களின் தேவைகளுக்கேற்ப மாற்றங்கள் ஏற்படுகின்றன. இவை தவிர்க்கமுடியாத ஒன்றாகவும் ஏற்றுக் கொள்ளப்படுகிறது.

## சமுதாய மாற்றம் - பொருள்

சமுதாய மாற்றம் சில சமுதாயத்தில் துரிதமாகவும், சில சமுதாயத்தில் மெதுவாகவும் நிகழ்கின்றது.

எடுத்துக்காட்டாக, இந்தியச் சமுதாயத்தை எடுத்துக் கொள்வோம். நம் முன்னோர்கள் ஒருபோதும் கனவு கண்டதில்லை. இன்றைய பலவித இயந்திரங்கள், வாகனங்கள், பொழுதுபோக்குச் சாதனங்கள் எல்லாம் ஒரு நூற்றாண்டிற்கு முன்னர் யாரும் கேள்விப்பட்டிருக்கவில்லை. உண்மையில், இன்றைய தினம் நமது வாழ்க்கை முறையானது படுவேகமாக மாறிக்கொண்டு இருப்பதை கலாச்சார மாற்றம் என்றும் அல்லது பண்பாட்டு மாற்றம் என்றும் கூறலாம்.

## சமுதாய மாற்றம் - வரையறைகள்

சமுதாய மாற்றம் என்றால் என்ன? என்பதை விளக்கமாக அறிந்து கொள்ள சில வரையறைகள் கொடுக்கப்பட்டுள்ளன.

**மாரீஸ் கீன்ஸ்பர்க் கூற்றப்படி**

'சமூகமாற்றம் என்பதால் அறியப்படுவது சமூக அமைப்புகளில் ஏற்படும் மாற்றங்களே, உதாரணமாக அளவு, அதன் உள்ளடக்கம், உறுப்புகளின் அமைப்பு வகை அவற்றிற்கிடையே காணப்படும் சமனிலை போன்றவற்றால் ஏற்படும் மாற்றங்கள் சமூக மாற்றம் ஆகும்."

**கில்லின் மற்றும் கில்லின்**

'சமுதாய மாற்றங்கள் என்பது ஏற்றுக் கொள்ளப்பட்ட வாழ்க்கை விதிமுறைகளானது, புவியியல் நிலைகளுக்கேற்றவாறும், மக்களின் கண்டுபிடிப்புகளுக்கு ஏற்றவாறும் மாறுதலடைவதாகும்" என்கிறார்.

**கே.டிவைஸ்**

'சமூக அமைப்புகளில் அதாவது அவற்றின் கட்டமைப்பு மற்றும் பணிகளில் ஏற்படும் மாற்றங்களே சமுதாய மாற்றம் என்றறியப்படுகிறது" என்கிறார்.

**சமூக மாற்றத்தின் வகைகள்**

(i) தொழில் நுட்ப வளர்ச்சியால் சமுதாயத்தில் ஏற்படும் மாற்றம் அல்லது நாகரிக மாற்றம்.
(ii) பண்பாட்டு மாற்றம்
(iii) சமூக உறவுகளில் மாற்றம்

என மூன்று வகையாக சமூக மாற்றத்தைக் கூறலாம்.

**சமுதாய மாற்றத்திற்கானக் காரணிகள்**

சமுதாய மாற்றத்திற்குப் பல காரணிகள் இருக்கின்றன. அவற்றை நாம் அறிந்து கொள்வது மிகவும் அவசியமானதாகும். அவை,

(i) சமூக மதிப்புகள்
(ii) அறிவியல் ஆராய்ச்சிகள் மற்றும் தொழில்நுட்பங்கள்
(iii) இயல்புகளுக்கிடையே நிகழும் இடைவினைகள்.

சமுதாய மாற்றமானது தொடக்கத்தில் பொருள்கள் தொடர்பான பண்பாட்டிலும் அதன்பிறகு பொருள்கள் தொடர்பற்ற பண்பாட்டிலும் ஏற்பட்டதென்று ஆக்பர்ன் கூறுகிறார்.

**சமுதாய மாற்றத்திற்கு தேவையற்ற காரணிகள்**

சமுதாய மாற்றத்திற்குத் தேவையற்ற சில காரணிகள் உள்ளன. அவை,

**i) பண்பாட்டின் செயலற்ற தன்மை**

பண்பாட்டின் செயலற்ற தன்மைதான் சமுதாய மாற்றத்திற்குத் தேவையற்ற காரணிகள் முதல் காரணியாகும். பண்பாட்டின் செயலற்ற தன்மை என்பது நம்முடைய

முன்னோர்களின் வழியாக வந்த கண்மூடித்தனமான நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள், சடங்குகள், சம்பிரதாயங்கள் போன்றவற்றை இன்றும் நாம் கடைபிடித்து வருகிறோம். அதனை அறிவுப்பூர்வமாக சிந்திப்பதில்லை. ஏனெனில் அவற்றை மீறுபவர்கள் தெய்வக்குற்றத்திற்கும் ஊர் கட்டுப்பாட்டையும் மீறுபவர்களாகின்றனர். இதனால் அவர்கள் பல தண்டனைகள் ஏற்படும் என்று நம்புகிறார்கள். இதனால் நம் சமுதாயம் இன்னும் பிற்பட்டநிலையிலேயே இருக்கின்றது.

ii) **புதிய பொருட்களைப் பற்றிய பயம்**

ஆக்பர்ன் மற்றும் நிம்காப் போன்றோரின் கருத்துப்படி, பலர் பாரம்பரியத் தொடர்புடைய வாழ்க்கையோடு இணைந்துவிட்டனர். அவர்கள் எப்பொழுதுமே பழமையின் சிறப்பையும் 'எல்லாம் அந்தக் காலம்' என்று பழைமையின் சிறப்பினைப் பற்றிப் பேசிக் கொண்டிருப்பர்.

iii) **மரபு வழி ஈடுபாடு**

இன்றும் சமுதாயத்தினர் பரம்பரை பண்பாட்டுக் கலாச்சாரங்கள் மற்றும் நம்பிக்கைகளின் மீது நம்பிக்கை கொண்டுள்ளனர். தங்களுக்கு ஏதேனும் விபரீதம் ஏற்பட்டு விடக்கூடாது என்பதற்காகவோ அவர்கள் சமுதாய மாற்றத்தை ஏற்காத சுயநலமிக்க பழைமைவாதிகள். அவர்கள் எதையுமே சிந்திக்காமல் மரபுவழியாகத் தொடரும் நடைமுறைகளைப் பின்பற்றுபவர்கள்.

iv) **தனிமைப்படுத்துதல்**

சிலர் சமுதாயத்தில் மற்றவர்களின் கலாச்சாரப் பழக்கவழக்கங்களை உடையவர்களுடன் பேசுவதை எதிர்ப்பவர்கள், அல்லது வெறுப்பவர்கள். இக்காரணத்தினால் இவர்கள் மற்றவர்களிடமிருந்து விலகியே இருப்பார்கள் சமுதாய மாற்றமானது எந்த வடிவத்தில் இருந்தாலும் அதனை முதலில் எதிர்ப்பவர்கள் இவர்கள்தான். எனவே இது சமுதாய மாற்றத்திற்கு தேவையற்ற காரணிகளுள் ஒன்றாக உள்ளது.

**கல்வியும் சமுதாய மாற்றமும்**

வாழ்க்கையின் அனைத்துச் செயல்களிலும் சமுதாய மாற்றத்தைக் கொண்டு வந்து அதனை வளர்ப்பதில் கல்விக்குப் பெரும் பங்கு உண்டு.

**நிலையான மதிப்புகள்**

சமுதாயத்தின் மதிப்புகளானது, நிலைத்துவிட்டது. ரால்ப் லிட்டன் என்பவரின் கருத்துப்படி, சமுதாயத்தில் உள்ள நிலையான மதிப்புகள் சமுதாய மாற்றத்தினால் தேவையினை இழக்கும் பொழுது அந்தச் சமுதாயமானது. அழிய அல்லது மறையத் தொடங்குகிறது. இச்சூழ்நிலையில் கல்வியானது அம்மதிப்புக்களை அழியாமல் காப்பாற்றுகிறது. எனவே கல்வியானது நன்னெறி மற்றும் ஆன்மீக மதிப்புக்களைச் சமுதாயத்தை விட்டு மறைந்து போகாமல் வளர்த்து வருகிறது.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

**சமுதாய மாற்றத்தை வரவேற்றல்**

மக்களின் சமுதாய மாற்றத்தினால் ஏற்படும் நன்மைகளை மக்களிடையே பரப்புவதில் கல்வியானது பெரும் பங்காற்றுகிறது. இதனால் மக்கள் சமுதாய மாற்றத்தை ஏற்று விருப்பத்துடனும், இணக்கமாக நடந்து கொள்ளவும் வழிசெய்கிறது. இதற்கான சமூகச் சூழ்நிலையைக் கல்வியானது ஏற்படுத்துகிறது.

**சமுதாய மாற்றத்தை மதிப்பிடுதல்**

சமுதாயமானது எப்பொழுதும் மாறிக்கொண்டே இருக்கும். சமுதாயத்தில் நல்ல சூழ்நிலையினைக் கொண்டு வருவதற்கு கல்வி ஒரு கருவியாக அமையும். ஆசிரியர்கள் சமுதாய மாற்றத்தின் விளைவுகளை நன்கு மதிப்பீடு செய்வதால் அவை எளிதாகச் சென்றடைகின்றன.

**புதிய சமுதாய மாற்றத்திற்கு உதவுதல்**

கல்வியானது சமுதாயத் தீமைகள், குருட்டுத்தனமான பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் போன்றவற்றினை மாற்ற, நாட்டுநலப்பணித் திட்டம் அரசியல் கட்சிப் போராட்டங்கள், செயல்திட்டங்கள் போன்றன சமுதாய மாற்றத்திற்குப் பெரும் பங்காற்றுகின்றன. எடுத்துக்காட்டாக, குழந்தைத் திருமணம், தீண்டாமை, சமூக அநீதி போன்ற கொடுமைகளை நீக்கக் கல்வியானது மிகவும் பயன்படுகிறது.

**பண்பாட்டினை ஏற்படுத்துதல்**

ஒரு தலைமுறையினரிடமிருந்து மற்றொரு தலைமுறையினருக்குக் கல்வியானது சமுதாய மாற்றத்திற்கான ஓர் ஆக்க சக்தியாகவும், ஓர் உருவாக்கியாகவும், இயக்கு சக்தியாகவும் இருக்கிறது. அதிலும் கல்வியானது சமுதாயத்தில் சமநிலையினைக் கொண்டு வரும் உந்துசக்தியாகவும் செயல்படுகிறது.

**ஒருமைப்பாடும் ஒற்றுமையும்**

சமூகக் குழுக்களுக்கிடையே ஏற்படும் முரண்பாடுகளைக் களைவதற்குக் கல்வியானது பெரும்பங்காற்றுகிறது. கல்வியானது வேற்றுமையில் ஒற்றுமை, நாட்டுநலம், ஒருமைப்பாடு, சமுதாய உணர்வுகளுக்கு வழிவகுக்கிறது.

**சமுதாய மற்றும் மனித உறவுகளை மேம்படுத்துதல்**

சமுதாய மாற்றத்திற்கான எண்ணங்களை, நடத்தைகளை, மனித உறவுகளை மேம்படுத்துவதிலும், சமுதாய சமநிலையினை உருவாக்குவதிலும் கல்வியானது பெரும்பங்காற்றுகிறது.

**சமுதாய மாற்றத்தைப் பற்றிய கல்வியறிவு**

மக்களிடையே சமுதாய மாற்றத்தைப் பற்றிய விழிப்புணர்வையும், அறிந்து கொள்ளுதலையும் ஏற்படுத்துவதன் மூலம் மக்கள் மாற்றத்தை வரவேற்கவும், மாற்றத்திற்கு

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

ஒத்துழைக்கவும் மாற்றத்திற்கானத் திட்டங்களை வகுக்கவும் கல்வியானது பயனுள்ளதாக உள்ளது.

**தடைகளை நீக்குதல்**

சமுதாய மாற்றததைப் பற்றி மக்கள் தங்கள் மனதிலுள்ள பொருளற்ற மற்றும் தவறான கருத்துக்களை நீக்குவதன் மூலமும், சமுதாய மாற்றமானது ஒரு அவசியமான மாற்றமே எனக் கல்வியானது வலியுறுத்துகிறது.

**அறிவனை விரிவுப்படுத்துதல்**

மக்களிடையே அறிவை மேன்மேலும் வளர்ப்பது மட்டுமின்றி, அறிவினைப் பெருக்கவும் கல்வி துணைபுரிகிறது. பாரம்பரிய வாழ்க்கை மதிப்புகள், பண்பாட்டு மரபுரிமைகள், நடத்தைக்கோலங்கள் ஆகியவற்றைப் பற்றி வருங்கால தலைமுறையினருக்கு பரந்துப்பட்ட அறிவைக் கொடுக்கிறது.

**சமுதாய மாற்றத்தில் நிலைமைப் பண்புகள்**

சமுதாயத்தைச் சீரழிக்கும் சக தீமைகள், பாரம்பரியங்கள் மற்றும் குருட்டுத்தனமான பழக்கவழக்கங்களையும் சிற்பிகளையும் உருவாக்குவதில் கல்வியானது பெரும் பங்காற்றுகிறது.

**சமூக மாற்றத்தில் ஆசிரியர்களது பங்கும் பணியும்**

ஆசிரியர்கள் சமூக மாற்றத்திற்கான முகவர்களாக மட்டும் செயல்பட வேண்டுமேயொழிய, அதனைத் தலைமையேற்று வழிநடத்துபவர்களாகச் செயல்படக்கூடாது என்று முஸ்குரேவ் மற்றும் டெய்லர் கருதுகின்றனர்.

பிரமெல்டு போன்றோர் ஆசிரியர்கள் தலைமைப் பொறுப்பை ஏற்று, புதிய மேம்பட்ட சமுதாய அமைப்பை உருவாக்கிடவும், உலகக் குடியுரிமையைப் பெற்றிடுவதற்கான பயிற்சியைத் தம் மாணவர்களுக்கு அளித்திடவும் வேண்டும் என வலியுறுத்துகின்றனர்.

சமுதாயத்தில் மாற்றங்களைக் கொண்டு வரக்கூடிய வல்லமையும், ஆற்றலும் கல்விக்கு உள்ளது. எனவே சமுதாய மாற்றதிற்கான கருவியாகக் கல்வி செயல்பட வேண்டும். தேர்வுகளுக்கு முன்னுரிமை அளித்து மாணவர்களைத் தயார் செய்திடும் தற்போதைய கல்விமுறை, சமூக வாழ்க்கையுடன் முற்றிலும் தொடர்பற்றுக் காணப்படுகிறது.

**முடிவுரை**

இன்றைய கல்வி முறை மாணவர்களிடம் நற்பண்புகளை உருவாக்கிடுவதற்கு உகந்த பிள்ளைப்பிராயத்தில் அவர்களைப் பள்ளியில் இருத்தி வைத்து, விரும்பத்தகு மாற்றங்களை ஏற்படுத்திட முயல்வதில்லை. சமூக மாற்றத்திற்கு ஈடுகொடுக்கும் வகையில், மாணவர்கள் தம்மை மேம்படுத்திக் கொள்வதற்கு உதவுவதைத் தலையாய நோக்கமாகக் கொண்டு முறைசார் கல்வி, முறைசாராக் கல்வி ஆகிய இரண்டும் செயற்பட வேண்டும்.

**துணைநூற்பட்டியல்**

1. பேரா.கி.நாகராஜன், பேரா.சா.நடராஜன், தேவ. சீத்தாராமன், மலரும் இந்திய சமுதாயத்தில் கல்வி, ப.215-224, முதல்பதிப்பு - செப்டம்பர் 2013, ஸ்ரீராம் பதிப்பகம், சாலிகிராமம், சென்னை -93.

2. பேரா.முனைவர் அ. மீனாட்சிசுந்தரம், மலரும் இந்திய சமுதாயத்தில் கல்வி, ப.177-183, இரண்டாம் பதிப்பு - அக்டோபர் 2013, காவ்யமாலா பப்ளிஷர்ஸ், சின்னாளபட்டி -624302, திண்டுக்கல் மாவட்டம்.

**MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL**

**முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்**

**E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1**

**MARCH – 2024**

# 13. பாரதிதாசனின் பெண் கல்விச்சிந்தனையும் 21-ஆம் நூற்றாண்டிற்கான பெண்களின் கல்விச் சிந்தனையும் - ஓர் ஆய்வு

**திருமதி.தே.□ ியாணி(1)** **திருமதி.ரா.தக்ஷாயினி(2)**

கல்வியியல் சிரேஸ்ட விரிவுரையாளர், கல்வி மற்றும் பிள்ளை நலத்துறை

கலை கலாசார பீடம், கிழக்குப்பல்கலைக்கழகம், இலங்கை

DOI 10.5281/zenodo.10701351

**Abstract :**

Revolutionary poet Bavendra Bharathidasan is one of the greatest poets of the twentieth century. During his time the male chauvinist society enslaved women and deprived them of basic rights in the society. Bharathidasan's poetry was a reaction to this. It paved the way for many reforms in the social development of women in the society. This is evident in the 21st century. Female education in particular was a concept dear to Bharathidasan. This becomes clear by comparing the past with the present. Bharathidasan's works improved the status of women in many ways. This essay examines how Bhavendra's poetry and ideas advanced the status of women.

**திறவுச்சொற்கள்: பாரதிதாசன் - பெண்கல்வி - பெண்களின் எண்ணங்கள்**

இருபதாம் நூற்றாண்டின் தலை சிறந்த கவிஞராக பாரதியாருக்கு அடுத்த நிலையில் பாரதிதாசன் தோன்றினார்.புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் பல்வேறுசமுதாயம் சார்ந்த கருத்துக்களைதம் கவிதைகளில் வெளிப்படுத்தியுள்ளார். இதில் குறிப்பாக பெண்களின் விடுதலையைப் போற்றியும் பல பாடல்களைப் புனைந்துள்ளார். இக்கட்டுரையில் பாரதிதாசன் காலத்தில் பெண்களின் கல்விநிலை எவ்வாறு இருந்தது? பெண்கல்வியின் அவசியம், இளமைப் பருவத்தில் கல்வி கற்பதன் அவசியம், கல்வியினால் பெண்களின் வாழ்வில் ஏற்படும் முன்னேற்றமும் அதன் பயன்களும், கற்ற பெண்களுக்கும் கல்லாத பெண்களுக்கும் இடையே காணும் வேறுபாடுகள், பல்வேறு கல்வித் துறைகளில் பெண்களின் ஈடுபாடு, பெண்கள் தொழிற்கல்வி கற்பதன் அவசியம் மற்றும் சமத்துவக் கல்வி போன்ற தளங்களை ஆராய்ந்து இக்கட்டுரையின் ஊடாக வழங்கப்பட்டுள்ளன. பாரதிதாசன் காணும் பெண்கல்விச் சிந்தனையையும் 21-ஆம் நூற்றாண்டு பெண்களின் கல்விச் சிந்தனையையும் ஒப்பிட்டு ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும். அத்துடன் அன்றைய காலத்தில் இருந்த பெண்களின் கல்விநிலை எவ்வாறான திரிபுகளுக்கு உட்படுத்தப்பட்டிருக்கின்றது என்பதனையும் அதற்குப் பாரதிதாசனின் பாடல் வரிகள் எந்த அளவில் துணைபுரிந்துள்ளது என்பது பற்றியும் இக்கட்டுரை விளக்கின்கின்றது.

### புரட்சிக் கவிஞர் பாரதிதாசனை பற்றி.....

புரட்சிக் கவிஞர் என்றாலே இந்த நூற்றாண்டிலும் இதற்கு முந்தைய நூற்றாண்டிலும் வேறுயாரையும் குறிக்காமல் பாரதிதாசன் ஒருவரையேகுறிக்குமாறுதமிழ் இலக்கிய வரலாற்றிலே அவர் சிறப்பிடம் பெற்றுவிட்டார். சிறந்ததை மிகமிக விரும்பிப் போற்றுதலும் தீயதை மிகமிக வெறுத்துத் தூற்றுதலும் அவர் இயல்பு. நாட்டில் புகுந்து சமுதாயத்தில் இடம்

பெற்றுவிட்ட தீயப் பழக்கவழக்கங்களையும் மூடக்கருத்துகளையும் கடிந்து பாடிபடிப்பவர் உள்ளத்தில் புத்துணர்ச்சியை எழுப்பிய புரட்சியாளர் என்று பேராசிரியர் மு.வரதராசனார் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

பழங்காலத்திற்கும் பாரதிதாசன் காலத்திற்கும் வேறுபாடு பல உண்டு. அறிவு வளர்ச்சி மிகுந்து உலகம் சுருங்கிவிட்ட இவருடைய காலத்தில் கல்வி மனித வாழ்க்கையின் அடிப்படைத் தேவை ஆகிவிட்டது. ஆனால் அதே நேரத்தில் இந்நாட்டில் கல்வி மிகப் பெரும்பாலானோரால் மக்களுக்கு மறுக்கப்பட்டு வந்தது. ஏழைகள் கல்வி பெறுவது என்பது எட்டாத நிலையாய் இருந்தது. கல்வி இல்லையேல் அறிவு வளர்ச்சி தோன்ற வழியில்லை. சமயம் சாதி ஆகியவற்றின் பெயரால் ஏற்றத்தாழ்வுகளையும் மூடநம்பிக்கைகளையும் வளர்த்து வந்தவுடன் ஏழை மக்களிடம் சமுதாயம் கொடுமை செய்து வந்தது. சான்றாகப் பாரதிதாசனின் இவ்வரிகள்

**வறியார்க்கெல்லாம் கல்வியின் வாடை**
**வரவிடவில்லைமதக்குருக்களின் மேடை…**

இவற்றுள் பெண்களின் நிலைமேலும் பரிதாபமாககாணப்பட்டது. சமுதாயத்தில் அடிப்படை மாற்றமான புரட்சி ஏற்படுவதற்கு எழுத்தாளர்கள் பலரின் எண்ணங்களே காரணமாக இருந்திருக்கின்றன. சமுதாயத்தை ஊடுருவி பார்க்கும் தன்னாற்றல் வாய்ந்த கவிஞன் தன்னுடைய பாடல்களில் குறிக்கோள்களையும் கோட்பாட்டையும் உலவவிடுகிறான் என கூறலாம். அந்தவகையில் பாரதிதாசன் சமுதாயத்தை கூறு போட்டு நோக்கியவர். தம்மைப் பற்றி ஒரு பாட்டில் பெருமிதமுறுகிறார். இந்தப் பெருமிதம் முறையானது ஏனெனில் ஒரு காலத்தில்

**அமைவுறும் செட்டிவீட்டில் அயலவன் உண்பதில்லை**
**தமைஉயர் வென்பான் நாய்க்கன் முதலி நீ தாழ்ந்தோன் என்பான்.**

என்னும் நிலைமை நாட்டில் இருந்தது. எல்லோரும் நிகர் என்ற நிலை இன்று வந்திருக்கிறது. இதற்குப் பாரதிதாசன் பாடல்களும் ஒரு காரணமாகக் கொள்ள முடியும். அந்த வகையில் பெண்களின் கல்விநிலை இக்காலத்தில் பல பரிதாபங்களைக் கொண்டிருந்ததாக அமைந்திருந்தது.

**பாரதிதாசன் காலத்தில் பெண்களின் கல்விநிலை**

பெண் ஆடவனின் உடைமை எனக் கூறும் பைபிளில் பெண்ணுக்கு அவமானமும் இழிவும் பயப்பது தவிர வேறு எதுவும் இல்லை என்று இன்கர்சால் குறிப்பிடுகிறார். சமுதாயத்தில் சரிபாதியாக இருக்கும் பெண்கள் உலகநாடுகள் முழுவதும் பெரும்பாலும் அடிமைகளாகவே நடத்தப்பட்டுள்ளனர். பொன் முட்டையிடும் வார்த்தைப் போல இன்பத்தை அளிக்கும் பொருளாகவே அவள் கருதப்பட்டாள். அறிவுள்ள ஓர் உயிராக அவள் மதிக்கப்படவே இல்லை. அவளுக்கென்று தனி உள்ளமும் விருப்பமும் உண்டு என்பதை ஆடவர் உலகம் ஏற்றுக் கொள்ளவே இல்லை.ஆடவனைச் சார்ந்தே பெண் வாழ்தல்

வேண்டும். இயற்கையின் விதி இது என அவளின் அடிப்படை உரிமைகளை முளைக்கவிடாமல் தடுத்து வந்தனர். மனிதன் பிறர் மேல் அதிகாரம் செலுத்துவதையே குறிக்கோளாகக் கொண்டு வாழ்பவனாக வரலாற்றில் தோற்றமளித்து வருகிறான். வேறு யார் மீதும் எதன் மீதும் தன்னுடைய செல்வாக்கை செலுத்தி ஆட்சிபுரிய முடியாத போதும் ஒருவன் தன் மனைவியின் மீதாவது மேலுரிமை செலுத்தவே விழைகின்றான்.

பாரதிதாசன் ஒரு சமுதாயப் புரட்சியாளனுக்குரிய இயல்போடு மண்ணுலகத்தில் மண்டிக் கிடந்த அறியாமையையும் அடிமைத்தனத்தினையும்; களைய முற்படுகின்றார். காதல் உணர்ச்சியையும் கல்வி வளர்ச்சியையும் அவர்களுக்கு வழங்க வேண்டும் என்று இசைக்கின்றார். பெண்களின் அறிவுலக வாயில்களைத் திறந்துவிட வேண்டும் என்ற ஆவலோடு மகளிர்க்கு நீதி வழங்காத மனித உள்ளத்தை சுக்கல் சுக்கலாக வெடிக்கச் செய்யும்படி இவரது பாடல்கள் அமையப் பெற்று இருந்தது. இவருடைய காப்பியங்களில் பாதியிடத்தினை பெண்ணுரிமை பெற்றிருப்பதற்கும் அப்பெண்கள் ஆண்மாந்தர்களை விட எல்லா வகையிலும் சிறப்புள்ளவர்களாகப் படைக்கபட்டிருப்பதற்கும் பெண்கள் நூல் அறிவில் சிறந்து விளங்க வேண்டும் என்பதிலும் மிக ஆணித்தரமாகக் கருத்துக்களைப் பல இடங்களில் பதிவு செய்துள்ளார்.

இன்றைய 21-ஆம் நூற்றாண்டு பெண்கள் எத்தனையோ மாற்றங்களுக்கு உட்படுத்தப்பட்டு அடக்குமுறைகளை விடுத்தெறிந்து ஆட்சி உரிமைகளையும் பல துறைகளில் அதிகாரத்தையும் தலைமை பொறுப்புகளையும் தற்போக்கான சிந்தனைகளையும் எத்தனை தடைகள் வந்தாலும் அவற்றை இழிவளவாக்கி தம் சாதனைகளை தேசியரீதியிலும் சர்வதேச ரீதியிலும் புரிந்து கொண்டிருக்கின்றார்கள். இவ்வாறான புரட்சிகரமான மாற்றங்கள் எழுவதற்குப் பாரதிதாசனின் பாடல் வரிகள் ஒவ்வொன்றும் ஆணிவேர்களாக அமையப் பெற்றுள்ளன என்பதில் எவ்வித ஐயமும் இல்லை.

**பெண் கல்வியின் அவசியம்**

இந் நவீன உலகில் கல்வி மனித வாழ்க்கையில் இன்றியமையாததாக விளங்குகின்றது. கல்வி தனிமனிதனை மட்டுமின்றி ஒரு சமுதாயத்தையே அறிவார்ந்த சமுதாயமாகவும் பண்புள்ள சமுதாயமாகவும் மாற்றவல்லது. இம்மாற்றத்திற்கேற்ப ஆண் பெண் இருபாலரும் கல்வியின் அவசியத்தை உணரவேண்டும் .குறிப்பாக பெண்கள் கல்வி கற்பது மிக அவசியம். ஏனெனில் குடும்பத் தலைவியாக விளங்கும் அவள்தான் தன்னுடைய குழந்தைகளின் அறிவுக்கும் பண்பாட்டிற்கும் அடித்தளம்அழிப்பவள் (ந.திலகவதி1995:71).

பாரதிதாசன் தனது குடும்பவிளக்கு எனும் கவிதையில் குடித்தனம் பேணவும் மக்களைப் பேணவும் உலகினைபேணவும் மற்றும் கல்வியைப் பேணவும் பெண்களுக்குக் கல்வியறிவுஅவசியம் வேண்டுமெனபாடுகின்றார்(பாரதிதாசன்1977:69). அதேசமயத்தில் ஒருவீட்டில் உள்ளவர்களிடம் கல்விஅறிவு இல்லைஎன்றால் அந்த வீடு செல்வத்தையும் புகழையும் இழப்பதுடன் தீராதபழிக்கும் ஆளாகும் என்பதைபாரதிதாசன்

**எல்லாநலமும் ஈந்திடும் கல்வி**
**இல்லாவீட்டை இருண்டவீடென்க**

என்று இருண்ட வீடு காவியத்தின் வழி பறைசாற்றுகின்றார்.

**பெண்களுக்குக் கல்வி வேண்டும்**
**குடித்தனம் பேணுவதற்கே**
**பெண்களுக்குகல்விவேண்டும்**
**மக்களை பேணுவதற்கே**
**பெண்களுக்குகல்விவேண்டும்**
**உலகினை பேணுவதற்கே..... (பாரதிதாசன்குடும்பவிளக்கு 2)**

பெண்கள் கல்வி கற்பதன் மூலம் பல்வேறு பலன்களை அடைகின்றனர். தற்காலப் பெண்கள் பெரும்பாலானோர் கல்வியின் அருமையைப் புரிந்துகொண்டு கல்வி கற்ற பிறகு திருமணம் புரிகின்றனர். ஒரு பெண் கல்வி கற்பதன் மூலம் தன்னைத் திருத்திக் கொள்வதுடன் தீயசெயல்களில் இருந்தும் பாதுகாத்துக் கொள்கின்றாள். திருமணத்திற்குப் பின் கணவனுடன் புரிந்துணர்வுடன் நடந்து குடும்பத்தை வழி நடத்துகின்றாள். அத்துடன் உறவினர்கள் மத்தியில் ஒருங்கிணைப்பை உருவாக்குகின்றாள். கட்டழகை மட்டும் பிள்ளைகளுக்கு வழங்கிய பெண்களை விட இக்காலபெண்கள் பிள்ளைகளுக்குச் சற்று சுதந்திரம் வழங்கி நண்பர்களைப் போல் பழகி அவர்களின் அன்றாட பிரச்னைகளைகழையும் திறமையும் கொண்டுள்ளனர். அதுமட்டுமின்றி கல்வி அறிவினால் தங்களுக்கு வரவேண்டிய உரிமைகளையும் திறமையாக பெற்றுக் கொள்கின்றனர்.

**கல்வி பெண்களுக்குத் தரும் முன்னேற்றம்**

பெண்கள் வேலை செய்து என்ன செய்யப் போகின்றார்கள்? "அடுப்ட்தும் பெண்களுக்குப் படிப்பெதற்கு" போன்ற பெண் அடிமைக் கருத்துக்கள் பலவாறாகத் தோன்றின. இதனை எதிர்த்துப் பெண்களின் கல்விக்கு முட்டுக்கட்டையாக இருந்த காலத்தைப் பணித்தார் பாரதிதாசன். பெண்கள் கல்வி கற்பதால் வீடு, தெரு, ஊர், மாவட்டம் பின் நாடு எனப் படிப்படியாக முன்னேற்றம் காணும் என்பது பாவேந்தரின் எண்ணம். கல்வி கற்காத பெண் வாய் இருந்தும் ஊமையானவள் எனக் கொதித்தெழும்புகிறார். நாட்டு முன்னேற்றத்தில் ஈடுபாடு கொண்ட பெண்கள் நிறைந்த நாடு வளர்ச்சி அடையும். அத்தகைய பெண்களை உருவாக்க வேண்டும் என்று பாரதிதாசன் எண்ணினார். செந்தமிழ் நாடு பெண் கல்வியால் சீரும் சிறப்பும் எய்தும் என்பது பாரதிதாசனின் அசையாத நம்பிக்கை .அவருடைய நம்பிக்கையை புரட்சி பாவலர்

**படியாதபெண்ணினால் தீமை! என்ன**
**பயன்விளைப் பாள் அந்த ஊமை**
**நெடுந்தமிழ் நாடெனும் செல்விநல்ல**

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

நிலைகாணவைத்திடும் பெண்களின் கல்வி!
என்றுபாரதிதாசன் பெண் கல்விபற்றிபாடியுள்ளார்

**இளமைப் பருவத்தில் கல்விகற்கவேண்டும்**

கல்வியைக் கற்கும் சிறந்த பருவம் இளமைப் பருவம். இளமையில் கற்கும் கல்வி பசுமரத்தாணி போல் மனத்தில் நன்கு பதியும். இளமையில் கல் எனும் கருத்தை மக்களிடம் கூறுவதாகப் பாரதிதாசன் கவிதையில் படைத்துள்ளார். இளமையில் கற்கும் அவசியம் இங்கு நமக்கு நன்கு உணர்த்தப்படுகின்றது. இளமை சென்ற பின் கற்கும் கல்வி மனதில் நிலைத்து நிற்காது. இளமைப் பருவத்தில் மனிதனுக்கு நினைவாற்றல் ஓங்கி நிற்கும் என்பதைப் பெண்கள் உணர வேண்டும் எனக் கவிஞர் கருத்துரைக்கின்றார்.

ஒரு குழந்தைதாயின் கருவில் இருந்துவளரும் போதே அதன் மூளை வளர்ச்சியும் வளர்கின்றது. ஆகையால் அக்குழந்தை அறிவார்ந்த சிந்தனை உடையதாகவும் புத்தி கூர்மையாகவும் ஞானத்துடனும் திகழ்கிறது. குழந்தையின் அறிவு வளர்ச்சிக்குப் பெற்றோர் உணவுமுறை, கல்விமுறை, குடும்பஉறவு மற்றும் குழந்தைவளர்ப்பு போன்ற அம்சங்களில் கவனம் செலுத்த வேண்டும். அறிவாற்றல் சிந்தனையோடு வளரும் குழந்தைகள் அறிஞராகவும் வல்லுனராகவும் திகழ்வர். அத்துடன் தன்னைச் சார்ந்த நாட்டிற்கும் உலகிற்கும் ஆக்கபூர்வமான செயல்களைப் புரிந்து பெருமை ஈட்டிதரும் என்பது சிந்தனையாளர்களின் கருத்து. ஆக்கபூர்வமான சிந்தனையை அடைய வேண்டுமாயின் பெண்கள் கல்வி கற்பது மிக அவசியம். பாரதிதாசனின் நம்பிக்கையை இக்காலப் பெண்கள் நடைமுறைப்படுத்தி வருகின்றனர் என்பதை ஆணித்தரமாகக் கூறலாம்

இளமைப் பருவத்தில் கற்ற கல்வியுடன் இல்லாது பல்கலைக்கழகமும் சென்று பெண்கள் மேல் கல்வியைத் தொடர வேண்டும். கற்றது கை மண்ணளவு கல்லாதது உலகளவு என்ற பழமொழியை நினைவில் கொண்ட பெண் தன் பிள்ளையைப் பல்கலைக்கழகம் செல்லும் அளவு கல்வி கற்க துணைநிற்பாள். தன் மகள் படித்த பெண்ணாகத் திகழ ஆசைப்படும் தாயைப் பற்றி கல்வி கழகமதை நோக்கி எனப் பாரதிதாசன் எழுதியுள்ளார் (அன்னையின் ஆவல் இசையமுது.2)

பல்வேறு துறைகள் இருப்பினும் தமக்கு ஏற்ற துறையைத் தேர்ந்தெடுத்து அல்லும் பகலும் கல்வி கற்று உயர் பதவியில் பெண்கள் தங்களை ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும். நிறைய சம்பாதித்து ஆணுக்கு நிகர் தலைநிமிர்ந்து கல்வி கற்ற பெண்ணாகத் திகழ வேண்டும் என்பதே புரட்சி புலவரின் வற்றாத எண்ணம் . இன்றைய பெண்கள் அறிவியல் மற்றும் தொழில் துறையில் ஆண்களுக்குச் சமமாக சாதனை புரிந்துள்ளனர். ஏன் ஆண்களுக்கு மேலாகவும் சாதனை புரிந்துள்ளனர். அதுமட்டுமன்றி பல்வேறு துறைகளில் தங்களை ஈடுபடுத்தி வெற்றியடைந்துள்ளனர். விண்வெளிதுறையில் கல்பனா சாவ்லா அரசியலில் இந்திராகாந்தி, சந்திரிகா பண்டாரநாயக்க என்று பல பெயர்களைப் பேசக்கூடிய நிலையில் இன்றைய காலம் மாறிவிட்டது. பொதுச்சேவையில் அன்னைதெரேசாவில் தொடங்கி இன்றைய மேதாபட்நாகர், அருந்ததிராய் போன்றோர் வரை சங்க மற்றும் இலக்கிய

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

துறையில் சாதித்துள்ளார்கள். உலகளாவிய நிலையில் உள்ள அனைத்துப் பெண்களும் உயர்கல்வி கற்று பல்வேறு துறைகளில் சாதனை புரிந்துள்ளதையும் காணலாம்.

**பெண் கல்விக்குக் கொடுக்கப்பட்ட முக்கியத்துவம்**

பெண்களின் கடமை பிள்ளைகளுக்குக் கல்வியின் முக்கியத்துவத்தைப் புரியவைக்க வேண்டும்.அணிகலன்களின் மீது மோகம் கொண்டு அதுதான் நாகரிகம் என எண்ணம் கொண்டு கூறும் பெண்களிடம் தாய் கல்வி கற்பதன் அவசியத்தை எடுத்துரைக்கின்றார். கல்வி கற்பது தான் பெண்ணின் அணிகலன் என்று‘ கெம்புக்கல் வைத்த நகை தீராதபுண்’ என்றும் அறிவுறுத்துகின்றாள் (பாரதிதாசன் இசையமுது 2) நன்கு கல்வி கற்ற பெண்களை இந்த நாடு அன்போடு தன் கண்ணில் ஒன்றிக் கொள்ளும் என்றும் கல்விதான் அழகு என்றும் அதுவே அழியாச் செல்வம் என்று தெளிவாக விளக்குகின்றார். கல்வியை விலை போட்டு வாங்க முடியாது என்பதைப் பெண் பிள்ளைக்கு உணர்த்துதல் அவசியம். தவறாமல் பள்ளிக்கு அனுப்புவது பெற்றோரின் கடமை என்றும் போலி நாகரீகத்தை விட்டுவெளியே வருமாறு தாய் மொழிவது போன்று புரட்சிப் புலவர் பாரதிதாசன் தம் கவிதை வழி கல்வியின் முக்கியத்துவத்தை நன்கு உணர்த்துகின்றார்

கல்வி கற்கும் வயதில் ஆண் பெண் இருபாலருக்கும் காதல் உணர்வு ஏற்படுவதுண்டு. இளைஞர் பருவத்தில் ஏற்படும் இக்காதல் கல்விகற்பதற்கு இடையூறு ஆகிவிடும்.. அதிலிருந்து தப்பிக்கும் பிள்ளைகள் மிகக் குறைவு என்றே கூறலாம். கசடற கற்க வேண்டிய கல்வி காதலால் பாழ்பட்டுப் போகும் என்று இவ்வாறுபுலவர் பாடுகின்றார்

**பள்ளிக்குச் செல்லும்மொருசெந்தமிழ்ப்பாக்கியத்தை**
**அள்ளிப் பெண்முற் போக்கில் ஆறாதகொள்ளி**
**வைக்க எண்ணாதே**

**(பாரதிதாசன் காதல் பாட்டு)**

கல்வி கற்கையில் எவ்வகை இடையூறுகளையும் பொருட்படுத்தாதுதம் இலக்கை அடையப் பெண்கள் முயல வேண்டும். முற்போக்கைத் தரும் பெண் கல்வியைப் பாழ்படுத்திவிடாதீர்கள் என்று கோரிக்கை விடுவதாகத் தமது கவிதையைப் படைத்துள்ளார் பாரதிதாசன். இதன் மூலம் கல்வி கற்ற பெண்களை முற்போக்குச் சிந்தனை உடையவர்களாகவும் முடிவெடுக்கும் திறன் கொண்டவர்களாகவும் உருவாக்கமுடியும் என்பது தின்ணம்

பாரதிதாசனின் கூற்றுப்படி அறிவாற்றல் சிந்தனையாளர்கள் புதிய சிந்தனைகளைக் கையாள்பவர்களாகவும் எதிர்நோக்கும் சிக்கல்களுக்கு ஆக்கபூர்வமான முடிவினை எடுப்பதில் தனித்தன்மை வாய்ந்தவர்களாகவும் திகழ்வர். இக்காலப் பெண்கள் கல்வி கற்பதன் வழி இது போன்ற முற்போக்குச் சிந்தனையுடன் திகழ்வதைக் கண்கூடாகக் காணமுடிகின்றது. அதாவது

E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

**மூடத்தனத்தின் முடை நாற்றம் வீசுகின்ற**

**காடுமணக்கவரும் கற்பூரப் பெட்டகமே!**

என்ற வரிகளின் ஊடாக கல்வியறிவு பெற்ற பெண்கள் அவர்களைச் சுற்றியுள்ள அனைத்துச் சமூகத்திற்கும் பயன்பெறுவர் என அழகாகக் கூறுகின்றார் பாரதிதாசன்.

**கற்ற பெண்களும் கல்லாத பெண்களும்**

அறிவுடைய சமுதாயத்தை உருவாக்கப் பெருந்துணைபுரியும் சாத்தியம் கல்வி பெற்ற அறிவுடைய பெண்களால் தான் முடியும் என ஆணித்தரமாகக் கூறுகின்றார் பாரதிதாசன். கல்வி கற்ற பெண்கள் வானில் நட்சத்திரங்கள் மின்னிக் கொண்டிருப்பது போல குடும்பத்திலும் சமூகத்திலும் மின்னிக்கொண்டே இருப்பார்கள். ஏனெனில் பெண்களுக்கு ஆண்களை விட பொறுப்பும் நல்லெண்ணமும் அதிகம். படித்த பெண்கள் தங்கள் பிள்ளைகளின் கல்வியை மட்டுமின்றி அவர்களின் நடவடிக்கைகளிலும் அக்கறை செலுத்துவர். பிள்ளைகளின் அறிவுவளர தூண்டுகோலாக இருப்பார்கள். சுடர் விளக்காயினும் தூண்டுகோல் வேண்டும் அல்லவாதங்கள் குழந்தைகளின் அறிவைப் பெருக்க அனைத்து ஆவணங்களையும் செய்வார்கள். பிள்ளைகளில் கூரியஅறிவும் சீரிய ஒழுக்கமும் கெடாதவாறு படித்த பெண்கள் கண்காணிப்பதால், பாரதிதாசன் கல்வியுடைய பெண்கள‘ திருந்திய கழனி’ என்று அழகுறப் பாடியுள்ளார் (இ.தமிழ்நாவன் 1993:91).

பெண்கள் படித்திருந்தால் குடும்ப நிர்வாகம் சீராகவும் செம்மையாகவும் இருப்பதுடன் எதிலும் ஏமாறாத விழிப்புணர்வும் ஏற்படும். இன்றைக்கு ஏலச்சீட்டு என்று ஒன்றை நடத்தி மோசம் செய்வோரை ஊடகம், பத்திரிகைகள் வழியாக அறிகின்றோம். இவ்வாறான விபரீதத்தில் இருந்து தப்பிக்கப் பெண்கள் கல்வி மிகமிக அவசியம். பெண் கல்வி என்பது ஒரு பக்குவமாகும் புரட்சிகவிஞர் பாரதிதாசன் கல்வியில்லாத பெண்களால் சமுதாயத்தில் அறியாமை தான் நிறையும் என்ற கருத்தை முன் வைத்துள்ளார். பெண்களுக்கு அவர்களின் நிலையை உணர்த்துகின்றார்

**கல்வி இல்லாதபெண்கள் களர் நிலம்!**

**அந்நிலத்தில் புல் விளைந்திடலாம்!நல்ல**

**புதல்வர்கள் விளைதல் இல்லை!**

கல்வி அறிவு இல்லாத பெண்களின் வயிற்றில் பிறக்கும் பிள்ளைகள் தவறான வழிக்குச் சென்றாலும் வியப்படைவதற்கு இல்லை. அவர்களைப் பேணிகாத்துக் கல்வியின் அவசியத்தை உணர்த்தும் அறிவும் கிடையாது. பள்ளிக்குச் செல்லும் தன் பிள்ளைக்குத் துணையாகக் கல்விச் சிந்தனையை ஊட்டும் முயற்சியும் கிடையாது.ஆண் பிள்ளையோ அல்லது பெண் பிள்ளையோ அவர்களை நல்ல ஒழுக்கமுடைய பிள்ளைகளாக வளர்க்கவும் தெரியாது. கல்வி அறிவற்ற பெண் என்நேரமும் தன் குடும்பப் பணிகளில் ஈடுபடும் எண்ணத்தையே கொண்டிருப்பாள். சிலர் சதா தொலைக்காட்சி நாடகத்தில் மூழ்கி இருப்பர்.

தங்களைச் சுற்றி நடக்கும் சம்பவங்களைப் பற்றி அறிந்து கொள்ளாமல் கிணற்றுத் தவளைபோல் வாழ்க்கை நடத்துகின்றனர்.

அதே போல் கல்லாத பெண்ணின் பிள்ளைகள் சமுதாயத்திற்கு உதவாத பிள்ளைகளாகத் தான் திகழ்வர். பெரும்பாலும் இத்தகைய பிள்ளைகள் தான் இளைஞர் பருவத்தில் போதை பித்தர்களாக உருவெடுக்கின்றனர்.

கல்வி அறிவற்ற பெண்கள் தினசரி வாழ்க்கையில் பல இன்னல்களையும் ஏமாற்றங்களையும் சந்திக்கின்றனர். அத்துடன் தங்களையும் தீயசெயலில் இருந்து தற்காத்துக் கொள்ளத் தெரியாது. பெற்ற பிள்ளைகள் அனுப்பும் கடிதத்தைக் கூட படித்து புரிந்து கொள்ள முடியாத நிலையில் சில தாய்மார்கள் உள்ளனர். அதுமட்டுமன்றி இன்றைய நவீன காலத்தில் பிள்ளைகள் எத்தனையோ மடங்கு இலத்திரனியல் யுகத்தைப் பற்றி அறிந்து வைத்துள்ளனர். ஆனால் அவர்களை வழிநடத்துகின்ற பெற்றோர்களுக்கு அந்த இலத்திரனியல் சாதனங்களைப் பற்றிய அடிப்படை அறிவு கூட இல்லாமல் போய்விடுகிறது. இதுவும் இன்றைய 21-ஆம் நூற்றாண்டில் பாரிய பிரச்னையாகக் காணப்படுகின்றது. காலத்திற்கு ஏற்றாற்போல் மனிதர்களும் மாறவேண்டும்.

இதனால் கல்வி கற்காத அனைத்துப் பெண்களும் தங்கள் பிள்ளைகளை நல்வழியில் வளர்க்கவில்லை என்பது கிடையாது. பெரும்பாலான சமுதாயப் பிரச்னைகள் கல்விகல்லாத பெற்றோர்களின் குடும்பங்களில் நிகழ்வதைக் கணூடாகக் காண முடிகின்றது. வறுமையின் காரணத்தால் இத்தகைய நிலை ஏற்படுகிறது. இதற்கு அடிப்படைக் காரணம் கல்விஅறிவு இல்லாததே ஆகும். பெண்கள் ஒரு சமுதாயத்தின் பண்பாட்டையும் கலாச்சாரத்தையும் கட்டிகாப்பவர்கள். கல்வி கற்ற பெண்களால் சிறந்த அறிஞர்களை உருவாக்க முடியும். அதனால் பெண்கள் தொடர்ந்து கல்வி கற்க வேண்டும் என்று சுவாமி விவேகானந்தர் கூட அறிவுறுத்துகின்றார்.

கல்வி கற்றவர்க்கும் கல்லாதவர்களுக்கும் இடையில் காணும் வேறுபாடுகளைப் பாரதிதாசன்; சிறப்பாக விளக்கியுள்ளார். அன்றைய சூழ்நிலையில் காணப்பட்ட கல்வி அறிவற்ற, கல்விஅறிவு முடக்கப்பட்ட பெண்களின் நிலையில் இருந்து இன்றைய சூழ்நிலையில் பலமாற்றங்கள் உருவெடுத்து இருக்கின்றன. கல்வி அறிவு இல்லாத பெண்களின் நிலைப்பாட்டினை இன்றைய காலத்தில் காண்பது மிகக் குறைவாகவே காணப்படுகின்றது. அந்த வகையில் இருவர்களுக்கும் இடையான வித்தியாசத்தை எடுத்துக் கூறியதன் மூலமாக எதிர்காலத்தில் உள்ள பெண்கள் கல்வி கற்க வேண்டும் என்ற இலக்கினைகைக் கொண்டனர். இதற்குக் காரணம் பாரதிதாசனும் ஆவார் என்பது பெருமிதம்.

**பல்வேறுகல்வித் துறைகளில் பெண்கள்**

இன்றைய காலகட்டத்தில் விஞ்ஞானம் உலகையே தன்வசப்படுத்தி உள்ளது. 21-ஆம் நூற்றாண்டு கல்வி என்பது கணினிஉலகக் கல்வி என்று குறிப்பிடத்தக்கதாகும். காலத்திற்கேற்ற இக்கல்வியை பயில்வதே அனைவரின் கடமையாகும். மருத்துவம்,

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

பொறியியல், கணினி, கணிதம், வணிகம், இலக்கியம், வரலாறு என்று பல துறைகளில் இன்று பெண்கள் தங்கள் மேற்கல்வியைப் பயில்கின்றனர்

அவர்களின் நாட்டத்திற்கு ஏற்ப பெண்கள் துறைகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் வசதியும் அமைந்துள்ளது. இத்தகைய மாற்றம் பெரும் சிறப்பைத் தருகின்றது. இதன் முக்கிய காரணம் இருபதாம் நூற்றாண்டில் பாரதியார்-பாரதிதாசன் போன்ற கவிஞர்கள் பெண் கல்விக்குச் செய்த புரட்சிகள் என்றே கூறலாம்.

இன்றைய சூழ்நிலையில் அரசாங்கக் கல்விக்கூடங்கள் மட்டுமன்றித் தனியார் நிறுவனங்களும் கல்வி மற்றும் கைத்தொழில் பயிற்சிகள் போன்ற வசதிகளை ஏற்படுத்தித் தந்துள்ளன. அவர்களின் கல்விக்கடன் சுமைகளைப் போக்கும் வண்ணம் பெண் கல்வி ஊக்குவிப்பு சிறப்புத் திட்டத்தின் வழி உயர்கல்வி நிதி வழங்கப்படுகின்றது. இதன் வழி பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளைச் சுலபமாக மேற்கல்வி பகில வழி வகுக்கின்றனர். கல்வி கற்ற சமுதாயத்தை உருவாக்கும் எண்ணம் கொண்டு அரசாங்கம் மக்களுக்காக இது போன்ற வசதிகளை ஏற்பாடு செய்துள்ளது.

அதேவேளை சிறப்புப் புள்ளிகள் பெற்ற மாணவர்களுக்கு உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் கல்வி பயில கல்வி உதவித் தொகையும் வழங்குகிறது. பெண் மாணவிகள் அதிகமானோர் அரசாங்கத் தேர்வுகளில் சிறப்புத் தேர்ச்சிப் பெற்றுச் சாதித்துள்ளனர். சுதந்திரம் பெற்ற அரசாங்கம் எடுத்துக் கொண்ட பல்வேறு முயற்சிகளின் நிமித்தம் பெண் கல்விஉயர் முயற்சி அடைந்தது. அதனால் ஆண்களின் கல்வி வீதத்தைக் காட்டிலும் பெண்களின் கல்வி வீதம் அதிகரித்திருப்பதைப் பல கணக்கீடுகள் தெரிவிக்கின்றன.

**கல்வியில் பெண்களின் பங்கு**

பாரதியாரும் பாரதிதாசனும் பெண்கள் தொழிற்கல்வியைக் கண்டிப்பாகக் கற்க வேண்டும் என வலியுறுத்தியுள்ளனர். வணிகத் தொழிலைச் சார்ந்த அனைத்துத் தொழில்களையும் ஆண்கள் தான் செய்யவேண்டும் பெண்கள் அதில் ஆர்வம் செலுத்தக் கூடாது என்ற எண்ணத்தைப் புரட்சிப்பாவலர் உடைத்தெறிந்தார். பொறியியல் கல்லூரி, செவிலியர் பயிற்சி நிலையம், உடற்பயிற்சிக் கல்விநிலையம் என அரசு சார்பிலும் தனியார் சார்பிலும் கல்வி நிறுவனங்கள் இக்காலகட்டத்தில் பெருகி உள்ளன. பெண்கள் தங்களுக்கு விருப்பமான தொழிலைத் தேர்ந்தெடுத்து அதன் தொடர்பான கல்வியை மேற்கொள்ளுகின்றனர் .தனித்து வாழும் தாய்மாரும் கூட வீட்டிலேயே துணி தைப்பது, கைவினைப் பொருட்கள் தயாரித்தல், சிகைஅலங்காரம் போன்ற தொழிலைக் கற்று வருமானம் ஈட்டுகின்றனர். பின்னர் சுயமாக ஒரு கடையைத் திறந்து தொழிலை விரிவாக்கம் செய்கின்றனர். அத்தோடு தமக்குக் கீழ் பலபெண்களுக்கு மாதாந்த வருமானத்தையும் பெற்றுக் கொடுக்கின்றனர். இதற்குக் காரணம் பெற்றோர்கள் அவர்களுக்கு அளித்த அடிப்படைக் கல்வி அறிவாகும். கல்வியைக் கற்று இருப்பதால் பெண்கள் இதுபோன்றுஆக்கபூர்வமான முடிவை எடுத்துவாழ்க்கையில் முன்னேறுகின்றனர். வேலை

செய்யும் பெண்கள் வீட்டில் இரு கண்கள் போன்றவர்கள் எனக் கவிஞரும் பெண்களைப் பாராட்டியுள்ளார்.

**கைத்தொழில் ஒன்றைக் கற்றுக்கொள்**

**கவலைஉனக்கில்லைஒத்துக்கொள்**

என்று நாமக்கல் கவிஞர் தம் கவிதையில் குறிப்பிட்டுள்ளது போல ஒவ்வொரு பெண்ணும் தொழிற்கல்வி கற்பது மிகமிக அவசியமாகும். அது இன்று பெரிதும் போற்றப்படும் விடயமாகவும் காணப்படுகின்றது.

**சமத்துவக் கல்வி**

ஆண்களோடு பெண்களும் சரிநிகர் என்ற பாரதியைப் போல இவரும் ஆணும் பெண்ணும்; சமானந்தர் ஆனார் என்ற பண்; வந்துபாயும் நாளை எதிர்பார்த்துநிற்கின்றார். ஆண்கள் வானூர்தி செலுத்துதல், கப்பல் ஓட்டுதல் முதலிய செயல்கள் இருவருக்கும் பொதுவாகவும் சமையலும் வீட்டுவேலைகளும் பெண்களுக்கு மட்டும் உரியவை என்பது சரியல்ல ஆண்களும் அவற்றை நன்றென கருதி செய்யவேண்டும் என்கிற அளவிற்கு ஆண் பெண் சமத்துவத்தில் முற்போக்காளராக பாரதிதாசன் விளங்குகின்றார். பெண்ணுரிமையை வலியுறுத்த எழுந்த வேகம் அது எனக் கொள்ளலாம். பெண்களுக்கு வீரஉள்ளம் வேண்டும் என்று இவர் விரும்புவதை இவ்வாறு கூறுகின்றார் பாரதிதாசன்

**உமியல்லமாதர் வலக்கைதீயர்**

**உயிரை இடிக்கும் உலக்கை.....**

ஆண்களுக்குரிய எல்லாக் கல்வித்துறைகளும் பெண்களுக்கும் பொருத்தமாகுமா? என்ற கருத்து வேறுபாடு பல வருடங்களாக இருந்து வந்தது. இதன் காரணமாகப் பெண்களுக்கு முட்டுக்கட்டை இடப்பட்டது எனக் கூறலாம். ஆண்கள் கற்கும் எல்லாக் கல்வியும் பெண்களும் கற்க சம உரிமை உண்டு. பெண்களும் அறிவில் சிறந்தவர்கள் எனக் கவிஞர் கூறுகிறார். பெண்களுக்காக வகுக்கப்படும் குடும்பக் கலையை ஆண்கள் கற்பதில் ஆர்வம் காட்டுவதில்லை. ஆனால் ஆண்களுக்கே உரிய படைக்கல்வியைப் பெண்களும் பயில்கின்றனர். இக்காலத்துப் பெண்கள் பலர் கல்லூரிகளில் படைப்பயிற்சியை மேற்கொள்ளுகின்றனர். அதுமட்டும் அன்றி அரசியல் அதிகாரங்களிலும் நாட்டைக் காக்கும் பணிகளிலும் பெண்களுக்குப் பொருத்தமே இல்லை என்று விலக்கப்பட்ட துறைகளிலும் இன்று பெண்களே கொடிகட்டிப் பறக்கின்றனர். குடும்பத்திற்கு மட்டும் பணிபுரிந்த பெண்கள் இன்று நாட்டின் அமைதிக்காகவும் சுபிட்சத்திற்காகவும் தங்களைஅர்ப்பணிக்கின்றனர்.

தமிழ்நாட்டில் ஒருகாலத்தில் அம்மையாராக போற்றப்பட்ட பெண்கள் பின் அடிமைக்கு ஆளாயினர். வேதகாலத்தில் பெண்கள் உரிமை பெற்றிருந்தார்கள் சங்ககாலத்திலோ அப்பெண்கள் உரிமையின்பம் நுகர்ந்தார்கள். கம்பர் காலம் வரை கூட பெண்ணுரிமைக்குப் பெருங்கேடு நிகழவில்லை. பெண் கல்விமறுப்பு ஏற்பட்ட காலம் பின்னைய காலம் தான்

எனக் கூறுகின்றார் திரு.வி.கல்யாணசுந்தரனார். இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய பாரதியார், பாரதிதாசன் போன்ற கவிஞர்களின் புரட்சியால்தான் 21-ம் நூற்றாண்டு பெண்கள் கல்விப் பயிலும் வாய்ப்பு ஏற்பட்டுள்ளது என்பது மறுக்கமுடியாத உண்மையாகும்.

இன்றும் சில மூலைமுடுக்குகளில் மூடநம்பிக்கைகள் வாழ்ந்து கொண்டு தான் இருக்கின்றன. அவை அனைத்தையும் முளையிலேயே கிள்ளி எறிய வேண்டுமாயின் பெற்றோர்களின் பங்குபெண்பிள்ளைகளுக்குமிகஅவசியமாகும். அத்துடன் இன்று எத்தனையோ துறைகளில் ஏணிவைத்து கூட எட்டாத அளவிற்குப் பெண்கள் வளர்ந்து கொண்டிருக்கின்றார்கள் என்றால் அதற்குப் பாரதியார் தொடக்கம் அவரை அடியொட்டிய பாரதிதாசனும் எழுதிய பாடல் வரிகள் ஒவ்வொன்றும் அவ்வளவு அர்த்தமுள்ளவையாகக் காணப்படுகின்றன. பாரதிதாசன் காலத்துப் பெண்களுக்கும் எதிர்காலத்தில் எவ்வாறு பெண்கள் மாறவேண்டும் என்ற பாரதிதாசனின் கனவிற்கும் இந்த 21-ஆம் நூற்றாண்டு பெண்கள் சிறந்த உதாரணங்களாக விளங்குகின்றார்கள் என்பது நாம் கண்கூடாக உணரக்கூடிய உண்மையாகும்.

**முடிவுரை**

பாரதிதாசன் பெண் கல்வி பற்றி கூறிய அறிவுரைகள் எல்லா காலத்திற்கும் பொருந்துவதாக அமையும். இன்றைய கல்விமுறையில் பெண்களின் ஆதிக்கம் தலைதூங்கி நின்றாலும் பல பெண்கள் கல்வி கற்பதைச் சுமையாகவே கருதுகின்றனர். இந்நிலையை மாற்றம் செய்தால் தான் பெண்கள் வாழ்வில் முன்னேற்றம் காணமுடியும். பெண்கள் கல்வி கற்று வீட்டிற்கும் நாட்டிற்கும் மற்றும் சமுதாயத்திற்கும் பெருமை சேர்ப்பதை கடமையாக கொள்ள வேண்டும்.பாரதிதாசன் ஒருபுரட்சியாளர் எனபட்டம் சூட்டுவதோ அல்லது இவர் ஒரு சிறந்த கவிஞர் எனக் காட்ட முயற்சிப்பதோ என் நோக்கம் அல்ல பாவலர் பற்றிய உண்மையை வையகம் போற்றும். ஆனால் அவர் குறிப்பிட்ட கவிதைத் தொகுப்புகளின் ஊடாக அவரது வரிகளுக்கு அர்த்தம் சேர்க்கும் வண்ணம் பல்வேறு புரட்சிகளை கண்டு பழங்கருத்துகளைப் புரட்டிப் போட்ட சாதனையாளர்களாக இதற்குத் துணிவு கொண்டவர்களாக இதன்னம்பிக்கை மேலோங்கியவர்களாக 21-ஆம் நூற்றாண்டு பெண்கள் இன்று வாழ்ந்து கொண்டிருக்கின்றார்கள் இதுவல்லவோ புரட்சி. உண்மையில் புரட்சி என்பது மேலோட்டமான எந்தச் செயலும் புரட்சி என்ற உயர் மகுடத்தைப் பெற இயலாது. முன்னைய நிலையில் இருந்து முழுவதும் தகர்ந்து நிலைமாறி நிற்றல் வேண்டும். அவ்வாறே அன்று கூறியவரிகளுக்கு இன்று உயிர் கிடைத்துள்ளது இதனை நாம் அறியவேண்டும் அறியாமல் உள்ளவர்களுக்கும் அறிவிக்க வேண்டும் என்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 14. ஆற்றுப்படை இலக்கியங்கள் சுட்டும் தமிழர்களின் வாழ்வியல் நெறிகள்

**ப. ரதிதேவி**
தமிழ்த்துறைத் தலைவர், தேனி கம்மவார் சங்கம் கலை அறிவியல் கல்லூரி, கொடுவிலார்பட்டி, தேனி.

DOI 10.5281/zenodo.10701360

**ஆய்வுச் சுருக்கம் :**

They also practiced the art of acting. They have been called as Kuthar, Panar, Porunar and Viraliyar respectively. Five types of riverine literature have been pointed out in the Tenth. The high quality of guidance is the message of naval literature. The research summary of this article is to explore the message that Aartuppa literature has an important place in the life of the ancient Tamils because it guides not only the material but also the grace of God.

**முன்னுரை :**

பழங்காலத் தமிழர்களின் பண்பாடு, நாகரீகம், பழக்க வழக்கங்களைப் பற்றிய செய்திகளை எடுத்துக் கூறுவதாக சங்க இலக்கியங்கள் உள்ளன எனலாம். ஆற்றுப்படை இலக்கியம் என்பது தமிழ் இலக்கிய வகைகளுள் ஒன்றாகும். ஆறு என்றால் பாதை, வழி என்றால் பொருள், இத்தகைய சிறப்புடைய ஆற்றுப்படை இலக்கியங்கள் சுட்டும் தமிழர்களின் வாழ்வியல் நெறிகள் பற்றி ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**ஆற்றுப்படை - விளக்கம் :**

கூத்தர், பாணர், பொருநர், விறலியர் என்போர் தமது வறுமையைப் போக்க வள்ளல்கிளடம் சென்று பொருள் பெறுவது அக்கால வழக்கமாகும். அவ்வாறு பரிசு பெற்றுச் செல்லும் மேற்கூறிய நால்வகைப் பிரிவினருள் ஒருவன், பரிசு பெறச் செல்லும் இன்னொருவனை வழிப்படுத்தும் முறையில் அமைவதே ஆகும்1.

**ஆற்றுப்படையில் விருந்தோம்பல் :**

ஆற்றுப்படை நூல்களில் திருமுருகாற்றுப்படை நீங்கலாக ஏனைய நான்கு ஆற்றுப்படை நூல்களிலும் விருந்தோம்பல் பற்றிய செய்திகள் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. முன்பின் இல்லாமல் பொருளுக்காகச் செல்லும் வறியவர்களுக்கு அரசர்களும் அந்நாட்டு மக்களும் விருந்தோம்பியதை ஆற்றுப்படை நூல்கள் கூறுகின்றன.

**அரசனின் விருந்தோம்பல் சிறப்பு :**

பொருநர் ஆற்றுப்படையில் கரிகால் சோழன் தன்னை நாடிவந்த பொருநர்களுக்கு புத்தாடைகளையும், பொற்கிண்ணங்களில் மதுவையும் கொடுத்து மகிழ்வித்தான். ஆட்டு இறைச்சிகையும், சுவையான பலகாரங்களையும், கள்ளையும் கொடுத்துப் பசியாற்றினான். தேவையான பரிசில் பொருட்களைக் கொடுத்து வெண்ணிறக் குதிரைகள் பூட்டிய தேரில்

அவர்களை ஏற்றி அனுப்பிவைப்பான். அவ்வேளையில் தேருக்குப் பின் ஏழு அடி நடந்துவந்து வழியனுப்பிவான் என்ற செய்தியை,

**"பால்புரை புரவி நால்கு உடன்பூட்டி**
**காலின் ஏழ் அடிப்பின் சென்று"**2.

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றது என கருதலாம்.

**சோழனின் நல்லாட்சி** :

சோழ நாடானது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நான்கு நிலங்களையும் இணைத்திருந்தது. அவன் கையிலிருக்கும் வேலானது வெற்றி தருவதாக மட்டுமே இருந்தது எனலாம்.

**"கோட் தெங்கின் குலை வாழை**
**கொழுங் காந்தன், மலர் நாகத்துத்**
**துடிக்குடிளஞக் குழப் பாக்கத்து**
**யாழ் வண்டின் கொளைக்கு ஏற்ப**
**லவ விரித்த மட மஞ்சை**
**நிலவு எக்கர்ப்ப பல் பெயரத்"** (பொரு 208 - 213)

தேனும் நெய்யும் கிழங்கும் பெரிதும் கிடைத்தன. எனவே குறிஞ்சி நில மக்கள் நெய்தல் நில மக்களிடமிருந்து மீனையும், கள்ளையும் பெற்றுக்கொண்டு தேனையும், நெய்யையும் கொடுத்தனர். மருதநில மக்கள் கரும்பையும், அவிலையும் கரிகால் பெருவளத்தானின் சோழநாடு எல்லா வளங்களையும் கொண்டதாய் இருந்தது. நாட்டின் வளர்ச்சி மக்களுக்கும், மன்னனுக்கும் ஆதாரமாய் விளங்குகிறது. சோழனின் நல்லாட்சிக்கு அந்நாட்டு வளமே காரணமாய் அமைகிறது எனலாம்.

**நல்லியங்கோடனின் விருந்தோம்பல்** :

ஓய்மா நாட்டை ஆண்ட சிற்றரசன் நல்லியங்கோடன் ஆவான் என்ற செய்தி சிறுபாணாற்றுப் படையின் மூலம் நமக்கு தெரியவருகிறது.

நல்லியங்கோடன் இரவலர்களின் நிலையைக் கண்டு வருந்தும் ஈர நெஞ்சம் கொண்டவன். தன்னை நாடடி வரும் இரவலருக்கு மூங்கிலை உரித்து எடுத்து போன்ற மெல்லிய ஆடையை உடுத்ததத் தருவான். முன்னொரு காலத்தில் வில்லுக்கெனப் புகழப்பட்ட அர்ச்சுனனின் மூத்தோனாகிய வீமன் சமையல் நூல் ஒன்றை எழுதினான். அந்நூலில் கூறப்படாத பல்வகை உணவுகளையும் ஆக்கித் தருவான். அவற்றைப் பொன்னாலாகிய பாத்திரத்தில் இட்டு ஊட்டும் கருணை கொண்டவன். இச்செய்திகளை நல்லூர் நத்தத்தனார்,

**"........................................ மாசில்**
**காம்பு சொலித்தன்ன அறுவை உயீசி**
**..............................................................................................**
**பனுவலின் துழாஅப் பல்வேறு அடிசில்"**

எனக் குறிப்பிடுகிறார் நல்லூர் நத்தத்தனார் எனும் புலவர் பெருமான்.

**முல்லை நில மக்களின் விருந்தோம்பல் :**

அருவிகள் வீழும் மலையின் பின்னே ஞாயிறு மறையும் அந்திப்பொழுதில் வேலினது நுனி போலப் பூத்த கேணியையுடைய வேலூரைச் சென்று சேருவீர், அங்கு உள்ளுறைவோர் வருந்துததற்குக் காரணமான வெப்பமிக்க கழிலின்காண் உறையும் எயினர் குலத்தில் பிறந்த மகளிர் சமைத்த இனிய புளிங்கறி இட்ட சோற்றினை ஆமானினது சூட்டிறைச்சியுடன் நும் பசி தணியுமாறு நிரம்பத் தருவார் என்று நத்தத்தனார் குறிப்பிடுவதன் மூலம் அறியமுடிகிறது.

**"எயிற்றியர் அட்ட இன்புனி வெஞ்சோறு**
**சூதமா மேனிச் சில்வளை ஆயமொடு**
**ஆமான் சூட்டின் அமைவரப் பெறுகுவீர்"**

என்ற வரிகள் இதனை உணர்த்துகின்றன எனலாம்.

**வேளாண்மையின் சிறப்பு :**

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய திணைகளில் மக்கள் வாழ்வியல் சூழலைப் படம்பிடித்துக் காட்டும் எண்ணற்ற பாடல்கள் பெரும்பாணாற்றுப்படையில் அமைந்துள்ளது சிறப்பு.

**"..................... செஞ்சால் உழவர்**
**நடை நவில் பெரும் பகடு புதவில் பூட்டிப்**
**பிடிவாய் அன்ன மடிவாய் நாஞ்சில**
**உருப்பு முகமுழுக் கொழு மூழ்க ஊன்றித்**
**தொடுப்பி எறிந்து உழுத துணர்படு துடவை**
**அரிழகு பொழுதின் இரியல் போகி"** 3

என்ற பாடலில் புன்செய் நிலத்தால் உழவர்கள் காளைகளை ஏரில் பூட்டி, கொழு நன்கு மூழ்கும்படி பலமுறை நிலத்தை உழுதனர், விதைத்தனர், களை எடுத்தனர் என்ற செய்தி தமிழர் தொன்மைப் பயிர்த்தொழிலை பறைசாற்றுவதாகும். அதைப் போன்று நன்செய் நில வேளாண்மையைக் கீழ்க்கண்ட வரிகள் புலப்படுத்தியுள்ளன.

**"கார்ஏமு பொருத கண்அகன் செறுவின்**
**உழாஅ நுண்தொளி நிரவிய வினைஞர்**

**முடிநாலு துழுத்திய நெடுநீர்ச் செறுவில்**
**களைஞர் தந்த கணைக்காய் நெய்தல்"**

என்ற வரிகளில் தென்படுகிறது எனக் கருதலாம்.

**உழவர்களின் விருந்தோம்பல் :**

உழவர்களின் விருந்தோம்பல் குறித்த செய்தியினை

**"தொல்பசி அறியாத் துளங்க இருக்கை**
**மல்லல் பேர் ஊர் மடியின் மடியா**
**வினைஞர் தந்த வெண்ணில் வல்சி**
**மனவாழ் அளகின் வாட்டொடும்**
**பெறுகுவீர்!"**

இப்பாடலில் உள்ள 'தொல்பசி அறியா'- பசி என்பதை அறியாத வளமான ஊர் எனவும், வினைஞர் தந்த வெண்ணெய் வசி - உழவைர் தரும் வெண்ணெய் உணவு என்றும் பொருள் படும் என்றும் கூறலாம். தமிழர்களின் வேளாண்மைச் சிறப்பையம், உழவர்களின் விருந்தோம்பலையும் பெரும்பாணாற்றுப்படை படம்பிடித்துக் காட்டுகின்றது எனலாம்.

**கூத்தராற்றுப்படையின் சிறப்புகள் :**

சங்ககாலத் தொகுப்புகளுள் ஒன்றான பத்துப்பாட்டு நூல்களுள் ஒன்று மலைபடுகூடாம். இந்த நூலைக் கூத்தராற்றுப்படை எனவும் குறிப்பிடுவர்.

நவிர மலையின் தலைவனான நன்னன் என்பவனைப் பாட்டுடைத் தலைவனாக்க கொண்டு இரணிய முற்றத்து பெருங்கௌசிகனார் என்ற புலவரால் பாடப்பட்டது இந்நூல் எனலாம்.

நவிர மலை மக்களின் வாழ்க்கை முறைகளையும், அவர்கள் தலைவனின் கொடைத் திறத்தையும் புகழ்ந்து பாடும் இந்நூற்பாடல்களில், அக்காத் தமிழரின் இசைக்கருவிகள் பற்றியும், ஆங்காங்கே குறிப்புகள் காணப்படுகின்றன. நன்னனைப் பாடிப் பரிசு பெறச் செல்லும் பாணர், நெருவங்கிலும், மத்தளம், கிணை, சிறுபறை, கஞ்சதானம், குழழ், வாழ் போன்ற பலவகை இசைக் கருவிகளை எடுத்துச் செல்வது பற்றிய செய்திகள் கூறப்பட்டள்ளது"4 என்பது குறிப்பிடத்தக்கது எனக்கருதலாம்.

ஆற்றுப்படை நூல்களில் சிறுபாணாற்றுப் படை, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகம் போன்ற நூல்களில் பரிசில் நிட்டியாப் பண்புடைமை கூறப்பட்டுள்ளது. பண்டைய தமிழர்களின் வாழ்வியல் சூழலை உணர வைத்துள்ளது என கருத இடமுண்டு.

**திருமுருகாற்றுப்படையின் அமைப்புமுறை :**

எட்டுத்தொகை நூல்களான குறுந்தொகை, நற்றிணை போன்றவற்றில் முருகன் பற்றிய பல குறிப்புகள் காணப்படுகின்றன. முருகனைத் தெய்வமாக வணங்கி, அறுபடை வீடுகளின் சிறப்பை விளக்கும் முகமாக நக்கீரரால் திருமுருகாற்றுப்படை எழுதப்பட்டுள்ளது.

**“நெற்றிக்கண் திறப்பினும் குற்றும் குற்றமே”** என்ற தெய்வப்புலவர் நக்கீரர் இறைவன் அருளைப் பெற அடியவர்களுக்கு வழிகாட்டும் விதத்தில் முருகப்பெருமானின் அறுபடை வீடுகள், பற்றிய செய்தியை விளக்கியுரைப்பதாக இந்நூல் அமைந்துள்ளது.

**“அன்பும் அருளும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது”**

என்ற வள்ளுவர் வாக்கிற்கிணங்க அன்பினையும், அருளையும் பெற்று மனிதன் நலமுடன் வாழ்க்கை வாழ வேண்டும் என்றால் அதற்கு இறைவன் அருள் வேண்டும் என்பதைக் கூறும் விதமாக நக்கீரார் திருமுருகாற்றுப் படையைப் பாடியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**முடிவுரை :**

இவ்வாறாக ஆற்றுப்படை இலக்கியங்கள் பண்டைய தமிழர்களின் வாழ்வியலை படம்பிடித்து காட்டும் கண்ணாடியாக இருந்தன என்பதையும், சங்ககால மக்களின் வாழ்க்கை எவ்வாறு இந்தன என்ற சிறப்புக்களையும் இக்கட்டுரையின் வழி அறியலாம் என்பது கண்கூடு என கருத இடமுண்டு எனக் கருதலாம்.

**துணை நூற்கள் :**


- ச.வே. சுப்ரமணியம், சங்க இலக்கியம், பத்துப்பாட்டு மூலமும், உரையும் - 2010, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்.
- மா. இராசமாணிக்கணார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி - 2010, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
- சங்க இலக்கியப் பத்துப்பாட்டு - 2015, நியூ செஞ்சுரி புத்தக நிலையம்,சென்னை.
- கே.கே. பிள்ளை, தமிழக வரலாறும், பண்பாடும் - 2002, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
- தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரீகமும், பண்பாடும் - 2019, ஐந்தினைச் பதிப்பகம்

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 15. பாரதியாரின் பாலியல் சமத்துவச் சிந்தனைகள் இலங்கையின் தற்காலக் கல்வி மரபினுள் உட்புகுத்தப்பட்டுள்ள விதம் பற்றிய விவரணப் பகுப்பாய்வு

டி. விதுக்ஷனா & ரா. தக்ஷாயினி

கல்வி மற்றும் பிள்ளை நலத்துறை, கலை கலாசாரப் பீடம், கிழக்குப் பல்லைக்கழகம், இலங்கை.

DOI 10.5281/zenodo.10701400

**Abstract :**

Mahakavi Subrahmanya Bharatiyar, one of the most talked about poets in the Tamil world, has a multifaceted collection of poems. Their conceptions are not only applicable to that time but are also prophecies. Bharathi as a freedom fighter, a spiritualist, a modern poet and a social reformer has many works that have emerged in his many evolutions. Among them, the idea of gender equality, which is still talked about today, is an idea that affects both men and women across the ocean in all countries where both sexes live. The deeply conscious ideas found in Bharatiyar's works on gender equality are responsible for various changes. As a proof of that, some of the new programs introduced into the modern education tradition in Sri Lanka have mitigated the longing expressed in Bharatiyar's idea of gender equality. It is understood that this review article was created with the help of some works of Bharatiyar, which are the second level, based on the research method called narrative analysis to analyze and explain this.

## அறிமுகம்

மகாகவியின் பாலியல் சமத்துவச் சிந்தனைகளின் பிரதிபலிப்புக்கள் இலங்கையின் தற்காலக் கல்வி மரபினுள் புகுத்தப்பட்டதை ஆராய்ந்து விளக்கும் விதமாக அமைக்கப்பட்டுள்ள இவ்விவரண ஆய்வானது முக்கியமான இரண்டு சிறப்பு நோக்கங்களினை அடிப்படையாகக் கொண்டு ஒழுங்கமைக்கப்பட்டுள்ளது. இவ்விரண்டு சிறப்பு நோக்கங்களினை அடிப்படையாகக் கொண்டு கட்டியெழுப்பப்பட்ட ஆய்வு வினாக்களுக்கு விடையளிக்கும் வகையிலேயே இவ்விவரண ஆய்வு கட்டியமைக்கப்பட்டுள்ளது.

## சிறப்பு நோக்கங்கள்

1. பாரதியாரின் பாலியல் சமத்துவம் சார்ந்த சிந்தனைகளை இனங்கானல்.
2. பாரதியாரின் பாலியல் சமத்துவச் சிந்தனைகள் இலங்கையின் தற்காலக் கல்வி மரபினுள் காணப்படுமாற்றைக் கண்டறிதல்.

## ஆய்வு வினாக்கள்

1. பாரதியாரினால் வெளிப்படுத்தப்பட்ட பாலியல் சமத்துவம் சார்ந்த சிந்தனைகள் யாவை?
2. பாரதியாரின் பாலியல் சமத்துவச் சிந்தனைகள் இலங்கையின் தற்காலக் கல்வி மரபினுள் எவ்வாறு உள்வாங்கப்பட்டுள்ளன?

**ஆய்வு முறையியல்**

ஒவ்வொரு ஆய்வும் அவ்ஆய்வுக்கே உரிய முறையியலில் ஒழுங்கமைக்கப்பட்டிருக்கும். அதன்படி இவ்ஆய்வு ஒரு இலக்கியம் சார்ந்த ஆய்வாக இருப்பதனால் இங்கு விவரண பகுப்பாய்வை மையமாகக் கொண்ட முறைமையில் இக்கட்டுரை அமைக்கப்பட்டுள்ளது. இவ்ஆய்விற்காக இரண்டாம் நிலைத் தரவுகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. பாரதி நூல்களும் பாடபேத ஆராய்ச்சியும், பாரதியாரின் சமுதாயச் சிந்தனைகள், பாரதியம், பாரதியின் பெண் விடுதலை, பாரதியும் பெண் விடுதலையும் ஆகிய நூல்களும், சில ஆய்வுக் கட்டுரைகளின் துணைகொண்டு இவ்விபரண ஆய்வுக்கட்டுரை ஆய்வாளர்களால் அமைக்கப்பட்டுள்ளது.

**பகுப்பாய்வுகளும், கண்டறிதல்களும்**

தமிழ் இலக்கிய வரலாற்றில் பொண் எழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய காலமே 1882-ஆம் ஆண்டு மார்கழி மாதம் 11 ஆந்தி கதியாகும். சின்னச்சாமி ஐயருக்கும், இலட்சுமி அம்மாளுக்கும் தமிழ்நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள எட்டயபுரத்தில் பிறந்த சுப்பிரமணியன் எனும் இயற்பெயர் கொண்ட சுப்பிரமணிய பாரதியார் எனும் வீரத் தமிழனின் பிறப்பு தமிழுக்கும், எழுச்சிச் சிந்தனைக்கும், சுதந்திர வேட்கைக்கும் வித்திட்டதாக அமைந்தது. ஒரு கவிஞராக, எழுத்தாளனாக, சுதந்திரபோராளியாக, சமூகப் பற்றுடையவனாக அவர் வாழ்ந்த காலத்தில் வகித்த பாத்திரங்கள் எண்ணிலடங்காதவை. அன்றிலிருந்து 21 -ஆம் நூற்றாண்டான இன்று வரை அவரின் ஒவ்வொரு கவிதைகளும், பாடல்களும், உரைகளும் பொருள் மங்காது. வாசகர்களின் மனக் கண்ணைத் திறக்கும் திறவுகோலாய் விளங்குகின்றன. இவரின் சிந்தனைகளுள் முக்கியமான சிந்தனையாக விளங்குவது “பாலியல் சமத்துவச் சிந்தனையாகும்.” தொழில்நுட்பப் பெருக்கத்தால் உலகமே கிரமமாக மாறினாலும் பாலியல் அசமத்துவ தன்மை மறைமுகமாகவும், நேரடியாகவும் எங்கும், எதிலும் இருந்த வண்ணமே உள்ளது. இவரின் ஆண், பெண் சமத்துவச் சிந்தனையின் வழியான கருத்துக்களால் உருவாகிய கோட்பாடுகளும், அரசியல் முறைமைகளும், ஜனநாயகச் சிந்தனைகளும் மொழிகளைத் தாண்டி பல்வேறு நாடுகளில் புரட்சியை ஏற்படுத்தியதோடு பல நியமங்களை அந்நாடுகளில் நிலைத் தோங்கச் செய்துள்ளது. அவற்றுள் பாக்கு நீரிணையால் இந்தியாவிலிருந்து சற்றுப் பிரிந்துள்ள ஒருநாடாகவும், 18 சதவீதமான தமிழர்களைக் கொண்ட நாடாகவும் விளங்குகின்ற இலங்கையினது கல்வி நடைமுறைகளில் பாரதியாரின் முக்கியமான சில சிந்தனைகள் இன்றும் பின்பற்றப்பட்டு வருகின்றன. கல்வியில் ஆண், பெண் பேதம் இருக்கக் கூடாது என இவர் முழங்கிய முழக்கம் இன்று இலங்கைக் கல்வி முறையினுள் 1947-ஆம் ஆண்டிலிருந்து இன்று வரை “அனைவருக்கும் கல்வி”, “உள்ளடங்கல் கல்வி” எனப் பல பரிணாமங்களில் பிரதிபலித்துள்ளது.

**“பெண்ணுக்குஞானத்தைவைத்தான் - புவி**
**பேணிவளர்த்திடும் ஈசன்**

E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

……………………………………………………….

**பேதைமை யற்றிடுங் காணீர்."** (முரசு)

இக்கவிதையின்படி குடியேற்ற காலம் வரை உயர்வர்க்க ஆண்களுக்கு மட்டும் உரிதாக்கப்பட்ட கல்வி சுதந்திரத்திற்குப் பிற்பட்ட காலப் பகுதியில் அனைவருக்கும் கல்வியாகத் துளிர்த்தெழுந்தது. ஆணும், பெண்ணும் ஒரே வகுப்பில் கல்வி கற்றனர். இதற்காகக் கட்டாயக் கல்வி எனும் மரபானது இலங்கையில் அறிமுகப்படுத்தப்பட்டதோடு அதனை மேலும் வலுப்படுத்துவதற்காக இலவச மதிய உணவு, இலவச சீருடை, இலவச புத்தககங்கள், இலவசக் கல்வி மற்றும் சுரக்ஸாக் காப்புறுதி எனப் பல திட்டங்கள் அறிமுகப்படுத்தப்பட்டு நடைமுறைப்படுத்தப்பட்டு வருகின்றது. **"அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பெதற்கு"** என்றனர். தன் மன உணர்வுகளைக் கூட வெளிப்படுத்த முடியாமல் அடிமைகளாய், ஆதரவற்றவர்களாய் மகளிரின் வாழ்க்கை அமையவே இதனைக் கண்டு வெகுண்ட பாரதி **"பெண்களுக்கு விடுதலை இல்லையென்றால் பின்னர் இந்தநாடே விடுதலையடைய முடியாது"** என்று கூக்குரலிட்டார். பார்ப்பனருக்கும், பறையருக்கும், கறுப்பு மனுசருக்கும், வெள்ளை மனுசருக்கும் நியாயம் வேண்டும் என்று சொல்பவர்கள் பெண்களுக்கு ஆண்கள் நியாயம் செய்ய வேண்டியதை மறந்ததாக பாரதியார் கட்டுரைகளில் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறான பாரதியார் ஆண், பெண் சமத்துவச் சிந்தனைகளைச் சாதியத்தோடு தொடர்புபடுத்திப் பல கருத்துக்களைக் கூறியுள்ளார். இதன் பிரதிபலிப்பே இலங்கைக் கல்வி மரபில் சாதியம் பார்க்கும் முறை முற்றாக ஒழிந்துள்ளது. இலங்கையில் எவ்விடத்திலும் தரம் விண்ணப்பப் படிவத்திலிருந்து எத்தகு கல்விசார் விண்ணப்பங்களிலும் "சாதி" எனும் வெற்றிடம் முற்றாக அழித்தொழிக்கப்பட்டுள்ளது. இது பாரதி கண்ட கனவின் முக்கிய மைல்கல்லாகும். பாரதி காண விரும்பிய சமுதாயத்தில் கல்விக்கென்று தனித்த இடமுண்டு. பாப்பா வயதில் கல்விப் பணி தொடங்குகின்றது. ஓடி விளையாடு பாப்பா என்று தொடங்குபவர்,

**"காலை எழுந்தவுடன் படிப்பு பின்பு**
**கனிவு கொடுக்கும் நல்லபாட்டு**
**மாலை முழுவதும் விளையாட்டு என்று**
**வழக்கப்படுத்திக் கொள்ளு பாப்பா"**

என்று அக்குழந்தை எவற்றைச் செய்ய வேண்டும், எவற்றைச் செய்யக்கூடாது என்பதைப் பட்டியலிட்டுக் காட்டுகிறார். இதில் பாப்பா என எப்பாலியல் வேறுபாடும் கருதாது ஆண், பெண் இருபாலாருக்கும் கல்வியோடு, கலைகளும், விளையாட்டும் தேவை எனப் புலப்படுத்துகிறார். இதனையே இலங்கைப் பாடசாலைகளில் நடைமுறைப்படுத்துகின்றனர். ஒரு நாளில் 8 பாடவேளைகளில் பாடஅறிவு, விளையாட்டு போன்ற இணை கலைத்திட்டச் செயற்பாடுகளினூடாக மாணவர்களின் திறன் மற்றும் மனப்பாங்கு என்பற்றை விருத்தி அடைவிக்கும் பயிற்சி 13 வருட பாடசாலை வாழ்க்கையில் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

மேலும்,

“பட்டங்கள்ஆள்வதும்சட்டங்கள்செய்வதும்
பாரினில்பெண்கள்நடத்தவந்தோம்
எட்டுமறிவினில்ஆணுக்கிற்கேபெண்
இளைப்பில்லைகாணென்றுகும்மியடி”

(பெண்கள்விடுதலைக்கும்மி)

என ஆண், பெண் சமத்துவச் சிந்தனையைக் கவியாக வெளிப்படுத்தியுள்ளார் பாரதி. எல்லாத் துறைகளிலும் கனிசமாக உயர்ந்து நிற்கின்ற பெண்களின் பெருமையை அன்றே பாரதி கோடிட்டுக் காட்டிச் சென்றுள்ளார். இதன்படி, இலங்கை கல்வி மட்டுமன்றி அரசியல் வரலாற்றிலும் பெண்கள் படைத்த சாதனை பல உண்டு. இலங்கை நாட்டிற்கே ஐந்தாவது ஜனாதிபதியாக சந்திரிக்காகுமாரதுங்க 1994 இலிருந்து 2005 வரை கடமையாற்றினார். இது பெண்களின் தலைமைத்துவத்தைப் பறைசாற்றும் நிகழ்வாக அமைகின்றது.

ஆடவர்க்குஒப்பில்லைமாதர்
ஒருவன்தன்தராதரத்தைவிற்றிடலாம்
தானமெனவேறாறார்க்குதந்திடலாம்
முற்றும்விலங்குமுறைமையன்றிவேறில்லை

(பாஞ்சாலிசபதம்)

ஆணும்பெண்ணும்நிகரெனக்கொள்வதால்
அறிவிலோங்கிஇவ்வையம்தழைக்குமாம்
பூணுநல்லறத்தோடிங்குப்பெண்ணுருப்
போந்துநிற்பதுதாய்சிவசக்தியாம்

(புதுமைப்பெண்)

குறைவிலாதுமுழுநிகர்நம்மைக்
கொள்வராண்கஎனிலவரோடும்
சிறுமைதீரநந்தாய்த்திருநாட்டைத்
திரும்பவெல்வதில்சேர்ந்திங்குழைப்போம்

(பெண்விடுதலை)

இம்மூன்று பாடல்களிலும் பெண்களின் விடுதலை பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இதன் கருத்து ஆண்கள் பெண்களுக்கு எதிரிகள் என்றல்ல. இதனை விடுத்துப் பாலினம்சார் பாகுபாடு என்பது அழிக்கப்பட வேண்டிய ஒன்று என்பதே அவரது உள்ளக்கிடக்கையாக இருந்தது. இதனை இலங்கையில் கல்விமுறை நிதர்சனமாக்கியுள்ளது. கிராமத்திலுள்ள ஏழைப் பெண்களும்

E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

கற்க வேண்டும் என்றே “அண்மைய பாடசாலை சிறந்த பாடசாலை” எனும் எண்ணக்கரு கொண்டு வரப்பட்டது. இதன்படி அருகில் உள்ள எப்பாடசாலையும் நகரத்தைப் போன்ற அனைத்து வளங்களுடனும், வசதிகளுடனும் இருக்கும் என்பதே இத்திட்டத்தின் உட்பொருளாகும். மேலும் ஆண், பெண் சமத்துவத்தைத் தாண்டி கிராம, நகர வேறுபாடுகளைக் களைவதற்காக இலங்கைக் கல்வி அமைப்பில் பல புதிய திட்டங்கள் 2024-ஆம் ஆண்டு பரிந்துரைக்கப்பட உள்ள கல்விச்சீர்திருத்தத்தில் உட்சேர்க்கப்படவுள்ளது.. வேற்றுமைகள் எவ்வுருவிலும் கல்வியினுள் உட்புகுத்தப்படக் கூடாது என்பதே இலங்கைக் கல்வி மரபின் தற்போதைய தராக மந்திரமாக உள்ளது.

**முடிவுரை**

ஆகவே ஒட்டு மொத்தமாக நோக்கினால் பாரதி 19 நூற்றாண்டுக்குரிய கவிஞனாக இருப்பினும், அவரது சிந்தனைகளும், கருத்துக்களும் காலங்கள் கடந்தும், நாடுகள் கடந்தும் என்றும் பேசப்படும் ஒரு அழியாச் செல்வமாக உள்ளது என்றால் அதனை யாரும் மறுக்க முடியாது. இந்தியப் படைப்பாளியாகினும் இலங்கையில் பாலியல் சமத்துவக் கல்வி நிதர்சனமானதற்கு இவரின் ஆழ்ந்த சிந்தனைகளும், கருத்துக்களும் பெரும்தூண்டிகளாக அமைந்தன. இன்று வரை இலங்கைத் தமிழ்ப்பாடங்களில் பாரதியாரைப் புறந்தள்ளிய ஒரு பாடப்புத்தகங்களோ அல்லது பாரதியாரைப் புறந்தள்ளிய ஆய்வுகளை அடிப்படையாகக் கொண்ட பல்கலைக்கழக கற்கைகளோ இல்லை என்பதே நிதர்சனமான உண்மையாகும். மனிதன் இறக்கலாம், ஆனால் அவன் படைப்பிற்கு இறப்பில்லை என்பதற்கு முண்டாசுக்கவிஞர் ஒருவரே பெரிய எடுத்துக்காட்டு ஆகும்.

**உசாத்துணைநூல்கள்**

1. சித்திரலேகாமௌனகுரு. 1996. **பாரதியின் பெண்விடுதலை இலக்கியம் - கருத்து - காலம்**,டெக்னோபிரின்ட், களுபோவில, தெகிவளை, இலங்கை.
2. கைலாசபதி,க.1974.**பாரதி நூல்களும் பாடபேத ஆராய்ச்சியும்**, கலைப் பெருமன்ற வெளியீடு, தெல்விப்பழை, இலங்கை.
3. இளமதிசானகிராமன், க. 2004. **பாரதியின் சமுதாயச் சிந்தனைகள்**, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை.
4. மீரா, 2006. **பாரதியம்,** அகரம், தஞ்சாவூர்.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 16. ஆண்டாள் பாடல்களில் சமத்துவச் சிந்தனைகள்

முனைவர் செ. ஞானேஸ்வரன்,
உதவிப்பேராசிரியர், முதுகலைத்தமிழ்த்துறை,அரசுக்கல்லூரி
மூணாறு - 685612, கேரளா மாநிலம்

DOI 10.5281/zenodo.10701424

**Absract :**

Equality, liberty and fraternity are the principles that support everyone to protect and establish their rights in human society. All three of the rules for women work with a definition. In this context, Andal Nachiyar records elements for these in his works. Gender discrimination has existed in human society for ages. Everyone should have equality in speaking about their rights. In order to advance this, he registers to express his views in his works. Andal has a completely different mindset from the female personalities of ancient times. This article tries to explain the egalitarian ideas contained in his songs.

**Key Words : Andal – Devotional – Human Society**

## தொடக்கமாக

மனித சமூகத்தில் ஒவ்வொருவரும் தங்களுக்கான உரிமைகளைப் பாதுகாத்து நிலைநாட்டிக் கொள்வதற்கு உறுதுணையாக இருக்கும் கோட்பாடுகளே சமத்துவம் ,சுதந்திரம், சகோதரத்துவம் ஆகியனவாகும். பெண்களுக்கான விதிகளில் இம்மூன்றும் ஒரு வரையறையுடனே செயல்படுகின்றன. இச்சூழலில் ஆண்டாள் நாச்சியார் தம் படைப்புகளில் இவற்றிற்கான கூறுகளை பதிவு செய்கிறார். மனித சமூகத்தில் பாலின வேறுபாடு காலம் காலமாக இருந்து வருகிறது. ஒவ்வொருவரும் தங்களுக்கான உரிமைகளைப் பேசுவதில் சமத்துவம் இருத்தல் வேண்டும்.இதனை முன்னெடுக்கும் விதமாக தன் படைப்புகளில் தனக்கான கருத்துக்களை வெளிப்பட பதிவு செய்கிறார். பண்டைய கால பெண் ஆளுமைகளில் இருந்து முற்றிலும் மாறுபட்ட சிந்தனையுடையவராக ஆண்டாள் உள்ளார். இவரது பாடல்களில் இடம்பெற்றுள்ள சமத்துவச் சிந்தனைகளை இக்கட்டுரை விளக்க முற்படுகிறது.

## சமத்துவச் சிந்தனைகள்

சமத்துவம் என்பது மொழி இனம் வேறுபாடு இன்றி எல்லா நிலைகளிலும் சமமாக இருத்தல் என்பதாகும்."சமத்துவம் என்ற கொள்கை மனிதர் யாவரும் சமமான உரிமைகளை உடையவர்கள் என்ற உடன்பாட்டு வகையான பொருளையும் மனிதர்களுக்கு இடையே தனி சலுகைகள் இல்லை என்ற எதிர்மறையான நிலையையும் காட்டுகிறது (நா.பாலுசாமி, 1991:ப.405). மனித சமூகத்தில் ஆண், பெண் என்ற பாலின வேறுபாடு பரவலாக இருந்து வருகிறது. இவற்றில் ஆண் எதையும் தீர்மானிக்க நினைக்கின்றான். பெண் அதை பின்பற்றுபவளாக இருக்கிறாள். இந்த நிலையில் சமத்துவம் என்பது வேண்டும். பண்டையச்சமூகம் பெண்களுக்கென்று சில விதிகளை வகுத்து வைத்துள்ளது. இறைவனுக்கு தொண்டு செய்தல், மண உரிமை, காதல் உணர்வுகள் ஆகிய செயற்பாடுகளில் ஆண்களுக்கு நிகரான பங்களிப்புகள் பெண்களுக்கு இல்லை. இவற்றில் சமத்துவத்தை முன்னெடுத்தவர்

ஆண்டாள் நாச்சியார். பல்வேறு கூறுகளில் கற்புக் கோட்பாட்டை கூறி பெண்களை அடக்கி வைத்துள்ளனர். "காதல் என்ற இயற்கையான உணர்வு கூட ஆணின் வழியாக பெண்ணுக்குக் கடந்து செல்லும் தன்மையுடையது என்ற பொதுப்புத்தி நிலவியது. பெண் தனது உடலையும் மனத்தையும் பெண் என்ற நிலையில் அவள் எதிர்கொண்ட அனுபவங்களையும் கவிதையாக்கிட எழுதப்படாத தடைவிதிக்கப்பட்டிருந்தது. இத்தகைய சூழலில் 1990 களுக்குப் பின்னர் எழுதத் தொடங்கிய பெண் கவிஞர்கள் மாறுபட்ட புதிய மொழியில் கவிதைகள் படைக்கத் தொடங்கியுள்ளனர். இதுவரை தனக்குக் கீழ் அடங்கியொடுங்கி இருப்பவள் பெண் என்று நம்பிக் கொண்டிருந்த ஆணின் பொதுப்புத்தியில் சலனமேற்படத் தொடங்கியது"( நா.முருகேச பாண்டியன்,2014: பக்.xv-xvi) பிற்கால கவிஞர்கள் மத்தியில் இவ்வித போக்கு ஏற்பட வித்திட்டவர் ஆண்டாள். எல்லா நிலையிலும் ஆணுக்கு நிகரான சமத்துவம் பெண்ணுக்கும் வேண்டும் என்பதை தன்படைப்பு வழி உணர்த்தியவர். இதனை

**ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்**
**அறிவில் ஓங்கி வையம் தலைக்குமாம்**

என்று பாரதி முன்மொழிந்தார் (பாரதியார் ,2016: ப.172). ஆக சமத்துவம் என்பது எல்லா உயிர்களிடத்தும் பொதுநிலையில் வேண்டும். பெண்ணுக்கான சமத்துவத்தை உணர்வு ரீதியாக ஆண்டாள் எடுத்துரைத்துள்ளார்.

**பாலினச் சமத்துவம்**

ஆண், பெண் பாலினப் பாகுபாட்டில் சமூக ரீதியாக பொதுநிலையில் பேண வேண்டியதை தனித்துவ நிலையில் பேணி சில கட்டுப்பாடுகளை இச்சமூகம் உருவாக்கிவைத்துள்ளது. இதனை

**அச்சமும் நாணும் மடனும் முந்துறுத்த**
**நிச்சமும் பெண்பாற்கு உரிய என்ப**

(**தொல்.பொருள்.** 96)

என்னும் கூற்றின் வழி அறிய முடிகிறது.அச்சம்,நாணம்,மடமை கற்பு போன்ற பண்புகள் இரு பாலினத்தவர்க்கும் உரியது. ஆனால் இவை பெண்களுக்கு மட்டுமே உரித்தானது என்ற கற்பிதங்களை இச்சமூகம் பண்பாட்டு ரீதியாக அழுத்தமாக பதிவு செய்து வருகிறது. இது சமத்துவமற்ற நிலையாகும்."சமத்துவம் என்பது என்ன? சட்டங்களை உடைத்தெறிவது சமத்துவம் ஆகாது. சட்டங்களைத் தவிர வேறு எவ்விதக் கட்டுப்பாடும் இல்லாமல் இருப்பதே சமத்துவம்"என்பர் (உதயைமு.வீரையன், 2019:ப.50 ).ஆண் தன் உணர்வுகளை வெளிப்படக் கூற எந்தவித கட்டுப்பாடும் இல்லை என்பதை

**பெருமைஊரனும் ஆடூஉ மேன**

(**தொல்.பொருள்**.95 )

என்னும் கூற்று பதிவு செய்கிறது.பெண் தன் உணர்வுகளை கூற கட்டுப்பாடுகள் உண்டு. குறிப்பாக பண்டையத் தமிழ்ச் சமூகத்தில் பெண் தன் கூற்றை நிகழ்த்துவதற்கு பல்வேறு வரையறைகளை உருவாக்கி வைத்துள்ளனர். அதாவது

**காமத்திணையில்கண்ணின்றுவருஉம்**
**நாணும்மடனும்பெண்மையஆதலின்**
**குறிப்பினும்இடத்தினும்அல்லதுவேட்கை**
**நெறிப்படவாராஅவள் வயினான**

(**தொல்பொருள்**. 106)

என்ற கூற்றில் பெண் குறிப்பாலும் சூழ்நிலையாலும் உணர்த்துவாளே அன்றி நேரடியாகத் தன் விருப்பத்தைத் தெரிவிப்பது இல்லை. இது போன்ற வரையறைகளைஇச்சமூகம் பெண்கள்பால் கட்டமைத்துள்ளது."காதலைப் பற்றியகொண்டாட்டத்தினைமுன்னிறுத்தும் சங்கக் கவிதைகளில் பெண்கள் தங்களுடைய காதல்/ காமத்தை வெளிப்படையாகக் கூறக்கூடாது என்பது சங்கமரமாகும். இம்மரபினைப் பெரிதும் ஆண் படைப்பாளர்கள் பின்பற்றியிருக்கும் நிலையில் பெண் கவிஞர்கள் துணிச்சலுடன் மரபை மீறியுள்ளனர். இது ஒரு வகையில் ஆண் மேலாதிக்கத்தின் மீது விடப்பட்ட சவால். காதலையும் காமத்தையும் வெளிப்படையாகக் கூறியதுடன் அவ்வுணர்வுகளினால் வேதனையடையும் பெண்ணுறுப்புகளின் அவலத்தினையும் பெண் கவிஞர்கள் கவித்துவத்துடன் பதிவாக்கியுள்ளனர்" (நா முருகேசபாண்டியன், 2014: ப.x). ஆனால் ஆண்டாள் ஒரு பெண் தன் உணர்வுகளை கூற எந்த வித கட்டுப்பாடும் தேவையில்லை. ஆண்களைப் போல பெண்களும் தன் உணர்வுகளை வெளிப்படக் கூறலாம் என்ற சமத்துவச் சிந்தனைக்கு அடிகோலி அதை தன் படைப்புகளில் பிரதிபலிக்கச் செய்துள்ளார். இதனை

**அவரைப் பிராயம்தொடங்கிஎன்றும்**
**ஆதரித்துஎழுந்தஎன் தடமுலைகள்**
**துவரைப்பிரானுக்கேசங்கற்பித்துத்**
**தொழுதுவைத்தேன்**

(**நா.தி**.4)

என்னும் பாடலில் தன் உடல் அங்கங்கள் தான் விரும்புவர்கே என்று கூறுகிறார்.

**கொம்மைமுலைகள்இடர்தீரக்**
**கோவிந்தற்குஓர்குற்றேவல்**
**இம்மைப் பிறவிசெய்யாதே**
**இனிப்போய்ச்செய்யும்தவம்தான்என்**?

(**நா.தி**.132)

என்னும் பாடலில் என் கிளர்ந்த பருத்த மார்புகளின் குமைச்சல் தீரக் கண்ணனுடன் அழுந்திக் கிடக்கின்ற சிறிய செயலை இப்பிறவியில் செய்யாமல் இனிமேல் செய்யக்கூடிய தவம் தான் என்ன பெருமை உடையது என்று கூறுகிறார்.

**குற்ற அற்ற முலை தன்னைக்**
**குமரன் கோலப்பனைத் தோளோடு**
**அற்றகுற்றம்அவைதீர**
**அணையஅமுக்கிக்கட்டீரே**

(**நா.தி.**130)

என்னும் பாடலில் குற்றமற்ற என் மார்பு இளைஞனான அவனுடைய அழகிய தோள்களுடன் சேரத் தழுவுமாறு செய்து அற்றுத் தீர்ந்த குற்றம் தீரும்படி செய்யுங்கள் என்கிறார்.

**பொங்கியபாற்கடல்பள்ளிகொள்வானைப்**
**புணர்வதுஓர் ஆசையினால் என்**
**கொங்கை கிளர்ந்து குமைத்துக்குதுகலித்து**
**ஆவியைஆகுலம்செய்யும்**

( **நா.தி.**48 )

என்னும் பாடலில் தன் காதலனாகிய திருமாலை புணரவேண்டும் என்று குயிலிடம் பேசுவதாக தன் மன உணர்வுகளை பதிவு செய்கிறார். ஆணுக்கும் பெண்ணுக்கும் உணர்வு என்பது பொதுவானது. ஆனால் பெண்ணுக்கு அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்ற கற்பிதங்களால் அவ் உணர்வுகளை அடக்குகின்றனர்.ஆண்டாள் தனக்கான உணர்வுகளையும்அவ் உணர்வுகளால்ஏற்பட்ட அங்கங்களின் நிலைப்பாட்டையும் மிக எதார்த்தமாக பதிவு செய்கிறார்."பெண் கவிஞர்களின் பாடல்களில் இன்னொரு முக்கியமான அம்சம் பெண்ணுறுப்புகளாகிய முலை, அல்குல், கருவயிறு பற்றிய மனதடையற்ற விவரிப்புகள். ஆணின் காமம் ஓரிடத்தில் மட்டும் குவிந்திருக்கும் நிலையில் பெண்ணின் காமம், அவள் உடல் முழுக்கப் பரவி கிடக்கின்றது. பெண் காம உணர்வின் தோற்றுவாயாக முலையானது பெண் கவிஞர்களால் சித்தரிக்கப்பட்டுள்ளது" என்பர் (ந.முருகேச பாண்டியன்,2014:பக்.xii-xiii). இப்பதிவுகள் சங்ககாலச் சமூகம்(குறுந். 39) தொட்டு இருந்து வருகிறது. ஆனால் ஆண்டாளின் விவரிப்பினால்தான் பெண்ணுக்கான சமத்துவம் முன்னெடுக்கப்பட்டது. ஆண்டாளின் பாடல்களில் பெண் உணர்வுக்கான படிமலர்ச்சிப் போக்கை காணமுடிகிறது. பாலின சமத்துவத்தின் தேவையை இவரது பாடல்கள் எடுத்துரைக்கின்றன.

**பெண்ணுரிமைச் சமத்துவம்**

பண்டையச் சமூகம் தொட்டு இன்றுவரை திருமணம் என்ற நிலையில் ஆணிற்கு இருக்கும் சுதந்திரம் பெண்ணிற்கு இருப்பதில்லை. அதாவது பெண்ணின் விருப்பத்தை கேட்காமலே பல திருமணங்கள் முடிவு செய்யப்பட்டு விடுகின்றன. சங்ககாலச் சமூகத்தில் தனக்கான இணையைத் தேர்ந்தெடுக்கும் உரிமை பெண்ணுக்கு இருந்தாலும் அது பரவலாக பேசப்படவில்லை. ஆண்டாள் இதையும் வெளிப்பட மன உறுதியுடன் பேசுகிறார்.

**ஊனிடைஆழிசங்கு உத்தமர்க்கு என்று**
**உன்னித்து எழுந்த என் தடமுலைகள்**
**மானிடவர்க்கு என்று பேச்சுப்படில்**
**வாழ்கில்லேன் கண்டாய் மன்மதனே**

(**நா.தி**.5)

என்னும் பாடலில் என்னுடைய அங்கங்கள் நான் விரும்பும் இறைவனுக்கன்றி சாதாரண மானிடனுக்கு அன்று என்கிறார். அதாவது நான் இறைவனை மட்டுமே மணப்பேன் என்று உறுதிப்பட வெளிப்படையாக கூறுகிறார் .”புலனின்பங்கள் நம்மை நிர்ணயிக்க முடியாது அவற்றை நிர்ணயிக்கும் சக்திகளாக நாம் தான் இருக்க வேண்டும்”(ஞானி, 1998: ப.47). என்ற கருத்து ஆண்டாளின் பதிவை பறைசாற்றுகிறது..ஒரு பெண் தன் விருப்பத்தைத் தெரிவிக்க எந்தவித தடையும் இல்லை யாருக்கும் அஞ்சவும் தேவையில்லை. மணஉரிமையிலும் பெண்களுக்கானச் சமத்துவத்தை ஆண்டாள் பேசியுள்ளார். தன் காதலால் இறைவனும் மனிதனும் சமமென்ற தத்துவார்த்தத்தை நிகழ்த்திக்காட்டியுள்ளார்.

**பழுது இன்றி பாற்கடல்வண்ணனுக்கே**
**பணி செய்துவாழப் பெறாவிடில் நான்**
**அழுது அழுது அலமந்து அம்மா வழங்க**
**ஆற்றவும் அது உனக்கு உறைக்கும் கண்டாய்**

(**நா.தி**.9)

என்னும் பாடலில் திருமாலுக்கு பணி செய்து வாழப் பெறாவிட்டால் அழுது மனம் கலங்கி அம்மா என்று துடிக்க நேரிடும். இக்குறை உன்னையே சாரும் மன்மதா என்று கூறுகிறார். தன் திருமணம் எவ்வாறு நிகழ வேண்டும்

**வாரணம் ஆயிரம் சூழ வழங்**
**நாரணன்நம்பிநடக்கின்றான் என்று எதிர்**

(**நா.தி**.53)

**மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்று ஊத**
**முத்துடைத்தாமம் நிரைந்த தாழ்ந்த பந்தற்கீழ்**
**மைத்துனன் நம்பி மதுசூதன் வந்து என்னைக்**
**கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் தோழி நான்**

(**நா.தி**.58)

என்னும் பாடல்களில் எடுத்துரைத்துள்ளார். பெண்களுக்கு எல்லா நிலையிலும் சமத்துவம் இருத்தல் வேண்டும் என்பதை வலியுறுத்துகிறார்.

**முடிவாக**

தமிழ்ச் சமூகத்தில் காலம் காலமாக பெண்களுக்கு என்று சில அடக்குமுறைகள் இருந்து வருகின்றன. ஆண்களுக்கு நிகராக எல்லா நிலையிலும் சமத்துவம் என்பது இல்லை. பண்டைய தாய்வழிச் சமூகத்தில் தலைமைத்துவம் பெற்றிருந்த பெண் இன்று பொதுநிலையில் சமத்துவத்தை வேண்டி நிற்கும் அவலநிலைக்குதள்ளப்பட்டடுள்ளனர். ஆண்,பெண் ஆகிய பாலினத்துள் பெண் பண்பாட்டு ரீதியாக தன் உணர்வுகளை வெளிப்படக் கூற பல தடைகள் உள்ளன. இதனை ஆண்டாள் உடைத்தெறிந்து தங்களுக்கான உணர்வுகளையும் அவ் உணர்வுகளை தாங்கி நிற்கும் உடல்உறுப்புகளையும் மிக எதார்த்தமாக பதிவு செய்து சமத்துவத்தை வலியுறுத்தியுள்ளார். சங்ககாலப் பெண் கவிஞர்கள் இதற்கு தொடக்கமாக இருந்தாலும் ஆண்டாள் தன்னுடைய காலத்தில் பரவலாக்கி விட்டார். இப்போக்கு இன்று விருட்சமாக வளர்ந்து அழுத்தமான பதிவுகளைச் செய்து வருகின்றன என்பது குறிப்பிடத்தக்கதாகும்

**ஆய்வுத் துணை நூல்கள்**

1) நா.பாலுசாமி ((மு.ப. ), 1991, வாழ்வியற்களஞ்சியம் தொகுதி - 8, தஞ்சாவூர்: தமிழ் பல்கலைக்கழகம்.
2) நா.முருகேசபாண்டியன், 2014,அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவில், சென்னை: நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
3) உதயை மு.வீரையன் , ஆகஸ்ட் 2019,உங்கள் நூலகம்,சென்னை:நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
4) பாரதியார், 2016,பாரதியார் கவிதைகள்,சென்னை:நர்மதா பதிப்பகம்.
5) ஞானி, 1998, தமிழில் படைப்பிலக்கியங்கள், சென்னை: மணிவாசகர் பதிப்பகம்
6) நா. இளங்குமானார், 2018, தொல்காப்பியம், மதுரை: நான்காம் தமிழ்ச் சங்கம்,

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 17. உமா மகேஸ்வரியின் இருத்தலிய நோக்கில் தற்கொலை என்னும் சிறுகதை

**பு. வினோதா**

முனைவர் பட்ட ஆய்வாளர், இக்கால இலக்கியத்துறை, தமிழியற்புலம்,

மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை.

DOI 10.5281/zenodo.10701496

**Absract :**

Humans face various problems while living in the world. They feel that the world is absurd and meaningless. People are reduced to dehumanizing beings with even the smallest issues being magnified and life left. Due to this, they are afraid of living in this condition. It ends up being a life without knowing anything about the meaning of life and the purpose of life. Freedom from life is death. Umamakeshwari's short story Suicide is a story that elaborates on existential issues. Toward death those who live with him push away. They think about the misery of living a selfless life. It is said that even if people do not like to live such a life, they have no choice but to live such a life. The existential problem involved is known through this.

**Key words: meaning of life, misery, greed, order, culture, society, existential, suicide**

## முன்னுரை

பன்னெடுங்கால சமுதாய வரலாற்றில் பெண் என்பவள் அடங்கியத் தன்னிலையாக வளர்த்தெடுக்கப்பட்டுள்ளாள். சமூக அமைப்பில் பெண் தலைமையேற்று இருந்த உடைமையற்ற சமூகமான வேட்டைச் சமூகத்தில் தாய் என்பவள் உயிர்களை தன்னிலிருந்து படைத்தமையின் அவள் போற்றுதலுக்கு உரியவளாக இருந்தாள். தாய்வழிச் சமூகத்தில் ஆண் தலைமை என்பது இல்லை. தொழில்நுட்ப வளர்ச்சியின் ஊடாக பெண்கள் தம் உடல் அமைப்பின் காரணமாக குழந்தை பெற்றெடுத்தல் என்னும் வகையிலும் ஆணின் வலிமையைச் சார்ந்திருக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. பெண்கள் தமக்குத் தாமே ஆற்றிக் கொள்ளும் செயல்களிலிருந்து இது வேறுபட்டது. உடைமைகள் தோன்றிய பின்னணியில் வாரிசுரிமையே முதன்மையாகக் கருதப்பட்டது. குழந்தையின் பிறப்பு தந்தை வழியினதாக மாறிய போது, தந்தையை அடையாளம் காணும் பொருட்டு பெண்ணின் பாலியல் ஒடுக்கப்பட்டது. அத்தோடு அவளுடைய நடமாடும் வெளியும் சுருங்கியது. குடும்பத்திற்குள் தன்னை இருத்திக் கொள்ளும் நிலைக்கு ஆளானாள். குடும்ப அமைப்பில் தலைமை வகித்த ஆணே சமுதாயத்திற்கும் அரசிற்கும் தலைமை வகித்தான். பெண்களை மையமிட்ட சாதிய, இனக்குழு ஓர்மைகள் கூர்மையடைந்தன. பெண்ணால்தான் இனத்தைப் பெருக்க முடியும் என்பதால் பிற இனத்தாரின் படையெடுப்புகளில் பெண்கள் இலக்காயினர். ஆண்களின் கைகளுக்குள் தம்மை பாதுகாப்பாக உணரும் நிலை பெண்களுக்கு ஏற்பட்டது. இன்று வரையிலும் பெண் தன்னிலையானது ஆணைச் சார்ந்தே இயங்கும் வகையில் கட்டமைக்கப்பட்டுள்ளது. இந்நிலையில் பெண்ணியச் சிந்தனைகள் பெண்களின் தகவமைதல் சார்ந்த பல்வேறு செயல்பாடுகளின் மீது தாக்கம் செலுத்தியது. தனித்து இயங்கும் தன்னிலை என்னும் நிலையில் அவர்கள் செயல்படுவதற்கான உரிமையைக் கோரினர். பெண் உரிமைக் கோட்பாடுகள் பின்னர் பெண்ணியக் கோட்பாடுகளாக உருப்பெற்றன. அவற்றின் ஊடாக

இன்றைய தலைமுறையினரின் வாழ்வியல் முறைகள் மாற்றம் பெற்றிருக்கின்றன. பெண் தன்னை உணரவும் சமுதாயத்தை உணரவும் தலைப்பட்டுள்ளாள். அவளுடைய இருப்பின் மீது பிறர் ஆதிக்கம் செலுத்தும் நிலையினைக் கண்டடைந்துள்ளதால் தம் உரிமைக் குரலை எழுப்புகிறாள். இலக்கிய ஆக்கங்களிலும் பெண்களின் பாத்திரம் அனைத்துத் துறைகளிலும் ஆணுக்கு நிகரான வளர்ச்சியை எட்டியுள்ளமையைப் பறைசாற்றும் வகையில் அமைந்துள்ளன. அதே வேளையில் பெண்கள் தம் இருத்தலியச் சிக்கலுக்கு ஆளாகும் நிலையும் காணப்படுகிறது. வீட்டினுள்ளும் வெளியிலும் பாதுகாப்பாற்ற நிலையில் தம் இருப்பு பற்றி அச்சம் அவர்களைப் பீடித்திருக்கிறது. அதனால்தான் அவர்கள் இருத்தல் பற்றிய அச்சத்தை பல வகையில் வெளிப்படுத்துகிறார்கள். உமாமகேஸ்வரியின் சிறுகதையான தற்கொலை என்பது பெண்ணின் இருத்தல் பற்றிய அச்சத்தை வெளிப்படுத்தும் விதத்தை இக்கட்டுரை உணர்த்துகிறது.

**இருத்தலியம்**

பண்பாட்டு வாழ்வானது மனிதர்களை ஒடுக்கும் வகையிலானது. ஆனால் மனிதர்கள் அப்பண்பாட்டுத் தன்னிலையாக வாழ விரும்பாத எண்ணம் உடையவர்கள். மனிதர்கள் சுதந்திரமானவர்களாக இவ்வுலகில் பிறக்கிறார்கள். "மனிதன் எப்போதும் ஓர் அர்த்தமற்ற நிலையில் உலவுகிறான். வாழ்வின் அவன் பொறாமை, பேராசை, சுயநலம் ஆகியவற்றை எதிர்நோக்குகிறான். எனவெ அவன் ஓர் அர்த்தமற்ற நிலைக்குத் தள்ளப்படுகிறான்… வாழ்க்கை அர்த்தமற்றது. அபத்தமானது எனவே அதிலிருந்து மனிதன் தன்னை விடுவித்துக் கொள்ள வேண்டும் என்ற நோக்குடையவராக ஆல்பர் காம்யு இருந்தார்" (செ.சாரதாம்பாள், ஒப்பிலக்கியக் கோட்பாடுகளும் பிற துறை ஒப்பீடுகளும், ப.377) என்ற கூற்றில் ஆல்பர் காம்யு இருத்தலிய அச்சத்தினால் பீடிக்கப்பட்டவராக இருந்ததாகக் குறிப்பிடுகிறார் செ.சாரதாம்பாள்.

சமூகம் அவர்கள் பல்வேறு கட்டுத் தளைகளை சுமத்துகிறது. இதில் பெண்கள் மிகுதியான பண்பாட்டுவயப்படும் தன்னிலையாக உருவாக்கம் பெறுகின்றனர். அவர்களது உடல் சார்ந்தும் மனம் சார்ந்தும் அச்சத்துடன் வாழ பழக்கப்படுத்தப்படுகிறார்கள். குடும்பத்திலும் குடும்பத்திற்கு வெளியிலும் அவர்கள் பல்வேறு இன்னல்களை சந்திக்கிறார்கள் என்பதால் அச்சம் அவர்களது இயல்பாக இருக்க வேண்டுமென தொல்காப்பியம் முதலான இலக்கண நூல்கள் வலியுறுத்துகின்றன. அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்பது பெண்களின் உணர்வு நிலைகள் எனப்படுகின்றன. இருத்தலியம் என்னும் செல்வாக்குள்ள கோட்பாடு பிரான்சில் தோற்றம் பெற்றது. ஹைடெகர், லான்பால் சார்த்தர் போன்ற சிந்தனாவாதிகள் இருத்தலியத்தை வளர்த்தெடுத்தனர். இருத்தல் குறித்த அச்சத்தை நீட்ஷேவின் சிந்தனைகளிலிருந்தே உருவானதாகக் குறிப்பிடுகின்றனர். இருத்தலியம் பற்றிய சிந்தனை சுதந்தர வாழ்வினை அடிப்படையாகக் கொண்டது. மனிதர்கள் இவ்வுலகில் வாழ்வதற்கான வாய்ப்புகளை பெற்றிருக்கிறார்கள். அரசுகள், ராணுவம், போர்ப்படைக் கருவிகள் எனப் பலவும் மனிதர்களை வாழ்வின் மீது அச்சத்தை ஏற்படுத்துகின்றன. பஞ்சம், பசி, பட்டினி என்பன போன்ற இயற்கை சீற்றங்கள் மனிதர்களுக்கு இடர் தருகின்றன.

வாழ்வின் பொருள் என்ன என்பதைப் பற்றிய சிந்தனைக்கு உந்தித் தள்ளுகிறது. மனிதன் என்பவன் முழுமையானவன் அல்ல. "வாழ்நிலையின் அழைப்பு என்பது நிறுவனங்கள், யாந்திரிகமான வாழ்க்கை, பொருளியல் நாகரிகம், யாந்திரிக நடைமுறை, சுவையற்ற அன்றாட வாழ்க்கைக் கடன்களில் அடைப்பட்டிருத்தல் ஆகியவற்றிலிருந்து விடுபட்டுத் தன்னைக் கடந்த மேலான ஒன்றுடன் இணைவு கொள்வதாகும்" (எஸ்.வி.ராஜதுரை, இருத்தலியமும் மார்க்சியமும், ப.237) என்று ஹைடெக்கரின் கருத்தின் அடியாக இருத்தல் என்பது மனிதர்களுக்கு மட்டுமேயான வாழ்நிலை என்று குறிப்பிடுகிறார். பல்வேறு தளைகளிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளுதல்தான் இருத்தல் என்கிறார். வேதனை அல்லது அவலம் என்பதுதான் இருத்தலியின் ஒரு பண்பாக வெளிப்படுகிறது. துன்பியல் சார்ந்த நிகழ்வுகள் இருத்தல் அச்சத்தை வெளிப்படுத்துவனாக அமைகின்றன. எங்கே இறப்பு நிகழும் போது தமக்கு நேரும் என்கிற அச்சம் இயல்பாக எழுவதைக் இதற்குக் காரணமாகக் கூறலாம்.

### தமிழில் இருத்தலிய சிந்தனை வகைப்பட்ட இலக்கியங்கள்

இருத்தல் என்பது குறித்த வாழ்வு, சாவு போராட்டம் ஒவ்வொரு மனிதரிடமும் வெளிப்படுவது இயல்பாகும். இலக்கியங்களில் பெரும்பாலும் துன்பியல் தன்மை கொண்டவை இருத்தல் அவலத்தை வெளிப்படுத்துகின்றன. "அசோகமித்திரனின் தண்ணீரில் வரும் ஜமுனா தன் பிரச்சினைகளுக்கு மேற்கொள்ளும் தீர்வை இருத்தலியல் தேர்வு என்று கூறலாம். பாஸ்கரராவ் அவளை சினிமா ஆசை காட்டி அவள் வீட்டுச் சூழலிலிருந்து பிரித்து வந்தான். குடியிருக்கும் வீட்டில் தண்ணீர் பெரும் பிரச்சினை. மேலும் பல சிக்கல்கள் தற்கொலைக்குக் கூட முயற்சி செய்கிறாள். ஏன் இப்படி ஏழையாக இருக்கிறாய் அடுத்தவர் ஆதரவு உனக்கு ஏன் தேவை. உன்னிடமுள்ள பலத்தை நீ ஏன் கண்டு கொள்ளவில்லை. அடுத்தவரின் விமர்சனங்கள் உன்னை ஏன் பாதிக்க வேண்டும். இப்படி பல கேள்விகள் கேட்பதன் மூலம் ஜமுனாவுக்குள் ஒரு விழிப்பைத் தோற்றுவிக்கிறாள். அவள் வயிற்றில் மூன்று மாதம். பாஸ்கரராவுக்கு இனி இவள் இடம் தரமாட்டாள். தன் காலில் அவள் நிற்க முடியும். குழந்தையைப் பெற்று அவளால் வளர்க்கவும் முடியும். நம் சமூகச் சூழலில் ஆதரவற்று ஆண்களின் அழைப்புக்கு இடம் தர வேண்டிய அவலம் கடுமையானது. இதற்குள்ளிலிருந்து விடுதலை தேவை. ஜமுனாவின் தேர்வு குறைந்த அளவு ஒரு தற்காலிக விடுதலை" (ஞானி, ஞானி கட்டுரைகள் - V) என்ற கூற்றினால் தமிழ் இலக்கியங்கள் பலவற்றில் இருத்தல் அச்சத்திற்கு உள்ளாகும் பாத்திரங்கள் சித்திரக்கப்படுகின்றன என்பதற்கு ஒரு சோற்றுப் பதமாக ஞானியின் கூற்று அமைகிறது.

### உமாமகேஸ்வரியின் சிறுகதையில் இருத்தலியம்

தமிழின் படைப்பாளிகளில் சிறுகதைகளில் தனி முத்திரை பதிப்பவர்கள் சிலர் இருக்கின்றனர். அவர்களில் ஒருவராக கருதப்பட வேண்டியவர் உமாமகேஸ்வரி ஆவார். அவருடைய சிறுகதைகள் நளினமான உரைநடையைக் கொண்டவை. வாசிப்பின்பத்தை மிகுவிப்பவை. அச்சிறுகதைகள் பெண்களின் இருத்தலிய சிக்கல்களை, அவலங்களை, விட்டு

விடுதலையாகும் வேட்கையைக் கொண்டவையாக இருக்கின்றன. அவருடைய தற்கொலை என்னும் சிறுகதையில் தற்கொலை செய்து கொண்டு இறந்து போன பின் பாத்திரம் பேசுவதாக அமையும் கதைப் பாங்கு ஐரோப்பிய வகைப்பட்ட எழுத்தாகக் கொள்ளத்தக்கதாகும்.

தற்கொலை செய்து கொண்ட பின் நிகழும் பேரவலத்தினை ஒரு பெண் விவரிப்பது போல அமைகிறது கதையின் தொடக்கம். "இறுகிய சிமெண்ட் ரோட்டில் தலை மோதித் திறந்து கிடந்து. மூளை நசுங்கிய பழம் போலச் சிவந்தது. ரத்தம் கிளை கிளையாகப் படர்ந்து கொண்டிருந்தது. எண்ணங்கள், திசைகளெங்கும் தெறித்திருந்தன. உணர்வுகள், கனவுகள், பதிவுகள், துடிப்புகள் அத்தனையும் வெறும் சதைத் துணுக்குகளாக மூலைக்கொன்றாய் வழிந்து கிடக்க என்னை இத்தனை கோரமாய்ப் பார்ப்பது குமட்டுகிறது. இந்தச் சிதறிய உடல்தான் நானா? உடலழிவுதான் மரணமா? இறப்புன்னா The body Cease to Exist அவ்வவுளதான்மா பிறகு ஆன்மா கீன்மாவெல்லாம் ஒண்ணும் கிடையாது" (உமாமகேஸ்வரி கதைகள், ப.139) என்ற கூற்று இருத்தலின் சிக்கலை படம் பிடித்து காட்டுகிறது. உலகிலிருந்து இல்லாமல் போவதுதான் இருத்தலின்மை அதாவது மரணம் என்று சுருக்கமாக அறிவியல் முறையில் கூறுவதாக அமைகிறது. ஓர் உடல் எரியூட்டப்படுவதோடு இருத்தல் இன்மையாகி விடுகிறது. பின்னர் அவ்வுடல் பற்றிய சிந்தனைகள் முழுவதும் மறைந்து போகக் கூடும். இத்தகைய அவலமான நிலையை உடையதுதான் வாழ்வா என்று கேள்வி கேட்கிறார். தற்கொலைக்கு போதுமான சூழல்கள் இருந்தால் இவ்வுலக வாழ்விலிருந்து விடுபடலாம். "கால் கட்டை விரல் மேல் நோக்கிநிற்க மரண பயத்தோடு மற்ற நான்கு விரல்கள் மாடி சுவர்த் திட்டின் விளிம்பை வளைந்து இறுகப் பற்றியிருப்பிது வேடிக்கையாக இருக்கிறது. மனம் விசித்திரமான கூர்மையோடு நான் இறக்கப் போகும் கணத்தை எழுதிப் பார்க்கிறது. ஒரு எம்பல், ஒரு குதிப்பு போதும் நான் இருளில் மினுங்கும் மின்சாரக் கம்பிகளில் இடறிச் சிக்கி வீழ்ந்து தீப்பற்றி சொக்கப் பனையாகக் கொழுந்து விட்டு எரிந்து கருகி" (உமாமகேஸ்வரி கதைகள், ப.139) என்று மரணத்தின் மீது அச்சம் கொள்ளும் மனதினை திடப்படுத்தி இறப்பதற்கான உறுதியைப் பெறும் விதம் பற்றிக் கூறுகிறார்.

இக்கதையின் பாத்திரம் ஏன் இறப்பைத் தழுவ விரும்புகிறது. குடும்ப அமைப்பில் ஆணின் அதிகாரத்திற்குள் தன்னால் சுதந்திரமான மனநிலையில் வாழ முடியாது என்னும் நிலை. கணவனிடம் கூறுகிறாள் "கதவைச் சாத்தாமல் கழிப்பறைக்குள் நின்றிருந்த இவரிடம் சொன்னேன் ப்ளீஸ் நல்லாத் தண்ணி ஊத்திட்டு வாங்கங்க ரொம்பக் கறையாயிடுது பிறகு நான்தான் தேய்ச்சுக் கழுவனும்" "எதிர்பாராமல் உடனடியாக அறைக்குள் ஓடி வந்தவர் என் தலைமுடியைக் கொத்தாகப் பிடித்து முகத்தை ஒடித்து நிமிர்த்தினார். எனக்குக் கோளாறு சொல்லித் தர்றியா ஒஞ்சோலிக் கழுதையப் பாரு, நான் என்னங்க பெரிசா சொல்லிட்டேன், எதுவும் பேசாத சச்சரவில் மிரண்டு விழித்தன குழந்தைகள். சின்னவனின் தலையில் உள்ளங்கையை வைத்துச் சத்தியம் செய்தார். இவன் மேல் சத்தியமா நீ இன்னியிலிருந்து என்னோடு பேசக் கூடாது பேசினா இவன் சாகட்டும். சாகட்டும் சாகட்டும் சாகட்டும் என் காதுகள் இரைச்சலில் அடைத்தன. என் பிள்ளை வருடக்கணக்காய்த் தவமாய்த் தவமிருந்து

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

பெற்ற என் மகன் அவனைப் போய் இப்படி கண்ணீர் சுரந்தது கத்தினேன். இப்ப நீங்க தம்பி சாகட்டும்னு சொன்னதை வாபஸ் வாங்றீங்களா இல்லையா, முடியாது அப்ப நான் சாகிறேன். என்னையறியாது. அனிச்சையாக எங்கிருந்தோ வந்து விழுந்தன வார்த்தைகள் உடனே அவர் பதறுவார் தன் வார்த்தைகளை மறுத்து அழிப்பார் என்கிற மறை எண்ணத்திலிருந்து பிறந்தன வெறும் சொற்கள். போ செத்துத் தொலை அசட்டையாகத் திரும்பி படுத்துக் கொண்டார். செய்வதறியாது. திடுக்கிட்டு நின்றேன். சுருண்டு தூங்கி விட்ட குழந்தைகளைப் பார்த்தேன். விறுவிறுவென்று மாடிப்படியேறினேன்" (உமாமகேஸ்வரி கதைகள், ப.141) என்று கணவன் மனைவி இருவருள் எழும் சிறு பிரச்சினைக்கு மரணங்களை விலை வைக்கும் குடும்பச் சூழல் பற்றிக் குறிப்பிடுகிறார். தன் மகன் மேல் சத்தியம் செய்ததால் அவன் இறந்து விடக் கூடும் என்கிற அச்சம் கொண்டு அவ்வார்த்தைகளை திரும்பப் பெறக் கூறுகிறாள். ஆனால் அவனோ மரணம் சம்பவித்தல் பற்றிய அச்சமின்றி அசட்டையாக இருக்கிறான். ஆணின் மனம் பெண்ணின் மீது கவியும் போது அவளது மரணத்தையே விலையாக்குகிறது. அவள் தான் இறந்து போவதாகக் கூறுகிறாள். அவன் அதைச் செய் என்கிறான். அவளோ தன்னிலை அழிந்து விடுகிறாள். தான் யாருமற்றவளாகி விட்டோம் என்கிற பதைபதைப்புக்கு உள்ளாகிறாள்.

"ஒவ்வொரு படியும் இடறலும் வழுக்கலுமாக பாறையாகி விட்டது. பற்றிக் கொள்ள ஏதுமற்றவளாக நான் அவற்றல் ஏற வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறேன். எல்லாக் கட்டாயங்களையும் நிர்ப்பந்தங்களையும் கழுவி விட வேண்டும். கடந்தது அனைத்தையும் மறுபடி முதலிலிருந்து தொடங்கி நிகழ்த்த முடியுமென்றால் எவ்வளவு நல்லதாக இருக்கும். உடலையே எரித்து விடுவதாக மனம் கனம் கூடியிருந்தது. கதவைத் திறந்ததும் காற்றின் ஓங்காரம் புதிய லயங்களோடு அசையும் மரங்கள் சின்னக் குழந்தைகள் போல் விழித்திருக்கிற நட்சத்திரங்கள், ஒவ்வொரு நாளும் ஒரு அடி நகர்ந்து தள்ளிப் போய்விட்டது போல் பிரமையேற்படுத்துகிற மலைகள் எல்லாவற்றையும் அற்பமாக்கி விடுகிற அழித்துப் போக்கி விடுகிற ஆகாயம். சிறிது சிறிதாய்ச் சொட்டி சொட்டி முற்றிலும் உலகை முடித் ததும்புகிற அதன் கருநீலம்..." (உமாமகேஸ்வரி கதைகள், பக், 141-142) என்று குறிப்பிடுவதன் மூலம் அவலச் சுவை மிகுந்த தன் வாழ்வைப் பற்றி எண்ணுகிறாள். இறப்பினை தழுவும் எண்ணம் இருந்தாலும் இவ்வுலகம் எத்தனை விரிந்தது. அதில் தன்னுடைய வாழ்வை அழித்து அழித்து முதலிருந்து தொடங்கினால் நன்றாக இருக்கும் என்ற எண்ணச் சேர்க்கையை வெளிப்படுத்தாமல் இருக்க முடியவில்லை. அவ்வளவு எளிதில் மரணம் தன்னை தின்று விடக் கூடாதென்னும் நிலையிலேயே இருக்கிறாள். "அடுத்தடுத்துச் சுழலும் யோசனைகள் என் மரண முயற்சியின் பித்துற்ற கணத்தை ஒத்தி வைக்கின்றன. இறுதியாக மிக இனிமையான பிடித்தமான அந்தரங்கமான ஒன்றை இமைகளுக்குள் நிறுத்தி கண்களை இறுக மூடிக் கொண்டு குதித்து விட வேண்டியதுதான். ரொம்பவும் நல்லதான ஒன்று. பிள்ளைப் பருவத்தில் நான் நேசித்திருக்கக் கூடிய கொஞ்சல், சிறுமியாயிருந்த போது என்னை நெகிழ வைத்த தீண்டல், வயல் வரப்பில் பூத்த பொன்னிற மலரை முகர்ந்த கணம், ரத்தப் பிசுபிசுப்போடு என் முதல் குழந்தையின் பிஞ்சு உடலை பிரசவ அறையில் உணர்ந்த

நேரம் மணமேடையில் நடுங்கிய என் கைவிரலை நசுக்கிய இவர் விரல். பாதத்தில் மோதிச் சிலிர்ப்பூட்டிக் கூச்சலிட வைக்கும் கடலலை. இது போன்ற எதுவோ ஒன்றை நினைவில் தேடி வெறுமையில் மோதி நின்றேன்." (உமாமகேஸ்வரி கதைகள், ப.144) என்று வாழ்வின் உன்னதத் தருணங்களைக் கடந்து விட்டு மரணத்தை தழுவ இயலாத நிலை பற்றி எழுதுகிறார். ஒவ்வொருவர் மனதிலும் மரணம் ஏற்படுத்தும் அச்சம் இத்தகையதாகவே இருக்கக் கூடும். அதனால்தான் மரணம் எல்லோரையும் தழுவக் கூடும் என்ற நிலையிலும் மரணத்தை விரும்பாத நிலை ஏற்படுகிறது.

தற்கொலை பற்றிய விவாதத்தையும் அந்தக் கணத்தில் நிகழ்த்துகிறாள் கதையின் பெண். "தற்கொலை என்பது மிகப் பெரிய கோழைத்தனம் எனும் கருத்துத்தான் எவ்வளவு மேலோட்டமானது. என்னும் இருக்கும் அத்தனை தைரியத்தையும் வைராக்கியத்தையும் மொத்தமாகத் திரட்டினாலும் ஒரு எம்பலுக்கும் குதிப்புக்கும் திராணியின்றி நரம்புகள் சுருண்டு நடுங்குகின்றன. தேவை ஒரு நொடி பிளந்த ஒரே ஒரு நொடிதான். என்னை இந்த இருட் பள்ளத்தாக்கிற்குள் எறிந்த விடலாம்." (உமாமகேஸ்வரி கதைகள், ப.144) என்ற கூற்றிலிருந்து தற்கொலை செய்து கொள்வது அவ்வளவு எளிதான காரியமன்று என்பதை உணர்த்துகிறது. தற்கொலைதான் வாழ்வின் தீர்வெனக் கருதும் மனநிலையானது பின்பு அதை துயரமாக வடித்தெடுக்கிறது.

மரண அவஸ்தையை விட்டு மனம் மீண்டும் வாழத் துடிக்கிறது. ஆனால் அந்த வாழ்வு தன் விருப்பப்படியான வாழ்வன்று மாறாக அது அவல வாழ்வாகவே இருக்கிறது. மரணத்தை விரும்பியவள் தன் மகளின் மழலைக் குரல் அழைப்பிற்கு அவ்வெண்ணத்தை விட்டு நீங்குகிறாள் " அம்மா வா அந்த உத்தரவுதான் எவ்வளவு திடமாகத் தூர்ந்த நிலைகளை நேர்ப்படுத்த முயற்சிக்கிறது. பூப்போட்ட சிறு பாவாடை நள்ளிரவுக்காற்றில் லேசாகப் படபடக்கிறது. அரை உறக்கக் கண்களில் தீவிரமான கோபம் கூரிடுகிறது. கலைந்த குட்டைக் கூந்தலிழைகள் மிக நூதனமானவொரு சித்திரத்தை மங்கிய இருளில் தீட்டித் துடிக்கின்றன.

நாள் வர்ரேன் நீ போய்த் தூங்கு. என்று பனி நனைந்த தரையில் கண்ணீர்க் கன்னத்தை இன்னும் பதித்துக் கொண்டேன். மறுபடி படியிறங்கிப் போக வேண்டும். மீண்டும் தாழ்ந்துதான், வாழ்ந்துதான் ஆக வேண்டும். பேதங்களும் வேதனைகளும், புழுக்கங்களும், பூசல்களும் குமுறுகிற அறை அதற்குள் மீண்டும் என்னைத் துறுத்தல்களோடு திணித்துக் கொண்டு நினைப்பே அருவருப்பாக இருக்கிறது" (உமாமகேஸ்வரி கதைகள், ப.147) என்று வாழ்வின் அவலத்தைப் பற்றியும் தன் விடுதலை சாத்தியமற்ற நிலை பற்றியும் இவ்விருத்தல் மரண அவஸ்தையாக இருக்கப் போகிறது என்பதைப் பற்றியும் நினைத்துக் கொண்டே இறங்கி வருகிறாள்.

இக்கதை இருத்தலிய சிக்கலை மனதிற் கொண்டு எழுதப்பட்டதாக அமைகிறது. ஒரு பெண் தன் விடுதலையை எண்ணி ஏங்கும் நிலைதான் காணப்படுகிறது. ஆணியச் சமூகக் கட்டுக்குள் தன் இருத்தலை வைத்துக் கொண்டு ஒடுக்குமுறைக்கும், பலப்பிரயோகத்திற்கும் ஆளாக நேரிடும் வாழ்வையே வாழ நேரிடுகிறது என்கிற அவலத் தன்மை கொண்டதாக

இருக்கிறது. மரணம் அது பற்றிய சிந்தனைகள் என முழுவதும் பயணிக்கிறது. பிறருடைய இருத்தலை மனதிற் கொண்டு தன் இருத்தல் நிகழ வேண்டும் என குடும்பத்தில் ஒரு பெண் தனக்கு விதிக்கப்பட்ட வாழ்வை எப்படியாயினும் வாழ வேண்டும் என்னும் நிலைக்குத் தள்ளப்படுவதாக அமைகிறது.

**முடிவுரை**

இருத்தல் என்பது இன்பமான ஒன்றாக இல்லாத போது அவலம் நிறைந்ததாக எப்போதும் இருக்கிறது. உலகியல் வாழ்விலிருந்து விடுதலை பெறுவதை ஆன்மிகச் சிந்தனைகள் மரணமெய்தி வீடுபேறு அடைவதாகக் கூறும். ஆனால் இந்த உலகில் வாழ்வதற்கு விதிக்கப்பட்ட மனிதன் அதிலிருந்து தன்னை பிரித்துக் கொள்ள முடியாது. வாழ்வு பல்வேறு அவலங்களைக் கொண்டதாகத்தான் இருக்கிறது. எந்தக் கண்ணியிலிருந்தும் விடுபட்டு சுதந்தர வாழ்வை மேற்கொள்ள முடியாது என்பதாக உமாமகேஸ்வரியின் கதை உணர்த்துகிறது. குடும்ப வாழ்விற்கு தன்னை ஒப்புக் கொடுத்த பின் அதன் அத்தனை ஒடுக்குமுறைகளையும் எதிர்கொள்ளத்தான் வேண்டும். வேர்களற்று வாழ நேரிடும் நிலையிலம் தன் இருத்தலை எவ்வாறேனும் வைத்துக் கொள்ள நிர்பந்திக்கப்படுபவளாகப் பெண் இருக்கிறாள். இதையே தற்கொலை என்னும் கதை உணர்த்துகிறது.

**துணை நூற்பட்டியல்**

1. உமாமகேஸ்வரி, உமாமகேஸ்வரி கதைகள், வம்சி புக்ஸ், சென்னை,
2. ஞானி, ஞானி கட்டுரைகள் தமிழ்த் திறனாய்வு, காவ்யா வெளியீடு, சென்னை, 2010.
3. எஸ்.வி.ராஜதுரை, இருத்தலியமும் மார்க்சியமும், விடியல், கோயம்புத்தூர், 2011
4. செ.சாரதாம்பாள், ஒப்பிலக்கியக் கோட்பாடுகளும் பிறதுறை ஒப்பீடுகளும், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 2021.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 18. கலைஞரும் சமத்துவமும்

முனைவர் ப.தேவராஜ்,
இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை,
உலகநாத நாராயணசாமி அரசினா்கல்லூரி (தன்னாட்சி),பொன்னேரி-601204.

DOI 10.5281/zenodo.10701500

**Abstract**

Muthuvel Karunanidhi was the great leader of Tamil Nadu. He before entering politics, he worked in the Tamil film industry as a screenwriter. He has also Tamil literature,having writing stories,plays,Novels and a multiple-volume memoir.He was popularly refered to as kalaignar in Tamil Nadu by his supporters. Dr.M.Karunanidhi started his political at the age of 14.He was the followers of Periyar's School of thlghts,Rationalism thought of Liberty, Freternity and Equlity. So Heimplentedthe Doctrine of Equlity.In 1970, He introduced People of all catses to become priests in public temples. In 1989, Propery rights of womens. A special quota of 3 percent reservations for Arunthathiyar. In 1998, Periyar ninaivu samathuvapurm. This Article focused about these things.

**Keywords :** Rationalism, Equality, Rights for successor's womens, Samathuvapuram (Equality Village), Atheism, Doctrin, Meaning of chakkli, Pagadai,

## முன்னுரை

கலைஞர் என்றாலே முத்தமிழறிஞர் கலைஞர் மு.கருணாநிதிஅவா்களைத்தான் குறிக்கும்.முத்தமிழறிஞர் என எல்லோராலும் அழைக்கப்பட்ட டாக்டர் கலைஞர் மு.உருணாநிதி அவா்கள் (03.06.1924-07.08.2018)சமூகப்புரட்சியாளர், அரசியல்வாதி, இதழாளர், எழுத்தாளர், கவிஞர்,நாவல் ஆசிரியர், சிறுகதைபடைப்பாளர், திரைப்படக்கதை-வசனஆசிரியர்எனப் பன்முகத்தன்மைகொண்டு விளங்கியவா் கடந்த நூற்றாண்டில் மட்டுமல்ல இந்த நூற்றாண்டிலும் இந்திய அளவில் தவிர்க்க முடியாத அரசியல் தலைவராகவும்விளங்கியவா்ஐந்து முறை தமிழ் நாட்டின் முதலமைச்சராக இருந்தவர்.சமத்துவம் என்ற சொல்லிற்கு இலக்கணமாகத் திகழ்ந்தவா்சாதியின் பெயரால், மதத்தின் பெயரால் பிரிந்து கிடந்த தமிழர்களைச் சமத்துவம் என்ற ஒற்றைச்சொல்லின்கீழ் கொண்டு வந்தவா்சமத்துவம் என்றாலே கலைஞர்.கலைஞர் என்றாலே சமத்துவம்எனக் கூறும் அளவிற்கு அவரின் அரசியல் வாழ்க்கை அமைந்திருக்கிறது.ஆகவேகலைஞர் சமத்துவத்தைக் எவ்வாறு கடைபிடித்தார், எவ்வாறு செயல்படுத்திக்காட்டினார் என்பதை அறியும்வண்ணம் கலைஞரும் சமத்துவமும் என்ற தலைப்பில் இக்கட்டுரை ஆய்கிறது.

## பகுத்தறிவின் பாதையில் கலைஞர்

பகுத்தறிவு என்பது "மக்கள் தங்களது சடங்குகள், பழக்கவழக்கங்கள், சம்பிரதாயங்களைக் கடைபிடிக்கும்போது, அது ஏன்? எதற்கு என்று கேள்வி கேட்டுத் தெளிய வேண்டும்"[1] அதுவே பகுத்தறிவு என்கிறார் பெரியார். இளையபருவம் முதல் இறக்கும் வரையில் பகுத்தறிவின் பாதையில் பயணித்தவா்தந்தை பெரியார். பகுத்தறிவும் நாத்திகமும் ஒரே பாதையில் பயணிக்கும் இரட்டை மாட்டு வண்டி என்கிறார்.நாத்திகமும் பகுத்தறிவும் எதற்குப் பயன்படுகின்றனஎன்பதை அவரே சொல்கிறார், "சாதி ஒழிய வேண்டும், மனிதற்குள்

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

இருக்கும் மடைமை, மூடநம்பிக்கை, துவேசம், பகைமை, இழிவு, தரித்திரம், வேற்றுமை இவைகளைத் தகர்க்கக்கூடிய ஒரு விசையாக இருக்கின்றன. இதற்காகவே பகுத்தறிவும் நாத்திகமும் பயன்படுகின்றன" எனத் தந்தை பெரியார் கூறுகிறார்."[2]

முத்தமிழறிஞர் கலைஞர் மு.கருணாநிதி அவர்களும் தன்னை ஒரு நாத்திகன் என்று சொல்லிக்கொள்வதில் பெருமைப்படுகிறவர் சிறுவனாக இருந்த போது "வாயெல்லாம் வெத்தல பாக்கு, மந்திரம் ஒரு கேடா?" எனக் கேட்டவர் தந்தை பெரியாரின் பாதையில், அறிஞர்அண்ணாவின் வழியில் பகுத்தறிவையும், நாத்திகத்தையும் பின்பற்றி இறுதிவரை பயணித்தவர் முத்தமிழறிஞர் கலைஞர்.சாதியற்ற, சமயமற்ற சமூதாயத்தை உறுவாக்க வேண்டுமென்றால் சமத்துவம் என்ற ஒன்றைக் கட்டமைக்க வேண்டும் எனக் கூறியதோடு, அதனை நடைமுறைப்படுத்திக்காட்டியவர் கலைஞர்.

**கலைஞரும் சமத்துவமும்**

தன்னலமற்ற கடின உழைப்பும், துயரங்களும், துன்பங்களும், அவமதிப்புகளும் ஆயிரம் வந்துற்ற போதும் அவற்றால் தளராத மன உறுதி, அறிவின் ஆற்றல் ஆகியவற்றின் மூலம் மனிதன் எந்த அளவிற்கு உயரமுடியும் என்பதற்கு எடுத்துக்காட்டு கலைஞரின் வாழ்க்கை அமைந்திருக்கிறது.கலைஞர் பின்பற்றிய கொள்கைகளில் சமத்துவம் ஒரு முக்கியத்துவம் பெற்றிருக்கிறது.

சமத்துவம் என்றால் "ஒரு நாட்டின் ஜனநாயகத்தின் முக்கிய கூறாக இருப்பது. ஒரு நாட்டில் வாழும் ஒவ்வொரு குடிமகனும் அவர்களின் பிறப்பு, ஜாதி,பாலினம், மதம் போன்றவற்றிற்கு அப்பாற்பட்டு அவற்றையெல்லாம் பொருட்படுத்தாமல் சம எண்ணிக்கையிலான வாய்ப்புகளைப் பெற்றுத்தருவது"[3]எனத் தந்தை பெரியார் கூறுகிறார்.

டாக்டர் அம்பேத்கர்"மதம்,இனம்,சாதி,பால் மற்றும் பிறப்பிடம் இவற்றின் அடிப்படையில் எவர் ஒருவரும் மற்றவர் மீது பாகுபாடு காட்டக்கூடாது.குறிப்பாக அரசு இவற்றின் அடிப்படையில் பாகுபாடு பார்க்கக்கூடாது.எவரொருவரும் இதனை மீறுவது இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின்படி பெருங்குற்றமாகும்"[4]என இந்திய அரசியல் அமைப்பின் ஆர்ட்டிகள்-15-னைச் சுட்டிக்காட்டிக் கூறுகிறார்.மேலும் "இந்திய நாட்டில் பிறந்த மக்கள் அனைவருக்கும் சமத்துவமும் சமநீதியும், மனித உரிமைகளும் கிடைக்க வேண்டும்.அதுவே உண்மையான சுதந்திரம்"[5] என்று சொன்னவர் அண்ணல் அம்பேத்கர்

தலைவர் கலைஞர் அவர்கள் "சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் (Liberty, Equality, Fraternity) ஆகிய மூன்று கூறுகளே மனித இனத்திற்குத் தேவையானது"[6] எனக் கூறுகிறார். எனவே சமத்துவம் என்பது நமது நாட்டின் இறையாண்மையின் ஒரு கூறாக முக்கியத்துவம் பெற்றிருக்கிறது எனக் கூறலாம்.

ஆனால் இந்திய நாட்டு மக்கள் தங்களின் மரபு, கலாச்சாரம், பண்பாடு என்ற பெயரால் சாதிய வேற்றுமைகளையும், சமயப்பிணக்குகளையும் தங்களின் மனதில் வைத்திருப்பதோடு, அதனைப் பொது வெளியில் பிறருக்கும் அந்த உணர்வைப் புகுத்தி அவர்களைச்சாதியின்

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

பெயரால், சமயத்தின் பெயரால் பிரித்து விடுகின்றனர்இதனால் காலங்காலமாக தமிழ் நாட்டில் பிரிவினைகள் தீராமல் தொடர்ந்து இருந்துகொண்டே வருகிறது. "சாதி வித்தியாசம் என்பது கற்பிக்கப்பட்டதே ஒழிய வேறில்லை.வலுத்தவன் இளைத்தவனை அடக்கி வைப்பது என்பதற்குச் சாட்சி, சாதி வித்தியாசமே ஆகும்.இது இன்னும் நிலைத்திருக்கிறது என்றால், இந்த நாடு மிருகப்பிராயத்திலிருந்து மனிதப் பிராயத்திற்கு இன்னமும் வரவில்லை என்பதைத் தெளிவாகக் காட்டுகிறது.சாதி ஒழிந்த சமுதாயத்தை நான் உள்ளபோதே காண விழைகிறேன்"[7] என்றார் பெரியார்.இந்தச் சாதிய வேற்றுமைகளுக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும் என்பதற்காகத் தந்தை பெரியார், ஊர் ஊராகச் சென்று சமத்துவத்தின் தேவையை, சமத்துவத்தின் முக்கியத்துவத்தை எடுத்துரைத்தார்.

"நிலையம் நினைப்பும்" என்ற புத்தகத்தில் அறிஞர் அண்ணா, இந்த ஏற்றத்தாழ்வுகள் தமிழருக்குத் தேவையற்றது. இதனை உடனேகளைய வேண்டும் என வலியுறுத்தியதோடு, தோழமைதான்கனி, சமதர்மமனம், அதைக்காண வேண்டுமானால் சாதி தொலைய வேண்டும் என்று கூறுகிறார்.

சாதி ஒழிய வேண்டும், சமத்துவம் நிலவ வேண்டும் என ஊரெல்லாம் சென்று பேசியவர்தந்தை பெரியார்.பூலோகத்தில், இந்த மண்ணில் சாதி எவ்வாறு பரவிக்கிடக்கிறது விரவிக்கிடக்கிறது என எடுத்துத்துரைத்தவர்அறிஞர் அண்ணா.ஆனால் இந்தச் சமத்துவத்தை நடை முறைப்படுத்திக் காட்டியவர் முத்தமிழறிஞர் கலைஞர்.கலைஞர் சமத்துவத்தை எவ்வாறு செயல்படுத்திக்காட்டினார் என்பதை நான்கு திட்டங்களைச் சான்றுகளாக்கிக் காட்டலாம்.

**சமத்துவபுரம்**

"பாரத நாடு பழம்பெரும் நாடு.இயற்கை வளங்களும் எண்ணற்ற பிற நலங்களும் நிறைந்த நாடு.ஆற்றல் மிக்க மறவர்களும், அறிவு சார்ந்த மேலோர்களும் வாழ்ந்த நாடு என்னும் சிறப்பு மிக்கது.எனினும் மக்கள் சரிநிகர் சமானமாக வாழ்வதற்கு இயலாத வகையில் சமூக அமைப்பு அமைந்திருந்தது."[8]பண்டைத் தமிழ்ச்சமுதாயத்தில் சாதிகள் இல்லை.ஆனால் குடிகள் இருந்தன."துடியன் பாணன் பறையன் கடம்பன் ஆகிய இந்நான்கு குடிகளைத் தவிர வேறு குடிகள் இல்லை"[9]எனப் புறநானூறு கூறுகிறது. இந்த நான்கு குடிகளைச் சேர்ந்தவர்களே நால்வருணக் கோட்பாட்டின்படி தங்களை உயர்ந்தவர்கள் என அறிவித்து, புராணக் கதைகளின் வழியே தாங்கள் பிறந்ததாகவும், சாதிகள் பிறந்ததாகவும், கூறிக்கொண்டு, நாங்களே ஆண்ட பரம்பரை எனஆரியக்கதைகளில் தங்களை முகிழ்த்து, ஓராயிரம் சாதிகளாக மாறினர். சாதிகள்,பாகுபாடுகளை உறுவாக்கின. இந்தப் பாகுபாடுகள் மேல்-கீழ் என்ற வேற்றுமைகளை உறுவாக்கின. இந்த வேற்றுமைகளினால் தீண்டாமை இந்த மண்ணில் வேரூன்றியது.தீண்டாமை மனித குலத்திற்கு நோயாக மாறியது.பள்ளர்,பறையர்,சக்கிலியர் போன்ற தமிழர்கள் தன் சொந்த மண்ணில் அகதிகளாக வாழ நேரிட்டது.மேட்டுத்தெரு, கீழ்த்தெரு, முதலியார் தெரு, செட்டியார் தெரு, மறவர்தெரு,சேரி என்பன போன்ற நிலைகளில் தமிழர்கள் வாழும் இடங்கள் மாறிப்போயின.

E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

தமிழர்களிடையே ஒற்றுமை இல்லாமல் போனது. எங்கும் எதிலும் சாதியே நீக்கமற நிறைந்தது.ஒருவா்தெருவுக்குள்ளே இன்னொருவா்நுழையமுடியாத நிலை உறுவானது.ஒரு சாதியிலிருந்து வேறொரு சாதியில் காதல் திருமணங்கள் நடந்தால் கொலை நிகழும் அளவிற்குத் தமிழரிடையே சாதிய வேற்றுமைகள் மண்டிக்கிடக்கிறன. ஒருவா் மதம் மாறலாம். ஆனால் சாதி மாறமுடியாது. ஆங்கிலத்தில் Phisical Architech - என்பார்கள். சாதி என்பது வெளியில் தெரிகிற ஒன்றல்ல. ஆனால் இது என்ன தெரு என்று கேட்டால்?இது நாயுடு தெரு என்று சொல்வார்கள்.இங்குதான் சாதி கட்டுமானமாக இருக்கிறது.நீ எங்கிருந்து வருகிறாய்?எனக் கேட்டால்., நான் அம்பேத்கர் தெருவிலிருந்து வருகிறேன் என்று சொன்னால்.அவ்வாறு சொல்வதிலிருந்து அவா் இன்ன சாதியைச் சார்ந்தவா் என்பதை உணர்ந்து கொள்ளலாம்.இதனையே அண்ணல் அம்பேத்கா் “மெய்நிகர் கருத்து” Virtual Notion என்கிறார்.”[10]

இம்மாதிரியான பாகுபாடுகள் மிகுந்த தெருக்களையெல்லாம், அந்தத் தெருவில் வாழும் தமிழர்களையெல்லாம் சாதியற்ற சமூகமாக மாற்றும் முயற்சியாக டாக்டா் கலைஞர், முதலமைச்சராக இருந்த போது, இந்திய வரலாற்றிலேயே முதன்முறையாக அனைத்து சாதி மக்களையும் ஓர் இடத்தில் குடியமர்த்தும் திட்டத்தை அறிமுகப்படுத்தினார். அதற்குப் “பெரியார் நினைவு சமத்துவபுரம்” எனப் பெயர் சூட்டினார். இந்தத் திட்டத்தின் வாயிலாக மதுரை மாவட்டம் திருமங்கலம் அருகே மேலக்கோட்டை என்ற இடத்தில் 17.08.1998 அன்று100 வீடுகள், உறுவாக்கப்பட்டன.இந்தியாவேவியந்து போற்றியது.

பின்பு இத்திட்டத்தின் வழியே 2001-இல் 145 சமத்துவபுரங்களைஏற்படுத்தினார்.2006-2011 ஆகிய காலகட்டங்களில் 240-க்கும் மேற்பட்ட பெரியார் சமத்துவபுரங்களைத் தமிழகமெங்கும் தொடங்கி தமிழரிடையே சமத்துவத்தை ஏற்படுத்தினார்.பெரியார் சமத்துவபுரங்களில் காலப்போக்கில் மேல்-கீழ் என்ற பிரிவினைகள் ஏற்படாத வண்ணம் தாழ்த்தப்பட்டவா்களுக்கு 40%, மிகவும் பிற்படுத்தப்பட்டவா்களுக்கு 25%, பிற்படுத்தப்பட்டவா்களுக்கு 25%, பிராமணர் உட்பட இதர பிரிவினருக்கு 10% சதவீதம் என்ற அடிப்படையில் குடியிருப்புகளை வழங்கி புதுமை செய்தார்.[11] இதனால் பெரியார் கண்ட கனவு, அறிஞா் அண்ணா கண்ட கனவு, அண்ணல் அம்பேத்கர் கண்ட கனவு நிறைவேறியது.

**பெண்களுக்குச் சொத்துரிமை**

தந்தை பெரியார் 1929-ஆம் ஆண்டு பிப்ரவரி-17, 18 -ம் தேதிகளில், முதல் சுயமரியாதை இயக்க மாநாடு செங்கல்பட்டில் நடத்தினார்.“மூடப்பழக்கவழக்கங்களை ஒழிப்பது, பெண்களுக்குச் சொத்தில் சம உரிமை வழங்குவது, பெண்கள் வேலை செல்லும் உரிமையை ஏற்படுத்துவது, தொடக்கப்பள்ளிகளில் பெண் ஆசிரியர்களை நியமிப்பது, விதவைப் பெண்கள் மறுமணம் செய்து கொள்ளுதல், சடங்குகளற்ற சுயமரியாதைத் திருமணங்கள் செய்து கொள்ளுதல் உட்பட பல தீர்மானங்களைத் தந்தை பெரியார் செங்கல்பட்டு மாநாட்டில் புரட்சிகரமாக நிறைவேற்றினார்.”[12] உலகில், எந்த நாட்டிலும் இல்லாத அளவு பெண்

அடிமைத்தனம் இந்தியாவில் தலைவிரித்து ஆடியது. இதை மாற்ற நினைத்தார் தந்தை பெரியார்.

முத்தமிழறிஞர் கலைஞர் அவர்கள் மிகச்சரியாக60 ஆண்டுகள் கழித்து, 1989-இல் பெரியாரின் கனவை நனவாக்கும் விதமாகப் "பெண்களுக்குச் சொத்தில் சமபங்கு உண்டு" என்பதைச் சட்டமாக்கினார். இந்து வாரிசுரிமை சட்டம் (தமிழ்நாடு சட்டத்திருத்தம்) 1989-ன் மூலம் பெண்களுக்குச் சொத்துரிமை வழங்கியது கருணாநிதி தலைமையிலான திமுக அரசு. இந்தியாவிலேயே முதல் முறையாகப் பெண்களுக்கான சமத்துவத்தைப் பெற்றுக்கொடுத்த சட்டமாக இச்சட்டம் விளங்குகிறது. கலைஞர் செயல்படுத்திக்காட்டிய சமத்துவத்திற்கு மேலும் ஒரு எடுத்துக்காட்டாக இதனைக் கூறலாம்.

1942 முதல் 1946 வரையில் இந்தியத் தொழிலாளர் நலத்துறை உறுப்பினராக அண்ணல் அம்பேத்கர் இருந்தபோது, "பெண்களுக்கு, ஆண்களுக்கு நிகரான சம்பளமும், பேறு கால சலுகைகளும், பணி பாதுகாப்பும் சட்டமாக இயற்றப்பட்டன. கருவுறுவதும், குழந்தை பெறுவதும் முற்றிலும் பெண்கள் தங்கள் விருப்பப்படி தேர்ந்தெடுத்துக் கொள்வதற்கு வழிவகை செய்தார். சுதந்திரம் பெற்ற இந்தியாவின் முதல் சட்டத்துறை அமைச்சராக அண்ணல் அம்பேத்கர் பொறுப்பேற்ற போது, 1951, பிப்ரவரி, 5-ம் தேதியன்று, "பெண்களுக்கு வாரிசு உரிமை வழங்கப்பட வேண்டும். ஜீவனாம்சம் வழங்கப்பட வேண்டும். ஒரே சாதி, ஒரே சாதி உட்பிரிவு உள்ளவர்களுடன் மட்டுமே திருமணம் என்ற விதி நீக்கப்பட வேண்டும். குழந்தைகளைத் தத்தெடுப்பது, விவாகரத்து பெறுவது ஆகியவற்றில் பெண்களுக்கு உரிமைகள் வழங்கப்படவேண்டும் என்பன போன்றவற்றை உள்ளடக்கி "இந்து சட்டத்தொகுப்பு (Hindu code Bill)-" நாடாளுமன்றத்தில் அண்ணல் அம்பேத்கர் கொண்டுவந்தார். இது சுதந்திரம் பெற்ற இந்தியாவில் பெண்களுக்கு இன்னொரு சுதந்திரமாக அமையும் என எதிர்பார்த்து நாடாளுமன்றத்தில் சட்டமாகக் கொண்டு வர முயற்சித்தார். ஆனால் பிரதமர்நேரு ஆதரித்தாலும், உயர்ந்த சாதிக்காரர்கள், மேல்மட்ட வகுப்பைச் சார்ந்தவர்கள், பழமைவாதிகள் இச்சட்டத்தை நிறைவேற்றவிடவில்லை. இதனால் தனது சட்ட அமைச்சர் பதவியை 27-09-1951 அன்று ராஜினமா செய்தார்."[13]

அம்பேத்கர் 1951-ல் கொண்டுவந்த "இந்து கோட் மசோதா" சொத்துரிமைச் சட்டம் பல ஆண்டுகளுக்குப் பிறகு பல திருத்தங்களைச் செய்து, 2005-ல் நாடாளுமன்றத்தில் இச்சட்டம் நிறைவேற்றப்பட்டுள்ளது. இதற்கு முன்னரே கலைஞர் தலைமையிலான திமுக அரசு, தமிழ்நாட்டில் இந்தச் சட்டத்தை 1989-இல் இயற்றி, நடைமுறைப்படுத்தி சமத்துவத்தை நிலைநாட்டிவிட்டது.

### அனைத்து சாதியினரும் அர்ச்சகர் ஆகலாம் சட்டம்

கிராமத்தில் சாதியப்பாகுபாடு உள்ளது.நகர்ப்புற வாழ்க்கை ஓரளவிற்கு அதனை மாற்றியிருக்கிறது. சுடுகாட்டில் இன்னமும் சாதி இருக்கிறது. விஞ்ஞான வளர்ச்சியால், அறிவியல் முன்னேற்றத்தால் மின்சார சுடுகாடு, இந்தச் சாதியை மாற்றியுள்ளது.சென்னை, திருச்சி, தஞ்சை, மதுரை,கோவை போன்ற நகரங்களில் மின்சார சுடுகாடு, இந்தச் சாதியப்

பாகுபாட்டை நீக்கியிருக்கிறது. இனி வரும் காலத்தில் அனைத்து நகர்ப்புறங்களிலும், கிராமங்களிலும் மின்சார சுடுகாடு வரக்கூடும்.இதனால் சாதியக்கொடுமை மாறுவதற்கு வாய்ப்பிருக்கிறது. ஆனால் விஞ்ஞானத்தால், அறிவியல் முன்னேற்றத்தால் மாற்றமுடியாத இடம், பிராமணர் தவிர வேறுயாரும் நுழைய முடியாத இடம், உயர்நீதி மன்றம், உச்சநீதி மன்றங்களால்கூட நுழைய முடியாத இடம், அது கோயில் கருவறை.

முத்தமிழறிஞர் கலைஞர் தலைமையிலான அரசு 1970-இல், தமிழ்நாட்டில் அனைத்து சாதியினரும் அர்ச்சகர் ஆகலாம் என்ற சட்டத்தை இயற்றி கோயில் கருவறையில் அனைத்து சாதியினரும் அர்ச்சகராக முடியும் என மாற்றிக்காட்டினார்.[14]மதுரையில் உள்ள கோயிலில் பிராமணர் அல்லாத ஒருவரை முதன்முதலாக அர்ச்சகராக தமிழ்நாடு அரசு நியமித்தபோது, உச்ச நீதி மன்றத்தால் தடை செய்யப்பட்டது.அனைத்து சாதியினரும் அர்ச்சகராகும் வாய்ப்பு உடனடியாக ஏற்படவில்லை. 2002-ஆம் ஆண்டு கேரளஅரசு-ஆதித்யன் இடையிலான வழக்கில், அனைவரையும் அர்ச்சகராக நியமிக்கலாம் என்று கேரள உயர்நீதிமன்றம் தீர்ப்பளித்ததையடுத்து, 2006-ல் மீண்டும் கலைஞர் கருணாநிதி தலைமையிலான அரசு பொறுப்பேற்றபோது, இந்தச் சட்டத்தை மீண்டும் நடைமுறைக்குக் கொண்டுவந்தார். "பெரியார் நெஞ்சில் தைத்திருந்த முள்ளை அகற்றி விட்டேன்" என்று சட்டமன்றத்தில் கலைஞர் கூறினார்.ஆணை மீண்டும் நிறைவேற்றப்பட்டது.2015-இல் டிசம்பர் மாதம் உச்ச நீதிமன்றம் இந்த ஆணை செல்லும் என உறுதி செய்தது.

இதனால், சென்னை,திருவரங்கம் ஆகிய இடங்களில் வைணவர்களுக்கானப் பயிற்சிப்பள்ளியும், மதுரை, பழனி, திருவண்ணாமலை, திருச்செந்தூர் ஆகிய இடங்களில் சைவ அர்ச்சகர்களுக்கானப் பயிற்சி பள்ளியும் தமிழக அரசால் தொடங்கப்பட்டன. ஒரு பள்ளியில் 40 பேர் என்ற வீதத்தில் 240 பேர்களுக்கானபயிற்சி 2007-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் தொடங்கப்பட்டது.207 பேர் 13 மாத கால பயிற்சியை வெற்றிகரமாக முடித்தனா்உடனடியாக இவா்களுக்குப் பணிநியமனம் வழங்கப்படவில்லை. 2015-ஆம் ஆண்டு டிசம்பர்-16-ஆம் நாள் அன்று, "ஆகம விதிகளை முறைப்படி பயிற்சி பெற்ற இவா்களுக்கு அர்ச்சகர்களுக்கான பணிநியமனம் வழங்கலாம்" என உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது. அந்தத்தீர்ப்பில் ஆகம விதிமுறைகளில் குறிப்பிட்ட சாதியினரை மட்டும்தான் நியமனம் செய்யப்பட வேண்டும் என எதுவும் குறிப்பிடாததால், அனைத்துச் சாதியினரும் அர்ச்சகர் ஆகலாம் என்ற சட்டம் உறுதி செய்யப்பட்டு, 2018-இல் மதுரை அழகர் கோயிலுக்கு உட்பட்ட ஐயப்பன் கோயிலுக்கு மாரிமுத்து என்பரும், 2020-இல் நாகமலை புதுக்கோட்டை விநாயகர் கோயிலில் தியாகராஜன் என்பவரும் அர்ச்சகர்களாக முதன்முதலில் நியமிக்கப்பட்டனா் தமிழ்நாடு அரசு இந்து அறநிலைத்துறைக் கட்டுப்பாட்டில் உள்ள கோயில்களில் 206 ஆண்கள் அர்ச்சகர்களாகப் பயிற்சி பெற்றுள்ளனா் இதில் 26 பேர் பட்டியல் இனத்தைச் சார்ந்தவா்கள் என்பது குறிப்பிடத்தகுந்தது. இதன்மூலம் தலைமுறை தலைமுறையாகப் பிராமணராகப் பிறந்த ஒருவரால் மட்டுமே அர்ச்சகராக முடியும் என்ற பழமையைத் தகர்த்தது.இந்தச் சட்டத்தின் மூலம் அனைத்து சாதியினரும் அர்ச்சகராகலாம் என்பதை நிறைவேற்றி சமூக மாற்றத்தை ஏற்படுத்திய பெருமை கலைஞரைத்தான் சேரும். இதன்பின்பு 35 வயதிற்கு

உட்பட்ட அர்ச்சகர்கள் கோயில்களில் அர்ச்சகராக பணி நியமனம் பெற்றுள்ளனா் எனவே கலைஞர் 1970-ஆம் ஆண்டில் கொண்டு வந்த இந்தச் சட்டம் காலம் கடந்து இந்நாட்களில்தான் நிறைவேற்ற முடிந்திருக்கிறது என்றாலும், கலைஞர் கட்டமைத்த சமத்துவத்திற்கு கிடைத்த வெற்றி என்றே கூறலாம்.

**அருந்ததியர்களும் 3%உள்ஒதுக்கீடும்**

"அருந்ததியர்களை அவாகள் பேசும் மொழியின் அடிப்படையில் தெலுங்கு பேசும் அருந்ததியர், கன்னடம் பேசும் அருந்ததியர், தமிழ் பேசும் அருந்ததியர் என மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம்."[15] என்கிறார் ஆய்வறிஞர் சீனிவாசன்.அருந்ததியர் என்போரின் பழைய பெயர் செக்காலி, செக்குலிஅல்லது சக்கிலிஎன்பதாகும்.

"செக்கில் எண்ணைய் ஆட்டும் தொழிலை மேற்கொண்டவாகள் செக்கார் என்றழைக்கப்பட்டனா்செக்கார் எண்ணெய் வணிகம் மேற்கொண்ட வணீகச் சமுகத்தைச் சார்ந்தவாகளாவா் இவாகள் செக்காலியா் செக்காட்டி, செக்கான், செக்காத்தி, செக்கு வாணியா் ஜோதி நகரத்தார், திருவிளக்கு நகரத்தார், சங்கரப்பாடியார், என்று பல்வேறு பெயாகளில் அழைக்கப்பட்டுள்ளனா்" (தமிழ்நாடு தொல்லியல் துறை-ஆய்விதழ்-சென்னை-பக்-21-22ல், சு.ராஜகோபாலன்- "வரலாற்றில் செக்கு" என்னும் தலைப்பில் அமைந்த கட்டுரை)

சேக்கிழாரின் பெரிய புராணம் கலியநாயனார் என்பவா் செக்கிழுத்து கூலி வாங்கியவராகப் பதிவு செய்து காட்டுகிறது. சக்கிலியர் என்ற பெயரில் உள்ள முதல் எழுத்தான சகரம், ஒழிந்த நிலையில் மருவிய சொல்லே கலியர் என்பதாகும் ஆகும். கலியர்=(ச)கலியர்.

தோல்கொல்லன் அல்லது தோலன் என்போர், தோலில் பணிபுரிவதோடு சாயம் தோய்க்கும் தொழிலையும் செய்து வருகிறார்கள். நாட்டுப்புற மற்றும் ஆங்கிலேயருக்குரிய அமைப்பிலான அடிபுதையரணங்கள் தயாரிக்கின்றனர். சேனை வார் தயாரிக்கின்றனா் செருப்பு தைத்தல் என்பது மலபாருக்கே உரியது போல இருக்கிறது. அரேபியர் அதிக விலைகொடுத்து எடுத்துச்செல்கின்றனாகிறீச் சத்தம் வருவதற்கு முட்டையின் வெள்ளைக் கருவைப் பயன்படுத்துகின்றனா் இத்தகைய செருப்புகளைத் தோல் பெருங்கொல்லன்கள் செய்கின்றனா் தோலால் ஆன கூடைகள், முட்டு செருப்புகள் ஆகியவற்றையும் செய்கின்றனா் (தென்னிந்திய குலங்களும் குடிகளும்,தொ-7,பக்-182)

"பொன்செய் கொல்லரும் நனகலம் தருநரும், துன்னகாரரும் தோலின் துன்னரும், கிழியினும் கிடையினும் தொழில்பல பெருக்கிப்,பழுதுல் செய்வினைப் பால்கெழு மாக்களும்"- சிலப்பதிகாரம் - புகார்க்காண்டம் - இந்திரவிழா ஊரெடுத்த காதையில், மதுரை நகரில் பல்வேறு தொழில் புரிபவாகளை இளங்கோவடிகள் பல்வேறு தொழிற்பெயர்களால் குறிப்பிட்டுக்காட்டுகிறார். அரும்பத உரையினை மேற்கோளிட்டு அடியார்க்கு நல்லார், "தோலின் துன்னர் என்பவாகள் தோல் ஆடைகள் செய்வோர், தோல் தொழில் புரிவோர், குதிரை,யானை,ஒட்டகம் போன்றவற்றிக்குச்சேனம் செய்பவாகள், போர்க்கருவிகள் இட்டு

வைக்கும் வாள் உரைகள் செய்வோர். போரின் போது வீரர் அணியும் தோல் கவசங்கள் செய்வோர், தோலால் ஆன நீர் இறைக்கும் தோற்பை கவலைகள் செய்வோர், எண்ணெய் கொண்டு செல்லும் தோற்பைபோன்றவற்றைச் செய்வோர்.இவாா்கள் அனைவரும் பறம்பர்கள் என அழைக்கப்படுகின்றனா் என விளக்கம் தந்துள்ளார்.தேவநேயப்பாவாணர் தன்னுடைய தமிழர் வரலாறு-2 (பக்கம்-95) என்ற நூலில் பறம்பர் என்போர் சக்கிலியர் என்கிறார்.

ஜெயங்கொண்டார் இசையாயிரம் என்ற நூலில்“ ஆடுவதும் செக்கே யளப்பது மெண்ணெயே கூடுவதுஞ் சக்கிலியக் கோதையே-நீடுபுகழ்க், கச்சிச் செப்பேட்டிற் கணிக்குங்காற் செக்கார் தாம், உச்சிக்குப் பின் புகாரூா் (ஜெயங்கொண்டார்-இசையாயிரம்) எனச் சுட்டிக்காட்டுவதில், நீண்ட தொலைவான இடங்களுக்குஎண்ணையைக் கொண்டு செல்லும் வணிகர்களுக்கான தோற்பை செய்பவாா்கள் சக்கிலியர் என இசையாயிரம் நூல் குறிப்பிடுகிறது. எனவே சக்கிலியர்கள் வணிகர்களாகவும், வணிகர்களுக்கு உதவியாகவும் இருந்துள்ளனா்

செக்கில் எண்ணெய் ஆட்டுவதற்கு, செக்கு இழுப்பதால், செக்கு+இழுப்பவா்செக்கிழியர் என்பது, காலப்போக்கில் செக்குலியர் ஆனது. பின்னாளில் சக்கிலியர் என மாறியது.

மேலும் சக்கிலியர் என்போர் தோல் தொழில் புரிபவாா்களாக இருந்ததுடன், பகடை எனவும்அழைக்கப்பட்டுள்ளனா்போர் வீராா்களாகவும் இருந்தனா்பகடு என்ற சொல் செக்குமாடு இழுப்பதோடு தொடர்புடையது. பகடு+ஐ=பகடை ஆகிறது. இவாா்கள் சங்ககாலம் முதல் தமிழ்நாட்டில் வாழ்ந்து வரும் பண்டைத் தமிழர்கள்.இவாா்கள் பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களிலும், கல்வெட்டுகளிலும் விரவிக்கிடக்கின்றன.

2-ஆம் நூற்றாண்டு காலத்துக்கல்வெட்டுகள் முதல் சோழர் காலத்துக்கல்வெட்டுகள் வரையில் பகடைகள் மற்றும் சக்கிலியர் என்போர் பற்றிய செய்திகளை இந்தக் கல்வெட்டுகளில் காணமுடிகிறது. சென்னை- திருமுல்லைவாயில் கல்வெட்டு ஒன்று “அய்யலுபகடை” எனக் குறித்துக்காட்டி, பகடை என்ற குடியைச் சார்ந்தவா்குறுநிலமன்னாக இருந்தான் எனச் சொல்கிறது. இதனைப் போலவே அருந்ததியர் என்ற சொல் அருமை+அதியர்=அருந்ததியா் இதனைப் போலவே, மாதியர் என்ற சொல்மா+அதியர்=மாதியர் என ஆகிறது. இந்த அதியர் என்பது அதியமான் என்னும் கடையெழு வள்ளல்களில் ஒருவனான நெடுமான் அஞ்சி மரபினைச் சார்ந்தவாா்கள் எனச் சுட்டுகிறது.எனவே இவாா்கள் அதியமான் வழிவந்தவாா்கள் என எழில்.இளங்கோவன் விளக்கம் தருகிறார்.

> **“ஸ்வத்ஸ்ஶ்ரீ…..கைக்கோளரும் ஆண்டார்களும் சிவப் பராம்மணரும் மன்றாடிகளும், முவச்சரும் தென்கரைநாட்டு வடதலை நாட்டவரும் தென்கலை நாட்ட, வாரும் நியாத்தாரும் பன்னிரண்டு பணிமக்களு முள்ளிட்ட பெரும்**

**வேடரும் பாணரும் பறையரும் பறைமுதலிகளும் செக்கிலியரும்**

**இருளருமுள்ளிட்ட அனைத்துச்சாதிகளும்.. "(திருவண்ணாமலை-ரிஷபேஷ்வரர் கோயில் கல்வெட்டு)**

**"ஸ்வத்ஸ்திஸ்ரீ சோமூர் மாஹாதேவற்கு**

அஞ்(ஞ)ற்றுவா இடுவிச்ச செக்குலிரி" (நாக.கணேசன் என்பார், "ஐந்நூற்றுவா செக்குக் கல்வெட்டு" மண்டல உதவி இயக்குநா(ஆய்வு),தொல்லியல் துறை. ஆவண இதழ் -11, தமிழக தொல்லியல் துறை -தஞ்சாவூர், பக்-25,2002) இந்த இரண்டு கல்வெட்டுகளும் செக்குலியர்களைப் பற்றி எடுத்துரைக்கிறது.

ஆகவே, சங்க காலம் முதல் அதன் அடுத்துவந்த காலங்கள் வரையில் சக்கிலியர்பல்வேறு பெயர்களில் அழைக்கப்பட்டு வந்துள்ளனா என்பது தெளிவாகிறது.இந்தச் சக்கிலியர்கள் இன்று பெரும்பாலானோர் தமிழ்நாட்டில் தூய்மை செய்யும் தொழிலில் ஈடுபட்டு வருகின்றனர். ஆதித்தமிழ் குடிகளான சக்கிலியர் சொந்த மண்ணில் அகதிகளாக வாழும் நிலைக்குத் தீண்டாமை இவாகளின்மீது சுமத்தப்பட்டது.சொல்லொனாத்துயரத்தை அனுபவித்து வருகின்றனாஅடிமைகளாக்கப்பட்டுள்ளனாமலக்கழிவுகளை அகற்றுதல், சாக்கடைகளைத் தூய்மை செய்தல் போன்ற தூய்மைப்பணிகள் இவாகளின் மீது வலுக்கட்டாயமாக சுமத்தப்பட்டது. திருடுவதைவிட, பிச்சையெடுப்பதைவிட இது பரவாயில்லை என நினைத்து, வேறுவழியில்லாமல் இவாகளும் இத்தொழிலில் தங்களை ஈடுபத்திக்கொண்டவர்களாக வாழ்ந்து வந்தனா வருகின்றனா தாழ்த்தப்பட்டோரில் தாழ்த்தப்பட்டோராக வாழ்வாதாரத்தை இழந்தவாகளாக, பட்டியல் இனத்தவருக்கான 18 சதவீத இட ஒதுக்கீட்டைத் துய்க்க முடியாமல், கல்வி, பொருளாதாரம், சமூக முன்னேற்றம் ஆகியவற்றில் மிகவும் மிகவும் பின்தங்கி கீழ் நிலையில் இருந்தனர், இருக்கின்றனா தெலுங்கு,கன்னடம்,தமிழ் ஆகிய மூன்று மொழிகள் பேசுவதால், இவாகளுக்கென்று தனித்த வரலாறு இல்லை எனக்கூறுவது தவறான அணுகுமுறையாகும்.

2008-இல் கலைஞரின் திமுக அரசு, நீதி அரசர் திரு.எஸ்.எம்.ஜெகந்நாதன் அவாகளின் தலைமையில் தனிநபர் குழுவினை அமைத்து, அருந்ததியருக்கு அரசுத்துறையில் 3சதவீதம் உள்ஒதுக்கீடு கிடைத்திட வழிவகை செய்தது. அதன்படி 2008-நவம்பா 22 இல் நீதி அரசர் திரு.எஸ்.எம்.ஜெகந்நாதன் அவாகள் திட்ட அறிக்கையை அளித்தார்.அதில், 76 பட்டியல் சாதிகளின் மொத்த மக்கள் தொகை 1,18,57,504 ஆகும். இதில் 18,61,457(15.70%) என்ற அளவில் அருந்ததியர்கள் 7 ஏழு சாதிகளாக உள்ளனா என அரசாணையில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

மேலும், 1950-ஆம் ஆண்டு அரசமைப்பு(பட்டியல் சாதிகள்) ஆணையின் மூலமாக இந்திய அரசமைப்பின் 341-ஆம் உறுப்பின்படி இந்திய குடியரசுத் தலைவரால் அறிவிக்கைச் செய்யப்பட்டவறான 76 பட்டியல் சாதிகளின் பட்டியலுக்குள்ளாக வருகின்ற அருந்ததியர், சக்கிலியன், மாதாரி, மாடிகா, பகடை, தோட்டி மற்றும் ஆதி ஆந்திரா ஆகிய சாதிகள்இனி "அருந்ததியர்" எனப் அழைக்கப்படுவா என தமிழக அரசு ஏப்ரல்-8-2010- இல் ஆணை

பிறப்பித்தது. (G.O.Ms.No.55, Personal and Administration performs (S), 8th April 2010)"[16]இதனைச் செய்துகாட்டியவர் கலைஞர்.

அருந்ததியர் என அழைக்கப்படும் இந்தச் சக்கிலியர்களுக்கு, கலைஞர் மு.கருணாநிதி அவர்களின் தலைமையிலான திமுக அரசு, பட்டியல் சாதிகளுக்கான 18 சதவீத இடஒதுக்கீட்டிலிருந்து, அருந்ததியருக்கு 3 சதவீதம் உள் ஒதுக்கீட்டினைச் சட்டமாக இயற்றி 2009 ஏப்ரல் 29-இல் நடைமுறைபடுத்தியது.

அன்றும் இன்றும்வாழ்வாதாரத்தை இழந்து வாழ்ந்து வரும் அருந்ததியர் இன்று, உள்ஒதுக்கீடு சட்டம் இயற்றப்பட்டபிறகு, அரசுத்துறைகளில் வேலைவாய்ப்புகள், பள்ளி மற்றும் கல்லூரிகளில் படிப்பதற்கான இடங்கள் ஆகியவைகள் முறையாகக் கிடைக்கப்பெற்று பல்வேறு அரசுத் துறைகளில் சிறந்து விளங்குவதோடு, அருந்ததியர் இன மக்கள் பொருளாதார வளர்சசி பெற்று முன்னேறி வருகின்றனர் கல்வி,பொருளாதார, சமூக வளர்ச்சி பெற்று வளர்ந்தும் வருகின்றனர் இத்தகையப் புதுமையைச் செய்தவர் முத்தமிழ் அறிஞர் டாக்டர் கலைஞரே ஆவார். இவரைத்தவிர யாராலும் இதனைச் செய்திருக்க முடியாது.கலைஞர் கடைபிடித்த சமத்துவத்திற்குச் சிறந்த சான்றாக இதனைக் கூறலாம்.ஆகவே பெரியாரின் கொள்கையைத் தாங்கியிருக்கிற, அறிஞர் அண்ணாவாகவே வாழ்ந்திருந்த கலைஞர் அவர்கள் பகுத்தறிவின் வழியே சமத்துவத்தை சக்கிலியர்களுக்கு மூன்று சதவீத உள்ஒதுக்கீடாகத் தந்து, அருந்ததியர் வாழ்வில் வெளிச்சத்தை ஏற்படுத்தியள்ளார். இதன்மூலம் பகுத்தறிவை உச்சம் தொட வைத்துள்ளார்.அருந்ததியர் வகுப்பினர் மட்டுமல்லாது, மலைவாழ்மக்கள், மிகவும் பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் போன்றோர்களுக்கு வாரியங்கள், தனித்துறைகளத் தொடங்கி அனைத்து மக்களுக்கும் கல்வி,பொருளாதார,சமூக வளர்ச்சியில் முன்னேற வழிவகை செய்திருக்கிறார். எனவே டாக்டர் கலைஞர் என்பவர் பெரியாரின் கொள்கைகளளை, அறிஞர் அண்ணாவின் கொள்கைகளைப் பின்பற்றி சமத்துவத்தை நடைமுறைப்படுத்திக் காட்டியுள்ளார் எனலாம்.

**முடிவுரை**

கலைஞர் அவர்களின் சாதனைகள் எண்ணற்றவை. திரைத்துறையில் அவர் சாதித்த சாதனைகள். திரைக்கதைகள், நாடகங்கள், நாவல்கள், சிறுகதைகள் பல படைத்து எழுத்தாளராகவும், கவிஞராகவும் என அனைத்துத் துறைகளிலும் கால்பதித்துச் சாதனைகள் நிகழ்த்தியவர் இதழாளராக முரசொலி நாளிதழில் எழுதிய கடிதங்கள், உரையாசிரியராக இவர் எழுதிய தொல்காப்பிய உரை, திருக்குறள் உரை எனப் பன்முகத்தன்மையோடு விளங்கினார். தன் வரலாற்றினை நெஞ்சுக்குநீதியாக எழுதினார். குரளோவியம் படைத்துள்ளார். தமிழ்மொழி -செம்மொழியாக அங்கீகாரம் பெறுவதற்கு இவரின் தலைமையில் இருந்த திமுக அரசுதான் காரணம். கலைஞரின் தமிழ் இலக்கிய ஆர்வம், பெரியாரின் சுயமரியாதை இயக்கத்தில் கலைஞர் கொண்ட ஈடுபாடு, திராவிடச்சிந்தனையின் மீது அவர் கொண்ட பற்று, பகுத்தறிவுக்கொள்கையைக் கடைபிடித்த கலைஞரின் அறிவு,

அறிஞர் அண்ணாவுடனான நட்பு, இந்தி எதிர்ப்பு போராட்டங்கள் ஆகியவைகள் கலைஞரை அரசியல் ஈடுபட காரணங்களாக அமைந்தன. ஐந்து முறை தமிழகத்தின் முதலமைச்சராக இருந்தார். இவரால் கொண்டு வரப்பட்ட எண்ணற்றத் திட்டங்கள் அன்றும் இன்றும் ஏழை எளியவர்களுக்கு, சாதி,மதபாகுபாடில்லாமல் அனைத்து மக்களுக்கும் பயன்பட்டுவருகின்றன.கலைஞரின் அனைத்துத் திட்டங்களை இன்றுள்ள திமுக அரசு மிகச்சிறப்பாக செயல்படுத்தி வருகிறது. ஆகவே கடந்த நூற்றாண்டில்,இந்த நூற்றாண்டில் வாழ்ந்த மாபெரும் ஒப்பற்றத்தலைவர்“கலைஞர்”என்பதில் ஐயமில்லை.

**அடிக்குறிப்புகள்**

1. ஈ.வே.ரா.சிந்தனைகள்-தொகுதி-1-வே.ஆனைமுத்து(பெரியார் நாகம்மை அறக்கட்டளை)
2. மேலது
3. மேலது
4. எஸ்.பெருமாள், டாக்டர்அம்பேத்கர் வாழ்வும் தொண்டும், பக்-107
5. மேலது, பக்-105
6. கலைஞர் மு.கருணாநிதி (தமிழில்-சந்தியா நடராஜன்)-வ.உ.சி நூலகம்-சென்னை.2023
7. ஈ.வே.ரா.சிந்தனைகள்-தொகுதி-1-வே.ஆனைமுத்து(பெரியார் நாகம்மை அறக்கட்டளை)
8. எஸ்.பெருமாள், டாக்டர்அம்பேத்கர் வாழ்வும் தொண்டும், பக்-107
9. புறநானூறு, பாடல் எண்-335,வரிகள்-7-8
10. ஆ.ராசா, பாராளுமன்ற உறுப்பினர் அண்ணா நூற்றாண்டு விழா- பட்டி மன்றம்-மேடைப்பேச்சு-2009
11. தமிழரசு மாத இதழ், ஏப்ரல்-2009, பக்-22
12. ஈ.வே.ரா.சிந்தனைகள்-தொகுதி-1-வே.ஆனைமுத்து(பெரியார் நாகம்மை அறக்கட்டளை)
13. எஸ்.பெருமாள், டாக்டர்அம்பேத்கர் வாழ்வும் தொண்டும், பக்-107
14. தீக்கதிர்-நாளிதழ், 21-08-2021
15. முனைவர் ச.சீனிவாசன், தமிழ் இணைப்பேராசிரியர் ஸ்ரீ வெங்கடேஸ்வரா பல்கலைக்கழகம்-(தில்லிப் பல்கலைக்கழகம்) -புதுதில்லி-110021. தமிழ் மொழி மற்றும் பன்னாட்டு ஆய்விதழ், பக்-237
16. தமிழ்நாடு அரசிதழ்-சிறப்பு வெளியீடு, (26-02-2009), பக்-8

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 19. குறுந்தொகையில் பெண்பாற் புலவர்களும் பெண் சுதந்திரமும்

முனைவர் ந. ரேவதி
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை , பூ.சா.கோ. கலை அறிவியல் கல்லூரி,
கோயம்புத்தூர் - 641 014

DOI 10.5281/zenodo.10701507.

**Absract** :

Researchers say that all the cultures in the world have emerged from the tribal society. There are still some primitive human feelings in us that have not been renewed. Literature alone is sufficient to revive it. E.P. Tyler developed the Theory of Survivals, which states that in any society, its oldest social characteristics survive.

**Key Words** : Kurundhogai – Sangam literature – Womens' Poet

உலகிலுள்ள எல்லாப் பண்பாடுகளுமே பழங்குடிச் சமூக நிலையிலிருந்து மேலெழுந்து வந்தவையே என்கிறார்கள் ஆய்வாளர்கள். நம்முள் இன்னும் சில ஆதி மனிதனுடைய உணர்வுகள் புதுப்பிக்கப்படாமல் இருக்கின்றன. அதைப் புதுப்பிக்க இலக்கியமே போதுமானதாகும். இ.பி. டைலர் எந்தவொரு சமூகத்திலும் அதன் பழைமையான சமூகப் பண்புகள் எஞ்சி நிற்கும் என்று நிலைத்தவைக் போட்பாட்டை (Theory of Survivals) உருவாக்கியுள்ளார். இன்றைய காலச் சூழலுடன் பண்டைய இலக்கியங்களை ஒப்பிட்டுப் பார்க்கும் போது இதனைத் தெளிவாக உணரமுடிகின்றது.

பெண் சுதந்திரம், பெண்ணியம் (சமத்துவம்) என்பவை சங்ககாலந்தொட்டே நம்முள் இருந்தவைகளே. சங்கப்பனுவல்களிலேயே பெண்ணியமும், பெண் சுதந்திரமும் வெளிப்படையாகத் தெரிவதைக் காணமுடிகின்றது. 2379 சங்கப் பாடல்களில் 1864 அகம் பற்றியனவாகும். இவற்றுள் முழுமையாக கிடைப்பன 1859, அவற்றுள் தலைவி, தோழி, நற்றாய், செவிலித்தாய், பரத்தை ஆகியோர் 784 பாடல்கள் அதாவது 51 விழுக்காடு பாடல்களில் கூற்றுகளாக இடம்பெற்றுள்ளனர். அவற்றில் தோழி கூற்றுப்பாடல்கள் அதிகம். குறுந்தொகையில் உள்ள பெண்பாற் புலவர்களின் பாடல்களில் தலைவி கூற்றுக்களே அதிகமாக உள்ளன. அகப்பொருளில் ஐந்திணை உரிப்பொருள்களான புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் ஆகிய அக ஒழுக்கங்கள் பெண்களை மையப்படுத்தினவையே. புணர்தலும் பிரிதலும் தலைவன் தலைவி இருவருக்கும் பொருந்துவனதெனினும் இருத்தல் முல்லையில் பெண் இருத்தலையும், இரங்கல் நெய்தலில் பெண்ணின் இரங்கலையும், ஊடல் மருதத்தில் பெண்ணின் ஊடலையும் குறித்தன. எனவே அகமரபு பெண்ணை மையப்படுத்தியது. அவ்வாறு பெண் மையப்படுத்தப்பட்டபோது பாடல்களிலும் பெண்பாற் கூற்றுக்களே அதிகமாகக் கிடைக்கின்றன.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

**பெண்ணின் நட்பு**

பெண்ணாணவள் சங்க காலத்தில் சமத்துவம், சுதந்திரம், சகோதரத்துவம் என்ற மூன்று நிலைகளிலுமே சிறந்து விளங்கியுள்ளாள். ஔவையார் அதியமான் நட்பு இதற்கு தக்க சான்றாகக் கூறலாம். சுதந்திரமாக வாழ்ந்த பெண், சமமாகப் பாடல்கள் எழுதிய பெண்புலவர், நட்பின் பெருமையைப் பறைசாட்டும் அளவிற்கு அதியமானிடம் அன்பு கொண்டிருந்தவர். அதியமானிற்காகத் தூது சென்றவர் என்ற அனைத்துப் பெருமைகளுக்கும் சொந்தக்காரர் இவர். இவரோடு மட்டும் இக்கருத்து நின்றுவிடவில்லை. தோழி என்ற ஒரு பெண் போதும், இதை உணர்ந்து கொள்ளலாம்.

தோழியானவள், தலைவிக்கு சரியான வழிகாட்டியாக, பெரும் துணையாக, ஆற்றுப்படுத்துபவளாக என அனைத்து நிலைகளிலும் உயர்ந்து நிற்கின்றாள். தலைவனுக்கும் உதவுபவளாக, கண்டிக்க கூடியவளாக, எடுத்துக் கூறுபவளாக என எதற்கும் சளைத்தவள் இல்லை சங்கப்பெண் என்பதை அறிவுறுத்துகிறார்கள் புலவர்கள்.

**தலைவன் தலைவியின் விதிகளில் மாற்றம்**

சங்ககாலப் பாடல்கள் தோன்றிய காலத்தில் ஆணுக்கெனச் சில பாகுபாடுகளும், பெண்ணிற்கென சில கட்டுப்பாடுகளும் வகுக்கப்பட்டிருந்தமையைச் சங்கப் பாடல்களின் வழியாக அறியமுடிகின்றது.

***"வினையே ஆடவர்க்குயிரே மனையுறை வாணுதல்***
***மகளீர்க்கு ஆடவர் உயிரென"*** ***(குறுந்.135 1-2)***

என்று வகுத்தமையை குறுந்தொகை எடுத்துக்காட்டுகின்றது. தொல்காப்பியத்திலும் தலைவி தன் வேட்கையைச் சொல்லுதல் கூடாது என்பதாக விதி அமைக்கப்பட்டுள்ளது.

***"தன்னுறு வேட்கை கிழவன்முன் கிளத்தல்***
***எண்ணுங்காலை கிழத்திக்கில்லை***
***பிறநீர் மாக்களின் அறிய ஆயிடைப்***
***பெய்ந்நீர் போலும் உணர்விற்றென்ப"*** ***(களவு.28)***

குடத்துள் பெய்த நீர் கசிவினால் அறியப்படுவது போலவே அவளின் விருப்பமும் அறியப்பட வேண்டும் என்கின்றார் தொல்காப்பியர். மேலும்,

***"காமத்திணையின் கண்ணின்று வரூஉம்***
***நாணும் மடனும் பெண்மையவாதலின்***
***குறிப்பினும் இடத்தினும் அல்லது வேட்கை***
***நெறிப்படவாரா அவன் வயினான"*** ***(களவு.18)***

என்னும் நூற்பாவில் தலைவியிடத்தே நிலைபெற்று வரும் நாணமும் மடனும் பெண்மைக்கு அங்கமாதலின் காமவொழுக்கத்தின்கண் குறிப்பினாலும் இடத்தினாலும் தவிர தலைவிக்கு வேட்கை வெளிப்பட நிகழாது என்றே சுட்டுகின்றார்.

*"உடம்பும் உயிரும் வாடியகண்ணும்*
*என்னுற்றன கொல் இவையெனின் அல்லதைக்*
*கிழவோன் சேர்தல் கிழத்திக்கில்லை"* *(பொருளி.08)*

தலைவி தலைவனைத் தேடிச்செல்ல முடியாது என்பது தெரிகின்றது.

*"செறிவும் நிறைவும் செம்மையும் செப்பும்*
*அறிவும் அருமையும் பெண்பாலான"* *(பொருளி.14)*

எனப் பெண்ணின் குணநலன் கூறப்படுகின்றது. இருப்பினும் இவற்றைக் கருத்தில் கொள்ளாத புலவரின் பாடல்களும் உள்ளன. பெண்பாற் புலவர்களின் பாடல்களே பெரும்பாலும் இந்த விதிகளை மீறிச் செல்வனவாய் அமைகின்றன. ஆண்பாற் புலவர் சிலரின் பாடல்களும் இதற்கு விதிவிலக்கல்ல. பரணரும் கபிலரும் இவ்வாறான தலைவியரைப் படைத்துள்ளனர்.

*"யாம் எம் காமம் தாங்கவும் தம்*
*கெழுதகைமையின் அழுதன தோழி*
.........................................
.......................................
........................ கண்ணே"* *(குறுந்.241)*

எனக் கபிலரின் தலைவி காமம் பற்றிப் பேசுகின்றாள். இப்பாடலுடன் பெண்பாற் புலவர்களின் பாடல்களைநோக்கும்போது, பெண்பாற் புலவர்களின் பாடல்களில் அழுத்தம் மிக அதிகமாகவே உள்ளதை எளிமையாகக் காணலாம். கட்டுப்பாடுகளையும் இலக்கண விதிகளையும் மீறி அவர்களின் பாடல்கள் அமைந்திருப்பதை வெளிப்படையாகவே காண முடிகின்றது.

**வெள்ளிவீதியார் பாடல்கள்**

வெள்ளிவீதியாரின் பாடல்கள் அகப்பாடல்களாகவே உள்ளன. வெள்ளிவீதியார் பாடல்களாக குறுந்தொகையில் 8 பாடல்கள் கிடைத்துள்ளது இப்பாடல்கள் தலைவனைப் பிரிந்த அல்லது அவனைத் தேடிச்சென்ற தலைவியின் மனநிலையைத் தெரிவிப்பனவே.

*"நிலந்தொட்டுப் புகாஅர் வானம் ஏறார்*
*விலங்கிரு ........................"* *(குறுந்.130)*

என ஊரூராகத் தலைவனைத் தேடிய நிலையைக் காணலாம். குறுந்தொகை 44ஆம் பாடலும் அதையே தெரிவிக்கின்றது.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

*"காலேபரிதப்பினவே கண்ணே*
*நோக்கி நோக்கி வாளிழந்தனவே*
*அகலிரு விசும்பின் மீனினும்*
*பலரே மன்ற இவ்வுலகத்துப்பிறரே"(குறுந்.44)*

என்ற பாடல் வெள்ளிவீதியார் தன் தலைவனைத் தேடிச் சென்றமையைக் காட்டுகின்றது. ஆயினும் இது செவிலி கூற்றாகவே கருதப்படுகிறது.

**ஆதிமந்தியார் பாடல்கள்**

ஆதிமந்தி பாடியதாகக் கிடைத்துள்ள பாடல் ஒன்று மட்டுமே. எனினும் ஆதிமந்தி குறித்த வரலாற்றுக்குறிப்பு சங்க இலக்கியத்தில் கிடைத்துள்ளது. பரணர் ஆதிமந்தி ஊரூராகத் தலைவனைத் தேடியதை அகம்.76, 135, 222 ஆகிய பாடல்களில் தெரிவிக்கின்றார்.

*"மள்ளர் குழீஇய விழவி னானும்*
*மகளிர் தழீஇய துணைங்கையானும்*
*யாண்டுங் காணேன் மாண்டக்கோனை*
*யானுமோர் ஆடுகளமகளே என்கைக்*
*கோடீ ரிலங்கு வளை நெகிழ்த்த*
*பீடுகெழு குரிசிலுமோர் ஆடுகள மகனே" (குறுந்.31)*

என்ற பாடலில் ஆதிமந்தி தன் தலைவனைத் தேடிச் சென்றமை வெளிப்படுத்தப்படுகின்றது. ஆதிமந்தியின் வேறு பாடல் எதுவும் சங்க இலக்கியத்தில் இல்லை. இதில் இரண்டு செய்திகளைக் காணலாம். ஒன்று பெண், ஆணைத் தேடிச் செல்வது, இரண்டாவது கூற்று வகுப்பதில் சிக்கல் எனத் தொல்காப்பியர் கூறிய மரபிலிருந்து அகத்திணையின் மாற்றத்தைக் காணமுடிகின்றது.

பொ.வே.சோமசுந்தரனார் பின்வருமாறு விளக்குகின்றார். ***"நொதுமலர் வரைவுழித் தோழிக்கு அறத்தோடு நின்றது. அஃதாவது தலைவி ஒரு தலைவனோடு களவு மணம் புணர்ந்து கற்புக்கடன் பூண்டமை அறியாது அயலார் அவளை மகட்பேசி வந்தவிடத்து அதுகாறும் தலைவனைப் பற்றிய செய்தியை வெளியிடாத தலைவி அதனைத் தோழிக்குக் கூறியது"***[4] என்று குறிப்பிட்டுள்ளார்.தோழிக்குத் காதலின் போது தன் தலைவனைப் பற்றிச் சொல்லாத தலைவி, வேற்றுவர் பெண் கேட்டு வந்தபோது தோழிக்குத் தலைவன் யாரெனக் கூறுவது என்பதைப் பாடலுடன் சேர்த்துப் பார்க்கும்போது பொருத்தமுடையதாகத் தெரியவில்லை. எல்லா இடமும் நான் அவனைத் தேடுகின்றேன் எனத் தலைவி சொல்லும் நிலை ஏற்படும் வரை தோழிக்குத் தெரிந்திருக்காத காதல் இருந்திருக்க முடியாது என்பதே உண்மை. ஏனெனில் சங்க இலக்கியத்தில் தோழியின் பங்கு மிக அதிகம். அதாவது இப்பாடல் மருதம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால்மருதத்திற்கான உரிப்பொருள் பாடலில் இல்லை. அவள் தலைவனைத் தேடிச்

செல்வது கூறப்படுகின்றது. மருதத்தலைவி தேடிச் செல்பவளல்ல. தலைவனின் பரத்தையிற் பிரிவுக்காக இரங்கும் பாடல்களில் கூட தலைவி தலைவனைத் தேடிச் சென்றதாகப் பாடல் இல்லை.

***"வெள்ளிவீதியாரின் பாடல்களையும் ஆதிமந்தியின் பாடல்களையும் இணைத்து அவற்றின் வரலாற்றுத் தன்மையுடன் சேர்த்துப் பார்த்தால் பாத்திரங்கள் தமது அனுபவத்தை அகப்பாடல்களில் விளக்கமுயலும் போது வரையறைக்குட்பட்ட திணைக்கோட்பாடு பிரச்சினைக்குரியதாக நின்றமை புலனாகின்றது."[2]*** ஆதிமந்தியின் முன்கூறப்பட்ட பாடலை நோக்கும் போது தன்னை ஆடுமகள் என்று கூறுவதால் அவள் விறலி என்பது வெளிப்படையாகின்றது. பாணருக்கு நிலம் இல்லை. அவர்கள் ஊர் ஊராகத் திரிபவர்கள். அத்துடன் பாணர் முல்லை, நெய்தல், மருத நிலப் பாடல்களில் தலைவனொடு பங்களித்துள்ளமையைக் காணமுடியும். ஆகவே, இப்பாடலுக்கான திணை வகுப்பு பொருத்தமானதல்ல என்ற வகையில் திணைக் கோட்பாடு தழுவாத பாடல்களாக இவை இருத்தல் கூடுமோ என எண்ண வைக்கின்றன.

**ஔவையார் பாடல்கள்**

சங்க இலக்கியத்தில் மிக அதிகமான பாடல்களைப் பாடியுள்ள பெண்பாற் புலவர் ஔவையார் ஆவர்.வெள்ளிவீதியார், ஆதிமந்தை போன்றோர்க்கு ஏற்பட்ட அனுபவங்கள் ஔவையாருக்கு ஏற்பட்டதாக அறியமுடியவில்லை. இருப்பினும் ஔவையார் பெண் என்ற நிலையில் பெண்பாத்திர உணர்வுகளை வெளிப்படுத்தியுள்ள முறை குறிப்பிடத்தக்கதாகும். பெண்ணானவள் சிலவற்றை அதிலும் குறிப்பாக காமம் சார்ந்த உணர்வுகளை வெளிப்படுத்தக் கூடாது என்பது எழுதப்படாத விதியாக உள்ளது.

***"கடலன்ன காமமுழந் தும்மட லேறாப்***
***பெண்ணிற் பெருந்தக்க தில்"*** ***(குறள்.1137)***

என்று திருக்குறளும் தன் பங்கை வகித்துள்ளது. ஔவையார் பாடிய பாடல்களைப் பார்க்கும் போது தலைவி வெள்ளி வீதியாரின் பாடல்களைப் போலவே காமஞ்செப்புகிறவளாக காணப்படுகின்றாள். தலைவியின் விருப்பத்தை வெள்ளி வீதியாரைப் போலவே மிகவும் பலமாக வெளிப்படுத்துகின்றார் ஔவையார்.

***"முட்டுவேன் கொல் தாக்குவேன் கொல்***
***ஓரேன்யானும் ஓர் பெற்றி மேலிட்டு***
***ஆ அ ஒல்லெனக் கூவுவேன் கொல்***
***அலமரல் அசைவளி அலைப்ப என்***
***உயவு நோய் அறியாது துஞ்சும் ஊர்க்கே" (குறுந்.28)***

என்ற அடிகளில் எனது நோயினை அறியாது துஞ்சும் ஊரே, நான் முட்டுவேனோ, தாக்குவேனோ, கூவுவேனோ எனத் தன் ஆர்வம் மேலிடக் கூறுவதாக அமைந்துள்ளது.

உண்மையில் தலைவி ஒன்றையும் செய்ய முடியாது என்ற நிலையில் நான் என்ன செய்ய எனத் தனது அவாவை அல்லது மனக்குமுறலை வெளிப்படுத்துவதாக இப்பாடல் அமைகின்றது. ***"வான்தோய் வற்றே காமம்"***[3] எனத் தன் காமத்தை வெளிப்படுத்துகின்றாள் குறுந்தொகைத்தலைவி. சங்க இலக்கியப் பாடல்களில் எல்லையற்ற பொருளுக்கு வானத்தை உவமிப்பது அகத்திலும் புறத்திலும் காணப்படுகின்றது.

***"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று***
***---------------------நாடனொடு நட்பே"*** *(குறுந்.3)*
***"வான வரம்பனை நீயோ பெரும"*** *(புறம்.2:12)*

ஔவையாரும் வானத்தைக் காமத்தின் அளவுக்கு உவமையாகப் பயன்படுத்துகின்றமை முக்கியமானதாகும். தலைவனின் அணைப்பைப் பெறவிரும்பும் தலைவி,

***"-----------------உயர் கோட்டு***
***மகவுடை மந்தி போல***
***அகன் உறத்தமீஇக கேட்குநர்ப்பெறினே"*** *(குறுந்.29:5–7)*

எனக் கூறுகின்றாள். அப்பாடலில் மந்தி தன் குட்டியை அகத்துறத் தழுவுவதற்கு உவமையாக தலைவன் தன்னைத் தழுவுதலைக் கூறுகின்றாள் தலைவி. ஆயினும் இப்பாடல் தலைவன் கூற்றாக வகுக்கப்பட்டுள்ளது. இது பற்றி உ.வே.சா. கருத்து வேறுபாடு கொண்டுள்ளார்.

***"தம்முடைய கூற்றாகவன்றி பாடி இரத்தற்குரிய விறலி முதலியவர்களின் கூற்றுகளாகவும் இவர் பாடிய பாடல்கள் இந்நூலிலும் பின் நூல்களிலும் காணப்படும். ஆராய்வோர் அதனைக் கொண்டு விறலி முதலியவர்களாக நினைந்து முடிவு செய்துவிடுதல் மரபன்று அங்ஙனம் பாடுதல் கவி மதம் எனக்கொள்வது முறை"***[4] எனினும் இதனைப் பார்க்கும் போது ஔவையாருடைய பாடல்களும் மரபை மீறி காதல் உணர்வை வெளிப்படுத்துவனவாக உள்ளன. வெள்ளிவீதியார் போலவே ஔவையாரும் விறலி என்பது குறிப்பிட்டுக் கூற வேண்டியதேயாகும்.

**முடிவுரை**

குறுந்தொகையில் பெண்பாற் புலவர்கள் தனது மன ஓட்டத்தை இயற்கைகாட்சிகளாக, இறைச்சிப்பொருட்களின் வாழ்வியலை எடுத்துக்கூறுவதாக என சமூகத்தில் கூறப்பட்ட வாழ்வியல் விதிமுறைகளுக்கு உட்பட்டு மறைமுகமாகக் கூறாமல் தெளிவாக, வெளிப்படையாக தனது மன ஓட்டத்தை காட்சிப்படுத்தியுள்ளனர். ஆண்பாற் புலவர்களுக்கு இணையாக அன்றே பெண்பாற் புலவர்களும் பாடல்கள் பாடியுள்ளனர். இலக்கண நெறிமுறைப்படி திணைகோட்பாட்டுக்குள் அமைக்க முடியாத பாடல்களாகவும் இப்பாடல்களில் சில அமைந்துள்ளன. ஒருபக்கம் விதிகள் வகுக்கப்பட்டு வாழ்ந்திருப்போரின் பாடல்களும், மறுபக்கம் அதே காலகட்டத்தில் பெண்ணும்ஆணும் சமம், பெண்ணிற்கும் தனக்கு விருப்பமுடையதைச் செய்ய உரிமை உண்டு,மனதிடமும் உண்டு என்று பாடல்களின்

மூலம் வெளிப்படுத்துவோரும், அதை நடுநிலைமையோடு ஏற்றுக் கொண்டோரும் என பெண் சுதந்திரத்தை வெளிப்படுத்தும் பெண்பாற்புலவர்களைச் சங்க இலக்கியம் சுட்டிச் செல்கின்றது. இவையாவும் பெண்பாற்புலவர்கள் வாழ்ந்த வாழ்க்கையாகவும் இருக்கலாம் அல்லது அவர்கள் விருப்பப்பட்ட, எதிர்பார்க்கும் வாழ்க்கையாகவும் இருக்கலாம்.

**சான்றெண் விளக்கம்**

1.சோமசுந்தரனார் பொ.வே., குறுந்தொகை, ப.47.

2.அம்மன்கிளி முருகதாஸ், சங்க கவிதையாக்கம் மரபும் மாற்றமும், ப.206.

3.குறுந்தொகை102.

4.சாமிநாதையர்.உ.வே., புறநானூறு, பத்துப்பாட்டு, ப.32.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 20. சங்க இலக்கிய மாந்தர்களின் ஆளுமைக் கூறுகள்

**முனைவர் அ. இராஜலட்சுமி**
உதவிப்பேராசிரியர், கொங்கு நாடு கலை அறிவியல் கல்லூரி, கோய்மபுத்தூர் - 641029

DOI 10.5281/zenodo.10701546.

**Abstract :**

Sangam literature is divided into internal and external. In which the internal hymns are the utterances of the mantras. All these hymns are full of psychological features. In this way, this article preserves the personality elements found in the chants of the chief agamants called Thalaivan and Thalavi and the subordinate mantras called Doshi, Sevili and Natrai.

**Key Words : Sangam literature – psychology – Personality**

## முன்னுரை

சங்கஇலக்கியங்கள் அகம், புறம் எனப் பிரிக்கப்பட்டுள்ளன. இதில் அகம் சார்ந்த பாடல்கள் மாந்தர்களின் கூற்றுகளாக அமைந்துள்ளன. இப்பாடல்கள் அனைத்திலும் உளவியல் பண்புகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. அவ்வகையில் தலைவன், தலைவி எனும் தலைமை அகமாந்தர்கள் மற்றும் தோழி, செவிலி, நற்றாய் எனும் துணைமை மாந்தர்களின் கூற்றுப் பாடல்களில் அமைந்துள்ள ஆளுமைக் கூறுகளைக் காப்பதாக இக்கட்டுரை அமைகின்றது.

## தலைவனின் ஆளுமைக் கூறுகள்

தலைவன் தனது உடல் தேவைகளைப் பூர்த்தி செய்துக் கொள்ள தலைவியின் துணையை நாடுகின்றான். அவன் தலைவியின் அருகில் இல்லாத பொழுதும், அவளது இன்பத்தை நினைந்து தன் உள்ளத்தின் நோக்கத்தைத் தேர்ப்பாகனிடம் நேரிடையாகவும் மறைமுகமாகவும் கூறுவதாகப் பல பாடல்கள் அமைந்துள்ளன. தலைவனது இந்தத் தேவைகள் ஆளுமையின் வழி நோக்கத்தக்கன.

## ஆளுமை

கருத்தாக்கத்தின்படி உளவியலின் மையக்கருவாக ஆளுமை விளங்குகிறது. மேலும் அறிவாற்றலைவிட ஆளுமையை வரையறுப்பதில் சிரமங்கள் மிகுதி. எளிமையாகச் சொல்ல வேண்டுமென்றால் நடத்தைகளின் குணங்கள் விருப்பு, வெறுப்புகள், ஆரவங்கள், ஊக்கிகள், உலகம் பற்றிய உணர்வுகள் முதலியவற்றை ஆளுமை பிரதிபலிக்கின்றது.

ஆளுமையானது ஒருவனது பண்புகளின் தனித்தன்மை வாய்ந்த அமைப்பு (Unique pattern) என்கிறார் கில்போர்ட்.1

“ஒரு மனிதன் பாரம்பரியத்தினாலும் சூழ்நிலையாலும் பெற்றுள்ள உள்ளார்ந்த மனப்போக்குகள், உள்ளத்துடிப்புகள், செயல்முறைகள், உடல்வேட்கைகள் மற்றும் இயல்பூக்கங்கள் ஆகியவற்றின் தொகுப்பே அவனது ஆளுமையாகும் என்கிறார்” உட்வொர்த்.2

**ஆளுமையைப் பற்றிய மனவியற் கொள்கைகள்(Theroies of Personality Development)**

உளப்பகுப்பாய்வுக் கோட்பாட்டினர் (Psychoanalysis) நனவிலி (Unconscious) உளச் செயல்களின் செல்வாக்கினைச் சிறப்பாகக் குறிப்பிடுகின்றனர். தலைவன் மனதில் அடங்கியுள்ள பண்படா ஊக்கிகள், மனவெழுச்சிகள் போன்றவை ஒருவனது சிந்தனையையும், செயல்களையும், இவற்றின் அடிப்படையில் உருவாகும் அவனது ஆளுமையையும் தீர்மானிக்கின்றன.

உளப்பகுப்புக் கோட்பாட்டினை உருவாக்கிய ஃப்ராய்ட் (Sigmund Freud) என்பவரின் கருத்துப்படி ஆளுமை அமைப்பு, தனித்தியங்கும் செயல்களையும், அதே சமயத்தில் ஒன்றோடொன்று அடைவினையாற்றிப் பாதித்துக் கொள்ளும் தன்மை பெற்ற மூன்று உள்ளமைப்புகளையும் கொண்டாதாகும். அவை முறையே

1.இட் (Id) என்ற அடி நிலை மனம்

2.தன்னுணர்ச்சியை அடிப்படையாகக் கொண்ட ஈகோ (Ego)

3.சமூகப் பண்பாட்டுச் சூழ்நிலைகளால் உருவாகும் மேனிலை மனம் (Super Ego)3ஆகியவை ஆகும்.

இட் (Id) (I would, I could, I should - Id)

இதுவே ஆளுமையின் அடித்தளமாகும். இதிலிருந்து பின்னர் 'ஈகோ''சூப்பர் ஈகோ' எழுகின்றன. 'இட்' சின்னஞ்சிறு குழந்தைகளிடமும் உள்ளது. மரபுநிலை வழியே பெறப்படும் எல்லா ஊக்கிகளும் இதனுள் அடங்கும். அவற்றுள் பாலூக்கம் (Sex) பிறர்பால் வலுவந்தம் (Aggression) ஆகியவை ஆதிக்கம் பெறுபவை. 'இட்' எனப்படும் அஃது நிலை மனம் அல்லது விலங்கியல் மனம் பிற மனநிலைகளின் இயக்கத்துக்குத் தேவைப்படும் சக்தியினைக் கொண்டது. இச்சக்தி 'லிபிடோ' (Libido) எனப்படும். வினைமுற்றி மீளும் தலைமகன் கூற்று

**கனங்கு அணி வன முலை நலம்பா ராட்டி,**
**தாம்இருங் கூந்தல்நம் காதலி**
**நீள்அமை வனப்பின் தோறுமார் அணைந்தே!4**

"நம் காதலியின் தேமல் படர்ந்த முலை அழகினைப் பாராட்டி, நீண்ட மூங்கில் போன்ற அழகிய தோளினைச் சேர்ந்து இப்பொழுது மகிழ்வாயாக!" என்று தன் நெஞ்சினுக்குத் தலைவன் கூறினான்.

**............மென்பூஞ் சேக்கை**
**நிவந்த பள்ளி, நெடுஞ்சுடர் விளக்கத்து,**
**நலம்கேழ் ஆகம் பூண்வடுப் பொறிப்ப,**
**முயங்குகம் சென்மோ - நெஞ்சே!5**

"மென்மையான பூப்படுக்கையையுடைய ஓங்கிய பள்ளியறைக் கட்டிலிடத்து, நெடிய விளக்கின் ஒளியிலே அழுகு பொருந்திய நம் மார்பிலே தலைவியின் மார்பகத்துப் பூண்கள் வடுக்களைச் செய்யுமாறு இறுகத் தழுவுவோம்" என்கிறான்.

**கைகவியாச் சென்று,கண் புதையாக் குறுகி,**

**பிடிக்கை அன்ன பிள்ளகம் தீண்டி,**

**தொடிக்கை தைகரத் தோய்ந்தன்று கொல்லோ6**

'கைகளைக் குவித்துச் சென்று அவளைக் குறுகிக் கண்களைப் புதைத்துப் பெண் யானையின் கையை ஒத்த பின்னின கூந்தலைத் தீண்டி வளையணிந்த கை பொருத்தத் தழுவியது கொல்லோ? என்று தன் நெஞ்சம் தனக்கு முன் சென்று தலைவியைத் தழுவியது என்று கூறினான்.

தனது விருப்பத்தைப் பாகனிடம் நேரிடையாகக் கூறாது, தனக்கு முன் தனது நெஞ்சம் தலைவியைக் காணச் சென்றது என்பதனை,

**மென்தோள் பெற நசைஇச் சென்ற என் நெஞ்சே?7**

தலைவன் கூற்றுப் பாடல்களாக நமது ஆய்விற்கு உட்பட்ட பாடல்களில் இந்த இரு பாடல்களில் மட்டும் தலைவன், தலைவியைக் காண வேண்டும் என்ற தனது ஆசையைத் தனது டெம்போ எந்த அளவிலும் குறையவில்லை என்பதானும் தனது இலக்கினை (தலைவியைக் காண வேண்டிய நிலையை) அடைய, தனது அவாவு நிலையைத் தன் நெஞ்சின் மேல் ஏற்றிப் பாகன் கேட்ப உரைத்தான்.

தலைவனின் இச்சைகள், தேவைகள் அனைத்தும் உடனடியாக மகிழ்ச்சி பெறுதலை நோக்கமாகக் கொண்டதால், சூழ்நிலையின் உண்மை நிலைமை (reality) பற்றி அவன் கவலைப்படவில்லை. இது எவ்வித வழிகளையும் பொருட்படுத்தாமல், தன் தேவைகளும் இச்சைகளும் பூர்த்தி செய்யப்படுவதொன்றையே குறிக்கோளாகக் கொண்டு செயல்படுவதாகும். இவை முழுமையும் நனவிலி நிலைப்பட்டவை.

**ஈகோ(Ego)**

தன்னுணர்வு நிலை எனப்படும் இது தொடக்கத்திலேயே தோன்றுவதில்லை. பின்னர் சூழ்நிலையின் உண்மை நிலைமைகளுடன் நடத்தை பொருந்திப் போக வேண்டிய தேவையின் காரணமாகவே 'ஈகோ' எழுகிறது. எனவே இதன் செயல்கள் உண்மை நிலைமைக் கொள்கையைச் (Principle of Reality) சார்ந்து அமைபவை." நற்றிணைப் பாடல் ஒன்றில் தலைவியைக் காண வேண்டிய உள்ளத் துடிப்பைத் தேர்ப்பாகனுக்கு மறைத்து,

**தீண்டா வைமுள் தீண்டி நாம் செலற்கு**

**ஏமதி வலவ, தேரே! .......8**

அங்கு மழை பெய்த ஈரமணலில் மண்புழுவைக் கொத்தி தன் பெடைக்கு ஊட்டுவதைக் காண்பாயாக என்று அவன் கூறுவது தானும் தன் மனைவியுடன் சேர்ந்து இன்புற வேண்டிய

உள்ளக்கருத்தினை மறைத்தான் என்பது தெளிவுப்படும். ஆதலால் நான் இன்னமும் விரைந்து செல்ல இதுவரை பயன்படுத்தாத கூரிய தாற்று முள்ளால் குதிரையைத் தீண்டி விரைவாகத் தேரைச் செலுத்துக என்று கூறினான். மற்றொரு நற்றிணைப் பாடலிலும் தேர்ப்பாகனிடம்,

**......... வேட்டுவன், சுவல**

**பல்வேறு பண்டத் தொடை மறந்து, இல்லத்து**

**இருமடைக் கள்ளின் இன்களி செருக்கும்** 9

உடும்பு முதலியவற்றைக் கொணர்ந்த வேட்டுவன் இல்லத்தே அவற்றைப் போட்டுக் கள் குடித்து முயங்கிக் கிடந்தான் என்றது பொருளீட்டி வந்த தலைவன் பொருளைப் போட்டு விட்டுத் தலைவியை நுகர்ந்தான் என்பதைக் கூறியதாம். அவன் இவ்வாறு கூறியது தானும் தலைவியைக் காண வேண்டிய ஆவலை மறைத்துக் கூறினான் என்று கொள்வதாம்.

இவ்வாறு தலைவன் சூழ்நிலைகளைச் சிந்தித்துப் பிறர் அறியா வண்ணம் தலைவியுடன் முயங்க வேண்டும் என்ற தனது எண்ணத்தைத் தன் நெஞ்சிற்குக் கூறினான். தலைவனின் மேனிலை மனத்தின் கோரிக்கைகளை(தலைவியை அடைய வேண்டியதை ) ஏற்று, உலகின் உண்மை நிலைமைகளுக்கும (பாகன், தனது நிலையை உணர்ந்து கொள்ளும் தன்மையும்) 'இட்'டின் உந்தல்களுக்கும் (காம உணர்வுகளுக்கும்) இடையே சமரசம் எழுவதற்கு 'ஈகோ' காரணமாக அமைந்தது.

**தலைவியின் ஆளுமைக் கூறு**

தலைவி சில இடங்களில் சுற்றத்தாரைப் பற்றிச் சிந்திக்காமலும், பல இடங்களில் சுற்றத்தாரைப் பற்றிச் சிந்தித்தவளாகவும் தனது செயல்களைச் செய்யும் போது ஆளமை கூறின் வழி காணப்பட்டுள்ளாள்.

**ஆளுமைப்படி நிலைக்கூறு**

உள இயக்காற்றல் ஃப்ராய்டியத்தை அடிப்படையாகக் கொண்டது. அகமான அமைப்புகளே (இட். ஈகோ, சூப்பர் ஈகோ) ஆளுமையைத் தீர்மானிக்கின்றன என்று ஆய்வது, மேலும் நனவிலி ஊக்கிகளும் போராட்டங்களும் குழந்தைப் பருவப் போராட்டங்களும் ஆளுமையைக் கட்டமைப்பதில் கலந்து கொள்கின்றன. தலைவியின் நனவிலி மனம் வெறிபாடிய காமக் கண்ணியார் பாடலில்,

**நோய் தணி காதலர் வர, ஈண்டு**

**எதில் வேலற்கு உலந்தமை கண்டே!** 10

"நம் விருப்பம் நிறைவுறும் வண்ணம் நம் இனிய உயிர் தளிர்க்கும் படி வந்து தழுவினான். அவன் தழுவத் தழுவ நம் அன்னை போன்ற சுற்றத்தார் (நம் நோய்க்கு) யாதும் தொடர்பில்லாத முருகனுக்கு வெறியாட்டெடுத்து அழிந்தமை கண்டு யான் உடல் பூரித்துச் சிரித்தேன் அல்லனோ? என்று கூறுவது தலைவியின் உள் மனதிலுள்ள மூர்க்கத் துடிப்புகள் (பிறரை இகழ்ந்துரைத்தல்) குறிப்பதாகும்.

நல்வெள்ளியார்பாடல் ஒன்றிலும்,

**என் குறைப் புறனிலை முயலும்**

**அங்க ணாளனை நகுகம், யாமே!** 11

"என்னால் பெறும் காரியத்திற்கு என்னை இரந்து பிள்னிற்றலுக்கு முயலும், நம் கண்முன்னே வந்து நிற்கும் நம் தலைவளைப் பழித்து மகிழ்வோம்" என்று தலைவி கூறினாள். "இட்" என்பது மனிதனிடம் அடிப்படையாக உள்ள மிருகத் தன்மையை உள்ளடக்கியது. அதற்குச் சமூக ஏற்புகள், சமூக மதிப்புகள், அறநெறி ஒழுக்கங்கள் பற்றிக் கவலையில்லை. ஆழ் மனத்தைப் போன்றது.

தலைவியும். செவிலி வெறியாட்டெடுத்தாள் என்பதையும், தலைவன் முயங்குவதால் தீரும் காம நோய், வெறியயர்தலால் தீர்கிறது என்ற நினைப்பையும் பார்த்து இகழ்ச்சியுறச் சிரிப்பது ஆளுமையின் இட் பகுதியில் பொருத்தப்படுகிறது. மேலும் தலைவனை இழித்தும் பழித்தும் பேச வேண்டும் என்று அவள் நினைப்பது முழுவதும் ஆளுமையின் இட் பகுதியில் அமையும்,

தலைவன் பிரிவை முகவேறுபாட்டால் நான் காண்பிக்கா விட்டாலும் என் மனதில் அவனை நினைத்து வருந்தும் வருத்தத்தை அழகிய வளையணிந்த கைகளிலிருந்து வளையல்கள் கழன்று விடுவதே காட்டிக் கொடுத்து விடும் என்று தனது மனதில் தலைவன் உண்டாக்கிய வேதனை அதிகம் உள்ளது என்பதை,

**..... என்**
**இறையோ எவ்வளை நெகிழ்போ டும்மே** 13
**என்று கூறினாள்.**
**அன்னையிடம் மறைத்தல்**
**நற்றிணைப் பாடல் ஒன்றில்,**
**உயிரினும் சிறந்த நாணும் நனி மறந்து**
**உரைத்தல் உய்ந்தனனே தோழி!**14

அன்னை என்னிடம் 'ஏன் அழுகின்றாய்?' எனக் கேட்டு 'அழாதே' உன் அழகிய பற்களை உடைய வாயில் முத்தமிடுவேன் எனக் கூறினான். இதனைக் கேட்ட நான் உயிரினும் மேலான நாணத்தை மறந்து தலைவனின் பிரிவால் வருத்தமடைந்தேன் என சொல்ல நினைத்தேன். அப்போது நினைவு தெளித்தமையால் நினைத்ததைச் சொல்லாமல் தப்பினேன் என்று கூறுவதிலிருந்து அவளது அடிமனம் நினைத்ததை மனம் தடுத்தது என்பதை அறிகிறோம்.

மற்றுமொரு நற்றிணைப் பாடலில்,

**கான்கெழு நாடற் படர்ந் தோர்க்குக்**

**கண்ணும் படுமோ? என்றிசின், யானே!** 15

நான் தூங்காமல் இருந்த பொழுது ஏன் தூங்கவில்லை என்று அன்னைக் கேட்டாள். அதற்கு நான் அவள் அறியாதபடி தலைவனையே எப்பொழுதும் கருதியிருக்கும் எனக்குக் கண்களில் உறக்கமும் வருமோ? என்று சொல்லிக் கொண்டேன் என்பது அடிமன நிலையில் உள்ள கருத்தைக் தெரிவித்தாள் எனலாம். தலைவன் மீது தான் உற்ற காதல் அன்னைக்குத் தெரிவிக்காமல் மறைப்பதற்கும் தலைவன் பிரிந்த வழி தலைவி உற்ற துன்பத்தைப் பிறருக்குத் தெரிவிக்காமல் மறைப்பதற்கும் ஈகோ (துணை நனவு மனம்) துணைப் புரிந்துள்ளது என்பதை அறியமுடிகின்றது.

**உள் மனநிலை - தோழியின் அடிமன நிலை**

பாணன் பாடும் பாட்டில் தலைவனது குன்றத்தைப் புகழ்வதைக் கேட்ட தோழி மீண்டும் மீண்டும் அதனையே பாடுக! பாடுக! என்று கூறுவாள் போல் குறுந்தொகைப் பாடல் ஒன்றில் உள்ளது.

**இன்னும், பாடுக, பாட்டே - அவர்**
**நல்நெடுங் குன்றம் பாடிய பாட்டே!** 16

மீண்டும் மீண்டும் பாணனைப் பாடச் சொல்வதால் அக்குன்றின் தலைவனே தலைவியின் காதலன் என அன்னை அறிந்துக் கொள்ள வேண்டும் என்பது குறித்து நேரிடையாகக் கூறாமல் பாணனை ஊக்குவிப்பது போல் அவளது அடிமனநிலையில் உள்ள எண்ணம் காணப்படுகின்றது.

**நிலவிடம் தனது மனதைக் கூறுவது**

**எல்லி வருநர் களவிற்கு**
**நல்லை அல்லை - நெடு வெண்ணிலவே** 17

தலைவனின் இரவு வருகைக்கு வெண்ணிலவு ஏதம் விளைவித்ததால் தலைவன் விரைந்து மணம் முடித்து வாழ்தலே நன்று என்று தனது எண்ணத்தை நிலவிடம் கூறுவதாகக் குறுந்தொகைப் பாடல் ஒன்றில் உள்ளது. இப்பாடலில் தலைவனிடம் நேரிடையாகக் கூறாமல் நிலவிடம் கூறுவது போல் தன் எண்ணத்தைக் கூறியுள்ளாள்.

**தலைமகன் பாங்காயினார் கேட்கக் கூறுதல்**

**ஏதில் மாக்கள் நுவறலும் நுவல்ப;**
**அழிவது எவன்கொல், இப்பேதை ஊர்க்கே?**18

என்ற குறுந்தொகைப் பாடல் வரிகளில் வள்ளைப் பாடும் போது எழும் ஊர் அலரை நினைப்பதால் என்ன பயன்? என்று தோழி கூறுவதால் பரத்மை உடையவனாகிய தலைவனை யாம் விரும்போம் என்பது அவளது உள்ளக் கருத்து என்பதை அறியலாம்.

பரத்தைமை கொண்ட தலைவனை நாங்கள் ஏற்கமாட்டோம் என்று நேரிடையாகக் கூறாமல் ஊர் அலரைக் கூறி மறுத்தாளாம்.

**தலைவனை விரும்புபவள்**

தலைவியின் களவுறவைக் கண்டுபிடிக்கும் எண்ணத்தில் இருந்த அவளின் தோழி,

பொய்யாக வீழ்ந்தேன், அவன் மார்பின்;19

தான் கீழே விழுந்த பொழுது அவன் தூக்கி விட அவனது மார்பில் பொய்யாக தான் சாய்ந்ததாகவும் கூறும் நடவா நிகழ்ச்சியில், தனது தலைவி மனதில் அவனைப்பற்றி இருக்கும் எண்ணத்தை அறிவதற்கே ஆகும்.

தலைவியைத் தலைவனிடம் சேர்ப்பிக்க வேண்டிய எண்ணத்தில் தலைவனை விரும்புபவள் போலக் கூறினாள்.

**வண்டு ஓரன்ன அவன்தண்டாக் காட்சி**

**கண்டும், கழல் தொடி வலித்தவென்**

**பண்பில் செய்தி நினைப்பா கின்றே 20**

தேனை உண்ணும் ஆசையால் நறுமலர் இன்னதென ஆராயாமல் எல்லா இடத்துக்கும் செல்லும் வண்டை ஒத்தவன் அவன். அவனது கெடாத அத்தோற்றப் பொலிவைத் தெரிந்தும் என் வளையல்கள் தாமே கழன்றன என்று கூறினாள்.

இவ்வாறு தோழியே தலைவனை விரும்புபவள் போலக் கூறுவது தலைவியின் எண்ணக் குறிப்பை அறியும் நோக்கம் ஆகும்.

**நனவிலி மனம்(Ego) - தாயிடம் மறைத்தல்**

தாய் துஞ்சாயோ மகளே என்றுக் கேட்ட பொழுது தலைவனை நினைப்பவர்க்குத் தூக்கம் வருமோ? என்று தாய் கேட்காதவளாய் கூறினாளாம்.

**'துஞ்சாயா, என் குறு மகள்?' என்றலின் 21**

**கண்ணும் படுமோ? என்றிசின், யானே 22**

தலைவனுடனான களவுறவை அன்னை அறியக் கூடாது என்பதற்காக சூழ்நிலையை உணர்ந்து செயல்பட்டாள்.

**போற்றா ஒழுக்கத்தைக் கூறுதல்**

பரிபாடலில் வையையின் பதினாறாம் பாடலில் தலைவனின் போற்றா ஒழுக்கத்தை அவனிடமே பிறிதொருவரைக் கூறுவாள் போல் கூறினாள் என்ற செய்தி உள்ளது.

**பூந்தனள் நங்கை பொலிகென நாணுதல்23**

தோழியர், பூப்பெய்தினாள் இவள் என்று சொல்லி நகையாடவும், பரத்தை போல் சென்ற இன்ப நுகர்வால் பூத்தனள் என்று கூறியும் மேற்சென்றவன் வீட்டினுள் தோழியர் நுழைந்த பின்பு நாணினாள் என்றாள்.

**கள்ளே புனலே புலவியிம் மூன்றினும்24**

மேலும் பரத்தையர் நீராட்டு விழாவினை நுகர்ந்து இன்பறுதலின் பொருட்டு கள்ளினை உண்டு அத்துடன் நீரை விட்டு நீங்காமல் திளைத்தாடிய படியும் இருந்தனர் என்று தோழி பிறரைக் கூறுவார் போல தலைவன் விளையாண்ட விளையாட்டை மறைமுகமாக அவனுக்கு உணர்த்தினாள்.

மீண்டு வந்த தலைவனிடம் அவன் விளையாடிய விளையாட்டை நேரிடையாகக் கூறினால், ஏதேனும் நினைத்துக் கொள்வானோ? என்ற எண்ணத்துடன் பிறரைக் கூறுவாள் போல் கூறினாளாம்.

தான் ஒன்று கூறக்கருதி அதனைக் கூறாமல் வோறொன்றின் மேல் ஏற்றிக் கூறியதை,

**செவ்வாய்க் குறுமகள் இனைய;**

**எவ்வாய் முன்னின்று - மகிழ்ந! நின்தேரே? 25**

தலைவன் பரத்தையொழுக்கம் மீண்டு வந்த பின்பும் தேரேறிச் செல்வதைக் கண்ட தோழி மீண்டும் பரத்தைமை பூண்டானோ? என்று உள்நினைவும், எவ்விடம் செல்லும் நின்தேரே என்று கூறினாள் என்பதிலிருந்து அறியலாம்.

தான் நினைத்தவற்றை நேரிடையாகக் கூற முடியாத நேரங்களில் மனதில் நினைத்தவற்றை வேறோன்றின் மேல் படைத்தும் சூழ்நிலைக்கு ஆட்பட்டவளாகவும் அதனை ஒத்துப்போகும் மனம் படைத்தவளாகவும் இருந்துள்ளாள் என்பது தெரிகிறது.

**துணைமை நூல்கள் :**

1. எட்டுத்தொகை நூல்கள்(தொகுப்பு), நியூ செஞ்சுரி புத்தக நிலையம், சென்னை.
2. தி.கு. இரவிச்சந்திரன்.உளவியல் மிகச்சுருக்கமான அறிமுகம்2.118
3. கி.நாகராஜன், கல்வி உளவியல்.ப.306

# 21. சங்க இலக்கியங்களில் பெண் கவிஞர்களின் சமூக உணர்வுகள்

முனைவர் செ.சரண்யா,

உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, திருவள்ளுவர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, குறிஞ்சிப்பாடி.

DOI 10.5281/zenodo.10701518

**Abstract :**

The Sangam literatures are the historical records of the ancient Tamils. Poets are the ones who have contributed a lot to the excellence of Sanghapapadals which highlight the life, art and culture of Tamils. Among the sangapulavars, although female songs are less common, they have excelled in both internal and external songs. When looking at the songs of these women, they have given priority to the emotional component and have demonstrated their creativity. In this way, the social sentiments of Sangam women poets are explored through this article.

**Key Words : Sangam literatures – Womens' Literature – Liberty**

## முன்னுரை

தொன்மைத் தமிழர்களின் வரலாற்றுப் பதிவுகளாகச் சங்க இலக்கியங்கள் திகழ்கின்றன. தமிழர்களின் வாழ்வியல், கலை, பண்பாட்டுச் சிறப்பு ஆகியனவற்றை எடுத்துரைக்கும் சங்கப்பாடல்களின் சிறப்புக்குப் பெருந்துணை புரிந்தவர்கள் புலவர்களே ஆவர். சங்கப்புலவர்களுள் பெண்பாற்ப்புலவர் பாடல்கள் குறைந்தளவே காணப்படினும் அகப்பாடல்கள் புறப்பாடல்கள் இரண்டிலும் சிறப்புற்று விளங்கயிருக்கின்றனர். இப்பெண்புலவர்களின் பாடல்களை உற்றுநோக்குபோது உணர்வுக்கூறுக்கே முதலிடம் தந்து படைப்பின் திறனை வெளிப்படுத்தியிருக்கின்றனர். அவ்வகையில் சங்கப்பெண்கவிஞர்களின் சமூக உணர்வுகள் இக்கட்டுரையின் வழி ஆராயப்படுகிறது.

## சமூக கடமை உணர்வு

சங்க காலத்தில் வீரம் முதன்மைப்படுத்தப்பட்டது. இதனால் சங்க வாழ்வியலின் ஒவ்வொரு கூறுகளிலும் வீரம் முதன்மையாகி நின்றது. இதன் பொருட்டே சங்கமகளிர் வீரனைக் கணவனாகப் பெறுவதிலும், வீரன் ஒருவனைப் புதல்வனாகப் பெறுவதிலும் மகிழ்ந்தனர். தன் கணவனோ, மகனோ போர்க்களத்தில் இருந்துபடுவதைச் சமூகத்திற்கு ஆற்றும் தொண்டாகக் கருதினர். இவ்வாறான நிலைப்பாட்டினைச் சங்க பெண் கவிஞர்களின் பாடல்களில் காண முடிகிறது.

மகனைப் பெற்று வளர்த்து அவனை நாட்டிற்கு அர்ப்பணித்தல் அக்கால சமூக கடமையாகக் கருதப்பட்டது. இத்தகு நிலையிலேயே பொன்முடியார் என்னும் புலவர் சமூகத்தில் ஒவ்வொருவருக்கும் உள்ள கடமைகளைப் பட்டியலிடுகிறார்.

"ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே

வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
நன்னடை நல்கல் வேந்தற்க்குக் கடனே
ஒளிருவாள் அறுஞ்சமம் முருக்கி
களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே” (புறம் : 312)

அடிக்கடி போர் மூண்டுவந்த சங்ககாலத்தில் ஆடவர் ஒவ்வொருவரும் போர்த்திறன் வாய்ந்தவராகவும், நாட்டுப்பற்று மிக்கவராகவும் திகழ்ந்திட வேண்டும் என்பதையும், அத்தகு வீரர்களைப் பெற்று வளர்த்த தாய்மார்கள் வீர உணர்வு மிக்கவராக விளங்க வேண்டும் என்பதனையும் மூதின்முல்லைத் துறையில் அமைந்த பாடல்கள் எடுத்துரைக்கின்றன. மேலும் பெற்ற தாயால் தான் வீரப்பால் ஊட்டி, அன்பு காட்டி பேணி வளர்க்க முடியும். இக்கடமையைத் தந்தையிடமோ, மற்றவர்களிடமோ, மறுதலையாகத் திணித்தால் அது சிறக்காது என்பது இங்கு உணர்த்தப்படுகிறது.

**நிலையாமை உணர்வு**

மனிதப் பிறவி தோன்றிய நாள் முதலே நிலையாமை என்னும் கருத்தும் ஏற்பட்டது. நிலைபேரில்லாத வாழ்வினை உணர்ந்த பண்பில் சிறந்த பெரியோர்கள், உலக உயிர்களின் நிலையில்லாத தன்மையினை உணர்த்தி நிலையில்லாத புகழைப் பெருக்க அறிவுறுத்தினார்கள். கூட்டில் இருந்து வெளியே எழுந்து சென்ற பறவை போன்றது உடல், சற்று காலமே இருக்கும் உடம்பின் வழியாக இயங்கும் உயிரின் உண்மைகளை உணர்த்தி நல்லறம் செய்யவே பெரியோர்கள் வழிகாட்டினர். இதனை திருவள்ளுவர் ,

“நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்து இவ்வுலகு.” (குறள்: 336)

என்று குறிப்பிடுகிறார். நிலையற்ற உலகில் தாம் ஈட்டியதைப் பிறருக்குக் கொடுக்காது காத்து வைத்துள்ள செல்வமும் நிலையற்றதே. இறந்து மறைந்து போகின்ற இவ்வுலகில் வாழுங்காலத்துச் செய்த இதுபோன்ற நல்வினையே துணை. இந்நாடோ, இந்நாட்டு செல்வமோ நமக்கு துணையாகாது. ஈதல் என்ற நல்வினையே நல்துணையாம் என்று ஔவையார் தன் பாடலில் வலியுறுத்துகிறார். இதனை,

“நாகத்து அண்ண பாகுஆர் மண்டடிலம்
தமவே ஆயினுனம் தம்மோடு செல்லா
பெற்றோர் ஆயினும் நோற்றோர்க்கு ஒழியும்
வாழச் செய்த நல்வினை அல்லது
ஆழுங்காலைப் புணைப்பிறிது இல்லை.” (புறம் : 367)

என்ற பாடலில் பதிவு செய்துள்ளார். நாகர் உலகத்தைப் போன்ற வளமான பகுதிகளை நிலவட்டம் தம்முடையனவே என்று உரிமை கொள்ளப்பட்டன ஆயினும், மன்னர் தாம் இறக்குங்கால், அவருடனே மறையாமல் நின்று அவருக்குப்பின் வரும் மன்னர், ஒரு தொடர்பும் இல்லாதவர் ஆயினும் நேர்மையுடையவராயின் அவருக்கு உரியதாகி விடும். இவ்வுலகத்தில் வாழ்வதற்கென்று வரையறை செய்யப்பட்ட வாழ்நாள் முழுவதும் நன்றாக வாழ்தல் வேண்டும். வாழ்வதற்குக் காரணமான நல்வினை தவிர, இறக்கும்போது துணையாய் அமைவது வேறில்லை என்று ஔவையார் நிலையாமையின் இயல்புகளைக் குறிப்பிடுகிறார்.

**அறிவுறுத்தும் உணர்வு**

சேர மன்னனின் வீரத்தையும், கொடைச்சிறப்பையும் காக்கை பாடினியார் நச்செல்லையார் பெருமைப்படப் பாராட்டுகிறார். வீரம் என்பது போர்க்களத்தில் பகைவருக்கு அஞ்சாது எதிர்த்து நின்று போரிடுவது மட்டுமல்ல, சிறந்த வீரம் என்பது பகைவனுக்குத் துன்பம் நேரிடும் போது அந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி வெற்றி பெறாமல் விட்டுக் கொடுப்பதிலும் அடங்குவதாகும். இக்குணம் சேரலாதன் இடம் நிறைந்திருந்ததைக் காக்கை பாடினியார்

“குரல் புணர் இன்னிசைத் தழுஞ்சி பாடி
புறவு எதிர்கொள்வதனைக் கண்டனம்” (பதிற்றுப்பத்து, பா : 57)

என்று பாடுகிறார். அவனின் கொடைத்திறம் பற்றி பேசும்போது சேரலாதன் பெண்களின் கண்ணீரைக் கண்டு அஞ்சுவதைக் காட்டிலும் ஏழைகளின் துயரத்தைக் கண்டு அஞ்சி, அவர்கள் வறுமையைப் போக்கினான் என்பதை,

“ஒண்ணுதல் மகளிர் துளிர்த்த கண்ணினும்,
இரவலர் புன்கண் அஞ்சும், புறவு எதிர்கொள்வோன்” (மேலது,பா:57, 13-15)

என்று கூறுகிறார். இத்தகைய பெருமை வாய்ந்த சிறப்புற்ற மன்னனுக்கு இப்பெண் புலவர் அறிவுரை கூறுகிறார்.

மன்னன் பகைவருடைய நாட்டின் மேல் படைகொண்டு சென்று வென்ற பின்னரும் சினம் தணியாமல் பழிவாங்கும் நோக்கத்துடன் அவர்களுக்கு துன்பம் விளைவித்தான். அவர்கள் நாடு தன்னால் வெள்ளப்பட்டமையால் இனி தன்னுடையதே! என்று நினைத்து அதனைக் காப்பாற்றாமல் விட்டுவிட்டான். இதனை இப்பெண்புலவர் பார்க்கிறார் மன்னனே! உன் வலிமையை அறியாமல் போரிட்ட மன்னர் தோற்று கப்பம் செலுத்துவாராயின் அவர்களிடம் சினம் கொள்ளாதே என்று அறிவுரை கூறுகிறார். இதனை,

“அறியாது எதிர்ந்து துப்பில் குறையுற்றுப்
பணிந்துறை தரும்நின் பகைவராயின்
சினம்செலத் தணிமோ!” (பதிற்றுப்பத்து, பா : 59)

என்று பாடுகிறார். இப்பாடலில் வெற்றிச் சிறப்புகளையும், கடுஞ்சினமும், கொடைத்திறமும், புகழ் உடைய மன்னனைப் பாடி, பரிசில் பெற வேண்டும் என்று நினைக்காமல், அவனுக்கு பிடிக்காவிட்டாலும் தம் கருத்தை அஞ்சாதே எடுத்துரைக்கின்றார்.

**துறவு உணர்வு**

ஆசை, பாசம் பற்றி என்பவற்றிலிருந்து நீங்கிய நிலையைத் துறவு என்பர். ஒரு தனிமனிதனின் அகத்தை செம்மைப்படுத்துவதற்கான தவத்தை மேற்கொள்வது துறவு எனப்படும். உலகப் பற்றுக்களைத் துறந்தவன் துறவி ஆவான். “துறவி என்ற நிலைமையை மெய்யறிவு தேடி நிற்பதையே குறிக்கிறது. இவ்வாறு மெய்யறிவு தேடுவதற்காகத் துறவை மேற்கொள்வது வாழ்வின் இன்பத்தைத் துய்க்காது அத- னின்றும் விலகிச் செல்லவேண்டும் என்ற மனப்பான்மை மேலோங்குவதனால் ஏற்படுகிறது.” என்று விஜயலட்சுமி கூறுகிறார்.

இல்லறத்திலும் ஏனைய பிறசெயல்பாடுகளிலும் பற்றினை விட்டவர்கள் துறவறத்தை மேற்கொண்டுள்ளனர். இதனை தொல்காப்பியர்,

“காமம் சார்ந்த கடைக்கோட்காலை
ஏமம் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழத்தியும்
சிறந்தது பயிற்றல், பிறந்ததன் பயனே” (தொல்காப்பியம்,பொருள்: 190)

என்று கூறுகிறார் . வாழ்க்கையின் இறுதிக் காலத்தில் காமம் அல்லது இன்பத்தை முழுமையாக அடைந்த பிறகு தலைவனும் தலைவியும் தன் பிள்ளைகளோடு சேர்ந்து பாதுகாப்பும், இன்பமும் கொண்ட வழியில் சென்று அறத்தின் தூண்டுதலின்படி சுற்றம் சூழ எது சிறந்ததோ அதை கடைபிடித்து வாழ வேண்டும். இதுவே அவர்களின் கடந்தகால வாழ்க்கையின் பயனாகும் என்று துறவு முறையை விளக்கினார். சங்க புறப்பாடலில் மாறி பித்தியார் துறவு நிலையை,

“ஓவத்து அன்ன இடனுடை வரைப்பில்
பாவை என்ன குறுந்தொடி மகளிர்
இழைநிலை நெகிழ்த்த மள்ளற் கண்டிரும்
கழைக்கண் நெடுவரை அருவிஆடி
கான யானை தந்த விறகின்
கடுந்தெறல் செந்நீ வேட்டு
புறம்தாழ் புரிசடை புலரத்துவோனே” (புறம் : 251)

என்று கூறுகிறார். துறவைப் பற்றி பாடிய ஒரே பெண் புலவர் இவர் ஒருவரே ஓவியம் போன்ற அழகானதாகவும், இடமகன்றதாகவும் அமைந்த வீட்டில் அழகிய பதுமை போன்ற சிறிய வளையலை அணிந்த மகளிரின் அணிகலன்களைக் கழலச் செய்த காலை

போன்றவனைக் கண்டோம். அவன் மிக்க வெம்மை உடைய தீயை மூட்டுபவன். அந்தச் சிவந்த தீயில் தன் முதுகில் சரிந்து கிடக்கும் சடாமுடியை உலர்த்துபவனாவான். இவன் புகழுக்குரிய புதல்வரையும், அறம் செய்யும் சான்றோரையும் உடையவனாய்ச் சிறப்புற்று வாழ்ந்து துறவு நிலையில் சடைமுடி தரித்து தவம் புரிந்தான் என்று பாடியுள்ளார்.

**கொடைத்திற உணர்வு**

மக்களின் தேவையை அறிந்து ஆட்சி செய்வது மன்னனின் கடமையாகும். தன்னை நாடி வந்த பரிசிலருக்குக் காலம் நீட்டிக்காது பரிசில் தருவதும் மன்னனின் கடமையாகும். இதனை திருவள்ளுவர்

"கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்
உடையானாம் வேந்தர்க்கு ஒளி" (குறள்: 390)

என்கிறார். பேராற்றலும் பெருவீரமும் கொண்டிருந்த அதியமான் தன்னை நாடி வந்த இரவலர்க்கு இல்லை எனக் கூறாது கொடுக்கும் கொடையுள்ளம் கொண்டவன். மழை எவ்வாறு ஓயாமல் பெய்கிறதோ அதுபோல, சிறிது நேரம் கூட ஓய்வில்லாமல் வாரி வழங்கும் வள்ளல் தன்மை கொண்டவன் என்பதை,

"ஓவாது இயும் மாறி வண்கைக்
கடும்பகட்டு யானை நெடுந்தேர் அஞ்சி" (குறுந்தொகை: 91 )

என்ற குறுந்தொகைப் பாடலால் அறியலாம். அகமும் முகமும் மலர அரசவை அமர்ந்து அண்டி வந்தோர்க்கு தேரும், பிறவும் பல வழங்கி மகிழ்ந்த நாட்கள் அவன் வாழ்நாளில் பலவாம் என்றும் கூறுவர். இதனை,

"கடும்பகட்டு யானை நெடுந்தேர் அஞ்சி
ஈர நெஞ்சமோடு இசை சேண் விளங்க
தேர் வீசு இருக்கை போல" (நற்றிணை: 281)

என்ற நற்றிணைப் பாடலால் அறிலாம்.

**நட்புணர்வு**

கையறுயநிலைப் பாடல்கள் புலவர்களுக்கும் மன்னர்களுக்கும் இருந்த நட்பினை புலப்படுத்துகின்றன. மன்னன் இறந்த போது அவனது பிரிவைத் தாங்க இயலாது, புலவர்கள் அழுத குரலுடன் பாடிய பாடல்கள் அவர்களது உள்ள உணர்வினை எடுத்துரைக்கின்றன. இவ்வகையில் அதியமான் இறந்த போது அவனோடு பல்லாண்டுகள் நட்புடன் இருந்த ஔவையார் அவனது பிரிவைத் தாங்காது பாடிய பாடல்கள் தும்பியல் உணர்வினை படம் பிடித்து காட்டுகின்றன.

எரிந்த திணைப்புணத்தில் குறவன் துணித்த துண்டைப் போன்று கரிந்த பக்கத்தை உடைய விறகு கொண்ட ஈமத்தியில், அதியமான் அஞ்சியின் உயிரற்ற உடல் உள்ளது. அந்த

ஈமத்தீ, அவன் உடலைச் சிதைக்காமல் குறையினும் குறைக; இல்லையேல், குறையாமல் விண்ணளவு முட்டச் சென்று நிறையினும் நிறைக; ஆயினும் திங்களைப் போன்ற வெண்கொற்றக் குடை கொண்ட ஞாயிறு போன்று அஞ்சியின் புகழோ எந்நாளும் அழியாது நிற்கும் என்ற செய்தியை,

" எரிபுனக் குறவன் குறையலன்ன
கரிபுற விறகின் ஈமஒள் அழல்
குறுகினும் குறுகுக, குறுகாது சென்று
விசும்புற நீளினும் நீள்க- பசுங்கதிர்த்
திங்கள் அன்ன வெண்குடை
ஒண்ஞாயிரு அன்னோன் புகழ்மா யலவே" (புறம் : 231 )

என்னும் பாடலில் வெளிப்படுத்துகிறார். அதியன் இல்லாத உலகில் வாழ்வது பயனற்றது என்ற தன் உணர்வை ஔவையார்,

"இல்லாகியரோ, காலைமாலை
அல்லாகியர் யான் வாழும் நாளே" (புறம் : 232 )

என்று பாடுகிறார்.

**முடிவுரை**

சங்கப்பாடல்கள் பாடிய பெண்பாற்புலவர்கள் தங்கள் படைப்புகளில் சமூக நலன் கருதிய செய்திகள் யாவற்றையும் உணர்வோடு வெளிப்படுத்தியுள்ளனர். சமூகக்கடமை, நிலையாமை, துறவு, அறிவுரைக் கூறுதல், நட்பு, கொடை போன்ற பல்வேறு செய்திகள் வெளிப்படுத்தப்பட்டுள்ளன. இல்லறமே பெண்ணுக்கு உரியது என்ற நிலைமாறி, அரசியல் அறிவுப்பெற்று மன்னர்களுக்கு அறிவுரைக்கூறும் ஆற்றல் பெற்றிருந்ததையும் இக்கட்டுரையின் வாயிலாக அறிந்துக்கொள்ளமுடிகிறது.

**துணை நூல்கள்**

1. சாமிநாதையர், உ.வே- புறநானூறு மூலமும் உரையும், முதற்பதிப்பு, 2004, ஜூபிலி அச்சுக்கூடம், சென்னை
2. சாமிநாதையர், உ.வே- குறுந்தொகை மூலமும் உரையும், பதிப்பு 2009, டாக்டர் உ.வே.சா நூல்நிலையம்.
3. ஆலிஸ், அ- பதிற்றுப்பத்து, நியுசெஞ்சுரி புக்கவுஸ், முதற்பதிப்பு-2004.
4. விஜயலெட்சுமி. இரா- தமிழக மகளிர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், முதற்பதிப்பு,1997.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 22. தொடக்ககாலக் கவிஞர்களின் புதுக்கவிதைகளில் 'தேசிய ஒருமைப்பாடு'

**நா. மணிகண்டபிரபு,**
முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ் உயராய்வு மையம்,
அமெரிக்கன் கல்லூரி,
மதுரை - 625002.

**முனைவர் ஆ. பூமிச்செல்வம்,**
ஆய்வு நெறியாளர்,இணைப் பேராசிரியர்,
தமிழ் உயராய்வு மையம்,
அமெரிக்கன் கல்லூரி, மதுரை - 625002.

DOI 10.5281/zenodo.10701577

**Abstract :**

After India's subjugation under British rule, the sense of unity or unity evolved into 'national unity' and gave freedom from them. After independence, language, caste, religion, culture, etc. in India have created huge problems in the social, economic and personal life of the people. Due to this, many expressed the sufferings of the people through literature. The revival of Tamil literature is the literature of this period. It dates back to the 18th century. It is made in a manner that is easily understandable and suitable for all people. It consists of short story, novel, drama, novel and essay. In these new poems, the origin, development, and the ideas of national unity in the new poetry can be found by focusing on the poems of Bharatiyar's 'National Songs', Bharathidasan's 'Irunda Veedu', 'Kumumba Lampu', 'Alakin Chiruru', and 'Malarum Malayum'' by Kavimani Desi Ganagam Pillai. .

**Key Words : New Poets – Nationalism – Unity**

## முன்னுரை

இந்திய நாடானது ஆங்கிலேயர் ஆட்சியின் கீழ் அடிமைப்பட்ட பிறகு ஒருமைப்பாடு அல்லது ஒற்றுமை என்ற உணர்வு 'தேசிய ஒருமைப்பாடாக உருவாகி அவர்களிடமிருந்து விடுதலை பெற்று கொடுத்தது. சுதந்திரம் பெற்றபின் இந்தியாவில் உள்ள மொழி, இனம், சமயம், பண்பாடு, கலாச்சாரம் போன்றவை மக்களிடம் சமூக, பொருளாதார, தனிமனித வாழ்வியல் நிலையில் பெரிய சிக்கல்களை உருவாக்கிவிட்டது. இதனால் மக்கள்படும் துயரங்களை பலர் இலக்கியங்களின் வாயிலாக வெளிப்படுத்தினர். தமிழ் இலக்கியங்களில் புத்துயிர் பெற்று நிற்பது இக்கால இலக்கியம் ஆகும். இது 18ஆம் நூற்றாண்டின்வாக்கில் தோன்றியதாகும். மக்கள் அனைவரும் எளிதில் புரிந்து கொள்ளும் தன்மையிலும் அதற்கு ஏற்ற வகையிலும் அமையப்பெற்றது. இது சிறுகதை, புதினம், நாடகம், புதுக்கவிதை, கட்டுரை ஆகிய வடிவங்களைக் கொண்டமைகிறது. இவற்றில் புதுக்கவிதைகளில் தோற்றம், வளர்ச்சி பற்றியும், புதுக்கவிதையில் இடம்பெற்ற தேசிய ஒருமைப்பாட்டு கருத்துகளை பாரதியாரின் 'தேசிய பாடல்கள்', பாரதிதாசனின் 'இருண்ட வீடு', 'குடும்ப விளக்கு', 'அழகின் சிரிப்பு', கவிமணி தேசிய விநாயகம் பிள்ளையின் 'மலரும் மாலையும்' ஆகிய கவிதைகளை மையமாகக் கொண்டு இவ்வாய்வுக் கட்டுரையின் வழி அறியலாம்.

## புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்

மரபுக்கவிதை என்று பலகாலமாக கூறப்பட்டு வந்த கவிதைகள் இன்றைய நாளில் 'புதுக்கவிதை' என்ற புதிய பரிணாமம் அடைந்துள்ளது. பழந்தமிழர்கள் வெண்பா, ஆசிரியம்,

வஞ்சி, கலி என்று கூறப்பட்ட பாவடிவில் செய்யுள்கள் அமைத்துள்ளார். தற்காலத்தில் இவை புதுக்கவிதை என்று அழைக்கப்படுகிறது. புதிதாகப் பிறக்கும் இலக்கியத்தை 'விருந்து' என்று பெயர் கூறினார் தொல்காப்பியர். 'பழையன கழிதலும் புதியன புகுதலும்' என்று உரைத்தார் நன்னூலார். யாப்பு என்ற பழைய மரபு உடைந்து புதுக்கவிதை என்ற முறை உருவானது. புதுக்கவிதை என்பது சுவை, சொல், வளம், பொருள் ஆகியவற்றில் மாற்றங்களுடன் உருவானது என்றார் பாரதியார். 'சுவை புதிது பொருள் புதிது வளம்புதிது சொல் புதிது சோதிமிக்க நவகவிதை' என்கிறார். மேலும்,

**"உள்ளத்துள்ளது கவிதை**
**இன்பம் உருவெடுப்பது கவிதை**
**தெள;ளத் தெளிந்த தமிழில்**
**உண்மை தெளிந்துரைப்பது கவிதை"**[1] என்று கூறுகிறார்.

புதுக்கவிதை என்பது 'உள்ளத்தில் உள்ளது, வாசித்தவுடன் இன்பம் தருவது, எளிய உரையில் அமையப்பெற்றது, உண்மை எடுத்து இயம்பும்' என்றார் கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை.

மரபுக்கவிதையின் செறிவின்மை, அச்சு இயந்திர வருகை, மக்களின் மொழிநடையில் ஏற்பட்ட மாற்றங்கள் உரைநடை தோன்றுவதற்கு அடிப்படைக் காரணங்களாகும். தமிழில் இம்முயற்சிகள் தொடங்கப்பட்டபோது, 'வசன கவிதை' என்றும் பின்னர் 'சுயேச்சா கவிதை', 'இலகு கவிதை', 'விடுநிலைப்பா', 'கட்டிலடங்காக் கவிதை' என்று வழங்கப்பட்டு 'புதுக்கவிதை' என்று நிலைபெற்றது.

புதுக்கவிதையின் வளர்ச்சி நிலையில் பாரதியார் முதல் இடம் பெறுபவர். இவர் வால்ட் விட்மனின் 'புல்லின் இதழ்கள்' என்ற புதுக்கவிதையின் தாக்கம் கொண்டு அதைப்போலவே, தமிழில் புதுமை காண முற்பட்டார். இதை இவர் 'காட்சிகள்' என்ற தலைப்பில் இயற்றினார். இதற்கு இவர் இட்ட பெயர் 'வசனகவிதை' ஆகும். இந்த நிலை ஒரு தொடக்கமாக அமையப் பெற்றது எனலாம். பின் பாரதியார் பரம்பரை என்ற ஒரு கவிஞர்கள் ஒன்றிணைந்து இந்த புதுக்கவிதை நிலையை மேலும் வலுப்பெற செய்தனர். பாரதியார் மீது பற்று கொண்ட பாரதிதாசன் புதுக்கவிதையின் நிலையை மிகவும் உயர்வான நிலைக்கு எடுத்து சென்றவர் ஆவார். இவர்களின் காலகட்டங்களில் இவரைப் போலவே கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை என்பவரும் புதுக்கவிதைகள் பல படைத்து அதன் வளர்ச்சிக்கு உதவினார். இவ்வாறான புதுக்கவிதை வளர்ச்சியில் மணிக்கொடி, எழுத்து, வானம்பாடி போன்ற இதழ்கள் வளர்ச்சியில் பெரும்பங்கு கொண்டன.

**'தேசிய ஒருமைப்பாடு' - விளக்கம்**

'தேசிய ஒருமைப்பாடு' என்பது ஒரு நாட்டின் மக்கள் அனைவரும் தங்கள் நாட்டின் இறையாண்மையை மதித்து சமமாக வாழ்வதும், ஒருவர் மற்றொருவரை மதித்தும் அனைவரும் ஒன்றுபட்டு நடப்பதும் தேசிய ஒருமைப்பாடு ஆகும்.

'தேசியம்' என்ற சொல் ஒரு நாட்டில் உள்ள பலதரப்பட்ட மக்களை ஒற்றுமையுடன் இருக்க செய்யும் கூறும் சொல் ஆகும். 'ஒருமைப்பாடு' என்பது அனைவரும் இணைவது ஆகும். 'இந்தியத் தேசியம்' என்பது பிரிட்டிஷ் குடியேற்றக் காலத்தில் உருவான அரசியல் கருத்தாக்கமாகும். இந்திய தேசியம் பிரிட்டிஷ் எதிர்ப்பில் ஒருங்கிணைந்த பல்வேறு தேசிய இனங்களின் விளைவாக உருப்பெற்றது. மேலும் இந்திய தேசியம் வெவ்வேறுபட்ட பல தேசிய இனங்களின் ஒற்றைத் தன்மையை வலியுறுத்துகிறது. தேசிய ஒருமைப்பாடு என்பது பலதரப்பட்ட காரணிகளால் இன்றளவிலும் ஓர் வழுவான நிலையை மக்களிடம் அளித்து வருகிறது எனலாம்.

உலக நாடுகள் இந்தியாவை சிறந்த கலாச்சாரம் கொண்ட நாடு என்று அழைக்கிறது. 'கலாச்சாரம் என்பது பண்பட்ட சமுதாயத்தின்' வெளிப்படாகும். இது தனிமனிதன் மற்றும் சமுதாயத்தின் செயல்பாடாகக் கருதப்படுகிறது. இந்தியாவில் உள்ள பலதரப்பட்ட கலாச்சாரத்தினை 'பண்பாட்டுச் சமூகம்' என்றே உருவாக்குகிறது. உலகின் பல மொழிகள் பேசும் ஓர் உயர்ந்த நாடாக இந்தியா அமையப் பெற்றுள்ளது. ஒரு மொழி மட்டுமே, ஒருவர் மற்றவருடன் தமது கருத்தை வெளிக்காட்டும் முக்கிய காரணியாகும். இந்தியாவை பொறுத்தமட்டில் பலதரப்பட்ட வாழ்வு, சூழலுக்கேற்ப அந்தந்த மக்கள் வாழ்விடம் சார்ந்து பல மொழிகள் பேசுகின்றனர். மொழி வரலாற்றில் தமிழ்மொழி திராவிட மொழிக் குடும்பத்தில் மிக பழைய தொன்மை கொண்ட வரலாற்று மொழியாகும். திராவிட மொழிக் குடும்பத்தில் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளு ஆகியவை இடம்பெறும்.

இந்தியாவில் உள்ள பல்வேறு இனமக்களால் கொண்டாடப்படும் விழாக்கள் வழி மக்களிடையே சகோதரத்துவத்தையும், நட்பையும், சமய சகிப்புத்தன்மையையும் வளர்த்து வருகின்றனர். மக்களிடையே உள்ள பழக்க வழக்கமும் மற்றும் பாரம்பரியமும் இந்தியாவை உயர்வான இடங்களில் வைத்துள்ளது. நம் பாரம்பரியத்தின் வெளிப்பாடாக விருந்தோம்பல், ஈகை, அன்பு, சமதர்மம், நல்லுறவு, மனிதநேயம், ஆன்மீக உணர்வு முதலானவை உன்னதமான இடத்தில் இந்தியாவை நிலை பெற வைத்துள்ளன. மேற்கண்ட மொழி, இனம், பாரம்பரியம், கலாச்சாரம் என்ற அமைப்பில் இந்தியாவை 'ஒன்றுபட்ட இந்தியா' என்று அழைக்கின்றனர். இத்தகைய வேறுபாடுகளுக்கிடையே அனைவரும் ஒரே பெயரால் 'இந்தியர்கள்' என்றும் அழைக்கப்படுகின்றனர்.

**புதுக்கவிதைகளில் தேசிய ஒருமைப்பாடு**

புதுக்கவிதை வாயிலாக மனிதர்களின் நிலை, வாழ்வியல் நிலை, ஒற்றுமை, சாதியப் பாகுபாடுகள், அன்றாட நிகழ்வுகள், சுதந்திரம், சமூகப் பொருளியல் நிலை, கல்வி, நல்லிணக்கம், சமயச்சார்பு தன்மை, ஆகியவை பற்றிய கருத்துகளை அறியமுடிகிறது. இதன்படி, புதுக்கவிதைகளில் பாரதியார், பாரதிதாசன், கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை ஆகியோரின் கவிதைகள் வழி ஒருமைப்பாட்டுக் கருத்துகளைக் கீழே காணலாம்.

**பாரதியார் கவிதையில் தேசிய ஒருமைப்பாடு**

**"அச்சமில்லை அச்சமில்லை**

**அச்சமென்ப தில்லையே"**[2] என்கிறார் பாரதியார்.

மனிதருக்கு எவ்விடம் சென்றாலும் அச்சம் இருத்தல் கூடாது. 'பிச்சை வாங்கி உண்ணும் நிலை வந்தாலும் கூட அச்சம் என்பது இல்லை. இச்சை கொண்டு பாம் அடைந்த பொருள்கள் எல்லாம் இழந்துவிட்ட போதிலும் அச்சம் என்பது இல்லையே' என்று கூறுகிறார் பாரதியார்.

**"ஊதுகுழலைக் கையில்**

**எடுக்கும் பெண்கள்**

**எழுதுகோலைக்**

**கையில் எடுக்க வேண்டும்"**[3] என்கிறார்.

பெண்கள் குடும்ப வாழ்வில் மட்டும் ஈடுபடாமல் பெண் கல்வியை எடுத்து அவர் தம் அடிமைத்தனம் உடைக்க வேண்டும். குடும்பப் பெண்கள், கல்வியை முதன்மை சீராய் கொண்டு அமைய வேண்டும். பெண் சிந்தனையை வளர்த்து தடுக்கும் பொருட்டு அவள் வாழ்வு அமையாமல் அவளின் திறமையை வெளிக்காட்ட இச்சமூகம் அவளுக்கு வாய்ப்புகள் தரப்பட வேண்டும்.

பெண்ணின் கல்வி, சிந்தனை, எண்ணம் எல்லாவற்றிலும் சிறப்புற, சமுதாயம் அவளை கொண்டாடும் நிலையில் வைப்போம்.

**"வந்தே மாதரம் என்போம் - எங்கள்**

**மாநிலத் தாயை வணங்குதல் என்போம்.**

**ஜாதி மதங்களைப் பாரோம் - உயர்**

**ஜன்மம் இத் தேசத்தில் எய்தின ராயின்**

**வேதிய ராயினும் ஒன்றே - அன்றி**

**வேறு குலத்தின ராயினும் ஒன்றே"**[4] என்ற இக்கவிதையில்

தேசிய ஒருமைப்பாட்டிற்கு உயரிய கருதுகோளான வந்தே மாதரம் என்பதை அனைவரும் கூறுவோம். இந்திய தேசத்தை வணங்குவோம். உயர்ந்தவராயினும் எவரும் ஒரே குலம் என்றே எண்ண வேண்டும். மனித குலத்தில் பல சாதிகள் உள்ளன. அனைவரும் ஒற்றுமையாக வாழ வேண்டும். பல காலங்கள் ஒற்றுமையாக வாழ முற்படவேண்டும் என்று சுறுகிறார்.

**"மனதிலுறுதி வேண்டும்**

**வாக்கினி லேயினிமை வேண்டும்"**[5]

ஒற்றுமையுடன் அனைவரும் வாழ மனதில் உறுதி தேவை. நல்ல இனிய சொற்களைப் பேச வேண்டும். நல்ல எண்ணங்களை மனதில் நிலை நிறுத்தி தினமும் தம் கடமையைத் திறம்பட செய்தல் வேண்டும். பெண்கள் கல்வி பெற வேண்டும் என்றும் எடுத்துரைக்கிறார்.

**பாரதிதாசன் கவிதைகளில் 'தேசிய ஒருமைப்பாடு'**

**"தன்பெண்டு தன்பிள்ளை சோறு வீடு**
**சம்பாத்யம் இவையுண்டு தானுண் டென்பேன்"[6]**

மேற்கண்;ட வரிகளில் ஒரு மனிதன் ஒற்றுமையான வாழ அவனுக்கு உதவுவது அவன் வருமானம். மேலும், உணவு மற்றும் உடல் நலம் பேணுதல் ஆகும். நல்லதொரு மனதுடன் மனிதன் இருக்க வேண்டும் தான் வாழும் பகுதியில் ஒருவர் பயனற்று இருந்தாலும் அவருக்கும் உதவியும் நட்புடன் பழக வேண்டும். மேலும் மூத்தவர்க்கு மதிப்பளிக்க வேண்டும். தன் நாடு சுதந்திரம் பெற, பிற நாட்டைத் துன்புறுத்தல் செய்யக் கூடாது என்று கூறுகிறார். மேலும்,

**"ஆயுதங்கள் பரிகரிப்பார். அமைதி காப்பார்.**
**அவர்தம் வீடுநகர் நாடு காக்க**
**வாயடியும் கையடியும் வளரச் செய்வார்"[7]**

அனைத்து மக்களும் தூய உள்ளம் கொண்டும் அன்பும் கொண்டும் அனைவரையும் அரவணைத்துச் செல்ல வேண்டும்.

**"மானிடத் தன்மையைக் கொண்டு - பலர்**
**வையத்தை ஆள்வது நாம்கண்ட துண்டு**
**மானிடத் தன்மைனை நம்பி - அதன்**
**வன்மையினாற்புவி வாழ்கொள் தம்பி"[8]**

தன்னுள் உள்ள மானிட சக்தியை பயன்படுத்தி ஒருவர் இவ்வுலகை ஆள்கிறார். அவருடன் இருப்பவரை துன்பப்படுத்தி வாழ்வர். அந்த மானிட சக்தியைப் பயன்படுத்தி, புவிமக்கள் பயன்பெற்று வாழவைக்க வேண்டும் என்கிறார் பாரதிதாசன்.

**"கனியிடை ஏறிய சுளையும் - முற்றல்**
**கழையிடை ஏறிய சாறும்**
**பனிமலர் ஏறிய தேனும் - காய்ச்சுப்**
**பாகிடை ஏறிய சுவையும்"[9]**

தமிழ்மொழியானது, ஒரு கனியின் சாறாகவும் கனியின் சுளை போன்றும் பூவில் இருந்து வரும் தேன் போலவும் இனிமையானது. பசு தரும் பால் போன்றும் குளிராய் உள்ள நீராகவும் என் உயிராகவும் இருக்கிறது. தமிழ்மொழியினை என் உயிர் தமிழ் என்று

போற்றுவேன். தேன் குடிக்க வரும் வண்டு போலவும் கடல் நீர் அடித்துவரும் அலையாகவும் குயில் பாடும் இசை போலவும் வீணை இசைக்கும் அமுதகானம் போலவும் மழலை பேச்சு போல குரலும் பெண்களின் மகிழ்வும் என எல்லா இடத்திலும் இனிமையாக இருக்கிறது தமிழ்.

**"எளிய நடையில் தமிழ்நூல் எழுதிடவும் வேண்டும்**
**இலக்கணம் நூல் புதிதாக இயற்றுதலும் வேண்டும்"**[10]

தமிழ் மொழியில் இயற்றப்படும் நூல்கள் எளிமையாக இயற்றப்பட வேண்டும் புதுப்புது வகையான இலக்கண நூற்கள் இயற்றப்பட வேண்டும். தமிழ் மொழியில் உள்ள அனைத்து நூல்களும் அனைவருக்கும் கிடைத்திடும் வகையில் இலவச நூற் கழகங்கள் எவ்விடமும் அமைக்கப்பட வேண்டும் என்று கூறியுள்ளார்.

**கவிமணி பாடல்களில் 'தேசிய ஒருமைப்பாடு'**

**"பறந்து பறந்தெங்கும் - திரியும்**
**பறவை வாழ்வினைப் போல்**
**சிறந்த வாழ்வேதும் - இந்தச்**
**செகத்தில் கண்டதுண்டோ?"**[11]

பறவை தம் வாழ்வினைப் என்றும் சுதந்திரமாகவும் இயல்பாயும் செல்வது போல மக்கள் வாழ்வை இந்த உலகில் நாம் கண்டதில்லை. அனைவரும் சாதி, சமயப்பாகுபாடுகள்; இல்லாமல்; சமமாய் வாழ வேண்டும். உயர பறக்கும் பறவைகளில் ஏற்றத்தாழ்வுகள் ஏதுவமில்லை அதுபோல் மானுட வாழ்வும் அமைய வேண்டும். ஒருவர் உயர்ந்தவர், ஏனையோர் தாழ்ந்தவர் என்ற பேதம் இல்லாமல் இருக்க வேண்டும.; ஒற்றுமையை சீர்குலைக்கும் தீமைகள் செய்யாமல் எல்லாரும் நலம் பெற வழிவகை செய்ய வேண்டும்.

**"நாமே நமக்கு துணையானால்**
**நாடும் பொருளும் நற்புகழும்**
**தாமே தம்மைத் தேடிவரும்**
**சற்றும் இதற்கோர் ஐயமுண்டோ?"**[12]

ஒருவன் தன்னைத் தானே அறிந்து எல்லாரிடமும் நட்பு கொண்டு வாழ முயன்றால் நன்மை நம்மை நாடி வரும். இமயத்தின் கருணை கொண்டவர் நெறியவர்க்கு, விஞ்சும் பொறுமை கொண்டவர்க்கு வெற்றியே கிட்டும். ஒருவன் ஊக்கம் கொண்டு உழைத்தால் எப்படிப்பட்ட நிலையிலும் அவன் வாழ்வு உயரும். சாதி சாதி என்று நித்தம் வாழ்வில் சண்டை போடுவது ஒற்றுமையை குலைக்க செய்யும் செயல் ஆகும் என்கிறார்.

**"கூவிப் பறக்கும் ஒரு - கிளியினைக்**
**கூட்டில் அடைத்து வைத்தால்**

தேவர் உலகமெலாம் - அதுசினத்
தீயை யெழுப்பிடுமே!"[13]

ஒரு பறவை சிறகசைத்து பறக்கும் நேரத்தில் அதைக் கூண்டில் அடைப்பது ஒற்றுமையான நபர்களை பிரிப்பதற்கு சமம் சிட்டுக்குருவி சிறகை ஒடிக்க எண்ணினால் அது உயிரைக் கொல்லும் தவறான எண்ணம் ஆகும் என்று இக்கவிதையில் விளக்கம் அளிக்கிறார்.

**முடிவுரை**

தேசிய ஒருமைப்பாடு நன்கு அமைய பயன்பட்ட கருவிதான் புதுக்கவிதை ஆகும். அதன்படி, புதுக்கவிதையின் இலக்கணம் கூறியும் தோற்றம் வளர்ச்சி பற்றியும் அது மேலும் வளர துணைபுரிந்த முக்கவிஞர்கள் பாரதியார், பாரதிதாசன், கவிமணி ஆவார். இவர்கள் கவிதைவழி தேசிய ஒருமைப்பாடு பற்றி இவ்வாய்வுக் கட்டுரையில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

**துணைமை நூல்கள்**

1. வல்லிக்கண்ணன், புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும், ப.70.
2. விகரு.,ராமநாதன், பாரதியார் கவிதைகள், ப.75
3. ச.வே.சுப்பிரமணியன், பாரதிதாசன் கவிதைகள், ப.59.
4. கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை, மலரும் மாலையும், ப.66.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 23. பண்டைய தமிழரின் கைக்கிளை மரபு

**முனைவர் ப.மணிகண்டன்**
நிறுவனர், கலை குழும கல்வி நிறுவனங்கள், ஆண்டிபட்டி, தேனிமாவட்டம்.

DOI 10.5281/zenodo.10701709

**Abstract :**

Ancient Tamils divided the system of people into internal and external. Among these, they have divided the inner self into seven divisions namely Kaiklai, Aindhana, Perundhana, etc. In this way, this article explains only the news about Kaiklai except Aindinha and Perundinha in the way of Tolkappiyam Nimiyakabhavatha.

**Key Words : Grammar – Tholkappiyam – Nampi agam**

## முன்னுரை

பண்டைத் தமிழர்கள் மக்களின் முறையினை அகம், புறம் என இரண்டாகப் பகுத்தனர். இவற்றுள் அகவொழுக்கத்தைக் கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை, என ஏழு திணைகளாகப் பகுத்து விளக்கலாயினர். அவ்வகையில் ஐந்திணை, பெருந்திணை தவிர்த்து கைக்கிளை குறித்த செய்திகளை மட்டும் தொல்காப்பியம் நம்பியகப்பொருள் ஆகிய இலக்கண நூல்களின் வழி விளக்குவதாக இக்கட்டுரை அமைகின்றது.

## கைக்கிளை

கைக்கிளை என்றதில் கை என்பது பக்கம் எனவும் கிளை என்பது கிளைத்தல் அல்லது தோன்றுதல் எனவும் பொருள்படும். மேலும் கை என்பதற்குச் சிறுமை எனவும் கிளை என்பதற்கு உறவு எனவும் பொருள் கொள்ளலாம் எனவே இவற்றின் வழி கைக்கிளை என்பது ஒரு பக்கத்தே தோன்றும் காதல், சிறுமையான உறவு என்பதைக் குறிப்பதாகக் கொள்ளலாம். ஐந்திணை போன்று ஒத்த அன்பினைக் குறிக்காது ஒரு பக்கத்து அன்பினைக் கூறுவதால் சிறுமையான உறவு என அழைக்கப்பட்டது என்று கூற இடமுள்ளது.

**தொல்காப்பியம் கைக்கிளை பற்றி,**

> **“காமாஞ் சாலா இளமையோன்வயின்**
> **எமஞ் சாலா இடும்பை எய்தி**
> **நன்மையும் தீமையும் என்றிரு திறத்தால்**
> **தன்னொடும் அவளொடும் சுருக்கிய புணர்த்துச்**
> **சொல்லெதிர் பெறாஅன் சொல்லி யின்புறல்**
> **புல்லித் தோன்றுங் கைக்கிளைக் குறிப்பே”- (தொல்பொருள்25)**

எனக் கூறுகின்றது. காதல் குறிப்பை அறிந்து கொள்ள இயலாத இளயவளிடம் அடைவான் ஒருவன் கொள்ளும் காதல் நிலையை எடுத்துக் கூறுவதாக இந்நூற்பா அமைந்துள்ளது. இதில் சொல்லெதிர் பெறாஅன் என்பதை நோக்க, தலைவி தனக்குள்ள குறிப்பினை வெளிப்படுத்தாத நிலையினை உடையவள் என்பதை அறிய முடிகிறது. எனவே, தலைவன் காமஉணர்வு

தோன்றாத பெண்ணிடம் தானே காதல் கொண்டு அவளது மறுமொழி பெறாது தானே சொல்லி இன்புறுதல் கைக்கிளை என விளக்கியிருப்பதை இந்நூற்பாவால் அறியலாம்.

காமஞ் சான்ற பருவம் உடையவளாயின் அப்பெண்ணும் தன்னை விரும்பும் அடைவான் மீது காதல் கொள்ள நேரிடலாம். இருவரும் காதல் கொண்டால் அது ஐந்திணையின் பாற்படும் எனவே தான் காமஞ் சாலா பெண்ணிடம் ஆடவன் ஒருவன் கொள்ளும் காதலைக் கைக்கிளைக் குறிப்பு என்று தொல்காப்பியர் கூறினார் எனலாம். இதில் கைக்கிளை என்று கூறி "கைக்கிளைக்குறிப்பு" என்று கூறியிருப்பதற்கான காரணத்தை உற்றுநோக்கினால் காதற்குறிப்பை உணரும் பக்குவத்தைத் தான் விரும்பும் பெண் பெறவில்லை என்பதை உணர்த்தும் அவள் மீது கொண்ட காதலை மாற்றிக் கொள்ள நேரிடும். அவ்வாறு மாற்றிக் கொள்ளும் போது அவன் கொண்ட கைக்கிளைத் தன்மையை விளக்கவே கைக்கிளைக் குறிப்பு எனக் கூறினார் எனலாம். தொல்காப்பியம்கூறியுள்ளஇத்தகையகைக்கிளைபற்றிநம்பியகப்பொருள்,

**"காமம்சான்றஇளமையோள்வயின்**
**குறிப்பறிவுறாதுகுறுகியாங்குஅவளோடு**
**இறப்பக்கூறுவதுஅகப்புறக்கைக்கிளை"-(நம்பி.241)**

எனக் கூறுகிறது. இதில் அகப்புறக் கைக்கிளை எனக் கூறியிருப்பது சுட்டிக் காட்டத்தக்கதாகும். ஒத்த அன்பினை விளக்கக் கூடிய அகவொழுக்கத்தைக் கூறாததால் இதை அகப்புறக் கைக்கிளை என்று நம்பியகப்பொருள் கூறியுள்ளது எனலாம். இவ்வாறு அகப்புறக் கைக்கிளையைக் கூறுவதோடு அகப்பொருள் கைக்கிளை பற்றியும் கூறியுள்ளது குறிப்பிடத்தக்கதாகும் .(நம்பி29) அகப்பொருள் கைக்கிளை என்பது காமஞ் சான்ற பெண்ணிடம் காதல் கொண்ட ஆடவன் அவளது உள்ளக் குறிப்பினை அறியும் வரைத் தன்னுடைய காதலை வெளிப்படுத்தாது தனக்குத் தானே கூறிக் கொள்வதைக் குறிப்பதாகும்.

அகப்பொருள் கைக்கிளை பற்றித் தொல்காப்பியம் கூறவில்லையாயினும் கைக்கிளைக் குறிப்பு பற்றிய நூற்பாவிற்கு உரை எழுதிய இளம்பூரணர். நூற்பாவில் புல்லித் தோன்றும் என்றதனால் புல்லிலாமற் தோன்றும் கைக்கிளையும் கொள்ளப்படும். அஃதாவது காமன் சான்ற தலைமகள் மாட்டு நிகழும் மனநிகழ்ச்சி அது களவியலுள் கூறப்படுகிறது என்று காமஞ் சான்ற பெண்ணிடம் நிகழும் அகப்பொருள் கைக்கிளை பற்றிக் கூறுகின்றனர். களவியலுள் இயற்கைப் புணர்ச்சிக்கு முன் நிகழும் காட்சி, ஐயம் தெளிவு, குறிப்பறிதல் போன்றவை கைக்கிளையின் பாற்படும் என்று இளம்பூரணர் சூட்டியுள்ளார் எனலாம். இக்கருத்தைப் பின்பற்றியே நம்பியகப்பொருளும் அகப்பொருள் கைக்கிளை பற்றிக் கூறியுள்ளது எனக் கருதலாம்.

மேற்குறியவாறு தொல்காப்பியத்தையும் உரையாசிரியரையும் பின்பற்றி நம்பியகப் பொருள் கைக்கிளை பற்றிய கருத்தாக்கத்தைக் கூறியியிப்பதும், கைக்கிளையுடையதொரு தலைக்காமம் நம்பி எனத் தொல்காப்பியம் கூறாத கருத்தை முன்வைக்கிறது. அவ்வாறு

நம்பியகப்பொருள் கூறியுள்ள ஒரு தலைக்காமம் என்பது தலைவன், தலைவி இருவரில் யாரேனும் ஒருவரிடத்து மட்டுமே எழும் காதலைக் குறிக்கும் பொது சொல்லாகும். தொல்காப்பியம் கைக்கிளையை ஆடவனுக்கு மட்டுமே உரியதாகக் கூறியிருப்பதால் இத்தகைய பொதுச்சொல்லைப் பயன்படுத்தவில்லை. இவற்றின் மூலம் தொல்காப்பியர் காலத்தில், தன்காதல் உணர்வை வெளிப்படுத்தும் உரிமை பெண்களுக்கு மறுக்கப்பட்டிருந்ததை அறியமுடிகிறது. இந்நிலை பின் வந்த காலங்களில் மாற்றப்பட்டிருப்பதைச் சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது. சங்க இலக்கிய நூல்களுள் ஒன்றான புறநானூறு பெண் ஒருத்தி ஆடவன் மீது கொண்ட கைக்கிளைக் காதலைச் சுட்டுகிறது. இதனை,

**"ஆடாடென்பவொருசாரோரே**
**ஆடென்றென்பவொருசாரோரே**
**நல்லபல்லோசிறுநன்மொழியே**
**அஞ்சிலம்பொலிப்பவோடியெம்மில்**
**முழாவரைப்போந்தைபொருந்திநின்**
**றியான்கண்டனவைனாடாகுதலே"** - (புறம். 85:3-8)

என வரும் பாடலடிகளின் வாயிலாக அறியலாம். இதில் நக்கணையார், அவனது இயல்பான வெற்றியைச் சிலர் சிறந்த வெற்றி எனக் கூறுகின்றனர். பிறர் கூற்று எத்தகையாயினும் நான் அவனது வெற்றியினைக் கண்டேன், எவ்வாறெனில் அவன் மீது நான் கொண்ட காதலால் எனது வளையும் தோளும் தோற்றன; எனது வளையும் தோளும் தோற்குமாறு அவன் என்னை வெற்றி கொண்டான் என தம் தலைவனான கோப்பெருநற்கிள்ளியின் மீது தான் கொண்ட கைக்கிளைக் தாதலினை வெளிப்படுத்துகின்றனர். எனவே சங்ககாலத்திற்குப் பின் எழுந்த இலக்கண நூல்களைக் கைக்கிளையை ஆடவனுக்கு மட்டுமே உரியதாகக் கருதாமல் ஒருதலைக்காமம் எனப் பொதுப்படக் கூறியிருப்பதைக் காணமுடிகிறது.

**முடிவுரை**

இவ்வாறு மேற்கூறிய செய்திகள் மூலம் தொல்காப்பியத்திற்குப் பின் அகப்பொருள் இலக்கணங்களில் ஏற்பட்டுள்ள வளர்ச்சி மாற்றங்களை நம்பியகப்பொருள் வழி அறிந்து கொள்ளலாம்.

**துணைமை நின்றவை**

1. தொல்காப்பியம் - பொருளதிகாரம்(இளம்புரணர் உரை), கழக வெளியீடு, சென்னை.
2. நம்பியகப் பொருள், கழக வெளியீடு, சென்னை.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 24. பாரதியும் சமத்துவச் சிந்தனைகளும்

முனைவர் எம் எஸ் ஸ்ரீலக்ஷ்மி
மேனாள் விரிவுரையாளர், சிங்கப்பூர் .

DOI 10.5281/zenodo.10701727

**Abstract :**

Mahakavi Subramania Bharati, who is popularly known as 'Singing Pulavan Bharati', is a great poet who has created many innovations in the history of Tamil literature! The unparalleled creator of the twentieth century! He was the creator of new changes not only in the theme of the poem, the structure of the poem and the form of the poem but also in the trend of twentieth century Tamil prose. He prayed for changes and reforms not only in the language but also in the social system. A pioneer as a poet and reformer.

**Key Words : Bharathi – Kavithai – Liberty – Equality**

## முன்னுரை:

'பாட்டுக்கொரு புலவன் பாரதி' என்று பெருஞ்சிறப்புடன் அழைக்கப்பட்ட மகாகவி சுப்பிரமணிய பாரதி தமிழ் இலக்கிய வரலாற்றில் பல புதுமைகளை நிகழ்த்திக்காட்டிய பெருங்கவிஞன்! இருபதாம் நூற்றாண்டின் ஈடு இணையற்ற மாக்கவிஞன்! கவிதையின் பாடுபொருளிலும் கவிதையின் அமைப்பிலும் கவிதையின் வடிவத்திலும் மட்டுமல்லாது இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் உரைநடைப் போக்கிலும் புதிய மாற்றங்களை உருவாக்கியவன். மொழியில் மட்டுமன்றிச் சமூக அமைப்பில் மாற்றங்களையும் சீர்திருத்தங்களையும் வேண்டிப் பாட்டிசைத்தவன். கவிஞன், சீர்திருத்தவாதி என்ற முறையில் முன்னோடியாய் விளங்கியவன். பெண் சமத்துவத்தைப் பெரிதும் வலியுறுத்திய பாரதி கவிதை, உரைநடை என்னும் ஊடகங்களின் வாயிலாகத் பெண்சமத்துவம் குறித்த தம் சிந்தனைகளைப் பகிர்ந்து கொண்டுள்ளான். அதனை ஆராய்வது இக்கட்டுரையின் நோக்கம்.

## பாரதியின் பார்வையும் சமத்துவத்தின் தேவையும்:

குடும்பத்தின் அடிப்படை ஆணும் பெண்ணும். இக்குடும்பமே சமூகத்தின் அடிப்படை அலகு. இச்சமூகம் நாட்டின் ஓர் அங்கம்;இந்நாடு உலகத்தின் ஓர் அங்கம். எனவே குடும்பம் என்னும் அமைப்பு சிறப்பாக இருந்தால்தான் நாடும் உலகமும் செழிப்பாக இருக்கும் என்பது சொல்லாமலே தெரியவரும். குடும்பம் சிறப்பாக இயங்க ஆணும் பெண்ணும் சமபங்கு வகிக்க வேண்டும். ஆனால் பாரதி வாழ்ந்த காலத்தே குடும்பங்களின் நிலை என்ன? 'பாரத ஜனங்களின் தற்கால நிலைமை' என்னும் கவிதை அவர்களைப் பீடித்திருந்த நோய்கள் பற்பல எனக் காட்டுகிறது. அறியாமை,அச்சம், மூடநம்பிக்கை, சாதிப்பாகுபாடுகள் முதலிய 'எண்ணிலா நோயுடையார்'என விவரிக்கின்றது . பாரதமக்கள் ஆங்கிலேயருக்கு மட்டும் அடிமைப்பட்டுக் கிடக்கவில்லை;அறியாமைக்கும் அடிமைப்பட்டுக் கிடந்தனர். தங்களின் நிலை என்ன?தங்கள் பெண்களின் நிலை என்ன? தங்கள் தேசத்தின் நிலை என்ன?என்பதை உணராமல், பாரததேசத்தின் பழம்பெருமையும் தெரியாமல் அடிமை என்னும் மிடிமையில் கிடந்தே உழன்றனர். சமூகத்தின் செம்பாதியாகிய பெண்ணை அடிமைப்படுத்திக் கல்வி கற்க

அனுமதிக்காமல் தாழ்வுற்றுக் கிடப்பதைக் கண்டு "ஆஹா என்று எழுந்தது பார் யுகப்புரட்சி " என்னும் தீர்க்கதரிசனத்துடன் பெண் சமத்துவம் குறித்துப் பலபடப் பாடுகிறான்;பேசுகிறான்;எழுதுகிறான்;புதிய சிந்தனைகளை முன்வைக்கின்றான் பாரதிப் பெரும்புலவன்.

"மாதர் தம்மை இழிவுசெய்யும்
மடமை யைக்கொ ளுத்துவோம்
வைய வாழ்வு தன்னி லெந்த
வகையி னும்ந மக்குளே
தாத ரென்ற நிலைமை மாறி
ஆண்க ளோடு பெண்களும்
சரிநி கர்ச மான மாக
வாழ்வ மிந்த நாட்டிலே "

என சமத்துவத்திற்கு ஓங்கிக் குரல்கொடுக்கின்றான்.பெண்ணடிமை தீருமட்டும் நாட்டில் மண்ணடிமை தீர வழியில்லை என்னும் தெளிந்த நோக்குடன் சமத்துவத்தைப் பாரதி பாடுகிறான்.

**பாரதியின் பாதையும் சமத்துவம் பெறும் வழிகளும்:**

பாரத நாட்டில் பண்டைக்காலத்தில் அனைத்துத் துறைகளிலும் மேன்மை பெற்றிருந்த பெண்ணினம் அயலவர் ஆட்சியினாலும் வேற்று மதத்தவர் ஆட்சியினாலும் காலப்போக்கில் இழிநிலை அடைந்தது. அத்துடன் நில்லாது ஆண்களின் மேலாதிக்கப்போக்கினால் பெண்கள் கல்வி கற்கும் உரிமையும் மறுக்கப்பட்டு அடிமைகளாக நடத்தப்பட்டனர். இந்நிலை மாறிட வேண்டுமானால் பெண்ணினம் மேற்கூறப்பட்ட அடிமைநிலையிலிருந்து விடுதலை பெறவேண்டும். அதனால்தான் பாரதி,

"விடுதலைக்கு மகளிரெல் லோரும்
வேட்கை கொண்டனம் வெல்லுவம் என்றே"

என்று பெண்விடுதலையைச் சமத்துவத்துக்காக முதன்மைப்படுத்துகிறான்.

**மகளிர் மாண்பும் மகாகவியும்:**

பெண்ணடிமை தீர்வதற்குப் பெண்கள் தங்கள் அருமையை உணரவேண்டும். பெண்கள் தாங்கள் யார் என்று எப்போது முதலில் உணர்கிறார்களோ அப்போதே அவர்களின் அடிமைத்தனம் நீங்கும் என்று பாரதி நம்பினான். ஆகவே அவர்களின் அருமை உணரப் பாடுகிறான் .

"வலிமை சேர்ப்பது தாய்முலைப் பாலடா !
மானஞ் சேர்க்கும் மனைவியின் வார்த்தைகள்!

கலிய ழிப்பது பெண்கள றமடா!
கைகள் கோர்த்துக் களித்துநின் றாடுவோம் !"

என்று தாய் ,தாரம் ஆகிய பெண்களின் ஆற்றலைப் பாடுகிறான். பெண்மை என்பதன் சிறப்பு யாது?

"உயிரைக் காக்கும் , உயிரினைச் சேர்த்திடும்
உயிரினுக் குயிரா இன்ப மாகிடும்
உயிரி னும்இந்தப் பெண்மை இனிதடா !
ஊது கொம்புகள்; ஆடு களிகொண்டே!"

எனப் பெண்மையின் இனிமை கண்டு பெண்கள் வாழ்க என்றும், பெண்மை வெல்க என்றும் ஆனந்தக் கூத்தாடுகிறான்.

**பெண்விடுதலையும் ஆண்களின் பங்கும் :**

பாரதி பெண்விடுதலை, பெண்ணுரிமை, பெண்கல்வி, பெண்கள் முன்னேற்றம் முதலியவை குறித்து எழுதியும் பேசியும் வந்தவை 'மாதர்' என்னும் தலைப்பில் கட்டுரை நூலாகத் தொகுக்கப்பட்டு 1957இல் ஸ்ரீமகள் கம்பெனியால் வெளியிடப்பட்டது. அந்நூலில்,

"பரிபூரண சமத்துவம் இல்லாத இடத்தில் நாம் ஆண்மக்களுடன் வாழமாட்டோம் என்று சொல்வதனால் நமக்கு நம்முடிய புருஷராலும் சமூகத்தாராலும் நேரத்தக்க கொடுமைகள் எத்தனையோ ஆயினும் , எத்தன்மை உடையவையாயினும் நாம் அஞ்சக்கூடாது. சகோதரிகளே! ஆறிலும் சாவு நூறிலும் சாவு; தர்மத்துக்காக இறப்போரும் இறக்கத்தான் செய்கிறார்கள்.பிறரும் இறக்கத்தான் செய்கிறார்கள் .ஆதலால் சகோதரிகளே! பெண்விடுதலையின் பொருட்டாக தர்மயுத்தம் தொடங்குங்கள்.நாம் வெற்றி பெறுவோம். நமக்குப் பராசக்தி துணைபுரிவாள்." (மாதர் , ப- 21 ). என்று உத்வேகம் ஊட்டுகிறான்.

பெண்களுக்கு உற்சாகமூட்டிப் போராடத் தூண்டிய சக்திதாசன், ஆண்களையும் அவர்களின் மேலாதிக்கக் குணத்தையும் இடித்துரைக்கிறான். 'மதிகெட்டீர்' என ஆண்களைச் சாடவும் செய்கிறான். ஒவ்வொரு குடும்பத்தில் உள்ள ஆண்மக்களும் தங்கள் வீட்டில் உள்ள பெண்களை மதித்து அவர்களை உரிமையுடன் நடத்தி வந்தால் நாட்டில் பெண்ணடிமைத்தனம் நாட்டில் ஒழிந்துவிடும் என்று உறுதியான பாதையைக் காட்டி அதில் பயணிக்கவேண்டிய வழிமுறையையும் எடுத்துரைக்கிறான்.

"பெண்ணுக்கு விடுதலைஎன் றிங்கோர் நீதி
பிறப்பித்தேன்; அதற்குரிய பெற்றி கேளீர் !
மண்ணுக்குள் எவ்வுயிருந் தெய்வ மென்றால்
மனையாளும் தெய்வ மன்றோ மதிகெட்டீரே "

என்று வினவுகிறான். பெண்ணை அடிமைசெய்வது கண்டு நெஞ்சு பொறுக்காமல் மதிகெட்டவர்கள் என்று ஆணினத்தைச் சாடுகிறான். பெண்ணினத்தின் மாண்பினை எடுத்துரைத்து அவர்கள் இல்லையேல் வாழ்க்கையில்லை என்னும் உண்மையை உணர்த்துகிறான்.

"பெண்ணுக்கு விடுதலை நீரில்லை என்றால்
பின்னிந்த உலகினிலே வாழ்க்கை இல்லை "

என்னும் மெய்ம்மையை மதியுரையாக மதிகெட்டவர்களுக்கு உரைக்கிறான்.

ஆடவர்கள் பெண்களை அடிமையாக நடத்துவதைக் கொடுங்கோலாட்சிக்கு உவமிக்கிறான் ( மாதர், ப- 24 )மேலும். ஆணும் பெண்ணும் பரஸ்பரம் அன்பைப் பரிமாறிக்கொள்வதுதான் அச்சத்தை உண்டாக்காது என்பதையும் அச்சத்தினால் அன்பை விளைவிக்கமுடியாது என்னும் உண்மையையும் ஆணினத்துக்கு அறிவுரையாகக் கூறுகிறார். அச்சத்தினால் பெண் தொடர்ந்து அடிமையாகவே இருப்பாள் என்று எதிர்பார்க்காதீர்கள்; அவ்வாறு எதிர்பார்த்தீர்களாயின் பின்விளைவு பாதகமாகவே அமையும் என்ற எச்சரிக்கையையும் ஆணினத்துக்குக் கீழ்க்கண்டவாறு விடுக்கிறான்.

"ஸ்திரீகள் புருஷரிடம் அன்புடன் இருக்க வேண்டினால் புருஷர் ஸ்திரீகளிடம் அசையாத பக்தி செலுத்தவேண்டும். பக்தியே பக்தியை விளைவிக்கும். நம்மைப் போன்றதொரு ஆத்மாஅச்சத்தினாலே அடிமைப்பட்டிருக்கும் என்று நினைப்பவன் அரசனாயினும் குருவாயினும் புருஷனாயினும் மூடனைத் தவிர வேறில்லை. அவனுடைய நோக்கம் நிறைவேறாது; அச்சத்தினால் மனுஷ்ய ஆத்மா வெளிக்கு அடிமைபோல நடித்தாலும் உள்ளே துரோகத்தை வைத்துக்கொண்டுதான் இருக்கும். அச்சத்தினால் அன்பை விளைவிக்க முடியாது." (மாதர்,பக்- 24-25).

ஆணினத்துக்கும் அறிவு கொளுத்தும் பாரதி ஆண்மக்களின் வீரம்தான் பெண்களைக் காக்கவேண்டும் என்றும் அப்போது சமுதாயம் தாழ்வகற்றி உயரும் என்கிறான்.

"பெண்ண றத்தினை ஆண்மக்கள் வீரம்தான்
பேணு மாயின் பிறிதொரு தாழ்வில்லை"

என்று உறுதிபடக் கூறுகிறான்.

**பன்முகப் பரிமாணமும் பெண்விடுதலையும் :**

பெண்விடுதலையின் மற்றொரு அம்சமான வாக்குரிமையைப்பற்றியும் பாரதி விளக்குகிறான் . இங்கிலாந்து, துருக்கி போன்ற மேலைநாடுகளில் பெண்கள் வாக்குரிமை பெற்றுள்ளதையும் அதன் விளைவுகளையும் பெண்விடுதலை என்ற தலைப்பில் இரண்டு கட்டுரைகளாக வடித்து மிக விரிவாகவும் அழுத்தம் திருத்தமாகவும் கூறுகிறான். அவன் உதாரணம் காட்டும் பெண்கள் பெண்கல்வியின் பயனாக எழுத்துத்துறையிலும், கவிதைத்துறையிலும், பேச்சாற்றலிலும் சிறந்துவிளங்கியவர்கள். சுதேசமித்திரன் பத்திரிகை

ஆசிரியர் கோபாலையர் மனைவி வேதவல்லி அம்மையார், அன்னிபெசன்ட் அம்மையார், கவிக்குயில் சரோஜினி நாயுடு முதலியோர் முன்னுதாரணப் பெண்மணிகளாகக் கட்டுரையில் இடம்பெறுகின்றனர். ராமராயருக்கும் வேதவல்லி அம்மைக்கும் நடக்கும் விவாதத்தில் பெண்களின் திறமைகளைக்குறித்து ராமராயரிடம் விவாதிக்கிறாள்.

பெண்களுக்கு விடுதலை கொடுத்தால் ஜனசமூகம் குழம்பிப்போய்விடும் என்று மக்களில் சிலர் சொல்வதையும் பாரதி கூறும்போது நமக்கு நாமே எதிரி என்றே எண்ணத்தோன்றுகிறது. விடுதலை என்பதற்கு நல்லதொரு விளக்கமாக ஹெர்பெர்ட் ஸ்பென்சர் கூறுவதைப் பாரதி கீழே தருகிறான்.

"விடுதலையாவது யாது? ----------- பிறருக்குக் காயம்படாமலும் பிறரை அடிக்காமலும், வையாமலும், கொல்லாமலும், அவர்களுடைய உழைப்பின் பயனைத் திருடாமலும் , மற்றபடி ஏறக்குறைய ' நான் எது பிரியமானாலும் செய்யலாம் 'என்ற நிலையில் இருந்தால் மாத்திரமே என்னை விடுதலையுள்ளன் மனிதனாகக் கணக்கிடத் தகும் . பிறருக்குத் தீங்கில்லாமல் அவனவன் தன இஷ்டமானதெல்லாம் செய்யலாம் என்பதே விடுதலை என்கிறார் ஹெர்பெர்ட் ஸ்பென்சர் " ( மாதர், ப- 33).

சொத்துரிமை வழங்குவது , கணவன் இறந்தால் மறு விவாகம்செய்துகொள்வது, பெண்கள் சுய தொழில் செய்வது , குழந்தை மணத்தைக் கைவிடுவது ,விவாகரத்துப் பெறும் உரிமை பெறுவது முதலிய பல்வேறு படிகளை அடையாளம் காட்டுகிறான்.இவையெல்லாம் பெண்கள் பெறவிருக்கும் விடுதலைக்கு வழிசமைக்கும் என்கிறான்.

**பெண்கல்வியும் சமத்துவம் பெறும் சாகசமும்:**

பெண் விடுதலை அடைந்து சமத்துவநிலை எய்தவேண்டுமாயின்அவர்களுக்குக் கல்வி கற்பிக்கப்பட வேண்டும் என்ற கொள்கையை வலியுறுத்துகின்றான் பாரதி. கல்வியின் மூலம் பெறும் அறிவின் ஆற்றலை எடுத்துரைக்கிறான்.

"அறிவின் வலிமையே வலிமை. அறிவினால் உயர்ந்தோர்களை மற்றோர் இழிவாகநினைப்பதும்,அடிமைகளாக நடத்துவதும் சாத்யப்படமாட்டா. அறிவின் மேன்மையால் வெளித்தேசங்களிலே உயர்ந்த கீர்த்தி படித்து மீள்வோரை, அதன் பிறகு இந்த தேசத்தார் கட்டாயம் போற்றுவார்கள். சில ஹிந்துஸ்திரீகள் வெளிநாடுகளுக்குச் சென்று உயர்ந்த கீர்த்தி சம்பாதித்துக்கொண்டு வருவார்களாயின் அதனின்றும் இங்குள்ள ஸ்திரீகளுக்கெல்லாம் மதிப்பு உயர்ந்து விடும்"( மாதர், ப- 44)

இந்த அறிவுரையைத் தமிழ்நாட்டு மாதருக்கு என்னும் கட்டுரையில் பாரதி எழுதுகிறான். மேலும்,

"தமிழ்நாட்டு மாதர் சம்பூர்ணமான விடுதலை பெறவேண்டுவாராயின் அதற்குக் கல்வித் தோணியே பெருந்துணையாம்" (மாதர், ப- 45)

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

என்று பரிபூரணமான நம்பிக்கை வைக்கிறான். சாத்திரங்கள் கற்றுச் சமுதாயத்துக்குச் சவுரியங்கள் செய்யக் கல்வி அவசியம் என்பதைப் 'புதுமைப்பெண்' என்னும் தலைப்புடைய கவிதையிலும் சொல்கிறான்.

"உலக வாழ்க்கையின் நுட்பங்கள் தேரவும்
ஓது பற்பல நூல்வகை கற்கவும்
.....................................................................................
வீரப் பெண்கள் விரைவில் ஒழிப்பராம் "

எவ்வளவு ஆழமான நம்பிக்கை ! பாரதியின் தீர்க்கதரிசனத்தால் பெண்கள் இன்று மேன்மையுடன் விளங்கக் காண்கிறோம். பாரதியின் புதுமைப்பெண் பெண்களுக்குச் சுதந்திரம் உண்டு என்று கூறுவதை எவ்வளவு இனிமை யானதாக உணர்கிறான் பாருங்கள்! தேசியக்கவியின் இப்பற்று,

"மாதர்க் குண்டு சுதந்திரம் என்றுநின்
வண்ம லர்த்திரு வாயின் மொழிந்தசொல்
..............................................................................
சாதல் மூத்தல் அழிதல் கெடுக்கும் அமிழ்தமோ?
தையல் வாழ்கபல் லாண்டுபல் லாண்டிங்கே!"

என்று புதுமைப்பெண்ணை வாழ்த்தி மகிழ்கையில் வெளிப்படுகின்றது. பெண்கல்வி என்ற ஆயுதத்தின் மூலமே அறியாமை,அடிமை, அச்சம் முதலியவற்றை அழிக்க முடியும் என்று ஆழமாக நம்பினான். ஆகவே பெண்கள் விடுதலைக் கும்மியில் ,

"நம்மைப் பிடித்த பிசாசுகள் போயின
நன்மை கண்டோம் என்று கும்மியடி"

என்று பாடிச் சமூக மாற்றத்தையும் அதன் வழி முழுமையான சமத்துவத்தையும் எட்ட முடியும் என்கிறான்.

சமத்துவத்தின் பலன் என்ன? பெண்ணடிமைத்தனம் என்னும் பேய் ஒழியும். இவ்வையம் மேன்மை பெறும் என்பதை ,

"ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்
அறிவில் ஓங்கி இவ்வையம் தழைக்குமாம் "

புதுமைப்பெண்ணின் வாய்மொழியாக உரைக்கிறான்.

**முடிவுரை:**

பெண்ணியம் பேசிய பெருங் கவிஞன் பாரதி! பாலின சமத்துவம் முதலான சமத்துவங்களை இன்றைய தமிழ் உலகம் பேசுவதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்னரே 'சம்பூர்ண சமத்துவம்' பெறக் கால்கோள் செய்தவன்! பெண்ணுரிமை, பெண்கல்வி, பெண்ணடிமைத்தனம் போக்குதல் எனப் பல வழிகளில் சிந்தித்தவன்! சமத்துவத்தின் பயனைப் புதுமைப்பெண்ணின் வாய்மொழியாக உலகுக்கு அறிவித்தவன்!

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 25. புறநானூறு கூறும் மன்னர் புலவர் உறவு சுதந்திரம்

**ச.முருகலெட்சுமி,**

உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை. காமராஜ் மகளிர் கல்லூரி, தூத்துக்குடி.

DOI 10.5281/zenodo.10702406

**ஆய்வுச்சுருக்கம்**

The Tamil language, which appeared during the time of the Kaldonri man, has become a classical language with rich literature and grammar. Literature is called the mirror of time. Our ancestors lived knowing how to live their lives in harmony. They had the freedom to live life to the fullest. Everyone in the society exchanged ideas with others without any fear or trepidation, the most delicate of which is considered to be the relationship between the king of the time and the poet. The relationship between the two was seen without the contempt of the king as a peasant and the fear of the peasant as the king. Poets acted as advisors to the king at all stages of his life. Patrons go beyond being nocturnal and function independently in society. The common people of that time also expressed their opinion with a sense of freedom without any restrictions. Even though the poets lived a life of earning money from the king, they fulfilled their duty. The poets not only sang the praises of the king but the two lived in close friendship.

## முன்னுரை

தமிழரின் வாழ்க்கை முறையை அகம், . புறம், எனப் பிரித்தனர் அகம் மனிதனின் இல்லற வாழ்க்கைச் சார்ந்ததாக அமைந்தது. புற வாழ்க்கை அவனது அக வாழ்க்கையை தீர்மானிக்கும் காரணிகளாக செயல்பட்டது. புறவாழ்வில் அவனுடன் இருக்கும் மாந்தர்கள் அக வாழ்வில் அரசனை வழி நடத்தினார்கள். அதன் வழி மன்னனுக்கு புறத்திலும், அகத்திலும் துணையாக நின்றவர்கள் புலவர் பெருமக்கள் இருவருக்கு இடையே உள்ள உறவானது எவ்விதத் தடங்கலும் இன்றி சுதந்திரத் தன்மையுடன் காணப்பட்டது என்பதை புறநானூறு வழி ஆராய்வதாக இவ்வாய்வு அமைகின்றது.

## பரிசிலர்வாழ்க்கை

மன்னனுக்கும் புலவர்க்கும் இடையே உள்ள உறவானது சுதந்திரமானது எனினும் பரிசில் பெற்று வாழும் வாழ்க்கையே புலவர்கள் வாழ்ந்து வந்தனர்.

**"பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்**

**சென்றுபயன்எதிரச்சொன்னபக்கம்"1**

எனத் தொல்காப்பியம் பரிசிலர் வாழ்க்கைக்கு இலக்கணம் கூறுகின்றது. மன்னனின் புகழையும், வீரத்தன்மையும், கொடைத்தன்மையும் புகழ்ந்து பாடுவதைத் தொழிலாகக் கொண்டு அவன் தரும் பொருளைக் கொண்டு தானும் தன் சுற்றமும் வாழ்ந்து வரும் மரபினை உடையவர்கள், எனினும் மன்னன் பொருள் தர தாமதமாகும் பொழுது சற்றும் தயங்காமல்காமல் அதனை மறுக்கும் சுதந்திரமும் பெற்று காணப்பட்டனர்

**"இரவலர் புரவலை நீயும் அல்லை**

**புரவலர் இரவலர்க்கு இல்லையும் அல்லர்"2**

இவ்வுலகில் புலவருக்கு கொடுக்க பல புரவலர்கள் உள்ளனர் நீ மட்டும் இல்லை எனக் கூறி வெளியேறும் தன்மையைப் பெற்றவர்களாக சமூகத்தில் வாழ்ந்தனர். மன்னன் புலவன் என்ற ஏற்றத்தாழ்வு இன்றி காணப்படும் சமுதாயமாக அமைந்திருந்ததை காண முடிகின்றது. புலவரைக் காணாமல் மன்னன் கொடுக்கும் பரிசிலை ஏற்காமல் தாங்கள் 'வணிகப்பரிசிலன் 'அல்லன் எனக்கூறிச் சென்றனர்.

**நட்பு**

மன்னனும், புலவரும் ஒருவருக்கொருவர் உயிருக்கு உயிரான நட்புடன் வாழ்ந்தனர். இவர்களின் நட்பானது சிரித்து பேசி மகிழ்வதற்காக அன்று மாறாக

**"அழிவி னவைநீக்கி ஆறுய்த்து அழிவின்கண்**

**அல்லல் உழப்பதாம் நட்பு"3**

நண்பருக்குத் துன்பம் வரும் பொழுது அதனை விலக்கி அவனை நிலைபெறச் செய்து தன்னை மீறிய அழிவின்போது தானும் அவனோடு துயரப்படுவதே நல்ல நட்பாகும். என வள்ளுவரும் கூறுகின்றார்

**"தென்னம் பொருப்பன் நல் நாட்டுள்ளும்**

**பிசிரோன் என்ப என் உயிர் ஓம்புநனே"4**

எனப் பிசிராந்தையாரின் நட்பைக் காண முடிகின்றது. ஒருவரை ஒருவர் காணாமல் நட்பு கொண்டனர். தான் துன்பப்படும் பொழுது தன் நண்பன் வருவான் எனக் கோப்பெருஞ்சோழன் எண்ணி சோழன் அவருக்காகக் காத்திருந்தான். என வரலாற்றுச் சிறப்புமிக்க நட்பாக அது காணப்படுகின்றது. அவ்வை அதியமான் நட்பு அரிதில் கிடைத்த நெல்லிக்கனியை தான் உண்ணாது ஔவை உண்ண வேண்டும் என அவருக்கு வழங்கிய குணம் நட்பின் எல்லையைத் தாண்டி செல்கின்றது. என புலவர்கள் எளியவர்களாயினும் அவர்களுடைய உறவில் சுதந்திரப் பிணைப்பு காணப்படுகின்றது. நட்பு மட்டுமின்றி பெண்பாற் புலவர்கள் மன்னனை காதலிக்கவும் செய்தனர். போர்வை கோப்பெருநற்கிள்ளியின் ஆட்சியை எதிர்பார்த்து இரண்டு பட்ட ஊர் போல் எனது மனமும் கலங்குகிறது என்பதை

**"வெள்ளி வீதியைப் போல நன்றும்**

**செலவு அயர்ந்திசினால் யானே பலபுலந்து"5**

வெள்ளி வீதியைப் போல நானும் எனது கணவனைத் தேடி அலைகின்றேன் என ஆசிரியர் கூறுவதன் வழி புலவர்களும் மன்னனைக் காதலித்தனர் என்பது புலனாகிறது.

**தூதுபோதல்**

மன்னர்களின் ஆட்சிக் காலத்தின் போது பகை அரசர்களுக்கு இடையே போர் ஏற்படுவது வழக்கமான ஒன்றாக இருந்தது. போரின் போது உயிரிழப்புகள், பொருட்சேதம் உண்டாகும் இதனைப் புலவர் பெருமக்கள் விரும்பாது இருவருக்கும் இடையே நல்ல எண்ணத்தை உருவாக்கும் பொருட்டு எதிரி நாட்டு மன்னனிடம் தூது சென்றனர். இரு நாட்டின் நன்மையும் கருத்தில் கொண்டு நடுவு நிலைமையோடு செயல்பட்டனர்

**யாவிர் ஆயினும் கூழை தார் கொண்டு**

**யாம் பொருதும் என்றல் ஓம்புமின்"[6]**

என் தலைவன் படையை உங்கள் கூழைப் படை கொண்டு வெல்ல முடியாது என்றும், அவனுடைய ஆயுதங்கள் பகைவர்களைக் குத்தி அதன் கூர்மையானது மழுங்கி கொல்லன் உலையில் கிடக்கும் செய்தியை

**"பகைவர்க் குத்தி கோடு நுதி சிதைந்து**

**கொல் துறைக் குற்றில் மாதோ"[7]**

என தனது உயிர் நண்பனான அதியமானின் படையின் வலிமையை ஔவையார் எடுத்துக் கூறுகின்றார்.

**இல்லற வாழ்க்கை**

ஒரு நல்ல நண்பனின் செயல் புற வாழ்க்கையில் மட்டுமல்ல அகவாழ்வில் ஏற்படும் பிரச்சனைகளையும் தீர்த்து அவனை இல்லறம் என்னும் நல்லறத்தில் வாழவைப்பதாக அமைய வேண்டும். சங்க காலப் புலவர்கள் மன்னனின் அரசியல் வாழ்வு மட்டும் இன்றி அவர்களின் இல்லற வாழ்வில் கணவன், மனைவி இடையே ஏற்படும் பிணக்குகளைத் தீர்த்து வைப்பதற்கான முயற்சியும் மேற்கொண்டனர். பேகனுக்ககும் அவனது மனைவி கண்ணகிக்கும் இடடையே பிரிவு வந்தபோது பேகனின் புலவரான பரணர் மன்னனுக்கு புரியும் வகையில் எடுத்துரைத்து இதுவரையும் சேர்த்து வைக்கின்றார்.

**" யாம்அவன் கிளைஞரேம் அல்லேம் கேள்இனி**

**எம்போல் ஒருத்தி நலன் நயந்து "என்றும்**

**வரூஉம் என்ப வயங்கு புகழ்ப் பேகன்"[8]**

மன்னனின் மனைவியும் தன் மனக்கருத்தை புலவரிடம் கூறும் தன்மை உடையவராக காணப்பட்டனர். பரணரிடம் மன்னனின் பரத்தமை ஒழுக்கத்தை கண்டு கூறுகின்றார். நான் அவரின் உறவுக்காரி இல்லை என் போன்ற வேறொரு பெண்ணை தேடிச் செல்கின்றான் எனக் கூறி தன் அணிகலன் நனையும்படி கூறுகின்றாள். பரத்தமை ஒழுக்கத்திலிருந்து ஒவ்வொரு பெண்ணும் தன் கணவனைக் காக்கும் பொருட்டு காவல் அமைப்பர் என்பதை நற்றிணை

**"காவல் செறிய மாட்டி ஆய்தொடி எழில் மாமேனி மகளிர்**

**விடுமாந்தர் தம் கொழுநரைக் காத்தே"[9]**

தன் கணவனின் கவனம் பரத்தை மாட்டுச் செல்லாமல் இருக்க தலைவி பல வழிகளில் முயற்சி செய்வாள் என்பதை அறிய முடிகின்றது. புலவர் பெருமக்களின் அறிவுரையை நாடாளும் அரசன் பெரிதாக எண்ணினான். இன்றைய சூழலில் கணவன் மனைவி இடையே பிரச்சனை ஏற்படும் போது பெரியவர்கள் தம்பதிகளுக்கு ஆலோசனைக் கூறி அழைத்து வர சொல்லுவது போல மன்னனை அவனது மனைவி பிரிந்து செல்லும் பொழுது புலவர்கள் மன்னனுக்கு அறிவுரை கூறுகின்றனர் என்பதை

**"நல்கமையின் நைவரச் சாஅய்**

**அருந் துயர் உழக்கும் நின் திருந்துஇழை அரிவை"[10]**

என்ற வரிகள் விளக்குகின்றன.

**மன்னனை நல்வழிப்படுத்தல்**

மன்னன் தன் வாழ்வில் கொடை, விருந்தோம்பல், இல்லறம், போர் எனப் பல வழிகளில் தன் கவனத்தைச் செலுத்துவர் எனினும் அவனது தலையாயக் கடமை நாட்டை நன்முறையில் ஆட்சி செய்வது ஆகும். இதில் ஏதேனும் இடையூறு ஏற்படும் பொழுது அதை சரி செய்ய வேண்டிய கடமை புலவரைச் சார்ந்தது. போரின்போது ஏற்படும் சேதத்தை தடுக்க வேண்டும் என எண்ணி

**"நல்ல எண்ணாது சிதைத்தல் வல்லையால்**

**நெடுந்தகை செருவத் தானே "[11]**

போர்க்களத்தில் ஏற்படும் சிதைவை எண்ணிப் பார்த்து அதனைக் கைவிட வேண்டும் என கூறுகின்றனர். மன்னன் தவறு செய்யும் பொழுது அதனை நேருக்கு நேராகக் கூறி நல்வழிப்படுத்தினர். தன் மன்னனைக் காட்டிலும் வேற்று அரசன் நன்முறையில் செயல்பட்டான் எனில் உன்னைவிட சிறந்தவன் அவன் என்பதை கூறவும் மறுக்கவில்லை.

**“வென்றோய் நின்னினும் நல்லன் அன்றே**

**கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை**

**மிகப் புகழ் உலகம் எய்திப்**

**புறப்புண் நாணி வடக் கிருந்தோனே”[12]**

கரிகாலன் போரில் வெற்றி பெற்றாலும் போர்க்களத்தில் புறப்புண் நாணி வடக்கிருந்து உயிர்விட்ட பெருஞ்சேரலாதனே சிறந்தவன் என வெண்ணிக்குயத்தியார் மன்னனிடம் கூறுகின்றார். ஏனெனில் நல்வழிப்படுத்துபவர் ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் இருத்தல் வேண்டும் என்பதை

**"இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்**
**கெடுப்பா ரிலானுங் கெடும்"**[13]

கடிந்து அறிவுரைக் கூறும் பெரியாரின் துணை இல்லாக் காவலற்ற. அரசன் தன்னைக் கெடுக்கும் பகைவர் இல்லாவிட்டால் கெடுவர். என்பதன் வழி மன்னனுக்கு அறிவுரை கூற பல சான்றோர்கள் காணப்படினும். புலவரின் அறிவுரை ஒரு நண்பரின் அறிவுரை போல காணப்பட்டதை அறிய முடிகின்றது.

**முடிவுரை**

சமூகத்தில் இருவருக்கு இடையே ஏற்படும் நட்பு என்னும் உறவானது அச்சம் இல்லாமலும் , தயக்கம். இல்லாமலும் செயல்படும் பொழுது தான் அங்கு சுதந்திரம் எனும் காற்றை சுவாசிக்க முடியும். மன்னர் புலவர் உறவு என்பது பொருளாதார நிலையில் பெரும் ஏற்றத்தாழ்வு உடையது எனினும் அவர்களிடையே எவ்வித வேற்றுமையும் இன்றி வாழ்வில் ஒவ்வொரு கட்டத்திலும் உடன் இருக்கும் உறவாக காணப்படுகின்றது. மன்னனும், புலவர்கள் கூறும் அறிவுரையை ஏற்று வாழும் தன்மை உடையவர்களாக காணப்பட்டனர். சங்ககால புறநானூற்றுப் புலவர் மன்னர் உறவு சுதந்திரத் தன்மையுடன் எவ்வித இடையூறும் இன்றி செயல்பட்டது என்பதை புறநானூறு வழி அறிய முடிகின்றது.

**துணை நூற்பட்டியல்**

1. புறநானூறு மூலமும் - உரையும் ,புலியூர்க்கேசிகன்,
   சாரதா பதிப்பகம் சென்னை 600 014,
2. திருக்குறள் - புலவர் குழந்தை, பூம்புகார் பதிப்பகம், சென்னை - 108..
3. அகநானூறு - ஜெயபால்(உ.ஆ), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,சென்னை- 98,
4. நற்றிணை - பாலசுப்பிரமணியன் கு. வெ. (உ.ஆ) நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,சென்னை-
5. தொல்காப்பியம் - இளம்பூரணர்( (உ. ஆ),சாரதா பதிப்பகம்,சென்னை.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 26. ஆலடி பஸ், அவரவர்பாடு சிறுகதையின் வழி பெண்ணிய உளவியல்

**ஜெ.கங்காதேவி (MKU22PFOL10380),**
முனைவர் பட்ட ஆய்வாளர், அருள் ஆனந்தர் கல்லூரி, கருமாத்தூர்.

DOI 10.5281/zenodo.10702438

**Abstract :**

Half of the world's women are oppressed in different ways across nations and races. The psychological struggles of women in Tamil novels have been analyzed by T.S. Natarasan refers to "seeing the path of the Creator as an inner emotional reflection". Accordingly, the short stories of "Aladi bus" "Avaravarpadu" which emerges in the levels of story structure, character development, and story event explain.

**Key Words : Short story – psychology – Tamil Novels**

### முன்னுரை:

உலகத்தின் ஒரு பாதியான பெண், நாடுகள் தோறும், இனங்கள் தோறும் வெவ்வேறு வழிமுறைகளில் ஒடுக்கப்படுகிறாள். சமூகத்தில் நிலவிவரும் பாலின வேற்றுமை அடிப்படையிலான ஆழ்மனப் பாதிப்புகளும், விடுதலை நோக்கிய பெண் மனப் போராட்டங்களும், முயற்சிகளும் தமிழ்ப்புனைகதகளில் பெண்களின் உளவியல் சார்ந்த போராட்டங்களை திறனாய்வாளர் தி.சு. நடராசன் அவர்கள் "உள்ளத்து உணர்வுப் பிரதிபலிப்பாக படைப்பாளனின் நடையைக் காணுதல்" என்பதைக் குறிப்பிடுகிறார். அதன்படி, கதைக் கட்டமைப்பு பாத்திரப்படைப்பு, கதைநிகழ்வு எனும் நிலைகளில் வெளிப்படும் இமையத்தின் "ஆலடி பஸ்" "அவரவர்பாடு" சிறுகதைகள் விளக்குகின்றன.

### பெண்ணிய உளவியல்:

பெண்ணின் உணர்வுக்காட்சி, கற்றல் பிரச்சனைகளைத் தீர்த்தல், காரணம் அறிதல், எண்ணுதல், நினைவகம், கவனம், மொழி மற்றும் மனவெழுச்சி ஆகியவை இன்று ஆராயப் பெறுகின்றன. மனதில் செயல்முறையால் அதன் நடைமுறையால் பெறும் செய்திகளும் அறிவாற்றல் உளவியலாக அமையப்படுகின்றன. நோயம் சோம்ஸ்கி என்னும் உளவியலாளர் "அறிவாற்றல் புரட்சி" ஒன்றை அறிமுகப்படுத்தினார். நடத்தயியலாளர்கள் தூண்டுதல், எதிர் செயல் வலிமையூட்டுதல், மனித நடத்தைக்குரியதை பெண்ணிய நிலையிலும் ஆராய்ந்துள்ளனர் என்பதை அறியமுடிகின்றது. இயல்பான நடத்தை, நெறிபிறழ் நடத்தை, செயல்புரிய இயலாமை, தனிப்பட்ட மன இறுக்கம் சமூக நெறிமுறைகளை மீறிய நிலை அல்லது செயல்முறை மீறல் பற்றிய ஆய்வுகளும் மெண்ணியம் சார்ந்து மேற்கொள்ளப்படுகின்றன.

ஒப்பிட்டுப் பார்த்தல், வாழ்க்கை தொழில் சார்ந்த உடல்நலம், ஆளுமை இணங்க வைத்தல் ஆகியவற்றின் அடிப்படையில் உளவியல் அணுகுமுறையோடு சமூகத்தில் உள்ள குறைகளை ஆராய்ந்து அறிந்து பெண்களின் செயல்பாட்டை அறிவதற்கும் நிலை

நிறுத்துவதற்கும் பெண்ணிய ஆய்வுகளில் ஈடுபடும்போது அது பெண்களின் பல்வேறு திறன்களை மேம்படுத்திக் கொள்வதற்கு வழிகாட்டுகின்றது. எனவே, பெண்ணிய ஆய்வுகளில் உளவியல் அணுகுமுறையோடு ஒப்பிட்டு ஆய்வு செய்வது மிக உரிய நன்னடத்தைகள், ஆளுமைகள், முடிவெடுத்தல், செயல்நிலைபடுத்தல் ஆகியவை பெண்களிடம் நல்ல தாக்கத்தை ஏற்படுத்தும்.

பெண்ணிய உளவியலும், பெண்ணியமும் ஒன்றோடு ஒன்று தொடர்புடையவை என்பதனால் சிறுகதைகளில் அமைந்துள்ள கதைகரு, கதாபாத்திரங்களின் பண்புகள் ஆகியவை ஆராயப்பெற்று பெண்ணின் ஒவ்வொரு நிலையும் கண்டறியும் போது அதனைப் படிப்பவர்கள் தங்களை ஆளுமைப் பண்புள்ளவர்களாக உருவாக்க முடியும் என்னும் அடிப்படையில் இக்கட்டுரை ஆராயப்படுகின்றது.

மனித வாழ்க்கைக்கு அடித்தளமே பொருளாதாரம் தான், குடும்ப வளர்ச்சிக்கும் மேம்பாட்டிற்கும் ஆதாரமாக அமைவது பொருள் தன் தேவைகளையும் குடும்ப தேவைகளையும் நிறைவேற்ற வேண்டிய பொறுப்பும் கடமையும் ஆணுக்கு மட்டுமல்ல பெண்ணுக்கும் உண்டு. இந்தியா ஆன்மீகம் நிறைந்திருக்கும் பூமி இங்கு பெண்களை கடவுளாக வணங்குவதும், அடிமையாக பார்க்கும் வழக்கமும் உண்டு. பெண்களின் சமூக, பொருளாதாரமே அவர்களை உயர்த்திட தடைக்கல்லாய் இருப்பதாக பார்க்கமுடிகின்றது.

ஆலடி பஸ் என்னும் சிறுகதையில் பிரியங்கா என்ற பெண் ஜெராக்ஸ் கடையில் பணிபுரிவதாக கதைத்தளம் அமையப்பெறுகின்றது. தனது குடும்பத்தின் பொருளாதார நிலைய சரி செய்ய பள்ளி படிப்பை முடித்து வேலைக்கு செல்கிறாள்.

**மன இறுக்கம்:**

ஆலடி பஸ் சிறுகதையில் வரும் பிரியங்கா என்ற பெண் முறையான தேதிக்கு ஓரிரு நாட்களுக்கு முன்பே மாதவிடாய் அடைந்து விடுகிறாள். அவள் வேலை பார்க்கும் கடை முதலாளியிடம் அவசரமாக வீட்டிற்கு செல்ல வேண்டும் என கேட்கிறாள். ஆனால், முதலாளி “எதுக்கு: என நூறு முறைக்கு மேல் கேட்டு, பின்பு நிறைய கெஞ்சிய பிறகு “ஆறு மணிக்கு போ” என்று சொன்னார். அவர் மீது பிரியங்காவுக்கு அளவு கடந்த கோபம் உண்டானது. இன்று பிரச்சனை என்பதால் தான் வீட்டிற்கு போகிறேன் என்று கேட்டாள். மற்ற மாதங்களை விட இம்மாதம் தான் அவளுக்கு அதிகமாக வெளிப்பட்டது. தலைவலியும் அதிகமாக இருந்தது.

அன்றாட வாழ்வில் தனிமனிதர்கள் எதிர்கொள்ளும் சங்கடங்களையும் அதே நேரம் சமூக இன்னல்களில் மேட்டுக்குடி மக்கள் காட்டும் அக்கறையின்மையும் பெண்ணியச் சிந்தனைகளினூடே கதையின் மையக் கருவாக அமைந்துள்ளது.

முதலாளியிடம் ஒரு வழியாக அனுமதி பெற்று பேருந்தில் வீடு திரும்புகையில் மாதவிடாய் தரும் உடல் மற்றும் மன உளைச்சலோடு பேருந்தில் அமர்ந்திருக்கும் பிரியங்கா,

தனது சகப்பயணியான டீச்சருக்கு தனதருகில் இருக்கை அமர்த்தி தருவதில் இடையூறுகளை எதிர் கொள்கிறாள்.

“கொஞ்சம் நவுந்து குந்து” என்று வடக்கிருப்புக்காரி சொன்னாள்.

“ஆளு வருது, கடக்கிப் போயிருக்காங்க”, நீ நவுந்து குந்து , இல்லன்னா வழியவுடு” என்று முறைப்பது மாதிரி சொன்னாள். வடக்கிருப்புக்காரிக்கு பின்பு தொடர்ந்து ஆடைகள் அந்த இடத்திற்கு வந்து கொண்டே இருந்தனர். அவர்களை ஒரு நூல் சளைக்காமல் அனைவரையும் சமாளித்தாள். “எப்ப பஸ்ஸ எடுத்துத் தொலைவானுவளோ, காத்து கூட இல்ல” என்று திட்டுவதும், எதைப் பற்றியும் அக்கறை இல்லாமல் தன்னுடைய வேலையில் கவனமாக இருந்தார் நடத்துனர். நடத்துனரின் பாத்திரம் அதிகாரவர்கத்தின் நிலைபாட்டினை மிகச் சரியாக நிறுவுகிறது.

**பாத்திரப் படைப்பு:**

மாதவிடாய் தரும் உடல் மற்றும் மன அவதிகளோடு பேருந்தில் உள்ள பிரியங்கா தனது சகபயணியான டீச்சர் தனதருகில் இருக்கை அமர்த்தி தருவதில் இடையூறுகளை எதிர்கொண்டு சற்று தள்ளி அமர்ந்தாள். இரத்தகசிவு புடவையிலும், அமர்ந்திருக்கும் சீட்டிலும் பட்டுவிடுமே என்ற அச்சத்தில் பலருடன் சண்டையும் போடுகின்றாள். அதேவேளையில் பிரியங்காவினால் இருக்கை பெறும் டீச்சர், பிரியங்கா மீதோ அவளது இன்னல்கள் மீதோ எவ்வித பார்வைகளோ, அக்கறைகளோ இன்றி அவளை மிக எளிதாக புறந்தள்ளி கடக்கிறாள். பேருந்தில் நடக்கும் சண்டையை சிந்திக்காமல் போனுக்கு போட்ட பணம் ஏறிவிட்டதா என் பார்த்துக் கொண்டிருந்தாள். தனது இன்னல்களுக்கு மத்தியில் மற்றவர்களின் நலம் சார்ந்து போராடும் கதையின் நாயகிக்கு முற்றிலும் எதிர்தன்மை கொண்டது “டீச்சர்” பாத்திரம்.

“எங்க ஊர்ல் வேலை பார்குற டீச்சர் நீங்க. புதுசா வந்திருக்கிங்க . உங்களுக்கு எடம் பிடிக்க மாட்டனா?”

“சீக்கிரம் வந்திடலாமின்னுதான் போனேன். செல்போன் கடையிலதான் லேட்டாயிடுச்சி”.

டீச்சர், பிரியங்கா இவையிரண்டுமே கதையின் முக்கியப் பாத்திரங்கள். இவற்றை சுற்றியே கதை பின்னப்பட்டிருக்கின்றது. மாதவிடாய் தரும் மனவுளைச்சல், சகபயணிகளின் விமர்சனம், அவர்களுடன் வாக்குவாதம், கூடவே ஒரு பெண்ணாகத் தான் எதிர்கொள்ள நேரிடும் ஆணாதிக்கத் திமிறல்கள்

“நாளக்கி நீ என் ஊரத்தாண்டிதான் பஸ்ஸூல வரனும். அப்ப வச்சிக்கிறேன் ஒன்னெ” என்று அந்த ஆள் சொன்னான்.

“நாயி நக்கிப் போட்ட எல மாதிரி இருக்கு ஒம் மூஞ்சி நீ என்ன வச்சிகிறியா? எப்ப வரணும், எங்க வரணுமின்னு சொல்லு வர்றன். ஒன்னால் முடின்சதைப் பாரு” என்று கொஞ்சம் கூடச் சளைக்காமல் சவால் விட்டாள். ஆனால் இன்றைய சூழ்நிலையில் அவளிடம் வீம்பாக பேசி வம்பு செய்ததும் இவ்வாறாக ஆணாதிக்கத்தை நெட்டித் தள்ளி இருக்கையை நிலைநிறுத்திக் கொள்கிறாள் பிரியங்கா. ஆனால் பிரியங்காவின் மூலம் மிக எளிதாக தனக்கான “இட ஒதுகீட்டை” சாத்தியப்படுத்திக் கொள்ளும் டீச்சர், பிரியங்கா எதிர் கொள்ளும் எந்த சிக்கல்களுக்கும் வாய் திறக்காது மௌனம் காக்கிறாள். ஒரு சமூகத்தால்

தான் அடையும் ஆதயங்கள் வேண்டும். ஆனால் அச்சமூகம் எதிர்கொள்ளும் சிக்களுக்கோ இடையூறுகளுக்கோ எவ்வித ஆதரவுக்கரமும் நீட்டாமல் அம்மக்களை புறக்கணிக்கும் மேட்டுமைத்தன மன்நிலையோடு ஒரு சமூகம் இருக்கிறது என்பதன் குறியீடே "டீச்சர்" பாத்திரத்தின் வார்ப்பு.

**அவரவர் பாடு**

"டீச்சர் தீபாவோட காலுலயிருந்து "ரத்தம் வருது" என்று கோபிகா சொன்னாள். போர்டில் எழுதி கொண்டியிருந்த மரகதம் ஆசிரியை "வீட்டுக்கு போவச் சொல்லு" என்று சொன்னார்.

ஃபிராய்டு, எரிக்சன் ஆகிய உளவியலாளர்கள் மனித ஆளுமை குழந்தை பருவத்தின் வெவ்வேறு கட்டங்களில் ஏற்படும் வாழ்பணுபவங்களால் முதலிலேயே நிர்ணயிக்கப்பட்டு விடுகிறது என்றும், அதன்பின் நிகழ்வன முதல் நிகழ்வின் மறுபதிப்புகளே என்றும் கூறுகின்றனர். இது உருப் பெற்ற மனித ஆளுமை மிக எளிதில் மாற்றத் தக்கதல்ல என்பதை உணர்த்துகிறது. அவரவர் பாடு சிறுகதையில் தீபாவின் தாய், வேறொருவரிடம் தொடர்பு வைத்துள்ளார். தீபாவை பற்றி

"இப்ப அங்க ஒரு பொண்ணு ஒக்காந்திருக்கில்ல அதோட அம்மா வேற ஆளுகூட இருக்காம். அது இந்தப் புள்ளிக்கிப் புடிக்கலியாம் அதுக்காகத் தன்னோட ரெண்டு காலுலயும் ஊசியால ஊக்கால் குத்தி குத்தி காயம் பண்ணி வச்சியிருக்கு தானே கரண்டியால சூடு போட்டுக் கிட்டு இருக்கு. தொட பூரா புண்ணு ஒரே சீழா இருக்கு, தல முடிய வேற பொசிக்கிவச்சிருக்கு:. என்று தலைமை ஆசிரியர் கூறுகையில் குழந்தைகளின் காதல் பிரச்சினையோடு அவர்கள் அம்மா காதல் பிரச்சனையும் வருவதாக கூறுகிறார். இதனை சிக்மண்ட் ஃப்ராய்டு, மனித மனதைப் பகுப்பாய்வு செய்த போது,

1. வாழ வேண்டுமென்ற உந்துதல்(ID)
2. தான் எனும் முனைப்பு (EGO)
3. விழைவு நிறைவேற்ற உந்துதலைக் கட்டுப்படுத்தும் மரபு ரீதியான எண்ணப் பதிவு (SUPER EGO) எனும் முக்கூறுகளால் மனம் இயக்கப்படுவதாய் விளங்கியுள்ளார். இந்த முக்கூறுகளும் ஒவ்வொரு மனிதனிலும் செயல்பட்டாலும் அவற்றின் சேர்க்கை விகிதங்களின் வேறுபாடுகள் காரணமாக ஒரே சிக்கலை, வெவ்வேறான மனிதர்கள் எதிர்கொள்ளும் முறைகள் வெவ்வேறாய் ஆகிவிடுகின்றன. தீபாவின் பாத்திர படைப்பானது தனக்கு தானே தண்டனை கொடுப்பதாக அமைந்துள்ளது. ஆனால் ஆலடி பஸ்ஸில் பிரியங்காவின் பாத்திர படைப்பானது, பேருந்தில் உள்ள ஆண், பெண் என்று அனைத்து பயணிகளையும் தனது வாய்திறமையால் வாதாடி தனக்கான இடத்தை நிறுவிக் கொள்வதாக உள்ளது.

**முடிவுரை:**

"ஆலடி பஸ்", "அவரவர் பாடு" என்ற இரு சிறுகதைகளின் மூலம் இமையம் அவர்கள் இரு பெண்களின் வெவ்வேறு மனப்போராட்டங்களை மிக நேர்த்தியான பாதையில் எடுத்துகாட்டி, பெண்களுக்கான உளவியலையும் வெளிபடுத்தியுள்ளார்.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 27. ஒப்பீட்டு நோக்கில் வினயா நளினி ஜமீலா தன் வரலாறுகளில் குடும்பத் தலைவிகளுக்குச் சமத்துவமின்மை

## (மலையாள மொழிப்பெயர்ப்புகள்)

அ.சரண்யா
முனைவர் பட்ட ஆய்வாளர்
இந்திய மொழிகள் மற்றும் ஒப்பிலக்கியப் பள்ளி
தமிழ்ப் பல்கலைக்கழகம்

முனைவர் ச. கவிதா
பேராசிரியர் மற்றும் துறைத்தலைவர்
இந்திய மொழிகள் மற்றும் ஒப்பிலக்கியப் பள்ளி
தமிழ்ப் பல்கலைக்கழகம்,தஞ்சாவூர்

DOI 10.5281/zenodo.10702464

**Abstract :**

If there is no female head in a family, the family itself will become stagnant. For her family, she gave up all her desires and dreams and gave herself like a lamp. In this way, a woman who always shines for her family is not treated as an object by the male society and they treat her as a slave who beats her like a living being and scolds her with abusive words. In this way, this article examines how the heads of the family are belittled in Vinaya Tanvaral and Nalini Jamila Tanvaral.

### முன்னுரை

ஒரு குடும்பத்தில் குடும்பத்தலைவி இல்லை என்றால் அக்குடும்பமே நிலைக்குலைந்து போய்விடும். தன் குடும்பத்திற்காக தன்னுடைய ஆசைகள், கனவுகள் எல்லாவற்றையும் விட்டுட்டு விளக்கின் திரிபோல் தன்னை அளித்துக் கொண்டு ஒளி விசிக் கொண்டிருப்பவள். அவ்வாறு குடும்பத்திற்காக அனையாமல் ஒளி வீசும் பெண்ணை ஆண் சமூகம் ஒரு பொருட்டாகவே கருதாமல் அஃரின்னை உயிரியைப் போன்று அடித்தும், வசைச் சொற்களால் திட்டியும் அடிமையாக நடத்துகின்றனர். அவ்வகையில் வினயா தன்வரலாற்றிலும், நளினி ஜமீலா தன்வரலாற்றிலும் குடும்பத் தலைவிகள் எவ்வாரெல்லாம் சிறுமைப் படுத்தப்படுகின்றனர் என்பதை ஆராய்வதாக இக்கட்டுரை அமைகின்றது.

### குடும்பம்

மனிதனின் வாழ்க்கை முறையில் குடும்பம் முதன்மையான இடத்தைப் பெற்றுள்ளது. பிறப்பு முதல் இறப்பு வரை வாழ்வின் ஒவ்வொரு நிகழ்வையும் குடும்பத்தோடு பின்னிப் பிணைக்கும் தன்மைக்கொண்டது. இக்காலவாழ்வியலில் குடும்பத்தின் தன்மைகளையும், ஏற்பட்டுள்ள மாற்றங்களையும், கூட்டுக் குடும்பங்கள் உடைந்து தனிக் குடும்பமாக மாறி வரும் சூழல்களையும் இக்காலத்தில் பார்க்க முடிகிறது.

### குடும்ப விளக்கம்

குடும்பம் பற்றிய விளக்கங்களை பல்வேறு ஆசிரியர்கள் பின்வருமாறு விளக்கம் கொடுத்துள்ளனர்

> **"குடும்பம் ஒரு நிலையம் அல்லது இயைபு, குழு மட்டுமல்ல அது ஒரு நிறுவனம் கூட. அதை நிறுவனங்களின் தொகுதி என்று சொல்வது கூட தவறானது"**

மேலும்,

> **"குடும்பம் தலைமுறை தலைமுறையாகப் பண்பாட்டு மரபுரிமையைக் கொண்டு செல்லும் செயலி"[1]**

என்கிறார்.

மனித சமுதாயத்தின் மிகத் தொன்மையான நிறுவனமாகத் திகழ்வது குடும்பம். இவை எல்லா சமுதாயங்களிலும், எல்லா காலங்களிலும் நிலவி வருகிறது. இன்று நூற்றுக்கணக்கான சமுதாயங்கள் காலங்காலமாக பல்வேறு நிறுவனங்களை ஏற்படுத்திக் கொண்டு, அதன் அமைப்பாலும் செயலாலும் வேறுபடுகின்றன. ஆனால் அனைத்திலும் குடும்பம் என்னும் நிறுவனமே மிகவும் இன்றியமையாத அடிப்படை அலகாகச் செயல்படுகிறது. அவ்வாறே மக்கள் வாழ்நாள் முழுதும் எண்ணற்ற குழுக்களில் பங்கு பெற்று அவர்களின் தேவைகளை நிறைவு செய்து கொண்டாலும் குடும்பம் என்னும் அமைப்பே முதலிடம் பெறுகிறது. இவற்றில் ஒருவரின் பெரும்பகுதி வாழ்க்கை குடும்பத்தில் அமைகிறது. பிறப்பு முதல் இறப்பு வரை குடும்பத்தோடு தான் அவர்கள் தொடர்ச்சியாகத் தொடர்பு கொள்கின்றனர். ஏனெனில் மக்களின் உயிரியல், உறவியல், வாழ்வியல் சார்ந்த அனைத்துத் தேவைகளையும் நிறைவு செய்கிறது. அதனாலேயே இவ்வமைப்பு இடம், காலம் அனைத்தையும் கடந்து எல்லா பண்பாடுகளுக்கும் பொதுவான ஓர் உலகளாவிய பண்பாடக குடும்பம் திகழ்கிறது.

> **"குடும்பம் என்பது ஒரு சிறிய குழுவாகவும் இருக்காலாம். பலர் அடங்கிய ஒரு பெரும் குழுவாகவும் இருக்கலாம். இதில் குறைந்த அளவு ஒரு ஆணும் பெண்ணும் இடம்பெற வேண்டும். இவ்விருவரும் அவர்களது சமுதாயம் ஏற்றுக்கொண்டுள்ள திருமண முறைப்படி மணம் செய்து கொண்டவர்களாக இருக்க வேண்டும். அவ்வாறு ஓர் ஆணும் பெண்ணும் கணவன் மனைவி போன்ற உறவை ஏற்படுத்திக் கொள்ளும் பொழுது தான் அவர்கள் ஒரு குடும்பமாக அமைகிறார்கள். அவர் ஒரே கூரையின் கீழ்உண்டு வாழ்ந்தாலும், காலத்தின் கட்டாயத்தில் தனித்தனியாக உண்டு வாழ்ந்தாலும் கணவன் மனைவி என்னும் பிணைப்பைக் கொண்டுள்ளவரை அவர்கள் குடும்பம் என்னும் அமைப்பைக் கொண்டுள்ளவர்களேயாவர்"[2]**

சமூகத்தில் குடும்பம் முதன்மையானதாகும். குடும்பம் என்ற ஒன்று இல்லையென்றால் சமூகம் என்பதே இல்லை. சமூகத்தின் அடித்தளம் குடும்பமாகும். அதனால் தான் குடும்பத்தில் மனக் கசப்புகள், வருத்தங்கள், சண்டை சச்சரவுகள் என பல பிரச்சனைகள் இருந்தாலும் இவை

எல்லாவற்றையும் தாண்டி குடும்ப உறவு தொடர்கிறது என்பது தவிர்க்க முடியாத உண்மையாகத் திகழ்கிறது என பக்தவத்சல பாரதி கூறுகிறார்.

**குடும்ப அடையாளம்**

பொதுவாக சமூகத்தில் ஒருவரைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது அவர் குறிப்பிட்ட குடும்பத்தைச் சார்ந்தவர் என்று தங்களை அடையாப்படுத்திக் கொண்டனர். உறுப்பினர் எல்லோரும் தங்கள் குடும்பத்திற்கு அவப்பெயர் வந்து விடக்கூடாது என்பதில் மிகவும் கவனமாக இருந்தனர். குழந்தைகளுக்குச் சிறு வயதிலிருந்தே, குடும்ப கௌரவத்தைப் பற்றியும், முன்னோர்களின் தலைமுறையில் வாழ்ந்த பெரியோர்களைப் பற்றியும் கற்றுக் கொடுத்து, தனிப்பட்ட வாழ்க்கையிலும் சமூகத்திலும் நேர்மையாகவும், திறமையாகவும் செயல்படுமாறு அறிவுறுத்தப்படுகின்றனர்.

**வினயா தன்வரலாற்றின் சுருக்கம்**

பெண்ணைப் பெண்ணிற்கே அறிமுகப்படுத்த வேண்டிய தேவைகள் அதிகமான காலத்தில் வினயா அதிகாரப் பதிவுகளின் வழி பெண்ணிற்கான நிலையை எடுத்துரைக்கின்றார். சட்ட ஒழுங்குகளின் அதிகாரத்தில் உட்சபட்ச அமைப்பிற்குள் தன்னுடைய பெண்ணுரிமை வாதங்களை தனியொரு பெண்ணாக நின்று அமுல்படுத்தப் போராடியிருக்கிறார். பணியிடங்களில் காணப்படும் பாலினப் பாகுபாடு பெண் தனித்து நின்று எதையும் செய்ய முடியாத நிலைக்கு உள்ளாக்குகிறது என்பதை தனது அனுபவத்தின் மூலம் வெளிப்படுத்துகின்றார்.

**நளினி ஜமீலா தன்வரலாற்றின் சுருக்கம்**

பாலியல் தொழிலாளர் அமைப்பின் தலைவியும், பாலியல் தொழிலாளியும் குறும்பட இயக்குனரும், பெண்ணியவாதியுமான நளினி ஜெமீலா கேரளப் பெண்ணிய உலகில் பெரும் அதிர்வலைகளை ஏற்படுத்தியவர். உடலைவிற்று உயிரைப்பேண வேண்டும் என்று எந்தப் பெண்ணும் நினைப்பதில்லை. குடும்பம் என்ற ஒழுக்கவியல் நிறுவனமும், தனிநபர் பொருளாதார நெருக்கடியும் பெண்களைப் பாலியல் தொழிலுக்குக் கட்டாயமாகப் பிடித்துத் தள்ளுகின்றது. உடலை விற்றுத்தான் பெண்வாழ வேண்டுமா என்ற ஆணாதிக்க அறிவு ஜீவிகளின் கேள்விக் கனைகளுக்குப் பின்னால் காமவலைகளை விரித்து வறுமையுற்ற பெண்களைப் பாலியல் தொழிலுக்கு இழுப்பது ஆண் சமூகம் தான் என்பதை லாவகமாக எடுத்துரைக்கின்றது.

**வினயா தன்வரலாற்றின் கரு**

பிறந்த வீடுகளே புகுந்த வீட்டிற்கான பயிற்சி நிறுவனமாக மாறுவதிலிருந்து ஒரு பெண்ணின் சுயவதைப் படலம் தொடக்கம் பெறுகிறது. சமூக அமைப்பின் எல்லா அம்சங்களுமே புகுந்த வீடுகளின் தன்மைகளுடன் தான் வெளியாட்களிடம் நடந்து கொள்கின்றன. தளையத்தளைய உடுத்தும் பன்னிரெண்டு முழச் சேலையையும், நிலம் பதியும் நீள் கூந்தலையும் வினயா கலாச்சாரக் கருதுகோளாகப் பார்க்க மறுக்கிறார்.

உளவியல் ரீதியாக சிந்தனையைத் தனக்குள் தளைத்துப் போடும் அடிமைத் தனத்தின் துணைக் கருவியாகவே பார்க்கிறார். கோபம் வரும் பொழுது கணவன்கள் இழுத்துப் பிடித்து அடிக்கும் கார் குழலையும் இழுத்துப் போர்த்துவதன் மூலம் ஆண்களுக்குத் தரும் குறைந்த பட்சம் அங்கீகாரமான சேலையையும், பெண்மையின் அடையாளங்களாகச் சுமந்து திரிய மறுக்கிறார்.

சட்ட ஒழுங்குகளின் அதிகாரத்தின் உட்சபட்ச அமைப்பிற்குள் தனது பெண்ணுரிமை வாதங்களைத் தனியொரு பெண்ணாக நின்று அமுல்படுத்தப் போராடியிருக்கிறார். இதற்கான காலம் கனிந்திருப்பது போன்ற தோற்றங்கள் எல்லாம் வெறும் புறச்சூழல்கள் தான் என்பதை அனுபவங்கள் மூலம் அவர் புரிந்துகொள்வது தான் இந்தச் சுயசரிதை என்று மொழிபெயர்ப்பாளர் குளச்சல் மு.யூசுப் பதிவு செய்துள்ளார். கேரளப் பெண்ணியத்தின் காத்திரமான கருத்திலை முன்வைப்பதாக இந்நூல் அமைகின்றது.

**நளினிஜமீலா தன்வரலாற்றின் கரு**

அந்தப் புரங்கள், அம்மச்சி வீடுகள், தேவதாசிகள் என்று வரலாறுகள் எங்கும் அரசனுக்கும், ஆண்டவனுக்கும் அண்மையில் இடம் பெற்று, கலைக்கும் கலைசார்ந்த பெருமைகளுக்கும் அடிப்படையாக வாழ்ந்தவர்கள் தேவர்கள், சட்டப் புனரமைப்பால் உருவான அறவியலின் காரணமாகப் பிறகு பரத்தையர், தேவிடிச்சி, கூத்தச்சி என்றெல்லாம் இழிவாகக் குறிப்பிடப்பட்டனர். பல தார பாலியல் குணம் என்பது ஆதிக் கூறுகள் சார்ந்த மானுடப் பண்பாகும். தனி நபர் சொத்துரிமையும், குடும்பம் எனும் வரையறைகளால் கட்டு விக்கப்பட்ட ஒழுக்க மரபுகளும், இந்த ஆதிக் கூறுகளை ரகசியத் தன்மைக்கு உள்ளாக்கியதும் மீறல்களையே விதியாகக் கொண்ட இந்த மரபுகள் காலங்காலமாக ரகசியங்களைப் பேணிப் பாதுகாத்து வருகின்றன. அற ஒழுக்கங்களை வரையறை செய்த அரசர்களால் இந்த ரகசியம் அம்பலமேறி அரசனுக்கும் ஆண்டவனுக்கும் அண்மையில் அமர்ந்திருந்தது என்று மொழி பெயர்ப்பாளர் குளச்சல் மு.யூசுப் கூறுகின்றார். கேரள இலக்கிய உலகில் பல்வேறு அதிர் வலைகளை உள்ளக்கிய தோடு, இச்சுயசரிதை பல விவாதங்களுக்கும் வித்திட்டு அறிவார்ந்த கேள்விகளை ஆணாதிக்கத்தை நோக்கியும், சமூகத்தை நோக்கியும் முன்வைக்கிறது.

**வினயா தன்வரலாற்றில் குடும்பத் தலைவியின் நிலை**

பெண்ணை நாம் தாயாகவும், சகோதரியாகவும், மனைவியாகவும் சில வேலை சிநேகிதியாகவும் கண்டிருக்கிறோம். ஆனால் வினயாவின் அப்பா தன் மனைவியை மனுசியாகக் கூட கண்டதில்லை. பெண் ஆணைச் சார்ந்த உடைமையாகவே இன்றும் இருக்கிறாள். ஒருவனுக்கு அவள் தாயாக, காதலியாக, சகோதரியாக இருக்கிற நிலை சித்தரிக்கப்பட்டுள்ளது. ஆனால் பெண்களை மனுசியாகப் பார்க்கும் நிலை இல்லை. இத்தகைய சூழ்நிலையில் ஆண்களைச் சார்ந்து வாழும் பெண்கள் ஆண்களின் அதிகாரத்தைச் செலுத்தும் களமாகவே பெண் காணப்படுகின்றாள். குடும்பம் என்ற சிறு அமைப்பு ஏற்படுத்தும்

விதிமுறைகள் பெண்களை நான்கு சுவர்களுக்குள் உலாவும் அடிமைகளாகவே கருதுகின்றனர் என வினயா தன் சுயசரிதையில் கூறுகின்றார்.

குடும்பத்தில் உள்ள பெண்கள் தன்னைக் காத்துக்கொண்டு தன்னைச் சார்ந்திருப்பவர்களையும் காக்கும் பணியினைச் செய்கின்றனர் என்பதை,

**“தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற**

**சொற்காத்துச் சோர்விலாள் பெண்”**[3]

கற்பு நெறியில் தன்னையும் தற்காத்துக் கொண்டு தன்னை மணந்து கொண்டவனையும் கற்பு தவறாதவாறு பேணிக்காக்கும் தகுதியமைந்த புகழையும் காத்து மனையறங்களில் தளர்ச்சி இல்லாதவளே பெண் என்று திருவள்ளுவர் குறிப்பிடுகிறார். இத்தகைய அறநெறிகளை கடைபிடித்தாலும் பெண் என்பவள் ஆண்கள் தங்கள் விருப்பத்திற்கேற்ப களிமண் பொம்மைகள் செய்வதைப் போன்று தனக்கேற்ற வகையில் பெண்களை வளைத்தும், நெறித்தும் உருமாற்றம் செய்கின்றனர். உலகில் பெண்களுக்கு பல்வேறு கொடுமைகள் நிகழ்கின்றன. அவற்றிற்கு அரசு சட்டமும் பாதுகாப்பு வழங்குகின்றது. ஆனால் குடும்ப வன்முறைகளைத் தீர்க்க எந்த சட்டமும் பயன் படுவதில்லை. அதைப் பயன் படுத்துவதுமில்லை இதனால் நாளுக்கு நாள் பெண்களின் மீதான பிடி இறுகிக் கொண்டே இருக்கின்றது. கணவனுக்கு ஏற்றது போல் குடும்பம் நடத்தினாலும், கணவனது வருமானத்தி கேற்றவாறு குடும்பம் நடத்தும் பெண்கள் கணவனால் நிந்திக்கப்பட்டுக் கொண்டே இருக்கின்றனர். இதனை வினயா தன் அம்மாவின் நிலையை வேதனையுடன்,

**“அம்மாவிடம் இருந்து கெண்டி நீரை வாங்கி கால்களைக் கழுவிக் கொண்டுருக்கும் போதே இலட்சணம் கெட்டவளே, வயல்லே கிடந்து உங்க அப்பனா வேலை செய்வான்? நாத்து நடுற கஷ்டம் வீட்டுலே உட்கார்ந்து சோறும் கறியும் வெக்கிற உனக்கென்ன தெரியும்? இவ்வளவு நேரமா இங்க என்ன செய்து கிட்டிருந்தே”**[4]

குடும்பத்தில் பெண்கள் அனைத்து வேலைகளையும் தான் ஒருவராக செய்து முடிக்கின்றனர். வினயாதன் அம்மாவின் நிலையை கூறியதை அடியொற்றியே கனிமொழி தன் கவிதையில்,

**“தனக்கும் கனவுகள் இருந்ததை மறந்து**

**ஓடிக்கொண்டிருப்பாள்**

**எங்களுக்காக அழுது சிரித்த தன்**

**கனவுகளைஎங்கள் மீது திணித்து**

**அது நடக்காதபோது**

**அழிச்சாட்டியம் செய்து**

**தோற்றுப்போய் ஓடிக்கொண்டு**

**அவ்வப்போது**
**நிறைய அன்பு செலுத்தும் ஏன் அம்மாவைப்**
**பற்றி எந்த கதைகளும்**
**சொல்வதே இல்லை”[5]**

என்று எழுதுகின்றார். குடும்பம் குழந்தைகள் என்று வாழ்க்கையை முற்றிலும் கரைத்துக்கொள்ளும் பெண்ணே தியாகத் திருவுருவாகவும் தாய்மையினை இலக்கணமாகவும் திகழ்கிறாள். ஆனால் ஆண்களின் உழைப்பு மட்டுமே உயர்வாக பேசப்படுகிறது. இதற்கு அடிப்படை காரணம் ஆண்கள் கொண்டு வரும் வருமானம் ஆகும். இதனால் ஆண்களின் உழைப்பு பெரிதாகக் கருதப்படுகின்றது. நாள் முழுவதும் வேலை செய்யும் பெண்களின் உழைப்பு கணக்கிலெடுத்துக் கொள்ளவதில்லை. வருமானம் இல்லாத வேலை என்பதால் பெண்களின் உழைப்பு உதாசீனம் படுத்தப்படுகின்றது. கணவனின் வருவாய்க்குத் தக்கபடி மனைவி குடும்பம் நடத்துகின்றாள். ஆனால் உணவில் ருசியில்லை என்று அதிகாரம் செய்யும் அதிகாரம் கணவனுக்கு யார் தந்தது. வாங்கி கொடுத்தப் பொருட்கள் வீட்டில் உள்ள பொருட்களைக் கொண்டே மனைவியால் சமைக்கமுடியும். இன்னிலையில் சாப்பாட்டில் ருசியில்லை என்று பாத்திரங்களை உடைத்து விட்டு உணவகத்திலே சாப்பிட்டுக் கொள்ளலாம் என்று கூறும் கணவனின் எண்ணம் எதனால் வந்தது என்று கருதும் வேலையில் கணவனின் வருமானம் தான் அவ்வாறு சொல்கிறது என்பதை வினயா தன்வரலாற்றில் தன்னுடைய அம்மாவின் நிலையையும், ஒவ்வொரு பெண்ணும் குடும்பத்தில் இவ்வாறு தான் நிந்திக்கப்படுகின்றனர் என்று கூறுகின்றார்.

> **“சைஇ தென்ன குழம்பு இது. உப்புமில்லே உறைப்புமில்லே, குழம்பா இது குழம்பு என்றவாறே அதை பாத்திரத்துடன் எடுத்து முற்றத்தில் வீசினான்”[6]**

வருமானம் பெறுகிறோம் என்ற ஆணாதிக்க எண்ணம் வருமானம் இல்லாத இல்லறப் பெண்களின் மீதும், வன்முறையை நிகழ்த்துவதற்கு காரணமாக இருக்கின்றது. இச்செயலையே பெண்கள் செய்ய அதிகாரம் இல்லை. எனவே குடும்ப வன்முறைகளுக்கு அடித்தளமாக இருப்பது வருமானம். வருமானம் ஆண்களால் தான் வருகிறது என்ற மனோபாவம் குடும்ப வன்முறைகளை கட்டவிழித்து விடுகின்றது என வினயா கூறுகின்றார். அவ்வகையில் சமூகத்தில் ஆண்களுக்கான நடமாடும் இடங்கள் வரையறைகள் வரையறுக்கப் படவில்லை. ஆனால் பெண்களுக்கு வரையறுக்கப் பட்டுள்ளன. குடும்பத் தலைமையேற்ற ஆண்கள் மனைவிகளிடம் பல்வேறு விதமான அத்து மீறல்களை நிகழ்த்துகின்றன. உழைத்ததால் தான் உடல் வலிக்கிறது என்று காரணம் சொல்லிக் குடிக்கும் ஆண்கள் குடும்பத்தை குடும்பமாகப் பார்ப்பதில்லை.

**“இரவு வெகு நேரத்திற்கு பிறகு தான் பெரும்பாலும் மீச்சுமுட்ட குடுத்திருப்பார். ரொம்ப மகிழ்ச்சியோடு எங்களை எல்லாம் கூப்பிட்டுப் பக்கத்தில் உட்கார வைத்துப் பேசுவார். குடித்து விட்டால் சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டு இருப்பது அப்பாவின் வழக்கம். ரோட்டோரத்தில் பசுவைக் கட்டிப் போட்டிருந்த கயிறு இடறிக் கீழே விழுந்ததையும், பாய்ந்து வந்ததாக திடீர் பிரேக்கிட்டு நின்றதையும் அப்பா அடிக்கடி சொல்வார். ஒரு தடவை இதைச் சொல்லி விட்டு சாப்பிட்டகையை அலம்புவதற்காக அப்பா வெளியே சென்ற போது அப்படியும் சாகவில்லையே என்று அம்மா குறைப்பட்டுக் கொண்டதும் எனக்கு நினைவு இருக்கிறது.”[7]**

திருமணமான பெண்கள் கணவனை கண்கண்ட தெய்வம் என்று போற்றுகின்றனர். இந்த சொலவடை பெண்களை அடிமைப் படுத்தும் நோக்கில் சொல்லப் பட்டிருந்தாலும் அதையும் தனது குடும்பத்திற்காக ஏற்றுக்கொண்டு பெண்கள் கணவனின் நலத்தையே பெரிதும் விரும்புபவர்களாகக் காணப்படுகின்றனர். குடித்து விட்டு வரும் கணவன் தினமும் படுத்தும் கொடுமைகளை சகித்துக்கொள்ள முடியாமல் பெண்கள் மனம் புழுங்கி கணவன் இறந்தாலும் நிம்மதியாக இருக்கலாம் என்று நினைக்க வைக்கின்றனர். அந்த அளவிற்கு கணவனின் அதிகாரம் குடும்பத்திற்குள்ளும், குழந்தைகளுக்கும், மனைவிக்கும் பெரும் அச்சுறுத்தலாக உள்ளது என வினயா கூறுகின்றார். மேலும் அக்னி சாட்சி தன்வரலாற்றுப் புதினத்தில்,

**“யாருடனும் எந்த பாரதியும் இல்லாமல் அம்மா நீர் நிறைந்த கண்களுடன் சித்தப்பாவிற்கு கொண்டு போவதற்காக பலாப் பழசிப்ஸ் தயாரிக்கவோ அல்லது அதுரசம் செய்யவோ மாவிடித்து கொண்டே நிற்பாள். அம்மா எதற்காக அழுகிறாள் என்று நான் பலமுறை யோசித்துப் பார்த்ததுண்டு. பிள்ளைகளான எங்களைத் தவிர அம்மாவுடன் வேறு யாரும் அதிகமாக பேசிக்கொள்வது எல்லாம் கிடையாது. எங்கள் வீட்டிலும் சரி அப்பாவின் உறவினர்கள் வீட்டிலும் சரி, அம்மா ஒரு வேலைக்கறியைப் போல் வாழ்ந்து கொண்டு இருந்தாள். சத்தம் வெளியே வராமல் அம்மா அழுவதை நான் பல தடவை பார்த்ததுண்டு.”[8]**

மனைவியை மனைவியாகப் பார்க்கும் மரபு அதிகாரத்திற்கு இடம் அளிப்பதாக உள்ளது. மனைவியை தோழியாக, தாயாக, பார்க்கின்ற பார்வை ஆரோக்கியமான குடும்பத்திற்கு அடித்தளமாகும். அதுபோல மருமகளை மகளாகப் பார்க்கும் பார்வை முற்றிலும் சிதைந்து விட்டது. இதனால் மருமகளை அடிமையாகப் பார்க்கும் மனோபாவம் பெருகிவிட்டது என்றே கூறலாம். இப்பார்வை குடும்பத்தில் மட்டும் பார்க்கப் படுவதில்லை, மாறாக கணவனின் உறவினர்களையும் பார்க்கச் சொல்கின்றது. பெண் என்பவள் வீட்டு வேலைச் செய்வதற்கும், குழந்தைப் பெற்றுத் தருவதற்கும் மட்டுமே உரியவள் என்ற ஆணாதிக்க மனோபாவம் பெண்கள் எத்தகைய தியாகங்களைச் செய்தாலும் ஒரு வேலைக்காரியாகவே என்னச் செய்கிறது. இதனிடையில் நட்புறவுகளோ, சமூக உறவுகளோ

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

எதுவுமே இல்லாமல் அடுப்படியில் மட்டுமே ஒதுங்கி வீட்டிற்கு வெளியிலுள்ள உலகம் எப்படி இருக்கும் என்று தெரியாமல் எல்லா மன உணர்வுகளையும், சிந்தனைகளையும் தனக்குள் புதைத்துக் கொண்டு குடும்பப் பெண்ணாக பெண்கள் வாழ்ந்து வருகின்றனர். இப்படி ஏராளமான பெண்கள் தங்களுக்கென தனிப்பட்ட எவ்வித ஆர்வங்களும் இன்றி தங்களையே வேள்வித் தீயாக்கிக் கொள்கின்றனர் என வினயா தன்வரலாற்றில் ஒட்டுமொத்த பெண்களின் வலியையும், தன் அம்மாவின் வலியையும் ஆழமாகப் பதிவு செய்துள்ளார்.

**ஒப்பீடு**

வினயா, நளினி ஜமீல இருவரும் வேறுவேறு சூழலில் வழ்ந்தாலும் குடும்பம் என்ற அமைப்பில் ஒரே மாதிரியான நிலையில் பாதிக்கப்பட்டுள்ளனர். வினயா தன் அம்மா அப்பாவினால் அடித்தும், திட்டியும் எவ்வாரெல்லாம் வேதனையடைகிறால், மேலும் ஆண் சமூகம் பெண் என்பதனாலே எவ்வித சமத்துவமும் கொடுக்காமல் ஒவ்வொரு இடத்திலும் தட்டிக்களிப்பதை காத்திரமாகப் பதிவுச் செய்துள்ளார். நளினி ஜமீலா எல்லா திய்யப் பழக்கங்களும் உடைய கணவனால் மாமியார், நத்தனார் என எல்லரிடமும் தான் படும்பாட்டை ஆழமாகப் பதிவு செய்துள்ளார்.

**முடிவுரை**

குடும்பத்திலும் சமூகத்திலும் பெண்ணின் பங்கு முதன்மையானவை ஆகும். ஆணாதிக்கச்சமூகம் மறுத்து தன் ஆதிக்கத்தை குடும்பத்தில் பெண்ணின் மீது செலுத்துகின்றனர். குடும்ப அமைப்பில் நிலவும் ஆதிக்க மன நிலையின் வெளிப்பாடுகளைப் பெண் படைப்பாளர்கள் ஆழமாக தங்களின் படைப்புகளில் வெளிப்படுத்தி வருகின்றனர். பொருளாதார அங்கீகார மற்ற இல்லப் பணிகளில் தம்மைத் தொலைத்துக் கொண்டிருக்கும் பெண்ணை படைப்பாளர்கள் பலர் தன் எழுத்துக்கள் மூலம் பதிவு செய்து வருகின்றனர். ஏராளமான கேள்விகளுடன் பெண் படைப்புகள் அடுத்தக் கட்ட நகர்வை முன் வைத்துள்ளன என்பதை வினயா, நளினி ஜமீல தன்வரலாற்று வரிகள் மூலம் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**துணைநூற்பட்டியல்**

1. வினயா, ஒரு பெண் காவலரின் வாழ்க்கை கதை
2. நலினி ஜமீலா, ஒரு பாலியல் தொழிலாலியின் சுயசரிதை
3. லலிதாம்பிகா அந்தர்ஜனம், அக்னி சாட்சி
4. பாஸ்கல் கிஸ்பர்ட், சமூகவியல் அடிப்படைக் கோட்பாடுகள்,
5. சி.பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல்
6. முனைவர் ச.மெய்யப்பன், திருக்குறள்
7. கனிமொழி, அகத்தினை

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 28. பா.கவிதாவின் 'புத்தரின் ஆசை' கவிதைத் தொகுப்பில் பன்முகச் சிந்தனைகள்

முனைவர் மு.செந்தில்குமார்
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, செந்தமிழ்க் கல்லூரி,மதுரை - 01

DOI 10.5281/zenodo.10702479

Abstract :

Poet B. Kavitha, who is a notable woman creator, social activist and civil servant in Theni district, belongs to Uttamapalayam and recalls that the reason she got married after completing her diploma in Electronics & Communication was because she had 2 daughters in succession. Surpassing the burdens of childbearing and family at the age of 40, he passed the fourth level examination (Group IV) and is currently working as a village administrative officer. He gives life to the saying 'Lancham Thapa - Nejcham Nimir'. He has been honored with many awards including Honest Worker, Social Organizations and Literary Organizations. Between pressing government duties, he cheerfully carries out social & literary work. His first work was 'Ennan Khekhai'. The purpose of this essay is to identify the multifaceted ideas that emerge in the second collection, 'Buddha's Desire'.

தேனி மாவட்டத்தில் குறிப்பிடத்தக்க பெண் படைப்பாளராய், சமூக ஆர்வலராய், அரசுப் பணியாளராய் வலம் வருபவர் கவிஞர் பா.கவிதா உத்தமபாளையத்தைச் சார்ந்தவரான இவர் டிப்ளமோ எலக்ட்ரானிக்ஸ் & கம்யுனிகேசன் முடித்தும் பணிக்குச் செல்லவிடாமல் திருமணம் முடித்துவைக்கப்பட்டதற்கு காரணம் அடுத்தடுத்து 2 பெண் பிள்ளைகள் இருந்ததை நினைவு கூறுகிறார். தொடர்ச்சியாக பிள்ளைப்பேறு, குடும்பச்சுமைகளைத் தாண்டி 40 வயதில் நான்காம் நிலைத் தேர்வில் (Group IV) வெற்றி பெற்று இன்றைக்கு கிராம நிர்வாக அலுவலராய் பணியாற்றுகிறார். 'இலஞ்சம் தவிர் - நெஞ்சம் நிமிர்' என்னும் வார்த்தைக்கு உயிர் கொடுக்கிறார். நேர்மையான பணியாளர் உள்ளிட்ட பல விருதுகளை சமூக அமைப்புக்கள் இலக்கிய அமைப்புக்கள் இவருக்கு வழங்கி கௌரவப்படுத்தியுள்ளது. நெருக்கடியான அரசுப் பணிகளுக்கிடையே சமூக & இலக்கியப் பணிகளை இன்முகத்தோடு செயலாற்றுகிறார். 'எண்ணங்களின் எதுகை' இவரது முதல் படைப்பாகும்.

'புத்தரின் ஆசை' என்னும் இரண்டாவது தொகுப்பில் வெளிப்படும் பன்முகச் சிந்தனைகளை அடையாளப்படுத்துவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**அம்மா:**

அம்மாக்களைப்பற்றிய கவிதைகளைப் படைப்பாளர்கள் தொடர்ந்து எழுதி வருகின்றனர். சில இலக்கியவாதிகள், அரசியல்வாதிகள் மேடைகளிலும், எழுத்துக்களிலும் இரக்கத்தன்மையோடு எழுதி, பேசிவிட்டு நடைமுறையில் வேறுமாதிரியாக உள்ளனர். அதனையும் சிலர் பதிவாக்கியுள்ளனர்.

**"வீட்டின் பெயர்**
**அன்னை இல்லம்**

**அன்னை இருப்பது**
**முதியோர் இல்லம்"**

இதற்கு மாறாகக் கவிஞர் கவிதாவின் வார்த்தைகள் உள்ளன்போடு வெளிப்பட்டுள்ளது.

**"ஓராண்டு நினைவு அஞ்சலி**
**போடுவதில் எனக்கு**
**உடன்பாடில்லை அம்மா…**
**என் உயிரில்**
**எப்போதும் நீயே**
**உயிர்த்தெழுகிறாய் அம்மா…" (பக்கம் - 15)**

பெற்றோர்களின் இறந்த நாளினை நாளிதழ்களில் வண்ணத்தில் அச்சிட்டு வெளியிடுவதால் என்ன பயன்? அம்மா இறந்தவிட்டதாக ஒரு போதும் நினைத்தில்லை. வழக்கமாக இறந்தவர்களைக் குறிப்பிடும்போது நினைவுகளில் வாழ்வதாகக் குறிப்பிடுவர். கவிஞர் அவரது உயிரில் கலந்திருப்பதால் அம்மா எப்போதும் இறக்கவில்லையென்கிறார். தனது உயிரைக் கொடுத்து அம்மா என்னைப் பெற்றெடுத்தார். இப்போது தன் உயிரிலேயே கலந்திருப்பதாக உருவகம் செய்கிறார்.

**உண்மை:**

"சத்தியம் என்னும் ஆலயத்தை அடைய அகிம்சை என்னும் பாதை வழியாகத்தான் நடந்து செல்ல வேண்டும்" என்பார் அண்ணல் காந்தியடிகள். இன்றைய சூழலில் ஏதாவதொரு வழியில் சத்தியத்தைத் தோற்கடிக்க முயற்சிக்கின்றனர். உண்மை தெருவைக் கடப்பதற்கு முன் பொய் உலகைச் சுற்றி வந்துவிடுவதாக வேடிக்கையாகச் சொல்வர். வேடிக்கைப் பேச்சு இன்று உண்மையாவதை சம்பங்கள் உறுதிப்படுத்துகின்றன.

**"இன்று**
**உண்மை**
**நிராகரிக்கப்படுவது**
**வேதனை**
**பொய்கள்**
**உண்மையாய்ச்**
**சித்தரிக்கப்படுவது**
**சாதனை"** - (ப - 16)

உண்மையை நிரூபணம் செய்வதற்கு பல சான்றுகள் தேவைப்படுகின்றன. பொய் சான்றுகள் இல்லாமலே உண்மையைப்போல் தோற்றமளிக்கின்றன. சித்தரிப்புகள், நடிப்பு,

போலித்தனங்கள் உண்மையை மூடி மறைத்து வெளிச்சமாய் காட்சியளிக்கிறது. உண்மை பொய்களை மீறி வெளிவரமுடியாமல் தவிப்பதைக் கவலையோடு காட்சிப்படுத்துகிறார்.

**நினைவுகள்:**

சில காட்சிகள் தோண்டிப் பார்த்தாலும் நினைவிற்கு வருவதில்லை, சில காட்சிகள் இறுதிநாள் வரை பயணித்துக் கொண்டேயிருக்கும். சில காட்சிகள் அவ்வப்போது வந்து செல்லும். இன்றைய இளம் தலைமுறையினர் நினைவில் நிறுத்தவேண்டியதைக் கவிஞர் எடுத்தியம்புகிறார்.

**"என்னை நனைக்காமல்**
**விட்டதில்லை மழை..**
**என்னைப் படிக்காமல்**
**விட்டதில்லை புத்தகம்..**
**என்னை எழுதாமல்**
**விட்டதில்லை கற்பனை..** - (ப - 13)

மழையின் மீது தீராக்காதல் கொண்ட கவிஞர் எப்போது பெய்தாலும் மழையில் நனைவதை வாடிக்கையாகக் கொண்டுள்ளார். புத்தகம் வாசிப்பது குறைந்துவரும் இந்நாளில் கையில் கிடைத்த புத்தகத்தையெல்லாம் வாசிக்கின்றார். தான்கண்ட காட்சிகளையெல்லாம் கற்பனையோடு படைப்பாக்கி மகிழ்கின்றார். வாசகர்களுக்குப் புதிய சிந்தனையைத் தூண்டுகிறார்.

**தியானம்:**

**மனமது செம்மையானால் மந்திரம் செபிக்க வேண்டா**
**மனமது செம்மையானால் வாயுவை உயர்த்த வேண்டா**
**மனமது செம்மையானால் வாசியை நிறுத்த வேண்டா**
**மனமது செம்மையானால் மந்திரம் செம்மையாமே - (அகத்தியர்)**

நவீன உலகம் அவசரமாய், இயந்திரமயமாய் இயங்கிக் கொண்டிருக்கிறது. இயந்திரங்களுக்கு அவ்வப்போது ஓய்வு கொடுப்பது, பழுதுபார்த்தல், புதிய வடிவமைப்பினை மேற்கொள்வதன் மூலம் புத்துணர்வோடு இயங்க முடிகிறது. உலகப் பொதுவுடைமையாய், பெரும் இயற்கையாய் உருவெடுத்துள்ள சூரியன், சந்திரன், புவி உள்ளிட்ட கிரகங்கள் ஓய்வு எடுத்துக் கொண்டாலோ, பழுது ஏற்பட்டாலோ ஒட்டு மொத்த உலகமும் இயற்கைப் பேரிடர்களால் நிலைகுலையும் சூழல் ஏற்படக்கூடும். பல்வேறுபட்ட சூழல்களையும், நிலைகளையும் எதிர்கொள்ள மனிதர்கள் மேற்கொள்ள வேண்டியவற்றை கவிஞர் பட்டியலிடுகிறார்.

**"மனது மேம்பட**
**தியானம்**

**தியானம் மேம்பட**
**மந்திரம்**
**மந்திரம்**
**மேம்பட தரிசனம்"** - (ப - 17)

மனப்பதட்டம் தவிர்க்கவும், அமைதியாய் இயங்கவும் இந்தியாவில் தொடங்கிய தியான முறைகள் இன்றைக்கு உலகம் முழுவதும் பரவியுள்ளது. தொடக்கப் புள்ளியான இந்தியாவில் தியானத்தின் அவசியம் குறித்த விழிப்புணர்வு குறைவாயுள்ளது. கவிஞர் தனது கவிதையில் தியானத்தையும், தியானம் மேம்பட மந்திரங்களின் அவசியத்தையும், மந்திரங்கள் மேம்பட நேரடியான தரிசனங்களையும் வலியுறுத்துகிறார். தூய்மையான ஆன்மீகம் பகுத்தறிவிற்கு எதிரானதல்ல; தூய்மையான பகுத்தறிவு ஆன்மீகத்திற்கு எதிரானதல்ல என்னும் உண்மையை அனைவரும் புரிந்துணர வேண்டும்.

**அவமானம்:**

தோல்விகளும், அவமானங்களும்தான் பல வெற்றியாளர்களுக்கு அடிப்படையாய் இருப்பதை பல நிகழ்வுகள் எடுத்துக்காட்டுகின்றன. கவிஞர் நீண்ட இடைவெளிக்குப் பின் அரசுப்பணியேற்றதும், நேர்மைக்காக பணியில் ஏற்பட்ட குறுக்கீடுகளை நேரடியாய் கண்டு தீர்வு கண்டதை தலைமுறைக்குப் பாடமாக்குகிறார்.

**"பல நிலைகளிலும்**
**வெற்றி பெற்று**
**புகழின் உச்சத்தைத்**
**தொட நினைக்கும்**
**ஒவ்வொருவருக்கும்**
**அவமானமே மூலதனம்"** - ( ப - 24)

வெற்றிக்கு அடிப்படையாக பலரும் பொருளாதாரத்தை முன்னிறுத்தும்போது அவமானத்தை மூலதனமாகக் கொண்டு செயல்பட அறிவுறுத்துவது தன்னம்பிக்கையின் வெளிப்பாடாகும்.

**ஊடல்:**

**"புலத்தலின் புத்தேணாடு உண்டோ நிலத்தொடு**
**நீரியைந் தன்னார் அகத்து"** - (குறள் - 1323).

தேவலோக இன்பத்தை விட காதலரோடு ஊடல் கொள்வது இன்பம் என்பார் வள்ளுவர். காதலன், காதலி, கணவன் - மனைவிக்கிடையே ஊடல் வருவதும், அது தானாகவே தீர்வதும் சான்றோர்கள் தீர்த்து வைப்பதும் இயற்கை. இளம் தலைமுறையினர் சிறு பிரச்சனைகளையும் தீவிரமாக்கி தற்கொலை செய்வது, விவாகரத்துப் பெறுவதைத் தனது கவிதையில் நுண்மையாய் சுட்டித் தீர்வு சொல்கிறார்.

**"ஊடல் காலம்**
**அதுதான்**
**இருவருக்கும்**
**காதல் நினைவுகளை**
**அள்ளித்தூவும்**
**வசந்தகாலம் ….** - (ப - 25)

ஊடல் காலத்தில் கணவன், மனைவி இருவரும் பொறுமையாய் காத்திருந்து தங்களுக்குள் நிகழ்ந்த காதல், இனிமையான நிகழ்வுகளை மீளச்செய்ய வேண்டும். அது எதிர்மறை எண்ணங்களைத் தகர்த்தெரியும் இருவருக்குமான வசந்தகாலமாக அமையும் என்பதனை நினைவுறுத்துகிறார்

**பொதுவுடைமை:**

**"எல்லார்க்கும் எல்லாம் என்றிருப்பதான**
**இடம்நோக்கி நடக்கின்ற இந்த வையம்**
**இல்லாரும் அங்கில்லை; பிறன் நலத்தை**
**எனதென்று தனியொருவன் சொல்லான் அங்கே!**
**நல்லாரே எல்லாரும் அவ்வையகத்தில்.**

**(பாண்டியன் பரிசு** - 56)

என்ற பாடலில் பாரதிதாசன் பொதுவுடைமைச் சமுதாயத்தைக் காட்சிப்படுத்துவார். கவிஞரும் இதனையே விரும்புகிறார். இதற்கு தடையாய் இருப்போரைக் கண்டிக்கின்றார். பொதுவுடைமைச் சமூகம் அமைவதற்கு தான் எதனையும் செய்வதற்குத் தயாராய் இருப்பதாகக் கூறுகிறார்.

**"எல்லாருக்கும்**
**எல்லாம்**
**கிடைக்க**
**வசியம்**
**இருந்தால்**
**வையுங்களேன்**
**அதற்கு**
**கட்டணம்**
**நான்**
**தருகிறேன்"** - (ப - 57)

தனது கவிதையின் வாயிலாக வசியம் செய்யும் மூடத்தைச் சாடுகிறார். ஒரு வேளை வசியம் செய்யும் முறையிருந்தால் எல்லோரும் அனைத்தும் கிடைத்து நலம்பெற வசியம் செய்யுங்கள். கட்டணத்தை தானே தருவதாகக் கூறி பொதுவுடைமைக் கவிஞராய் உருவெடுக்கிறார்.

**துணைநூல்:**


- புத்தரின் ஆசை - பா.கவிதா, வையைப் பதிப்பகம் - நாகலாபுரம்-தேனி
- பாரதிதாசன் கவிதைகள் - தமிழ் வேட்பன், ஸ்ரீ செண்பகா பதிப்பகம்,சென்னை.
- திருக்குறள் - புலியூர்கேசிகன், வானதிபதிப்பகம், சென்னை.
- காந்தி வழி கல்வியும் சமூகமும்- டாக்டர் மா.பாதமுத்து, காந்திய இலக்கியச்சங்கம்,மதுரை.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 29. இறையன்புவின் முகத்தில் தெளித்த சாரல் - ஓர் சமூகப்பார்வை

முனைவர் ஸ்.த.சிமி,
தமிழ் உயராய்வு மையம், அமெரிக்கன் கல்லூரி, மதுரை.

DOI 10.5281/zenodo.10702532.

**Abstract :**

All human beings are dependent on others for their needs. A community lives together with another community. Many societies depend on each other and live together is called society. A group of people who live together and share feelings of pleasure and pain with each other is called a society. Feelings of pain, pleasure and honor are the pulses of society. Humans living in society should respect the feelings of others. Many problems arise in the society when the people of the society violate the feelings and laws of others. The collection of poems is called 'Sprayed Charal on the Face of God' which takes these thoughts.

**Key Words : Modern Literature – Society – Irai anbu**

## முன்னுரை

மனிதர்கள் எல்லோரும் தங்கள் தங்கள் தேவைகளுக்கு, மற்றவர்களைச் சார்ந்தே இருக்கிறார்கள். ஒரு சமூகத்தினர் மற்றொரு சமூகத்தினருடன் சேர்ந்து வாழ்கின்றனர். பல சமூகங்கள் ஒன்றோடு சார்ந்தும், சேர்ந்தும் வாழ்வது சமுதாயம் எனப்படும். இன்பம், துன்பம் ஆகிய உணர்வுகளை ஒருவருக்கொருவர் பகிர்ந்து கொண்டு சேர்ந்து வாழும் மக்கள் குழு சமூகம் எனப்படும். துன்பம், இன்பம், கௌரவம் ஆகிய உணர்வுகள் சமூகத்தின் நாடித்துடிப்புகளாகும். சமூதாயத்தில் வாழும் மனிதர்கள் பிறருடைய உணர்வுகளுக்கு மதிப்பு கொடுக்க வேண்டும். சமுதாய மக்கள் பிறருடைய உணர்வுகள், சட்ட திட்டங்களை மீறும் போது சமுதாயத்தில் பல பிரச்னைகள் ஏற்படுகின்றது. இத்தகு சிந்தனைகளை எடுத்தியம்புவதாக ‘இறையன்புவின் முகத்தில் தெளித்த சாரல்’ என்றும் கவிதைத் தொகுப்பு அமைந்துள்ளது. இச்சமூக நிகழ்வுகளைக் குறித்து ஆய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

## இலக்கியங்களில் சமுதாயப் பார்வை

மனித வாழ்க்கையின் பிரதிபலிப்பே இலக்கியம். இன்றைய இலக்கியங்கள் சமுதாயத்தை பிரதிபலிக்கும் கண்ணாடியாக திகழ்கிறது. மனித உணர்வின் அடிப்படையில் எழுந்தவையாக இருந்தாலும் இலக்கியங்கள் வாசகனின் மனநிலைக்கு ஏற்ப இன்பமாகவோ, துன்பமாகவோ அதன் முடிவு அமைந்திருக்கும் இலக்கியங்களில், “மானுடவியல் நோக்கு மிக இன்றியமையாதது. தமிழில் அதற்கு சிறப்பிடம் உண்டு”[1] இலக்கியங்கள் மனிதனின் உணர்வுகள், மனித நேயம், குறிக்கோள்கள், பண்பு நலன்கள், பண்பாடுகள், பழக்கவழக்கங்கள், கலாச்சாரம், பிரச்சனைகள் ஆகியவற்றை சமுதாய மக்களின் வாழ்க்கை முறைக்கு தகுந்துவாறு ஏற்படுத்திக் கூறுகின்றன.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

இறையன்பும் - சமுதாயமும்

சமுதாயத்தை மையப்படுத்தி பல படைப்புகளை பல படைப்பாளிகள் படைத்துள்ளனர். ஒவ்வொரு படைப்பாளியும் சமுதாயத்தில் நடக்கும் நிகழ்வுகளை அவர்களின் எண்ணங்களின் ஓட்டத்திற்கு ஏற்ப படைக்கின்றனர். இந்த வகையில் கவிஞர் இறையன்பும் பல படைப்புகளின் வழியாக சமுதாய மக்களின் பிரச்சனையும், அவர்களின் மனித நேயத்தையும் குறிப்பிட்டுள்ளார். கவிஞர் இறையன்பு படைப்பில் வெளிவந்துள்ள "முகத்தில் தெளித்த சாரல்" இந்த வகையைச் சாரும்.

மனித மனம்

மனமானது ஒரு மாயமான் காட்டிலுள்ள கானல் நீரைப் போன்றது. குரங்கு மரத்திற்கு மரம் தாவுவதைப் போன்று மனிதனின் மனமும் அடிக்கடி தன் கொள்கையை மாற்றிக் கொள்வதால் மனதைக் குரங்கு என்கிறார்கள். "இந்தக் குரங்கு மனம் மூளைதான். மூளை தானே சிந்திக்கிறது; மூளையாகிய மனம் சிரங்கு அரிப்பதைப் போல எப்போதும் அரித்துக் கொண்டே இருக்கும்;; சில நேரம் அதைத்தான் செய்ய வேண்டும் என்று அடம் பிடிக்கும்; அடுத்த நேரம் அதைச் செய்யக் கூடாது இதைத்தான் செய்ய வேண்டும் என்று முரண்டு பிடிக்கும். எனவே நமது சிந்தனைகள் உயர்ந்ததாக இருந்தால் இந்த குரங்கு மனம் ஒன்றும் தெரியாது போல் கண்டும் காணாமல் மௌனமாக இருக்கும்".2 இந்த மனமானது ஒவ்வொரு வயதினிடையே மாறுபாடு அடைந்து காணப்படுகிறது.

சமுதாயத்திலுள்ள மனிதர்களின் மனங்களும் குரங்கு மனதை போன்று காணப்படுவதால் பல பிரச்சனைகள் சமுதாயத்தில் ஏற்படுகின்றன. கவிஞர் மனதை குறித்து குறிப்பிடும் போது, மனிதர்களின் மனம் குழந்தை மனதை போன்று இருக்க வேண்டும். குழந்தை மனம் தூய்மையாக இருக்கும். குழந்தையைப் போன்ற மனம் இருந்ததால் தான் மனதில் கேள்விகளும் எழும். குழந்தை மனதை உடையவர்கள் தான் சமுதாயத்தில் உயர்ந்த நிலையை அடைய முடியும் என்பதை,

"உண்மையிலே குழந்தையாக
இருப்பவர்தான் குருவாக முடியும்
குழந்தையைப் போன்ற மனத்தில்
தான் கேள்விகள் தோன்றும்
காரணம் அந்த மனம் காலியாகவே இருக்கும்"

எனும் கவிதை வரிகளின் மூலமாக புலப்படுத்துகின்றார்.

மனித உறவுகள்

வாழ்க்கையில் ஏற்படும் இன்பங்களையும், துன்பங்களையும் பகிர்ந்து கொள்ள மனித மனதுக்கு உறவு தேவைப்படுகிறது. அன்பு, பாசம் போன்றவற்றால் உறவுகள் வளர்ச்சிப்

பெறுகின்றது. குடும்ப உறவுகள் வளர்ந்தால் மனித உறவுகள் தானாக வளர்ச்சி அடையும். ஆனால் இன்று சமுதாயத்தில் உறவுகள் நிலை வேறுவிதமாக காணப்படுகின்றன. பணம் இருந்தால் மட்டுமே உறவினர் வீடு தேடி வருவார்கள் என்றும், பணம் இல்லாத நேரத்திலும் துன்பம் நேரும் பொழுதும் எந்த உறவினரும் நண்பரும் வீடு தேடி வருவதில்லை என்பதனை,

"வசந்தம் வரும்போது
மட்டுமே தன்னுடைய
வாசலுக்கு வந்த மனிதர்களில்
எத்தனை பேர்
இலையுதிரில் தன்னை நாடி
வருகிறார்கள்"

என்ற பாடலடிகளில் விளக்கி நிற்கிறார் கவிஞர்.

மதம்

மதம் என்பது மனிதர்களின் மனம் ஒன்றி சம்மதத்துடன் வாழ்வதற்காக உருவாக்கப்பட்டதே தவிர மதம் பிடித்து பிரிவதற்காக அல்ல. மதத்தை பின்பற்றுபவர்களாக நடிக்கின்ற சில போலிகளு;ககு மதம் பிடிப்பதால் மதப்பிரச்சனைகள் ஏற்படுகின்றன. இறைவனின் பெயரைச் சொல்லி போலி விளம்பரங்களினால் மக்களைக் கவருகின்ற போலிகளின் வாழ்க்கையினால் மதங்களில் பிளவு ஏற்படுகின்றது. இறைவன் மனதில் இருக்கிறான் அவனை நாமே உணர வேண்டும் என்பதைக் கவிஞர் குமரி ஆதவன் குறிப்பிடும் போது,

"கீரிடங்களையும்
பீடங்களையும்
உரிமையாக்கிக் கொண்டவர்களே
மதம் மனம் சம்பந்தப்பட்டது
இதை மறந்து
பணம சம்பந்தப்பட்டதாய்
ஆக்கி வீட்டீர்".
……………………
வேதம் ஓதவும்
கூலி பேசுகின்றீர்?" 3

என்கிறார்.

கவிஞர் இறையன்பு “மணியோசையும் மலர் வாசமும்” என்னும் கவிதைத் தொகுப்பில் கோயிலுள்ள மணியோசைகள் மறைய வேண்டும் என்றும், இறைபக்தி என்பது மனதளவில் இருக்க வேண்டும் என்றும் குறிப்பிடுகிறார். சமுதாயத்திலுள்ள கோயில்களின் மணியோசையினால் எந்த ஒரு பயனும் இல்லை என்பதனை,

“மணியோசைகள் மறைகின்றன
கோயில் மணியோசை எதற்கு?
யாரை எழுப்ப?
எத்தனை ஓசைகள் கேட்டாலும்
தூங்கபவர்கள் எழப்போவதில்லை”

என்று குறிப்பிடுகிறார்.

## பெண் சிசுக் கொலை

இன்றைய குழந்தைகள் நாளைய சமுதாயத்தைக் கட்டியெழுப்பக்கூடிய சிற்பிகள்; பெண் குழந்தைகளைக் கருவிலே கொன்றும், குப்பைத் தொட்டிகளில் வீசியெறிந்தும், பெண் சமுதாயத்தையே அழித்துக் கொண்டிருப்பது மிகவும் இழிவானதாகும். பெண் குழந்தைகள் அழிக்கப்படுவதற்கு முக்கிய காரணம் இன்றைய சமுதாயத்தில் தலைவிரித்தாடுகின்ற வரதட்சணை என்ற கொடியப்பேயாகும் என்பதனை குமரி ராஜீ என்ற கவிஞர் குறிப்பிடும் போது,

“பத்து மாதங்கள்
மாமிசக்குகைக்குள்
துள்ளி விளையாடிய
பச்சிளம் பிள்ளையைப்
பத்து நாளாக
நான் தத்தெடுத்தும்
தட்டிக் கேட்க ஆளில்லை”4

என்கிறார்.

பெண்சிசுக் கொலையைக் குறித்து இறையன்பு “கள்ளிச் செடியும் கள்ளச் செயலும்” என்னும் கவிதையில் குறிப்பிட்டுள்ளார். பெண்குழந்தையை கொல்ல கள்ளி பால் எடுக்க கள்ளிச் செடிக்கு அருகே செல்கிறாள். அங்கு தாய் நாய் குட்டிகளுக்கு பாலூட்டிக் கொண்டிருக்கிறது. அந்த தாய், நாயின் பாசத்தை பார்த்தாவது குழந்தையின் அம்மா மனம் மாற மாட்டாளா என்ற ஏக்கத்தை கவிஞர் வலியுறுத்திதுகிறார். இதனை,

“கள்ளிச் செடிப்புதரில்
மனிதத் தாய் கொல்லப் பால்
தேடிப் போகிறாள்.
அங்கு,
தாய் நாய் குட்டிகளுக்குப்
பாலூட்டிக் கொண்டிருக்கிறது”.

எனும் பாடலடி விளக்க கூறுகிறது.

## இயற்கை அழிக்கப்படுதல்

சமுதாயத்தில் இயற்கை அள்ளித்தந்த வரமான மனிதன், அந்த இயற்கையை மெல்ல, மெல்ல, அழித்து உயிர் இயக்கத்தைத் தடைச் செய்யத் தன்னால் இயன்றதைச் செய்து வருகிறான். வளர்ந்து வரும் விஞ்ஞானமும், தொழில் நுட்பமும் இயற்கையை அழிப்பதில் முக்கிய பங்கு வகிக்கிறது.

“அதிகாலையில் எழுப்பி
அப்பாவுடன் ஓடுகையில்
............................
...........................
இயற்கை அரண்களின்
ராணி என்று
அப்பா சொன்னார்
அந்த ராணியின் மேனியில்
இன்று ரணங்கள்”5

என்று இயற்கை அழிக்கப்படுவதை குறித்து கவிஞர் தாமரை குறிப்பிடுகிறார்.

சமுதாயத்தில் காடுகள் அழிக்கப்படுவதால் காடுகளைக் காணவில்லை. ஓடும் ரயிலில் தூரத்தே தெரிகின்ற மரங்கள் இன்று தூர தூரம் போய்விட்டன. காடுகள் அழிக்கப்படுவதற்கு மூலகாரணமாக திகழ்பவர்கள் மனிதர்களே, இயற்கை அழிவது இயற்கையால் அல்ல் அது மனிதர்களாலும், மாந்தர்களாலும் படிப்பறிவு இல்லாதவர்களாலும் ஏற்படுகிறது. என்பதனை,

“இயற்கை, இயற்கை எய்துவது
இயற்கையால் நிகழ்வது இல்லை
இது மனிதர்களால், மாந்தர்களால்
மாக்களால்”

என்ற பாடலடிகளின் மூலம் சுட்டிக்காட்டுகிறார்.

## தத்துவம்:

தத்துவம் என்ற சொல், இரண்டு கிரேக்கச் சொற்களான "Philos" மற்றும் "Sophia" இவைகளிலிருந்து உருவானதாகும். Philosஎன்பது அன்பு.Sophia என்பது மெய்யறிவு அல்லது ஞானம். எனவே தத்துவம் என்பது "மெய்யறிவுடன் கூடிய பற்று" எனப்படும். தத்துவம் என்ற சொல்லை முதன் முதலில் பயன்படுத்தியவர் பிதாகரஸ் என்பவராவர். கடவுளுடன் தொடர்பு கொண்டு கடவுளை அடைவதற்குரிய வழியே தத்துவம் ஆகும். இந்த கருத்தானது ஒவ்வொரு காலகட்டத்திலும் மாறிக்கொண்டே இருக்கிறது. தத்துவம் செயல்பாட்டில் தொடர்புடையது. கவிஞர் இறையன்பு மனிதனின் வாழ்க்கையையும் மரணத்தையும் தத்துவமாக குறிப்பிட்டுள்ளார்.சமுதாயத்தில் வாழும் ஒவ்வொரு மனிதர்களின் வாழ்க் கையும் கொஞ்சம் காலம் தான். இதை உணராத மனிதன் வாழ்க்கையை தவறாகப் பயன்படுத்துகிறான். என்பதனை "இருட்டே நிரந்தரம்- வெளிச்சம்தற்காலிகம்ஆதியும் அந்தமும் இருட்டு தான்கருவறையும் இருட்டுகல்லறையும் இருட்டுவெளிச்சம் என்பதுஇடைப்பட்ட காலம் தான்" என்னும் பாடலடி மூலம் விளக்குகிறார். மனிதன் உருவான இடமான கருவறையும் இறந்த பின்னுள்ள கல்லறையும் இருட்டு என்று குறிப்பிடுகிறார. இடையில வரும் வெளிச்சம தான் வாழ்க்கை என்று குறிப்பிடுகிறார்.

## தொகுப்புரை

கவிஞர் இறையன்பு சமுதாயத்தில் நடக்கும் அவலங்களை இக்கவிதைத் தொகுப்பின் வழியாக வெளிப்படுத்தியுள்ளார். சமுதாயத்தை உருவாக்கும் மனிதனே பல பிரச்சனைகளுக்கு முன்னோடியாகத் திகழ்கிறான். பிரச்சனைகளுக்கு முக்கிய காரணமாகத் திகழ்வது அவனுடைய உள்ளார்ந்தச் (மனம், குணம்) செயல்பாடுகளும், மனித நேயம் இல்லாததும் தான் காரணம் என்று குறிப்பிடுகிறார். மனித வாழ்க்கைக்குத் தேவையான நம்பிக்கையும் இலட்சியமும் மனித இயல்புகளான ஆசை, அன்பு, ஆடம்பரம் போன்றவற்றினால் சமுதாயத்தில் பல சிக்கல்கள் ஏற்படுகின்றன என்பதை சிறந்த கவிதைகளால் சுட்டிக்காட்டியுள்ளார். வாழ்க்கைக்கு ஏற்ற தத்துவங்களையும் குறிப்பிட்டுள்ளார்.

## அடிக்குறிப்புகள்:

1. தமிழண்ணல், ஒப்பிலக்கிய அறிமுகம்; ப.93.
2. அருப்புக்கோட்டை செந்தமிழ்கிழார், மனித நேயத்திற்கு வழிகாட்டி, ப.10.
3. குமரி ஆதவன், அருமை மகளே, ப.71.
4. குமரி ராஜூ, சுதந்திர அடிமைகள், ப.84.
5. தாமரை, ஒரு கதவும் கொஞ்சம் கள்ளிப்பாலும், ப.69.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 30. குறிஞ்சித்தேன் நாவல் காட்டும் சமுதாயம்

**ரா.சண்முகப்பிரியா,**

உதவிப்பேராசிரியை, தமிழ்த்துறை, திருவள்ளுவர் கலை மற்றும் அறிவியல் மகளிர் கல்லூரி, சூலப்புரம்.

DOI 10.5281/zenodo.10702580.

**Abstract :**

A society is a group of people bound by culture, lifestyle and social customs.The novel "Rajamkrishnan's Kurinjithen" is based on the society where the flourishing of business clan, marriage dowry, customs etc.

### முன்னுரை

பண்பாடுகளுக்கும் வாழ்க்கை முறைகளுக்கும் சமூகப் பழக்கவழக்கங்களுக்கும் உட்பட்ட மக்கள் குழுக்களையே சமுதாயம் என்கிறோம்.

சமுதாயம் என்பதில் தொழில் குலமரபு பூப்பெய்தல், திருமணம் வரதட்சணை, பழக்கவழக்கம் போன்றவை அமையும் விதமாக "ராஜம்கிருஷ்ணனின் குறிஞ்சித்தேன்" நாவல் அமைந்துள்ளது.

### சமுதாயம் - விளக்கம்:-

குறிப்பிட்ட நிலப்பரப்பில் வாழும் மக்களுடைய சமூக வாழ்க்கையின் முழுமையான அமைப்பே சமுதாயம் என்று எஸ்.ஜே.பாஸ்கல் கில்பர்ட் கூறுகிறார்.

### சமுதாயம்:-

ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பில் வாழும் காலமாக ஒன்று சேர்ந்து வாழ்வதற்காக மக்கள் கூட்டம் ஏற்படுத்திக் கொள்ளும் அமைப்பே சமூகம் ஆகும்.

தமிழ்ச் சொல்லகராதி 'சமூகம்' என்ற சொல்லுக்கு மக்கள் திரள் என்று பொருள் தருகிறது.

### குறிஞ்சித்தேன்:-

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை பூக்கும் குறிஞ்சிப்பூ, குறிஞ்சியைக் கொண்டே வயதைக் கணக்கிடும் முறை 12 வயது கடந்தவன் ஒரு குறிஞ்சி கண்டவன் என்றும் 60 வயதாகியவரை ஐந்து குறிஞ்சி கண்டவர் என்று கூறுகின்றனர். குறிஞ்சி மலையும் மலை சார்ந்த நிலமான குறிஞ்சி நிலத்தில் வாழும் படகர் இனமக்களின் இயற்கை வாழ்வும், இயற்கை வாழ்வு சிதைந்து செயற்கை வாழ்வுக்கு மாறியபோது ஏற்பட்ட இன்னல்கள், அறியாமையால் ஏற்பட்ட துன்பங்கள் மலைவாழ் மக்களின் வாழ்வைச் சித்தரிக்கும் விதமாக நாவல் அமைந்துள்ளது.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

**தொழில்:-**

வரகும் சாமையும் பயிரிட்டனர் உருளைகிழங்கும் பயிரிட்டனர். ஆடுமாடு வளர்த்தனர். பின்பு தேயிலைப் பயிரிட்டனர்.

உயிர் காக்க உருளைக்கிழங்கு பயன்படும், ஆனால் பணத்திற்காக வசதி படைத்தவர்கள் தேயிலைப் பயிரிட்டனர்.

உண்டிக் கொடுத்தோர் உயிர் கொடுத்தோர் என்பதற்கேற்ப பக்கத்து வீடு பசித்திருக்க தான் மட்டும் தனித்து உண்ணாதவர்கள்.

பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் என்னும் குறளுக்கேற்ப பகுத்து உண்ணக் கூடிய பண்பை உடையவர்கள்.

மாடுகளில் இருந்து பால் கறக்க நிறைய வலிமை வர வேண்டும் என்பதால் வலத் தோள்பட்டையில் இரும்பைப் பழுக்கக் காய்ச்சிச் சூடுபோடுவார்கள் என்று ஜோகியின் பாட்டி கதை சொல்ல அவன் கேட்டு இருக்கிறான்.

இதன் மூலம் பால் கறக்க வலிமை வேண்டும் என்ற செய்தியை நாம் அறிகிறோம்.

**பால் கறக்கும் நிகழ்வும் பழக்கவழக்கமும்:-**

பால் கறக்கும் வேலை அவர்களுக்குப் புனிதமான வேலை .பால் கறக்கும் சடங்கைச் செய்கையில் கொட்டிலுக்குச் சென்று 'ஹொானே' என்னும் மூங்கிற்குழாய் வழியே வழியவழியக் கறந்த பாலைப் பெரியபானையில் ஊற்றிக் கொண்டு வருவர்.

அவ்வாறு வரும்போது பெண்கள் எவரும் எதிரே வரக் கூடாது. பால் அரையாகிய புனித அறைக்குள் செல்லவும் மாட்டார்கள். பாலைக் காய்ச்சவும் மாட்டார்கள். பேதைப் பருவம் தாண்டியப் பெண்கள் அந்நாட்களில் பாலை ‘அருந்தவும். மாட்டார்க்ள்.

பாலைத் தெய்வத்தின் பிரசாதம் .போலவும். அந்நிகழ்வைப் புனிதமான நிகழ்வாகவும் கடைபிடித்தனர் என்பதை நாவல் வழியாக அறிகிறோம்.

**குறும்பர்களின் ஏவல்.**

பில்லி சூன்யம் வைப்பது என்பது காலங்காலமாக வழக்கத்தில் உள்ளது.

அன்றைய காலகட்டத்தில் குறும்பர் இனமக்கள் பில்லிசூன்யம் வைப்பதில் மட்டுமல்ல உடல்நலக்குறைவு, நாட்பட்ட நோய்கள் போன்ற நோய்களுக்குப் பச்சிலைவேர் தருவதிலும் கைதேர்ந்து இருந்தனர்.

படகர் இன மக்களை நோயின் பிடியில் இருந்து காக்கக் கூடியவர்களாக குறும்பர்கள் இருந்தனர்.

இதனால் படகர் இனமக்களில் மூதாதையர் காலம்தொட்டு விளைச்சலில் முதல் போகத்தில் முதல் படியளவு குறும்பர் இனமக்களுக்கு அளித்துவிடுவர். இதை அவர்கள் கடவுளுக்குச் செய்யும் காணிக்கையாக நினைத்துச் செய்தனர்.

**குலமரபு:-**

படகர் இனமக்கள் தங்களின் குலதெய்வமான ஐயனின் நெருப்பைக் காக்க ஒரு பையனை பூசாரியாக ஏற்பாடு செய்வார்கள். ஏற்கனவே இருந்த பையன் திருமண வயதை எட்டிவிட்டதால் அவனை வீட்டிற்கு அனுப்பிவிட்டு வேறொரு பையனை நியமிக்க ஏற்பாடு செய்தனர்.

ஜோகியின் தந்தை காவலுக்கு வந்த போது கடனும், கவலையும், வாட்ட கண்ணயர்ந்து விட்டார். உறக்கத்தின் ஊடே பின்னிரவில் ஒரு கனவு கண்டார்.

கனவு என்பது ஆழ்மன ஆசை விருப்பம். நிறைவேறாத ஆசையை நிறைவேற்றிக் கொள்ள நம் மனம் சிருஷ்டிக்கும் மாயம். அது இறைவன் அருளால் கிடைத்த செய்தியாக இருந்தது.

லிங்கை யாகரிய மல்லரை சந்தித்தார். ஐயனின் நெருப்பைக் காக்க ஒரு பையன் வர வேண்டும். அவன் ஒழுக்கம் உள்ளவனாக, சூதுவாது அறியாதவனாக, இறைவர்க்குரிய காணிக்கை தனக்கு சொந்தமென எண்ணாதவனாக இருக்க வேண்டும் .உன் பையனுக்கு ஒரு குறிஞ்சி ஆகவில்லையே (ஒருகுறிச்சி - 12வயது) என்று கூறினார்.

லிங்கையா கனவில் கண்ட ஐயனையும் ஜோதியையும் விவரித்ததுடன் கையில் பிடித்துச் சென்ற பாலகன் ஜோகி என்பதை மாற்றி ரங்கன் என்று கூறினார்.

இச்செய்தியறிந்த ரங்கன் வீட்டை விட்டு ஒத்தைக்கு ஓடிவிடவே ஜோகி தான் எட்டு வருடமாய் இரியர் கோவில் பூசாரியாக இருக்கிறான்.

**திருமணம்:-**

மணம் என்பது இலக்கிய வழக்கில் திருமணத்தைக் குறிக்கிறது.

பண முறையினைப் பண்டைத் தமிழர் வதுவை மணம் மன்றல் எனக் குறிப்பிடுகின்றனர். இன்றைய தமிழ்ச் சமுதாயத்தின் பெரும்பகுதியினர் திருமணத்தைக் கல்யாணம் என்ற சொல்லில் சுட்டி வருகின்றனர்.

இரியர் கோவிலில் இருந்து வந்தவுடன் பாருவை திருமணம் செய்துகொள்ள வேண்டும் என ஜோதி நினைத்தான்.ஆனால் பாருவும் கிருஷ்ணனும் ஒருவரை ஒருவர் விரும்பினர்.

பாருவின் அண்ணன் பீமன் ஒத்தைக்கு சென்ற போது ரங்கனைப் பார்த்து, மணம் பேசி முடித்து வருகிறான்.

ஜோதி, கிருஷ்ணன், ரங்கன் மூவரும் மணம் முடிக்க - நினைப்பதால் மரகதமாலை ஹெத்தப்பா கோயில் உருண்டைக் கல்லைத் தூக்கி அதில் வெற்றி பெறுபவரே பாருவை திருமணம் செய்து கொள்ளலாம் என அறிவிக்கின்றனர்.

ரங்கன் போட்டியில் வெற்றி பெறுகிறான் ரங்கன் பாரு திருமணம் இனிதாக நடைபெறுகிறது.

**வரதட்சணை:-**

வரதட்சணை நிலமாகவோ பணமாகவோ நகையாகவோ மூன்றும் சேர்த்தோ கொடுக்கப்படுகிறது. பெண்வீட்டாரின் செல்வ நிலைக்கேற்பவும் மாப்பிள்ளையின் தகுதிக்கேற்பவும். வரதட்சணை கொடுக்கப்படுகிறது.

கோத்தர் இசை முழங்க புத்தாடை அணிந்த ரங்கன் 'ஜோகி, தந்தை, சிறிய தந்தை முதலியவர்களுடன் சேர்ந்து பரிசுப் பொருள்களையும் இருநூறு ரூபாய் வெள்ளிப்பணத்தையும், சீரெடுத்து மணிக்கல்லட்டி சென்று பெண்ணை அழைத்து வந்தனர்.

மாமி ஸ்தானத்தில் இருக்கும் பெண் குடத்திலிருக்கு ஒழுகும் நீர்போல் வழிவழி வரும் இந்தக் குடும்ப வளர்ச்சியை ஏற்றுக் கொள்வாயாக என்று புதுமணப் பெண்ணிடம் கூறுகிறாள்.

மனையில் கம்பள விரிப்பில் புதுவட்டில் வைத்து புதுப்பாலுடன் சாமை சோற்றை வைத்து பாலன்னம் வைக்கின்றனர்.

பின்னர் கோத்தர் இசை முழக்கப்படுகிறது. புதுக்குடத்துடன் மணப்பெண் நீரெடுக்க அருவிக்குச் செல்கிறாள்.

**தெய்வவழிபாடு:-**

இலக்கியத்திலும் இலக்கணங்களிலும் .தெய்வவழிபாடு முதன்மையானது மட்டுமின்றி முக்கியமானதும் ஆகும்.

கடவுள் வாழ்த்தை முதன்மையாகக் கொண்டே இலக்கியங்கள் ஆரம்பிக்கின்றன.

மண்ணையும் நீரையும் காற்றையும் தந்து வற்றாத வளமைக்கு வழிகாட்டிய இறைவனைக் கொண்டாடி மகிழும் திருநாள்.

கீழ் மலை மாதலிங்கேசுவரர் சந்நிதிக்கு முன் தீ வளர்த்து 'ஹரஹரஹர' என்ற கோஷம் மலைமுகடுகள் எங்கும் எதிரொளிக்க அடியவர்கள் சிந்தை உருகி பக்திப் பரவசத்தால் பாடி ஆடி மகிழும் புனித நாளாகும்.

**இறுதிச்சடங்கு:-**

உடலாகிய கூட்டுக்குள் சிறைப்பட்டு பல துன்பங்களுக்கும் ஆளாகி வாழ்வுடன் போராடி ஓர் உயிர் பறவை எய்தும் நிகழ்ச்சி சாதாரண நிகழ்ச்சியாகும்.

E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

ஜோகியின் தந்தையின் மரணம் அறிந்த செய்தியைக் கேட்டதும் கோத்தர் இசை எழுப்பினர்.

இறுதிச் சடங்கிற்குத் தேவையான செயல்களைச் சிறப்பாகச் செய்தனர்.

தூய வெள்ளை உடையில் மக்கள் கூடினர்.

லிங்கையாவின் உடலில் தண்ணீரை ஊற்றி பொண்ணுடலைக் குளிப்பாட்டினர். புதுவேட்டியும் சட்டையும் அடிகிய கோட்டும் பாகையும் வாங்கி வந்து தமையன் தம்பியை அலங்கரித்தார். அகன்ற நெற்றியில் இரு வெள்ளி ரூபாய்களை ஒளியிட ஒட்டி வைத்தான்.லிங்கையாவின் உடலைத் தொட்டு வணங்க அருவியென அனைவரும் வந்தார்கள்.தம்மை உயிருக்கும் உயிராக வளர்த்த அருமைத் தந்தை மறைந்துவிட்டார். அந்த வீட்டிலே வாழாமல் வாழ்ந்த மாமணி மறைந்துவிட்டது.முற்றத்தை விளங்க வைத்த மாமரம் சாய்ந்து விட்டது.

**முடிவுரை:-**

குறிச்சி நிலத்தில் வாழும் மலைவாழ் மக்களாகிய படகர், கோத்தர், இருளர், குறும்பர் இன மக்களின் வாழ்வும் அவர்கள் வாழ்வில் ஏற்படும் துயரங்களையும் உணர்த்தும் விதமாகக் குறிஞ்சித்தேன் நாவல் அமைத்துள்ளது.

**துணைநூல்கள்**

1. வாழ்வியல் களஞ்சியம்
2. குறிஞ்சித்தேன், ராஜம்கிருஷ்ணன், தாகம்பதிப்பகம், சென்னை

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 31. வள்ளலார் காட்டும் சாதியச் சமத்துவச் சிந்தனைகள்

உ.ச.எ.தமிழரசன்,
உதவிப்பேராசிரியர், இளநிலைத்தமிழ்த்துறை,
அய்யநாடார்ஜானகிஅம்மாள்கல்லூரி,சிவகாசி.

DOI 10.5281/zenodo.10702611

**Abstract :**

Ramalinga Adikalar, also known as Vallalar, has the virtue of wilting whenever he sees a withered crop. Samarasuddha founded Sanmarka Sangam. Equality, brotherhood, abolition of caste, abolition of religion, abstinence and non-killing were also the foremost. He sowed the seed of lofty thought that all beings should live happily. He was born in Marudhur and brought the ideas of caste equality to the whole world. This article explores the ideas of caste equality found in the songs of such Vallalar.

## முன்னுரை

வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன் என்னும் அருட்குணத்திற்கு உரியவா வள்ளலார் என்று அழைக்கப்படும் இராமலிங்கஅடிகளார் ஆவார். சமரசசுத்த சன்மார்க்க சங்கம் நிறுவினார். சமத்துவம், சகோதரத்துவம், சாதிஒழிப்பு, மதஒழிப்பு, பசிப்பிணி, கொல்லாமை என அத்துணை அறங்களுக்கும் முதன்மையானவராய் விளங்கினார். எல்லா உயிர்களும் இன்புற்று வாழ வேண்டும் என்ற உயரிய சிந்தனை விதையை விதைத்தார். மருதூரில் பிறந்து சாதியச் சமத்துவச் சிந்தனைகளை உலகமெங்கும் எடுத்துரைத்தார். அத்தகைய வள்ளலாரின் பாடல்களில் காணலாகும் சாதியச் சமத்துவச் சிந்தனைகளை ஆராய்வதாக இக்கட்டுரை அமைகின்றது.

## வள்ளலாரின்சாதிஒழிப்பு

இன்றைய மனித சமூகம் சாதிகளால், மதங்களால் கட்டுண்டுள்ளது. சாதிகள் இல்லையடி பாப்பா என்றார் பாரதி.

"வேற்றுமை தெரிந்த நாற் பாலுள்ளும்
கீழ்ப்பாலொருவன் கற்பின்
மேற்பாலொருவனும் அவன் கட்படுமே"

எனப் புறநானூறு வலியுறுத்தும். வள்ளுவரும் பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் என்றார். வள்ளலார் சாதியை எதிர்த்தார். மதத்தை எதிர்த்தார். வருணா சிரமத்தை எதிர்த்துப் பாடினார். இதனை,

**"நால்வருணம் ஆசிரமம் ஆசாரம் முதலா
நவின்ற கலைச் சரிதமெலாம் பிள்ளை விளையாட்டே
மேல்வருணம் தோல் வருணம் கண்டறிவார் இல்லைநீ
விழித்திதுபார் என்றெனக்கு விளம்பிய சற்குருவே"**

என்கிறார். வருணம், சாதி, மதம், குலம் என்னும் தீமைகளெல்லாம் மண்மூடிப் போகட்டும் என்கிறார்.

"மருட் சாதிசமயங்கள் மதங்களாச்சிரம

வழக்கெலாம் குழிக்கொட்டி மண்மூடிப் போட்டு"

என்று சாதி மதங்களுக்கு எதிரான சமத்துவச் சிந்தனையைப் புகுத்துகின்றார்.

பாரதியும்

**"மேலவர் கீழவர் என்றே வெறும்**

**வேடத்திற் பிறப்பினில் விதிப்பனவாம்**

**போலிச்சுவடியை யெல்லாம்இன்று**

**பொசுக்கி விட்டாலெவர்க்கும் நன்மையுண் டென்பான்"**

என்று ஏற்றத் தாழ்வுடைய சமுதாயத்தை எதிர்கின்றார்.

சாதி ஒழிப்பு பற்றி பேசுவோர் தம்மளவில் சுயசாதிப் பற்றுடையவர்களாக இருப்பதை இன்று நாம் கண்கூடாகப் பார்க்கின்றோம். ஆனால் வள்ளலார் சுயசாதிப் பற்றினை ஒழித்தவராய், சாதி ஒழிப்புக்குப் பாடுபவராய் இருந்திருந்தார்.

இதனை,

**"சாதியும் மதமும் சமயமும் தவிர்த்தேன்**

**சாத்திரக் குப்பையுந் தவிர்த்தேன்"**

என்கிறார்.

தெய்வத்தின் அருளால் தம் நெஞ்சில் இருந்த சுயசாதிப்பற்று அழிந்தது என்று குறிப்பிடுகிறார்.

**"சாதியும் மதமும் சமயமும் பொய்யென**

**ஆதியில் உணர்த்திய அருட்பெருஞ்சோதி"**

என்கிறார்.

**மதவெறி அரசியல்கூடாது**

மதங்கள் ஒன்றோடொன்று சண்டையிட்டு மனிதநேயத்தை அறவே அழிக்கின்றன. மதத்தின் குறிக்கோள் ஒன்றே. அது மக்களிடமிருந்து நல்ஒழுக்கங்களை கொள்ளையடிப்பது. இதனை,

**"கொள்ளை வினைக்கூட்டுறவால் கூட்டிய பல்சமயக்**

**கூட்டமும் அக்கூட்டத்தே கூவுகின்ற கலையும்**

**கள்ளம் உறும் அக்கலைகள் காட்டிய பல்கதியும்**
**காட்சிகளும் காட்சி தரும்கடவுளரும் எல்லாம்**
**பிள்ளை விளையாட்டெனா நன்கறிவித் திங்கெனையே"**

என்று மதத்தை கொள்ளை வினைக்கூட்டம் என்கிறார்.

சமய மத வேறுபாடுகளை மட்டுமின்றி சாத்திர கோத்திர வேறுபாடுகளையும் வள்ளலார் வெறுத்தார். இதனை

**"எய்வகைசார் மதங்களிலே பொய்வகைச் சாத்திரங்கள்**
**எடுத்துரைத்தே எமது தெய்வம் எமதுதெயவம் என்று**
**கைவகையே கதறுகின்றீர் தெய்வமென்றென்று அறியீர்**
**கரி பிடித்துக் கலகமிட்ட பெரியரினும் பெரியீர்"**

என்று குறிப்பிடுகின்றார்.

தத்துவ நியாயத்தை அனுசரித்துச் சமயங்களே ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. தயவை விருத்தி செய்வதற்குத் தடையாக இருப்பன சமய ஏற்பாடு, ஜாதி ஏற்பாடு முதலியவைகள். ஆதலால், இவைகளை விட்டொழித்துப் பொதுநோக்கம் வந்தாலொழிய, காருண்ணியம் விருத்திஆகிக் கடவுள் அருளைப் பெற்று அனந்த சித்தி வல்லபங்களைப் பெறமுடியாது என்கிறார் வள்ளலார்.

இறைவனை அடைய முன்னோர்கள் சமயங்களைச் சாதனங்களாக்கினா ஆனால் இன்று அவையே இறையருளைப் பெறமுடியாததற்குத் தடைகளாக உள்ளன என்று குறிப்பிடுகிறார்.

**சமத்துவச் சிந்தனை**

வள்ளலார் இறை வழிபாட்டில் மனிதாகள் ஒவ்வொருவரும் தனித்தனியாக வழிபடும் முறையை வெறுத்தார். தன்னலம் கருதி வழிபடுவதை வெறுத்தார். குடும்பத்துடன் கூடியோ, ஊராருடன் சேர்ந்தோ உலகநலம் கருதி வழிபடும் முறையை எடுத்துரைத்தார்.

வடலூரில் சத்தியஞான சபை என்னும் அமைப்பை உருவாக்கி அதனை நிறைவேற்றிடவும் செய்தார்.

ஒருவன் பிரார்த்தனை செய்வதில் அவனுக்காக மட்டும் செய்வது சரியல்ல. இந்த உலகமெலாம் வாழும்படி பிரார்த்தனை செய்தல் வேண்டும்.அப்படிச் செய்வதால் அதில் ஒருவனுக்கு வேண்டியவை எல்லாம் அடங்கி விடுகின்றன என்கிறார். தம்முடன் கூடி இறைவனை வணங்க வருமாறு

**"நினைந்து நினைந்துணர்ந்துணர்ந்து நெகிழ்ந்து நெகிழ்ந்தன்பே**
**நிறைந்துநிறைந்து ஊற்றெழுங்கண்ணீரதனால் உடம்பு**
**நனைந்துநனைந்து அருளமுதே நன்னிதியேஞான**
**நடத்தரசே என்னுரிமை நாயகனே என்று**
**வனைந்து வனைந்தே த்தும்நாம் வம்மின் உலகியலீர்"**

என்கிறார்.

**ஜீவஒழுக்கம்**

எல்லா மனிதரிடத்தும் சாதி, சமயம், குலம், கோத்திரம், சூத்திரம், சாத்திரம், தேசம், மார்க்கம், உயர்வு, தாழ்வு முதலிய பேத மற்று சமத்துவத்துடன் வாழும் வழிமுறைகளைப் போதித்தார்.

கடவுள், வருணம், சமயம், மதம், சாதி ஆகியவற்றையெல்லாம் அழித்தும், மொழி, நாடு, பிற வேற்றுமைகளை எல்லாம் கடந்த ஆன்ம நேய ஒருமைப்பாட்டுச் சிந்தனையை வள்ளலார் எடுத்துரைக்கிறார்.

**"உலகத்திரளெலாம் மருவறக் கலந்து**
**வாழ்வதற்கு வாய்த்த தருணம் இதுஎன்றே**
**வாயே பறையாய் அறைகின்றேன்"**

என்று உலகம் வாழத் தன் சமத்துவத் சிந்தனையைப் பறைசாற்றுகின்றார்.

எம்மதமும் சம்மதம் என்பதனை அடிகளார்,

**"எம்மதநிலையு நின்னருள்நிலையில் இலங்குதல் அறிந்தனன்**
**எல்லாஞ் சம்மதமாக்கிக் கொள்கின்றேன்"**

என்கிறார்.

**சமத்துவ அரசியல்**

வள்ளலார் சமத்துவ அரசியலை அமைக்க எண்ணம் கொண்டார். கருணையின்றி, போர் வெறி கொண்டு மக்களைக் கொலைபுரியும் அரக்கராட்சி, மதவெறி ஆட்சி ஒழிய வேண்டும்.சமத்துவம் எங்கும் பரவ வேண்டும். அருட்குணம் கொண்ட நல்லவர்கள் ஆட்சி அமையப் பெற்று நலம் பெற வேண்டும். எல்லோரும் ஒன்றுபட்டு வாழும் நிலை வருதல் வேண்டும் என்ற சமத்துவச் சிந்தனையை முன்வைத்தார். இதனை,

**"கருணை இலாஆட்சி கடுகிஒழிக**
**அருள்நயர்ந்த நன்மார்க்கர்ஆள்க - தெருள்நயந்த**

**நல்லோர் நினைத்த நலம்பெறுக நன்றுநினைத்து**

**எல்லோரும் வாழ்க இசைந்து"**

என்ற பாடல் வரிகள் குறிப்பிடுகின்றன.

மேலும்,நடுநிலை அரசியல் வேண்டும் என்பதை,

**"நடுநிலை இல்லாக்கூட்டத்தைக் கருணை**

**நண்ணிடா அரையரைநாளும்**

**கெடுநிலை நினைக்கும்சிற்றதிகாரக்**

**கேடரைப்பொய் யலால் கிளத்தாப்**

**படுநிலையவரைப் பார்த்த போதெல்லாம்**

**பயந்தனன் சுத்தசன்மார்க்கம்**

**விடுநிலை உலகநடை எலாங்எண்டே**

**வெருவினேன் வெருவினேன் எந்தாய்"**

என்று நடுநிலை ஒழுக்கநெறியை அரசியலாளர்கள் கடைபிடிக்க வேண்டும் எனக் குறிப்பிடுகிறார்.

பசி, பிணி, பகை, அச்சம் இவை எல்லாம் தொலைத்து மக்களை அருள்நெறியிற் செலுத்துகின்ற நல்லரசு அமைய வேண்டும் என்ற சமத்துவச்சிந்தனையை,

**"அச்சம்தவிர்த்தே அருளிற்செலுத்துகின்ற**

**விச்சைஅரசே விளங்கிடுக - நச்சரவம்**

**ஆதிக்கொடிய உயிர்அத்தனையும் போய்ஒழிக**

**நீதிக்கொடி விளங்கநீண்டு"**

என்று அரசியல் குறித்தான தன் சமத்துவச் சிந்தனையை எடுத்துரைக்கிறார்.

**"ஒத்தாரும் உயர்ந்தாரும் தாழ்ந்தாரும் எவரும்**

**ஒருமையுளராகி உலகியல் நடத்த வேண்டும்"**

என்ற சமத்துவ, சுதந்திர, சகோதரத்துவச் சிந்தனையை முன் வைக்கிறார்.

சமரச சன்மார்க்க நெறி எங்கும் பரவ வேண்டும்.உலகம் சமாதானத்தில் செல்ல வேண்டும்.போரில் எவ்வுயிர்க் கொலையும் நடந்தேறல் கூடாது என்பதில் நெறியாய் நின்றார் வள்ளலார்.

"இறையும் இவ்வுலகில் கொலைஎனில் எந்தாய்

என்னுளம் நடுங்குவது இயல்பே"

என்று போரற்ற சமத்துவ உலகம் நிலை பெற வேண்டும் என்ற சிந்தனையை வள்ளலார் எடுத்துரைக்கின்றார்.

**முடிவுரை**

உலகம் நடுநிலையோடு இயங்குதல் வேண்டின் வள்ளலார் காட்டும் சாதியற்ற, சமத்துவம், சகோதரத்துவம், நடுநிலை கொண்ட அரசியல்முறைகளை நாம் கைக்கொள்ள வேண்டும் என்பதை இக்கட்டுரை வாயிலாக அறிந்து கொள்ள முடிகிறது.

**துணைநின்றநூல்**

- திருவருட்பா, மூலமும்உரையும், துரைசாமிப்பிள்ளை, ஔவை.சு
  அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம்

**துணைநின்ற இணைய முகவரி**

- www.vallalar.org

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 32. சிறுதெய்வ வழிபாட்டில் சமத்துவச் சிந்தனை

முனைவர் அ. ஜீவா,
உதவிப்பேராசியர், தமிழ்த்துறை,
திருவள்ளுவர் கலை மற்றும்மகளிர் அறிவியல் கல்லூரி, சூலப்புரம்.
மதுரை மாவட்டம், தமிழ்நாடு.

DOI 10.5281/zenodo.10702638

**Abstract :**

The village deities are worshiped by the local people and they are worshiped as the guardian deities of the local people and are considered to cure diseases and bring health to life. These deities reside in the villages without extensive contact and are inseparable from the traditions of the people of the country. They are worshiped by the lay people because of the deep belief that worshiping them brings good and if they don't worship, evil is feared.

**Key Words : Village – Worship - Equality**

## முன்னுரை

நாட்டுப்புற மக்களால் தொன்று தொட்டு வழிபடப்பட்டு வரும் கிராமத் தெய்வங்களே சிறுதெய்வங்கள் இவை நாட்டுப்புற மக்களின் காவல் தெய்வங்களாக நோய் நீக்கி நலம் தருபவையாக வாழ்க்கைக்கு வளம் சேர்ப்பவையாகக் கருதி வணங்கப்படுகின்றன. இத்தெய்வங்கள் பரந்துபட்ட தொடர்பில்லாமல் கிராமங்களையே இருப்பிடமாகக் கொண்டு நாட்டுப்புற மக்களின் மரபோடு நீங்காத உறவுகொண்டு விளங்குகின்றன. வணங்கினால் நன்மையும் வணங்காவிட்டால் தீமையும் பயப்பன என்ற ஆழ்ந்த நம்பிக்கை காரணமாகப் பாமர மக்களால் இவை வழிபடப்பட்டு வருகின்றன.

## சிறுதெய்வங்களின் வகைப்பாடு

### வீட்டுத்தெய்வம்

தங்களுக்குள் வழிகாட்டியாய் விளங்கி வாழ்ந்து மறைந்த முன்னோர்களையோ, கன்னியாக இருந்த நிலையில் வாழ்ந்து மறைந்த பெண்களையோ, தங்களின் வீட்டுத் தெய்வமாக வழிபடும் மரபு காணப்படுகிறது. இது பெரும்பாலும் பெண் தெய்வமாகவே இருக்கும். இதனை வீட்டுச் சாமி, குடும்பத் தெய்வம், கன்னித் தெய்வம், வாழ்வரசி என்று கூறுவதுண்டு.

### குல தெய்வம்

ஒரு குறிப்பிட்ட மூதாதையின் மரபில் தோன்றியதன் வாயிலாக ஒருவருக்கொருவர் உறவு கொண்டுள்ள குழுவே 'குலம்'(CLAN)ஆகும். இரத்த உறவுடைய பங்காளிகள் ஒரே குலத்தைச் சேர்ந்தவர்களாகக் கருதப்படுவர். இவர்களுக்குள் திருமண உறவு நடைபெறாது. இவ்வாறு அமையும் ஒவ்வோரு குலத்திற்கும் தனித்தனித் தெய்வமும் கோயிலும் இருக்கும். இதுவே குலதெய்வம் என்றும் குறிப்பிடப்படும். குலத்தெய்வத்தை வணங்கினால் கோடி

நன்மை உண்டு குருவை மறந்தாலும் குல தெய்வத்தை மறக்காதே என்ற பழமொழிகள் குல தெய்வ வழிபாட்டின் முக்கியத்துவத்தை உணர்த்தும் பூப்புச்சடங்கு, திருமணம், காதணிவிழா, அழைப்பிதழ்களில் குலதெய்வத்தின் பெயர் தவறாது இடம் பெறுவதை நீங்கள் காணலாம்.

**இனத்தெய்வம்**

பல குலங்கள் சேர்ந்தது ஓர் இனம், ஒரு சாதி () என்று கூறப்படும் ஒரு குறிப்பிட்ட சாதிக்கென்று உள்ள தெய்வங்கள் இனத்தெய்வங்கள், இனச்சார்புத் தெய்வங்கள், சாதித் தெய்வங்கள் என்ற பெயர்களில் வழங்கப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட இனத்தாரின் தனித்துவத்தைக் காட்டும் வகையில் இத்தெய்வங்களின் வழிபாடுகள் சிறப்பாக அமையும் மிகுதியும் பெண் தெய்வங்களே இனத்தெய்வங்களாக விளங்குகின்றன.

**ஊர்த்தெய்வம்**

வீட்டைக் காப்பது, வீட்டுத் தெய்வம் குலத்தைக் காப்பது, குல தெய்வம் இனத்தைக் காப்பது இனத்தெய்வம் என்றாலும், ஓர் ஊரில் வாழும் மக்கள் அனைவரையும் காப்பது ஊர்த்தெய்வமே ஆகும். ஊர்ச்சாமி, ஊர் தேவதை, கிராம தேவதை ஊர்க்காவல் தெய்வம் என்ற பெயர்களில் இவை குறிப்பிடப்படுகின்றன. ஊர்மக்கள் அனைவரும் சேர்ந்து ஊர்த்தெய்வங்களுக்கு மிக விமரிசையாகப் பெரிய கும்பிடு நடத்துவர்.

தமிழகக் கிராமம் ஒன்றை நீங்கள் வலம் வந்தால் மேற்கூறிய தெய்வங்களை அடையாளம் காணலாம்.

**வெகுசனத் தெய்வங்கள்**

சாதி, மதம், மொழி என்ற வேறுபாடில்லாமல் அனைவரும் சென்று வழிபடும் வகையில் அமைந்த சிறுதெய்வங்களே இங்கு வெகுசனத் தெய்வங்கள் என்ற பெயரில் விளக்கப்படுகின்றன. சிறு தெய்வ மரபிற்கும் பெருந்தெய்வ மரபிற்கும் இடைப்பட்ட ஒரு கலப்பு வழிபாட்டு மரபாக இவை வளர்ந்தும், வளர்த்தெடுக்கப்பட்டும் வருகின்றன.

சிறுதெய்வங்கள் பின்வரும் செயல்பாடுகளின் வழி வெகுசனத் தெய்வ நிலைக்கு மாற்றப்படுகின்றன.

- சிறு தெய்வமாக இருந்து வளர்ந்ததாக இருந்தாலும் ஆதி அந்தம் இல்லாததாகவும், அவதாராக் கடவுளாகவும் பெருந்தெய்வங்களுக்கு உறவுடையதாகவும் மாற்றப்படும்.
- பிரபலமான ஆற்றல் கொண்டவையாக நோய்கள் துன்பங்கள் ஆகியவற்றிற்கு உடனடி நிவாரணம் கொடுப்பவையாக நம்பப்படும். பழிவாங்கும் உணர்வு, ஆவேசம், உக்கிரம் போன்றவை குறைக்கப்பட்டுச் சாந்தம், அமைதி போன்றவை குறைக்கப்பட்டுச் சாந்தம் அமைதி போன்ற பெருந்தெய்வக் குணங்கள் இத்தெய்வங்களுக்குக் கற்பிக்கப்படும்.
- கோயிலின் வருமானத்தைக் கொண்டு ஆகமவிதிகளின்படி கோயிலும், தெய்வ உருவமும் மாற்றி அமைக்கப்படும் சைவப் படையல் தெய்வத்தின் முன்பாகவும்,

அசைவப் படையல் கோயிலுக்கு வெளிப்புறமும் படைக்கப்படும். திருவிழாக்கள் ஏழு நாட்கள் அல்லது பத்து நாட்கள் வரை நடைபெறும். மேல்மருவத்தூர் ஆதிபராசக்தி, சமயபுரம் மாரியம்மன், கோட்டை மாரியம்மன், வீரபாண்டி மாரியம்மன், இராஜகாளியம்மன், வெக்காளியம்மன், அய்யனார், சனீஸ்வரன் போன்ற தெய்வங்கள் வெகுசனத் தெய்வங்களாக இன்று வழிபடப்பட்டு வருகின்றன. இத்தெய்வங்கள் எல்லாச் சாதி, மத, மொழி மக்களுக்கும் பொதுவானவை என்று கருதப்படுகின்றன.

**சிறுதெய்வங்கள் தோற்றம் பெறும் முறை**

சிறுதெய்வங்கள் பெரும்பாலும் நாட்டுப்புற மக்களின் நம்பிக்கை அடிப்படையிலேயே தோற்றம் பெறுகின்றன. சிறுதெய்வங்கள் எல்லாம் ஒரே முறையில் தோற்றம் பெறுவதில்லை அவை பல்வேறு பின்புலத்தில் தோற்றம் கொள்கின்றன. சிறு தெய்வங்களின் தோற்ற முறைகளைக் கீழ்க்காணும் நான்கு வகைகளுக்குள் அடக்கலாம். அவை:

- குறிப்பிட்ட ஊரில், குறிப்பிட்ட வட்டாரத்தில் பிறந்து, இறந்ததன் அடிப்படையில் தோற்றம் பெறுதல்.
- ஆற்றில் மிதந்து வந்த பெட்டிக்குள் இருந்து கண்டெக்கப்பட்டுத் தோற்றம் பெற்றவை.
- மக்கள் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குப் புலம் பெயர்ந்த நிலையில் பூர்வீகத் தெய்வக் கோயிலில் இருந்து பிடிமண்ணாக எடுத்து வரப்பட்டுத் தோற்றம் பெற்றவை
- வேறு திசைகளிலிருந்து வந்து ஒரு குறிப்பிட்ட ஊர்மக்களை, வட்டார மக்களைப் பாதுகாத்ததன் வாயிலாகத் தோற்றம் பெற்றவை என்பனவாகும்.

இவ்வாறு தோற்றம் பெற்றவை ஆண் தெய்வங்களாகவோ பெண் தெய்வங்களாகவோ இருக்கும். வழிபடுவோரின் பொருளாதார நிலைக்கேற்பத் தெய்வமும் கோயிலும் சிறப்புப் பெறும். ஒவ்வோரு சிறுதெய்வத்திற்கும் ஏதேனுமொரு தோற்றக்கதை வாய்மொழி மரபில் கதையாகவோ பாடலாகவோ வழங்கிவரும்.

**சிறுதெய்வக் கோயில் உருவ அமைப்பு**

கோயில் என்ற சொல் இறைவனை எழுந்தருளி இருக்கும் ஆலயத்தைக் குறிப்பதாகும். கோயில் என்றவுடன் வானுயர்ந்த கோபுரங்கள் பல்வேறு வண்ணத்திலான சிற்பங்கள் நீண்ட மதில்சுவர் என்றெல்லாம் நீங்கள் கற்பனை செய்துவிடக் கூடாது.

சிறுதெய்வக் கோயில்கள் பெரும்பாலும் மரத்தடியிலும் குளம், கண்மாய் ஏரி ஆறு போன்ற நீர்நிலைகளுக்கு அருகிலுமே அமைந்திருக்கும் இக்கோயில்கள் கிழக்கும் வடக்கும் பார்த்து இருத்தல் வேண்டும் என்பது மரபு நீங்கள் வழிபடச் செல்லும் கோயிலிலும் கூட இதனைப் பார்க்க முடியும்.

சிறுதெய்வங்களுக்குக் கோயில் எழுப்பி வழிபடும் வழக்கம் பிற்காலத்தில் தோன்றியதே ஆகும். பெரும்பாலும் திறந்த வெளியில் மரத்தின் கீழேயே தெய்வமாகக் கருதி

வழிபடத்தக்க கல், சூலாயுதம், வேல், அரிவாள், விளக்கு மாடம் போன்றவை இருக்கும். வேறு சில இடங்களில் பீடம் அமைக்கப்பட்டு மேற்கூறிய வழிபாட்டுப் பொருள்கள் வைக்கப்பட்டிருக்கும். இதற்கு அடுத்த நிலையில் சிலைகள் (தெய்வச் சிலைகள், குதிரை, நாய்) உருவாக்கப்பட்டு அவை திறந்த வெளியிலோ, கோயிலுலினுள்ளோ, வட்ட வடிவிலோ அமைந்திருக்கும். வட்ட வடிவமே தொன்மையான கோயில் அமைப்பாகும். வழிபடுவோரின் பொருளாதார நிலைக்கேற்ப கோயில் அமைப்பும் தெய்வ உருவங்களும் மாறிக் கொண்டே இருக்கும். பெண் தெய்வக் கோயில்களில் பச்சை, மஞ்சள் வண்ணங்களும், ஆண் தெய்வக் கோயில்களில் சிவப்பு, வெள்ளை வண்ணங்களும் மிகுதியாகப் பயன்படுத்தப்படும்.

**உருவ அமைப்பு**

சிறு தெய்வங்கள் பலவற்றிற்கும் வழிபாட்டின்போது மட்டுமே புதிதாக உருவ வடிவங்கள் செய்யப்படுகின்றன. வழிபாடு முடிந்த நிலையில், அவற்றைச் சிதைத்துவிடும் வழக்கம் பல சிறுதெய்வக் கோயில்களில் காணப்படுகிறது. அம்மன் கோயில்களில் 'சக்திக் கரகமே' தெய்வ உருவமாகக் கருதி வழிபடப்படுகிறது. சிறுதெய்வகளின் பெயரை மட்டுமே நினைவில் கொள்ள முடியுமே தவிர, அந்தத் தெய்வங்களுக்கான உருவங்களைக் கற்பனை கூடச் செய்து பார்க்க முடியாது. அதையும் தாண்டி சிறுதெய்வங்களுக்குச் சிலையெடுக்கப்பட்டிருந்தால் அவை பிரம்மாண்டமான உருவங்களைக் கொண்டிருக்கும் திறந்த வெளியில் குதிரையும் குதிரையின் மீது அமர்ந்திருக்கும் தெய்வமும் தனித்து நின்றோ, அமர்ந்தோ இருக்கும்.

பெரிய உருவம் பிதுங்கிய நிலையில் உள்ள பெரிய கண்கள், கையில் சூலாயுதம், வேல், சாட்டை, கதாயுதம், அரிவாள், சிறியதும் பெரியதுமான பரிவாரத் தெய்வங்கள், வேட்டைநாய்கள் என்று பார்ப்போரைப் பயத்தில் ஆழ்த்துவனவாக, அச்சம் ஊட்டுவனவாகக் காணப்படும். இரவு நேரங்களில் எளிதாகக் கோயிலின் பக்கம் சென்றுவிட முடியாது. ஆண் தெய்வங்கள் மட்டுமின்றிப் பெண் தெய்வங்களுக்கும் இத்தகைய பூதாகார வடிவம் ஏற்றுக் கொள்ளப்படுவதுண்டு. பாடத்தில் வரும் படங்களைப் பார்த்தால் இக்கூற்றின் உண்மை உங்களுக்குப் புரியும்.

**சிறு தெய்வ வழக்காறுகள்**

நாட்டுப்புறத் தெய்வங்கள் கதைகள், பழமொழிகள், பாடல்கள், நம்பிக்கைகள் என்று ஏராளமான வழக்காறுகளைக் கொண்டு விளங்குகின்றன. தெய்வங்கள் மனிதர்களாய்த் தோன்றி வாழ்ந்து மாண்ட கதை, பழிதீர்த்த கதை தெய்வம் தற்போதைய இருப்பிடத்தில் வந்து அமர்ந்த கதை அதன் அதீதச் செயல்கள் என்று தெய்வக் கதைகள் நிறைந்திருக்கும். கதைகளில்லாத சிறு தெய்வங்களே இல்லை. இக்கதைகள் அனைத்தும் நம்பிக்கையின் அடிப்படையில் தோற்றம் பெற்று வழிவழியாக மக்களின் வாய்மொழியாக வழங்கப்பட்டு வருகின்றன.

**பாடல்கள்**

சிறு தெய்வம் குறித்த கதைகள் உடுக்கைப் பாட்டு, வில்லுப்பாட்டு, கணியான் கூத்து, போன்ற நாட்டுப்புறக் கலைகளின் வழிப் பாடலாக எடுத்துரைக்கப்படுகின்றன.

“வெள்ளைக் குதிரையில அய்யனாரே
வேகமாய் வந்தருளும் அய்யனாரே
கோட்டைக் கருப்பசாமி நீங்க
குடியிருந்து காக்க வேணும்
மந்தையின் மாரியாயி மலைமேல
மாயவரே
மழைய எறக்கிவிடு மானுடங்க
மனங்குளிர
மழைக்கு வரங்கேட்டு நாங்க
மருகுகிறோம் சாமி
எலந்தை முள்ளால கோட்டைக்காரி
எங்களை
ஏறிட்டுப் பாரம்மா சக்கதேவி
காட்டைக் காத்தது காளியாத்தா
கரையக் காத்தது அய்யனாரு”

என்றவாறு அமையும் சிறு தெய்வங்களைப் பற்றிய பாடல்கள் வழிபாட்டின்போது பாடப்படும்.

**பழமொழிகள்**

“யாரு கடன் தீர்ந்தாலும் மாரி கடன் தீராது
நம்புனவங்களுக்கு மகாராசா
நம்பாதவங்களுக்கு எமராசா
குல தெய்வத்தை வழிபட்டால் கோடி
நன்மை உண்டு
அரசன் அன்று கொல்வான், தெய்வம் நின்று கொல்லும்

என்பது போன்ற பழமொழிகள் சிறுதெய்வங்கள் குறித்துக் கூறப்படுவதுண்டு. இவ்வழக்காறுகள் சிறுதெய்வ மரபு தலைமுறை கடந்து வருவதற்குத் துணை செய்கின்றன.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

**முடிவுரை**

ஒரு குறிப்பிட்ட வட்டாரத்தில் வாழும் கிராம மக்களின் தெய்வ நம்பிக்கைகள் அத்தெய்வங்களை வணங்க அவர்கள் கடைபிடிக்கும் வழிபாட்டு முறைகள் ஆகியவற்றை அறிந்துகொள்ள முடிகின்றது. மேலும் நாட்டுப்புறச் சமுதாய மரபுகளையும் ஏட்டில் இடம்பெறாத வாய்மொழிக் கதைகளையும் அறிந்து கொள்ள முடிகின்றது. சிறுதெய்வ வழிபாடு சமுதாயக் கட்டமைப்பைக் காக்கப் பயன்படுகிறது என்பதையும் நம்மால் அறிய முடிகின்றது.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 33. வள்ளுவர் காட்டும் சமத்துவம்

**திருமதி அ. பாண்டிச்செல்வி,**
**உதவிப்பேராசிரியை, திருவள்ளுவர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, சூலப்புரம்.**

DOI 10.5281/zenodo.10702650.

**Abstract :**

Equality is the state where one does not discriminate against another on the basis of race, language, country, education, wealth, beauty etc. If there is true humanity in people, the idea of treating everyone as equal will appear. The research field of this article is to explore "Equality is the philosophy that helps improve the society" through Thiruvalluvar's Thirukkurad thoughts.

**Key Words ; Thirukural – equality - Justice literature**

## முன்னுரை

ஒருவன் மற்றொருவரிடத்தில் இனம், மொழி, நாடு, கல்வி, செல்வம், அழகு போன்றவற்றால் வேறுபாடு காட்டாத நிலையே சமத்துவம். மனிதர்களிடத்தில் உண்மையான மனிதநேயம் இருந்தால் அனைவரையும் சமமாகக் கருதும் எண்ணம் தோன்றும்.

**“சமத்துவமே சமுதாயம் மேம்பட உதவும் தத்துவம்”** என்பதை திருவள்ளுவரின் திருக்குறட் சிந்தனைகளின் மூலம் ஆராய்வதே இக்கட்டுரையின் ஆய்வுக்களமாக அமைகிறது.

## திருக்குறள் கண்ட சமத்துவம்

சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன்பே திருவள்ளுவர் சமத்துவம் பற்றி திருக்குறள் மூலம் சமுதாயத்திற்கு வெளிப்படுத்தியுள்ளார். அன்றே சமத்துவமே மகத்துவம் என்பதனை அறிந்ததினால் தான் திருவள்ளுவர் சமத்துவம் பற்றி,

‘பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்’ (குறள் 972) என்றும், ‘உருவு கண்டு எள்ளாமை வேண்டும்’ என்றும் (குறள் 667) தமது குறளின் மூலம் பறைசாற்றுகிறார்.

## திருக்குறளின் பொதுமைப்பண்பு

திருக்குறள் தோன்றியது தமிழில் என்றாலும், அது தமிழ் நாட்டையோ, தமிழ் மொழியையோ, தமிழ் இனத்தையோ, தமிழ் மன்னர்களையோ எந்த இடத்திலும் சுட்டிக்காட்டாத பொதுமை கொண்டது. திருக்குறள் சுட்டும் நாட்டின் இலக்கணம் எந்த நாட்டுக்கும் பொருந்தும்.

இல்லறத்தாருக்கும், நல்லறம் புகலும் இவ்விலக்கியம் துறவறத்தாரையும் இணைத்துச் சிந்திக்கிறது. தன்னளவில் உள்ள பண்புகளை விட்டுக்கொடுக்காமலும், உலக அளவில் மனிதநேயம் பேணுவதையும் முன்னிறுத்தி, எல்லாச்சமயத்தாருக்கும், எல்லா இனத்தாருக்கும், எல்லா மொழியினருக்கும் ஏற்ற நீதியை இந்தியப் பொது அறத்தை நடுநிலைமையோடு மொழிகிற உன்னத இலக்கியம் திருக்குறள்.

**பிறப்பில் சமத்துவம்**

திருக்குறள் சமத்துவத்தைப் பறைசாற்றும் ஒரு நீதி முரசு என்பதற்கு,

'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா

செய்தொழில் வேற்றுமை யான்'(குறள் 972)

என்ற இந்தக் குறள் ஒன்றே போதும்.'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் என்று கூறுவதில் இருந்தே மனித இனம் மட்டுமல்லாமல் அதையும் தாண்டி எவ்வுயிர்க்கும் வேற்றுமை காணாத சமுதாயத்தைக் காண வள்ளுவர் விரும்புகின்றார் என்பது புலனாகிறது. திணை பாகுபாடு இன்றி எல்லா உயிர்க்கும் பிறப்பு ஒத்த தன்மையதே என்று கூறுவதன் மூலம் அனைத்து உயிர்களும் சமம் என்ற கொள்கை வெளிப்படுகிறது.

மேலும் எல்லா உயிர்களையும் தன்னுயிர் போலக் கருதி வாழ வேண்டும். மனித உயிரே பெரியது, பிற உயிர்கள் அதற்குச் சமமானதல்ல என்ற ஏற்றத்தாழ்வினை,

'தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது

இன்னுயிர் நீக்கும் வினை.'(குறள் 327)

என்ற குறளின் மூலம் எடுத்துரைக்கிறார்.

நாம் வாழும் இந்தப் பூமியானது, மனித இனத்திற்கு மட்டுமல்லாது அனைத்து உயிரினங்களுக்கும் சொந்தமான இடம். இங்கு இருப்பவை இங்கு கிடைப்பவை அனைத்தும் எவ்வுயிர்க்கும் பொது என்று அமையும் விதத்தில் மனிதன் தன் வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும் என்பதை 'பகுத்துண்ணுதல்' என்ற சொல்லின் மூலம் நமக்கு கற்பிக்கிறார். இக்கருத்தினை,

'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நுலோர்

தொகுத்தவற்றுள் எல்லாம் தலை.' (குறள் 322)

என்ற குறள் வழி வலியுறுத்துகின்றார்வள்ளுவர்.

**நீதியில் சமத்துவம்**

ஒவ்வொருவரும் சக மனிதனிடத்தும் நீதி வழங்குதலிலும் சமமான துலாக்கோல் போல அமைந்திருப்பது அவசியம். மேலும் மனிதர்களின் நிறைகுறைகளைச் சீர்தூக்கிப் பார்த்து அனைவரும் சமம் என்ற பண்பினைக் கடைபிடித்து வாழ வேண்டும். இப்பண்பே ஒருவனுக்கு அணியாகும் என்பதை

'சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்

கோடாமை சான்றோர்க்கு அணி.' (குறள் 118)

என்ற குறள் வழி விளக்குகின்றார்வள்ளுவர்.

எந்தப் பாகுபாடும் இன்றி தன் நாட்டவன் தன் மொழியாளன் என்ற சார்பு நிலைகளையெல்லாம் கடந்து அனைவரையும் சமமாக மதித்துப்பழகுதலே சிறந்தது என்று

'குணம் நாடி குற்றமும் நாடி அவற்றுள்

மிகைநாடி மிக்க கொளல்.' (குறள் 504)

என்ற குறளில் அறிவுறுத்துகிறார். மேலும் ஒருவனின் உருவத்தைக் கண்டு இகழக்கூடாது என்பதை,

'உருவுகண்டு எள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்கு

அச்சாணி அன்னார் உடைத்து.' (குறள் 667)

என்ற குறளின் மூலம் அனைவரும் சமம் என்ற நீதியை வழங்கி நிற்கிறது வள்ளுவம்.

**சமூக வாழ்வில் சமத்துவம்**

ஒருவனிடம் உள்ள சமத்துவ உணர்வானது, பரந்துபட்ட சமுதாய ஒருமைப்பாட்டையும், சகோதரத்துவத்தையும், சமூக நல்லிணக்கத்தையும் மக்களிடத்தில் உருவாக்கும். எனவே ஒவ்வொரு மனிதனும் ஊருணி நீர் நிறைந்திருப்பதைப் போல அனைத்து உயிர்களுக்கும் பயன்படுபவனாக வாழ வேண்டும் என்பதை,

'ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்

பேரறி வாளன் திரு.' (குறள் 215)

என்ற குறளின் மூலமும், மண்ணில் நிலைபெற்ற அனைத்து உயிரினங்களையும் காத்து இரக்கங்காட்டி வாழ்பவனே சிறந்தவன் என்பதை,

'மன்னுயிர் ஓம்பி அருளாள்வார்க்கு இல்லென்ப

தன்னுயிர் அஞ்சும் வினை.' (குறள் 244)

என்ற குறளின் மூலம் அனைத்து உயிர்களும் சமம் என்ற சமத்துவப் பாடத்தை நமக்குக் கற்பிக்கின்றார்.

**ஆண், பெண் சமத்துவம்**

ஆண், பெண் உறவுநிலை திருமணத்திற்கு முன்னும் பின்னுமாகக் காதல் நிலை ஆகிய செய்திகளைக் குறள் விரிவாகப் பேசுகிறது. ஆண், பெண் சமத்துவம் வள்ளுவரின் கொள்கையாகக் காணப்படுகிறது.

ஆண் மேலாதிக்க காலத்தில் அதற்கெதிரான துணிவுடையை சிந்தனைகளை வழங்கியுள்ள வள்ளுவரின் அணுகுமுறை புரட்சிகரமானது. பெண்களின் உரிமைக்காகவும், உலகியல் மாற்றத்திற்காகவும் அவர் பாடுபட்டுள்ளார். பெண் ஆணுக்கு இணையானவள், ஆற்றல் மிக்கவள் என்பதை,

E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

'சிறைகாக்கும் காப்பு எவன்செய்யும் மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை.' (குறள் 57)

என்று ஆற்றலும் அறிவும் நிறையும் மிக்க பெண்களை உலக்கு உருவாக்கித் தந்தவர். வள்ளுவர் எனலாம். இத்தகைய வள்ளுவரின் வழிகாட்டல்தான் பிற்காலத்தில்பாவலன் பாரதியை

'வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டி வைப்போமென்ற
விந்தை மனிதர் தலைகவிழ்ந்தார்.'

என்று பாடவைத்தது எனலாம்.

**முடிவுரை**

தற்காலத்தில் மக்களிடம் காணப்படும் வேற்றுமை உணர்வு, ஏற்றத்தாழ்வு, மதவெறி, பொறாமை, பூசல் போன்ற நோய்களைக் குணப்படுத்த இருக்கும் ஒரே மருந்து சமத்துவம் மட்டுமே. இதனை நன்குணர்ந்த வள்ளுவர் அனைவரும் இன்ப வாழ்வு வாழவும், வேற்றுமை மறந்து ஒற்றுமை பேணவும் மனிதநேயம் தழைத்து ஓங்கவும் சமத்துவத்தினைக் கடைபிடிப்பது மட்டுமே ஒரே வழி என தம் குறட்பாக்கள் மூலம் வலியுறுத்துகின்றார்.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 34. சாரக் கோவையில் மானுட மேம்பாட்டுச் சிந்தனைகள்

**முனைவர் மா.சுகன்யா**

தமிழ்த்துறை உதவிப்பேராசிரியர்

ஸ்ரீ கிருஷ்ணசாமி கலை மற்றும் அறிவியல் கல்லூரி, மேட்டமலை, சாத்தூர்.

DOI 10.5281/zenodo.10702681.

**Abstract :**

It is known as Asara Kowai because of its exposition of morals. Asarakovai series means "Volume of Manners". In this book, the author has pointed out the duties that people should follow in their daily life in a beautiful manner. It states that these are the actions to be followed and the actions to be explained. The author of this book is Mulliyar of Gayathur Peruvai. This book contains 101 songs. This book was written in the fifth century AD. Mentioned eight attributes responsible for morality. Things to do early in the morning, worshiping God, times to bathe, bathing method, eating method, not eating method, student actions, chaste pendir actions, how to speak in front of elders, etc. In this way, this article is a study of human development ideas in Asara Kowai.

## முன்னுரை

ஒழுக்கங்களை அடுக்கி கூறுவதால் ஆசாரக்கோவை எனப் பெயர் பெற்றது. ஆசாரக்கோவை என்னும் தொடருக்கு "ஒழுக்கங்களின் தொகுதி" என பொருள்படும். இந்நூலில் அன்றாட வாழ்க்கையில் மக்கள் பின்பற்ற வேண்டிய கடமைகளை ஆசிரியர் அழகான முறையில்சுட்டிக்காட்டி உள்ளார். கடைபிடிக்க வேண்டிய செயல்கள் விளக்க வேண்டிய செயல்கள் இவை என எடுத்துக் கூறுகிறது. இந்நூலின் ஆசிரியர் கயத்தூர் பெருவாயின் முள்ளியார்.இந்நூலில் 101 பாடல்கள் கொண்டது. இந்நூல் கிபி ஐந்தாம் நூற்றாண்டில் எழுதப்பட்டது. ஒழுக்கத்திற்கு காரணமான எட்டுப் பண்புகளைக் குறிப்பிட்டுள்ளன. அதிகாலையில் செய்ய வேண்டியவை, கடவுளை வணங்குதல், நீராட வேண்டிய நேரங்கள், நீராடும் முறை உண்ணும் முறை உண்ணக்கூடாத முறைகள் மாணவர் செயல்கள் செய்யக்கூடாதவை கற்புடைய பெண்டிர் செயல்கள் பெரியோர் முன் பேசும் முறை போன்ற செய்திகளை ஆசாரக்கோவையின் மூலம் அறிந்து கொள்ளலாம். இந்த வகையில் ஆசாரக்கோவையில் மானுட மேம்பாட்டு சிந்தனைகள் குறித்து ஆய்வதாக இக்கட்டுரை அமைகின்றது.

## மானுட மேம்பாட்டு_விளக்கம்:

மானுடம் என்னும் சொல்லுக்கு மானிடத் தொகுதி என்றும் மக்கள் பிறப்பு என்றும் மேம்பாட்டு என்னும் சொல்லுக்கு சிறப்பு என்றும் பொருள் கூறுகின்றது.லிப்போ தமிழ் தமிழ் ஆங்கிலப்பேர அகராதி" இருக்கும் நிலையை விட உயர்வான நிலையே அடைதல் மேம்பாடு ஆகும்" என்று உரைக்கின்றது.

## இறை வழிபாட்டு முறை:

இறைவனே இடைவிடாது நினைத்தல் அவற்றின் புகழை போற்றுதல் வணங்குதல் ஆகிய மனம் மொழி செயல் ஆகியவற்றால் வணங்க வேண்டும் இக்கருத்தினை வள்ளுவர் இதனை,

**‘மலர்மிசை ஏகினான் மாணடிசேர்ந்தார்**

**நிலம் இசை நீடுவாழ்வார்” (குறள்_3)**

என்ற குறள் உணர்த்துகின்றது.

காலைப் பொழுதில் எழுந்து பற்குச்சியால் பல்லை துலக்கம் செய்துபின்பு கண் முதலான முக உறுப்புகளை நன்கு கழுவிக்கொண்டு தான் விரும்பும் தெய்வத்தை காலையில் வணங்க வேண்டும் என்பதனை

**“நாளந்தி கோல் நின்று கண்கழீ இத் தெய்வத்தை**

**தான் அறிய மாற்றால் தொழுது எழுக அல் கந்தி**

**நின்று தொழுதல் பழி” -(ஆ கோ-9)**

என்ற அடிகளில் இறைவனை வணங்குதல் என்பது காலையில் இருக்க வேண்டும் என்பதனை உணர்த்துகின்றது.

**அறம் செய்ய விரும்புதல்:**

அறம் என்னும் சொல்லுக்கு புண்ணியம் தர்மம் கடமை கற்பு இல்லறம் துறவறம் அறநூல் அறக்கட்டளை என பொருள் குறிக்கிறது. அவ்வையார் அறம் செய்ய விரும்பு என்று கூறியுள்ளார். தமக்கு இயன்ற அளவில் அறம் ஆகிய நல்ல செயல்களை இடைவிடாமல் செய்ய வேண்டும் என்று வலியுறுத்தி உள்ளார் வள்ளுவர் இதனை,

**“ஒல்லும் வகையான அறவினை ஓவாதே**

**செல்லும் வாய் எல்லாம் செயல்” (குறள்- 33)**

என்ற குறள் சுட்டுகின்றது.

மனமே அறத்தை மறந்து செல்வத்தை மட்டுமே விரும்பி அதற்காக மட்டுமே முயற்சி செய்து வாழ்ந்தால் என்ன பெற முடியும் அதனால்உன் மரணத்தை மாற்ற முடியுமா இனிமேலாவது மரணத்திற்குப் பிறகு உறுதுணையாக இருக்கக்கூடிய அறச்செயல்களை செய்க என்று நாலடியார் பாடல்களில் ஆசிரியர் கூறியுள்ளதே

**“ஆமாம் நாம் ஆக்கம் நடை மறந்து**

**போவாம் என்னும் துணை நெஞ்சே ஓவாது**

**நின்று ஏற்றி வாழ்த்தி எனினும் நின் வாழ் நாட்கள்**

**சென்றன செய்த உரை (நாலடியார்-32)**

என்ற அடிகளில் அறட்செயல்களைக் குறிப்பிடுகின்றன.

**அறம் செய்ய வேண்டிய நாட்கள்:**

மூத்தோரை நினைத்து சடங்கு செய்யும் நாள்கல்வியேற்றும் நாள் திருமண நாள் தேவரின் சிறப்பு நாள் திருவிழா நாள் ஆகிய ஐந்து நாட்களிலும் தவறாமல் அறம் செய்ய வேண்டும். விருந்தினருக்கு சோறு இடவேண்டும் என்பதனை

**"கல்யாணம், தேவர் பிதிர் விழா வேள்வி என்ற**
**ஐவகை நாளும் இகலா அறம் செய்க**
**பெய்கவிருந்தினருக்கும் கூழ்" (ஆசாரம்-48)**

என்ற பாடல் அடிகள் அறத்தின் தன்மையே உணர்த்துகின்றது.

**விருந்தினர்:**

விருந்தினர் என்பவர்கள் முகம் தெரியாதவர்கள், வீட்டிற்கு வரும் புதியவர் ஆவார். அவர்களை முகம் மலர்ந்து அன்புடன் வரவேற்று உணவளித்து உபசரிக்க வேண்டும் என்பதே விருந்தோம்பல் ஆகும். இதனை,

**"இருந்து ஓம்பிஇல்வாழ்வது எல்லாம்**
**வேளாண்மை செய்த பொருட்டு விருந்து ஒன்றுஓம்பி (குறள் -81)**

என்று குறள்வீட்டிற்கு வந்த விருந்தினருக்கு பொன்முறுவலுடன் கூடிய இன் சொல்லும் காலை கழுவ நீரும் அமர்வதற்கு மனையும் படுக்க பாயும் தங்குவதற்கு இடமும் தர வேண்டும் அத்துடன் உண்பதற்கு உணவும் தர வேண்டும் என்பதனை,

**"முறுவல் இனிதுரை கால் நீர் இணைப்பாய்**
**கிடக்கையோடு இவை ஐந்தும் என்பது தலை செற்றார்க்கு ஊனொடு செய்யும் சிறப்பு"**

**(ஆசாரக்கோவை** 54)

என்ற அடிகள் விருந்தினருக்கு செய்யும் உதவியிணை குறிப்பிடுகின்றது. என்றென்றும் ஒழுக்கத்தில் இருந்து தவறாதவர்கள் விருந்தினர். மூத்தவர்கள் பசுக்கள் பறவைகள் பிள்ளைகள் ஆகியவர்களுக்கு உணவு கொடுக்காமல் தான் மட்டும் உண்ண மாட்டார்கள் என்பதை,

**"விருந்தினர் மூத்தோர் பசு சிறை பிள்ளை**
**இவர்க்கூண்கொடுத்தல்லால்உண்ணாரே என்றும்**
**ஒழுக்கம் பிழையாதவர்" (ஆசாரம்-21)**

என்ற அடிகளில் விருந்து உண்ண வேண்டும் முறைகளைத் தெளிவுபடுத்துகின்றன.

**ஒழுக்கம்;**

`சான்றோர்கள் கால்களில் விழுந்து வணங்குவதும் அவர் சொன்னவுடன் எழுந்திருப்பதும் அவர் வரும்பொழுது கண்டால் எழுந்து நிற்பதும் பெரியோர்களுக்கு செய்ய வேண்டியவை ஆகும் இதனை,

**"கால்வாய் தொழுது சமயம் மெழுந் தழும்பு**
**ஆசாரம் என்பர் குறவருக்கு இவை யாவை**
**சாரத்தால் சொல்லிய மூன்று" (ஆசாரம்-62)**

என்ற அடிகள் விளக்குகின்றன. மேலும் இதனை,

**" அற நெறியில் இடைவிடாமல் நடத்தல் ஒழுக்கமாகும் ஓதலில் சிறந்தன்று ஒழுக்கமுடைமை" (முதுமொழிக்காஞ்சி)** என்ற அடிகள் உணர்த்துகின்றன. இதனை,

**"ஒழுக்கம் விழுப்பம் தரலாம் ஒழுக்கம்**
**உயிரினும் ஓம்பப்படும்" -(குறள்-131)**

என்ற குறள் வலியுறுத்துகின்றன.

துறவியரைப் போற்றுதலும் பழிக்குப் பயன்படுதலும் தான் கற்றவற்றைச் சான்றோர் முன்பு மறந்தும் பெருமைப்பட பேசாமல் இருப்பதும் நன்று. இம்மூன்றும் தெளிய கற்றவர் அறிந்த ஒழுக்கமாகும் என்பதனை,

**"துறந்தாரை பேணலும் நாணலும் தான் கற்ற**
**மறந்தும் குறவர் முன் சொல்லாமல் மூன்றும்**
**திறக் கண்டார் நெறி. (ஆசாரமும்-63)**

என்ற அடிகளின் மூலம் ஒழுக்கத்தின் பண்புகளை விளக்குகின்றன.

**ஐந்து குரவரை வணங்குதல்:**

அரசன் ஆசிரியர் தாய் தந்தை அமைச்சன்ஆகிய இவர்கள் ஒப்பற்ற ஐந்து குரவர்கள் ஆவார்கள். இவர்களே தேவர்களைப் போல் வணங்க வேண்டும் என்பதனை,

**"அரசன் உவாத்தியான் தாய் தந்தை தம்மும்**
**நிகரில் குரவர் இவர் இவரைப்**
**தேவரைப் போல தொழுக என்பதை**
**யாவரும் கண்டனேறி" (ஆசாரம்-16)**

என்று அடிகளின் நல்ல பண்புகளை எடுத்துரைக்கின்றன.

**செய்ய வேண்டிய செயல்முறைகள்:**

உண்ணும் போது முதலில் இனிப்பான உணவுகளை முதலில் உண்ண வேண்டும். மற்ற சுவை உள்ளவற்றை எல்லாம் இடையில் உண்ண வேண்டும். அடுத்து கடைசியாக கசப்பான உணவுகளை உண்ண வேண்டும் என்று எண்ணுவதில் ஓர் ஒழுங்கு முறையே உணர்த்துகின்றதே,

**“கை பண எல்லாம் கடைதலைத் தித்திப்ப**
**மிச்சம் வகையா ஒழிந்த விடையாக**
**துய்க்க முறை வகை யாழும்” (ஆசாரம்-25)**

என்ற அடிகளின் ஒழுங்கு முறைகளைச் சுட்டிக்காட்டுகின்றன.

முதலில் பெண்ணானவள் விடியற்காலையிலேயே எழுந்து வீடு விளக்கம் அடையுமாறு குப்பையை பெருக்கி விளக்கி பாத்திரங்களை கழுவி சுத்தம் செய்து பின்பு சான நீரால் தன் இல்லத்தில் எங்கும் தெளித்து அதன் பின்பே தீ மூட்டுதல் வேண்டும் என்பதனை,

**“ காட்டு கலைந்து களம் கழிஇ இல்லத்தை**
**ஆப்பிநீரங்கும் தெளித்து சிறு காலை**
**இல்லம் பொழிய அடுப்பினுள் தீ பெய்க**
**நல்லது உறல் வேண்டுபவர்” (ஆசாரம்-46)**

என்ற அடிகளில் ஒழுக்கத்தின் தன்மைகளைக் குறிப்பிடுகின்றன.

**மாணக்கரின் செயல்கள்:**

மாண்பு உடையோர் மாணவர் ஆவார். பள்ளிலோ கல்லூரியிலோ படிக்கும் மாணவர்கள் ஆசிரியர்களிடம் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதே ஆசாரக்கோவையின் மூலம் அறிந்து கொள்ளலாம். நல்ல குணமுடைய மாணவர்கள் என்றும் ஆசிரியர் முன் அடங்கிய இருத்தல் வேண்டும். அவர் பாடம் நடத்தாமல் இருந்தால் வகுப்பில் அமைதியாக இருக்க வேண்டும். ஆசிரியர் ஆணையின்றி மாணவர் எங்கும் எழுந்து போகக்கூடாது. ஆசிரியர் பாடம் நடத்தினால் அதனை காது கொடுத்து கேட்டு திரும்பச் சொல்ல வேண்டும் என்பதனை,

**“ நின்ற கால் நிற்க அடக்கத்தால் என்றும்**
**இருந்த கால் இயலாமை ஏகார் பெருந்தக்கார்**
**சொல்லில் செவிகொடுத்து கேட்டீக மீண்டும்**
**வினா வருக சொல் அழிந்த கால்” -ஆசாரம்-74)**

என்ற அடிகளில் நல்ல மாணவர்களின் நற்பண்புகளைப் புலப்படுத்துகின்றன.

**முடிவுரை:**

மனிதன் தனக்கென வரையறுத்துக் கொண்ட ஒழுக்கம் முறைகள் தான் அறம் என்பர். இந்நூலில் வரும் சிந்தனைகள் அனைத்தும் தனிமனித வாழ்விற்கும் உலகிற்கும் நன்மை பயக்கும் விதத்திலேயே அமைந்த இந்நூலில் என்பதனை அறிந்து கொள்ளலாம்.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 35. மு.வரதராசனாரின் சிறுகதையில் மனிதநேயம்

**நா.சந்திராதேவி,**
உதவிப்பேராசிரியை, தமிழ்த்துறை,
திருவள்ளுவர் கலை மற்றும் அறிவியல் மகளிர் கல்லூரி,சூலப்புரம்.

DOI 10.5281/zenodo.10702733.

**Abstract :**

Literature is a mirror that reflects people's life, literature does not appear from mere witchcraft. Literature appears in the background of a particular society in a particular period.The best literature in literature entertains the villagers and analyzes their problems and guides them to live in the society with awareness.It is a short story that incites passion in the hearts of the readers to wipe out the injustices that are rotting in the society we live in.The purpose of the short story is to show society's flaws in a clear light and guide the society to live a fulfilling life.Today, violence is rampant and humanity is polluted.

**முன்னுரை:-**

இலக்கியங்கள் மக்களின் வாழ்க்கையைப் பிரதிபலித்துக் காட்டும் கண்ணாடி, இலக்கியம் வெறும் சூனியத்திலிருந்து தோன்றுவதில்லை .குறிப்பிட்ட காலத்தில் குறிப்பிட்ட சமுதாயத்தின் பின்னணியிலேயே இலக்கியம் தோன்றுகிறது.

இலக்கியங்களுள் சிறந்த இலக்கியம் கிராமமக்களுக்கு இன்பமூட்டுவது உடன் அவர்களுக்கான சிலசிக்கல்களை அலசி ஆராய்ந்து, அவர்கள் விழிப்புணர்வுடன் சமூகத்தில் வாழ வழிகாட்டுகின்றன.

நாம் வாழும் சமுதாயத்தில் மலிந்து கிடக்கும் அநீதிகளைத் துடைத்தெரிய, ஆவேசக் கனலைப் படிப்போர் உள்ளத்தில் தூண்டி விடுவது சிறுகதை ஆகும்.

சமுதாயத்தின் குறைகளை வெட்டவெளிச்சமாகப் படம்பிடித்துக் காட்டி, சமுதாயம் நிறைவாக வாழ வழிகாட்டுவது சிறுகதையின் நோக்கமாகும்.

இன்றைய நாளில் வன்முறை எங்கும் தலைவிரித்தாடுகின்றது, மனிதநேயம் மாசுபட்டுக் கிடக்கின்றது.

மக்கள் மனங்களில் நற்சிந்தனைகளை விதைக்க ஒருமைப்பாட்டு உணர்வை வளர்க்க எழுத்துலகும் திரையுலகும் ஆற்றவேண்டிய அரும்பணிகள் இன்றியமையாததாக இருக்கின்றன. எழுதுகோலைப் போன்ற சிறந்த ஆயுதம் எதுவுமில்லை. அவற்றுள் சிறுகதைகளுக்கு மக்கள் மனங்களை ஈர்க்கும் அபாரசக்தி உண்டு. கருத்துச் செறிவுமிக்க சிறுகதைகளும் சமுதாயம் என்னும் மலர் நறுமணம் வீச உதவும் தென்றலாக அமைந்துள்ளன.

**மனிதநேயம் விளக்கம்:-**

மனிதனை மனிதன் நேசிப்பது மனிதநேயமாகும். எந்நிலையிலும் தன்னைப் போல பிறரை நேசித்தலும், பகைவனுக்கு அருளும் மனப்பக்குவமும் பெற்ற மனிதரின் விரிவடைந்த அன்பு நிலையே மனிதநேயமாகும்.

மனிதர்களின் இன்ப,துன்பங்களைத் தனதாக்கிக் கொண்டு அவர்களது இன்னல்களை களைந்து இன்பம் அளிக்கும் ஏற்றமிகு குணம் இரக்ககுணமாகும்.

மனிதனுடைய கடவுள் மனிதனே தான். "மனிதனுடைய முன்னேற்றத்திற்கு எங்கே மனிதன் பாடுபடுகிறானோ அந்தப் புனிதஇடம் தான் நான் வணங்கும் கோயில், நான் பிரார்த்திக்கும் தேவாலயம், தொழுகின்ற பள்ளிவாசல்" என்கிறார் ஜவஹர்லால்நேரு

"மனிதநேயம் என்பது முகம் தெரியாத முன்பின் அறிமுகம் இல்லாத மனிதர்களை நேசிப்பதாகும்" என்று கூறுகிறார் ரவீந்திரதாஸ்.

எந்தச் சமுதாயத்தில் மனிதநேயம் குறைந்து காணப்படுகிறதோ அந்தச் சமுதாயத்தில் சிக்கல்கள் எழுகின்றன. மனிதநேயம் கொண்டவர்கள் மனிதர்களை மனிதர்கள் என்றே பார்க்கின்றனர். சாதி, சமயம் என்ற வண்ணங்கள் அவர்களது கண்களில் தென்படுவதில்லை. நம்மைப் போல் இவனும் ஒரு மனிதன் என்ற எண்ணமே இந்த நல்ல உள்ளங்களில் மேலோங்கிநிற்கிறது.

**பணமும், குணமும்:-**

மனிதவாழ்விலே ஏற்றத்தாழ்வுகள் இன்பதுன்பங்கள் மேடுபள்ளங்களாய் மாறி மாறி வருவதுண்டு. வசதியோடு வாழ்பவர் ஒரு புறம், வறுமையால் தவிப்பவர் மறுபுறம். பணம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு வாழ்வைத் தொடர்பவர் மறுபுறம் இருப்பினும் சமுதாயத்தில் பணம் மிகுந்த பண்பில்லாதவர்களுக்குக் கிடைக்கும் மதிப்பும் மரியாதையும் குணம் நிறைந்தவறியவனுக்கு கிடைப்பதில்லை.

பணம் ஒன்றே மனிதஉறவுகளை நிர்ணயிக்கும் அளவுகோலாக மாறிவிட்ட இன்றைய சமுதாயத்தில் உண்மை, நீதி, நேர்மை எல்லாம் திரைபோட்டு மறைக்கப்படுகின்றன. பணமும் வசதியும் வரும்போது எவ்வாறெல்லாம் உறவுகள் தோன்றிவிடுகின்றன. ஆனால் வறுமையில் வாடும் போது உறவுகள் கூடப் பகையாக மாறி விடுகின்றன. இத்தகைய மனிதநேயத்தைச் சிறுகதை எழுத்தாளர்கள் தம் கதைகள் வாயிலாக மக்களுக்குத் தெரிவிக்கின்றனர்.

**மு.வரதராசனாரின்சிறுகதையில்மனிதநேயம்:-**

மு.வரதராசனார் எழுதியுள்ள 'குறட்டைஒலி' என்னும் சிறுகதையில் வரும் தென்பகுதி குடும்பத்தைச் சேர்ந்தவரின் மனைவி நிறைமாத கர்ப்பிணியாக இருந்தால் தென்பகுதியில் வசிக்கும் குடும்பத்தில் தாய், தந்தை, அத்தை, பிள்ளைகள், நாய், அவள் வீட்டு நாயும் அப்படித் தான் எந்நேரமும் கூச்சலும் குழப்பமுமாக இருக்கும்.

வடபகுதி வீட்டார் வசதி படைத்தவர்கள் 20 வருடங்கள் ஆகியும் குழந்தை இல்லாதவர்கள் அவ்வீட்டில் உயிருடன் இயங்கிவர்கள் கணவன், மனைவி, எலி, எறும்பு, மட்டும்தான்.

நாங்கள் மேல்மாடியில் குடியிருந்தோம் ஒருநாள் இரவு அவள் ஏழாவது குழந்தையை ஈன்றெடுத்தாள். அந்தக் குழந்தையின் குரலைக் கேட்டதும் எனக்குள் ஒரு புத்துணர்ச்சி ஏற்பட்டது. அடிக்கடி குழந்தையின் அழுகுரல் கேட்டது. ஆனால் செல்வரின் வீட்டிலும் அழத் தெரியாத குழந்தை பொம்மை உள்ளது.

சில நாட்களில் அந்தநாய் 5 குட்டிகளை ஈன்றது. அதில் ஒன்று வெள்ளைக்குட்டி அந்த வெள்ளைக் குட்டியை எடுத்து வளர்க்கலாமா என நினைத்தேன் இன்னும் சிறிது வளரட்டும் அப்புறம் வளர்க்கலாம் என நினைத்தேன்.

மூன்று நாட்கள் கழித்து வெளியே சென்ற தாய் நாய் வீடு திரும்பவில்லை. நேரம் ஆகஆக குட்டிகள் நொய்ங், நொய்ங்க்.ங்ய்ங் எனக் கத்த ஆரம்பித்தன.

மாமியார் நாய்க்குட்டிகளுக்குப் பால் ஏதாவது வார்க்க கூடாதா என்றாள். வீட்டில் பால் எதுவும் இல்லை. வடிகஞ்சி கொடுத்தால் செத்துவிடும் என்று கூறுகிறாள். பிற்பகலில் குட்டிகளின் ஒளி அதிகமாக ஒலித்தது. பெரியபிள்ளைகள் இருவரும் நாயை வெளியே சென்று தேடிப் பார்த்து விட்டு இல்லை என்ற பதிலுடன் வீட்டிற்குள் வந்தனர். மாலையில் கணவர் வேலை விட்டு வீடு திரும்பியவுடன் கணவரிடம் வெளியே சென்று பார்த்து நாயைப் பிடித்து வரச் சொன்னாள். தாய்க்கு இல்லாத அன்பா? முனிசிபாலிட்டியார் பிடித்துச் சென்று இருப்பார்கள். காலையில் தான் பணம் கட்டி அழைத்து வர வேண்டும் என்று கூறினான். சிறிது நேரத்தில் என் மனைவி தென்பகுதி வீட்டாரிடம் பேசிக் கொண்டிருந்தாள்.

இரவு முழுவதும் நாய்களின் சத்தம் கேட்டுக் கொண்டே இருந்தாள் எப்படி தூங்குவது. இரவு தூக்கம் இல்லாமல் போய்விடுமே என்று வடபகுதியார் கூறினார்.

வடபகுதி வீட்டாரிடம் கதவு சன்னல் எல்லாம் சாத்திக் கொண்டு தூங்கச் சொன்னார்கள். குங்குமப்பூ போட்டு சுண்டக் காய்ச்சியபாலைக் குடித்துவிட்டு உறங்கினர்.

தென்பகுதி வீட்டாரின் மனைவி குழந்தைக்குப் பால் கொடுத்து விட்டு வந்தாள். நாய்க்குட்டிகளின் ஒலி பாதியளவு குறைந்து விட்டது. என்ன காரணம் என அறிய மேற்கு அறையில் இருந்து சாய்ந்துகீழே பார்த்தேன். அந்த ஏழையின் மனைவி கையில் ஒரு கொட்டாங்குச்சியில் சிறிது பால் வைத்து சிறிய பஞ்சில் பாலை தோய்த்து ஒவ்வொரு குட்டியின் வாயிலும் வைத்தாள். குட்டியின் ஒளி குறைந்தது. கடைசியாக ஒரு குட்டி மட்டும் விடாமல் கத்திக்கொண்டே இருக்க கொட்டாங்குச்சியைக் கீழே வைத்து விட்டு தன் மார்பில் பஞ்சை வைத்து பாலை பிழிந்தால் குட்டியின் வாயில் மூன்று முறை வைக்க குட்டியின் சத்தம் ஓய்ந்து தூங்கியது.

பெரியபாரம் இறங்கியது போல் இருந்தது ஏப்ப ஒலி வந்த திசையில் இருந்து குறட்டை ஒலி வந்தது. என்ன தான் பணக்காரராக இருந்தாலும் அடுத்தவர் துயர்கண்டு

துடைக்க முன் வராத பணக்காரக் குடும்பம் ஒரு டம்ளர் பால் கொடுத்து இருந்தால் போதும் பக்கத்து வீடு பசித்திருக்க தன் சுகமே பெரிதன எண்ணி தான் மட்டும் தனித்து உண்ணும் சுயநலம்மிக்கவர் ஒரு புறம் ஏழையாக இருந்தாலும் நாய்க்குட்டிகளின் கஷ்டங்களைப் பார்த்து அதைக் களைய முனைந்த அந்த ஏழைப் பெண்ணின் முகம் விளக்கொளியில் செந்தாமரை மலராக மலர்ந்தது.

இந்தச் சமுதாயத்தில் பணத்திற்கும் நல்ல குணத்திற்கும் வெகுதூரம் இருக்கின்றது. பணம் இருப்பவரிடம் பிறருக்கு உதவும் குணம் இருப்பது இல்லை. குணம் ஒன்றே பெரிது.

**“பணம் என்னடா பணம்**
**குணம் தானடா நிரந்தரம்”**

என்ற பட்டுக்கோட்டையாரின் பாடல் வரிகள் நினைவுகூரத் தக்கதாகும். இத்தகைய மனிதநேயமானது ஏழைகளின் மனதில் மலிந்து கிடக்கிறது என்பதை ஆசிரியர் வெளிப்படுத்துகிறார்.

**தேங்காய்த் துண்டுகள் சிறுகதையில் மனிதநேயம்:-**

மு.வ. எழுதிய தேங்காய்த்துண்டுகள் என்னும் சிறுகதையில் வரும் முனுசாமி பசியால் வாடி உடல் இளைத்து பகல்பொழுதில் தெருவில் வேலாவேலா என முனங்கி கொண்டே மயங்கி கிடக்கிறான்.

போவோர் வருவோர் எல்லாம் கண்டும் காணாமலும் இருக்க கல்லூரி மாணவர்கள் இருவர் அவனுக்கு டீயும் பன்னும் வாழைப்பழமும் வாங்கிக் கொடுத்தனர்.

கல்லூரி மாணவரிடம் இருந்த மனிதநேயம் மற்றவரிடம் இல்லை. அவன் குடித்துவிட்டுப் போதையில் கிடக்கிறான் எனக் கூறிச் சென்றனர்.

மக்களுக்குச் செய்யும் சேவை மகேசனுக்குச் செய்யும் சேவை என்பார்கள். இறைவனது படைப்புகளாகிய ஏழைகளை மனிதநேயத்துடன் நடத்த வேண்டும்.

**பள்ளி ஆசிரியரின் பண்பு:-**

அனைவரையும் பார்த்து கண்ணீர் விட்டான் முனுசாமி .மதுரையில் இருந்து பிழைக்க வந்தவன் நான்கு நாளாக சாப்பிடாததால் மயக்கத்தாலே கீழே விழுந்து விட்டான்.

மாரியம்மன் கோவிலுக்கு ஏன் வந்தாய் எனக் கேட்க? முனுசாமியின் ஊர்க்காரன் வேலன் தினமும் கோயிலுக்கு வருவதாகவும் கோயில் மூலையில் கண்டிப்பாக தேங்காயும் வாழைப்பழமும் வைத்து விட்டு போவதாகவும் கூறினான்.

நான்கு நாட்களாக அவன் வராததால் தான் நான் சாப்பிடவில்லை என்று கூறினான்.

தன் ஊர்க்காரனை நன்றாக பார்த்துக் கொள்ள வேண்டும் என்ற மனித நேயம் வேலனிடம் உள்ளது.

திருட்டு வேலை செய்தாவது தன் ஊர்க்காரனைக் காப்பாற்றுகிறான்.

ஒரு வாரத்திற்குப் பின் ஆசிரியர் மாரியம்மன் கோவிலைத் தாண்டும் போது ஒரு டிப்டாப் மனிதன் கோயிலில் விழுந்து விழுந்து வணங்குவதைப் பார்க்கிறார்.

சந்தேகத்துடன் இவன் வேலனாக இருக்குமோ என எண்ணி அவன் செயல்களைப் பார்க்கிறான்.

அந்த இருட்டில் அவன் எதையோ தூக்கி எறிந்ததையும் கண்ணில் நீருடன் புறப்பட்டுச் சென்றதையும் பார்த்து அவன் எதை வீசினான் என அறிய அவன் சென்றபின் அவ்விடத்தில் சென்று பார்த்தான்.

நான்கு ஐந்து நாட்களாக எடுக்கப்படாத தேங்காய்த் துண்டுகள் அவை வாடிப் போய் இருந்தன. எறும்பு மொய்த்துக் கொண்டு இருந்தன.

**அறிவினால் ஆகுவதுண்டோ பிறிதின் நோய் தந்நோய் போல்போற்றாக் கடை (குறள். 315)**

பிறிதோர் உயிருக்கு வரும் துன்பங்களைத் தமக்கு வந்தனவாக நினைத்துக் காப்பாற்றா விட்டால் தாம் பெற்ற அறிவினால் யாது பயன் எனக் கேட்கிறார். அத்தகைய அறிவிலானை இடித்துரைத்து மேலும் அவன் நெஞ்சு உவந்து ஒரு பொருளைக் கொடுக்கிறான் என்றால் அது பெறுகின்றவனுடைய தவப்பயன் என்கிறார்.

**முடிவுரை:-**

**“அன்பே உன்அன்னை,**
**அறிவே உன்தந்தை,**
**உலகே உன்கோவில்**
**ஒன்றே உன்தெய்வம்”**

என்ற கவிஞர் வாலியின் வைரவரிகள் நம் இதயத்தில் பதியட்டும். அல்லற்பட்டு அழுகின்ற மக்களை ஆற்றித்தேற்றுவோம். கலக்கத்திலும் கவலைகளிலும் கலங்கிநிற்கும் மக்களின் கண்ணீரைத் துடைப்போம். மனிதநேயத்தை மலரச் செய்வோம்.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 36. தலைவன் தலைவி சமத்துவ உறவும் சுதந்திர இயல்பும்

**பேரா.சோ.ஹரிபாண்டிராஜன்,**

உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை(சுயநிதி), வி.இ.நா.செ.நா.கல்லூரி(தன்னாட்சி), விருதுநகர்

DOI 10.5281/zenodo.10720560

**Abstract :**

Books such as Ettuthogai, Patuppattu, Tholkappiyam, Thirukkural describe the lifestyles of the ancient Tamils. These books highlight the cultural records of inner life and outer life. Palanthamil songs are songs that express the inner feelings of the leader and the leader. The songs reveal the leader's adult life, chaste life, and the skills of a friend to help him from adultery to chastity.

**Key Words: Sangam Literature - Family – Liberty – Equality**

**முன்னுரை :**

பண்டையத் தமிழர்களின் வாழ்க்கை முறைகளை எடுத்துக் கூறுவது எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, தொல்காப்பியம், திருக்குறள் போன்ற நூல்;களாகும். இந்நூல்கள் அகவாழ்க்கை, புறவாழ்க்கை ஆகிய பண்பாட்டுப் பதிவுகளை எடுத்துக் கூறுகின்றன. தலைவன், தலைவியின் உள்ளத்து உணர்வுகைள வெளிப்படுத்தும் பாடல்களாகவே பழந்தமிழ்ப் பாடல்கள் அமைந்துள்ளன. தலைவன் தலைவியின் களவு வாழ்க்கை, கற்பு வாழ்க்கை, களவு வாழ்வில் இருந்து கற்பு வாழ்விற்கு துணைசெய்யும் தோழியின் திறன்கள் ஆகியவற்றைப் பாடல்கள் வெளிப்படுத்துகின்றன. இவற்றின் நிலையில் தலைவன் தலைவி இயல்புகளை இவ்வாய்வுக் கட்டுரை விளக்குகின்றது.

**தலைவன் கனவு நிகழ்வை வெளிப்படுத்தல் :**

வேனிற்காலத்தே மலரும் பாதிரியினுடைய வளைந்த மலரின்கண் துய் போன்ற, மயிர் எழுச்சியுற்று ஒழுங்குபட்ட அழகு ஒழுகும் மாமையையும், நுணுகிய வினைத்திறமமைந்த அணிகலன்களையும் உடைய தலைவியை, தரமாட்டாயா, இருந்தும் தருகின்றாயைப் போலக் காட்டி இனியதுயிலைக் கெடுத்து எழுப்பா நின்றனை, இவ்வே மாற்றச் செயலாலே நின்னைத் துணையைப் பிரிந்துறைவோர் இகழமாட்டாரோ என்பதனை,

**வேனிற் பாதிரிக் கூன்மலர் அன்ன**

**மயிர்ஏற்பு ஒழுகிய அம்கலுழ் மாமை**

**நுண்பூண் மடந்தையைத் தந்தோய் போல**

**இன்துயில் எடுப்புதி கனவே**

**எள்ளார் அம்ம, துணைப்பிரிந்தோரே - குறுந். 147**

என்று, தலைவியைப் பரிந்து சென்ற தலைவன், தான் சென்றவிடத்தே துயிலுங்கால் தலைவியைக் கனாவிற் கண்டு விழித்து ஆற்றாமையாலே கூறும் தன்மையாக கோப்பெருஞ்சோழன் வெளிப்படுத்தியுள்ளார்.

**தலைவனின் நோய்க்கு தலைவியே மருந்து :**

சிவந்த பூவினையுடைய முருக்க மரத்தினது நல்ல பட்டையை நீக்கி அதன் தண்டோடே பிடித்த தாழ்கின்ற கரகத்தையும், விரதவுணவையும் உடைய பார்ப்பன மகளே, எழுதாதே கற்றலையுடைய நினைக்குரிய மறைவின் கண் உள்ள சொற்களி கைத்தேனும், தம்முட் பிரிந்தோரைச் சேர்த்தற்குரிய தன்மையுடைய மருந்தாம் சொல் உள்ளதோ, உள்ளதாயின் கூறிக்காண். அதனை ஒழித்து என்னை இடித்துரைக்கும் இச்சொல் நின் மயக்கத்தானே எழுந்ததாம் என்னும் தன்மையை,

**பார்ப்பன மகனே! பார்ப்பன மகனே!**
**செம்பூ முருக்கின் நல்நார் களைந்து**
**தண்டொடு பிடித்த தாழ்கமண் டலத்துப்**
**படிவ உண்டிப் பார்ப்பன மகனே!**
**எழுதாக் கற்பின் நின்சொ லுள்ளும்**
**பிரிந்தோர்ப் புணர்க்கும் பண்பின்**
**மருந்தும் உண்டோ? மயலோ இதுவே!**

என்று தலைவியையன்றி, தலைவன் கொண்ட நோய்க்கு வேறு மருந்தில்லை என பாண்டியன் நெடுங்கண்ணனார் உணர்த்தியுள்ளார்.

**தலைவனின் மகிழ்ச்சி :**

வயல்களிடத்தே ஞாயிற்றின் வரவு கண்டு தாமரை மலர் மலரா நின்றதும், அழகு பெறுகின்ற ஒளியுடைய நெற்றியையுடைய என் காதலியின் தந்தையினுடையதுமாகிய சிறந்த ஊர். போர் வீரரை ஒத்த பெரிய கொம்பினையுடைய எருமைக்கடாக்கள் நங்கையர் போன்று சிறந்த தத்தம் காதற் துணையாகிய பெண்ணெருமைகளோடு இனிதாக உறைதற்கிடனான நன்னிழன் மிக்க நீரோடையையுடைய பழனங்களின் நாப்பண் இருப்பதாம், உம் உயிரன்னவளைக் கண்டு மணந்து மகிழ்ச்சியடைவேன் என்பதனை,

**மள்ள ரன்ன தடங்கோட்டெருமை**
**மகளி ரன்ன துணையொடு வதியு**
**நிழன்முதி நிலஞ்சிப் பழனத் ததுவே**
**கழனித் தாமரை மலருங்**
**கவின்பெறு சுடர்நுத றந்தை யூரே - ஐங்குறு. பா. 94**

என்று மருதம் நிலத் தலைவனின் நிலையை, களவொழுக்கம் நிகழ்த்திய தலைவன், தலைவியை வரைந்து கோடற்கு வேண்டிய பொருளுக்குப் பிரிந்து போனான். அங்ஙனம் பிரிந்தவன் பொருளீட்டிக் கொண்டு மீண்டும் வரும் பொழுது தலைவியை நினைந்து தன்னெஞ்சிற்குக் கூறி மகிழ்ந்த தன்மையாக ஓரம்போகியார் வெளிப்படுத்தியுள்ளார்.

### தலைவன் தூங்காமலிருத்தல் :

ஒள்ளிய வளையலையணிந்த நங்கையொருத்தி என்னுடைய நெஞ்சத்தை எஞ்சாது கவர்ந்து கொண்டு விட்டனள். வண்டுகள் முரலுதற்குக் காரணமான குளிர்ந்த கடற்றுறையையுடைய தொண்டி யென்னும் பட்டினத்தின் மருங்கே கிடக்கும். பெரிய கடலினது முழக்கமுடைய அலைகளைப் போன்று, ஊர்துஞ்சும் நள்ளியாமத்தும், நான் தூங்கவில்லை என்பதனை,

**ஒண்டொடி யரிவை கொண்டன ணெஞ்சே**
**வண்டிமிர் பனித்துறைத் தொண்டி யாங்க**
**ணுரவுக் கடலொலித் திரையென**
**விரவி னானுந் துயிலறி யேனே - ஐங்குறு. பா.** 172

என்று தலைவன் இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னர்த் தலைவியை அரிதிற் பிரிந்த தலைவனுடைய மெலிவு கண்டு உனக்கு இந்நிலை எதனால் ஆனது என்று வினவிய பாங்கனுக்குத் தலைவன் கூறும் தன்மையாக அம்மூவனார் வெளிப்படுத்தியுள்ளார்.

### தலைவனின் உள்ளம் :

குன்றத்தின் கண் உறைகின்ற குறவனுடைய காதல் கெழுமிய மடப்பமுடைய மகள், மன்றத்தின் கண்ணிற்கின்ற வேங்கைமலர் சிலவற்றைக் கொய்து, மலைதோறும் எழுந்தருளியிருக்கின்ற இறைவனாகிய ;குலதெய்வத்தை வழிபாடு செய்து, தேனாகிய பலியை அள்ளிச் சொரிதலானே நனைந்த நறிய கையினையுடையளாய், புதுவதாக மலர்ந்த காந்தட் பூவினது மணம் கமழ்ந்து கண்ணீர் உருக்கின்ற கண்ணையுடையளாய்த் தோன்றாநிற்கும் தன்மையை,

**குன்றக் குறவன் காதன் மடமகள்**
**மன்ற வேங்கை மலர்சில கொண்டு**
**மலையுறை கடவுள்குலமுதல் வழுத்தித்**
**தேம்பலிச் செய்த வீர்நறுங் கையண்**
**மலர்ந்த காந்த ணாறித்**
**கலிழ்ந்த கண்ணளெம் மணங்கி யோளே- ஐங்குறு. பா.** 259

என்று வரையத் துணிந்த தலைமகன் வரைவு முடித்தற்குத் தலைமகள் வருந்துகின்ற வருத்தம் தோழிகாட்டக் கண்டு, இனி அது கடுக முடியுமென உவந்த உள்ளத்தனாய் தன்னுள்ளே தலைவன் கூறும் தன்மையாக கபிலர்; உணர்த்தியுள்ளார்.

**தலைவி தலைவனோடு கொண்ட நட்பு :**

தலைவி, தலைவனிடம் கொண்ட நட்பு, நிலத்தைக் காட்டிலும் மிகப் பெரியதாகவும், வானத்தைக் காட்டிலும் மிக உயர்ந்ததாகவும், கடலைக் காட்டிலும் மிகவும் ஆழமானதாகவும் இருப்பதை,

**நிலத்தினும் பெரிதே, வானினும் உயர்ந்தன்று**
**நீரினும் ஆரளவின்றே சாரல்**
**கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு**
**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே - குறுந்தொகை. பா.3**

**தலைவி தலைவனை நினைத்து துன்பமடைதல் :**

முள்ளையுடைய அடிப்பகுதியையுடைய இலவமரத்தினது ஒள்ளிய பூங்கொத்துக்களின் கண்ணுள்ள சிறந்த மலர்கள், அப்பாலை நிலத்திலே தோன்றி ஆரவாரித் தெரிகின்ற தீயினால் இயக்கமுண்டான வெங்காற்று மோதி உதிர்த்தலானே, இடியன்கண் தோன்றி நிலத்திலே உதிரா நின்ற தீப்பொறிகள் போயின நிலத்தின் மேல் உதிர்தற்குக் காரணமான பற்பல கிளை வழிகளையுடைய கடத்தலரிய அந்த வெவ்விய பாலை நிலத்தே சென்றவராகிய நம்பெருமான், அழிவில்லாத உய்தற்கரிய பெருந்துன்பத்தையே,

நமக்கு வழங்கி விட்டனர் என்பதை,

**முள்ளரை யிலவத் தொள்ளிணர் வான்பூ**
**முழங்கழ லசைவளி யெடுப்ப வானத்**
**துருமுப்படு கனலி னிருநிலத் துறைக்குங்**
**கவலை யருஞ்சுரம் போயினர்,**
**தவலி லருநோய் தலைத்தந் தோரே - ஐங்குறுநூறு. 320**

என்று தலைமகன் பிரிந்து சென்று வெம்மையான பாலைநிலத்து செல்வதை நினைத்து தலைமகள் வருத்தம் அடையும் நிலையாக ஓதலாந்தையார் வெளிப்படுத்தியுள்ளார்.

**குறித்த வருவம் வரக்கண்ட தலைமகள் கூறுதல் :**

இளவேனிற் பருவம் தொடங்கு முன்னர் நும்பால் ஒருதலையாக வந்து சேர்வேன். அதுகாறும் ஆற்றியிருந்திடுக என நமக்குத் தேற்றுரை கூறிச்சென்ற நம் பெருமானார் இன்னும் வந்தாரில்லை. குயிலின் பேடு தனது இனியகுரலாலே தன் காதற்றுணையாகிய சேவலைக் கூப்பிட்டழைத்தற்குக் கூவா நிற்பவும், நுண்மையும் கருநிறமும் உடைய மணல்

தென்றற் காற்றினாலே வரி வரியாக வளைந்து தோன்றுதற்குக் காரணமான அந்த இளவேனிற் பருவமோ, இதோ வந்து விட்டதே என்பதை,

**அவரோ வாரார் தான்வந் தன்றே**
**குயிற்பெடை யின்குர லகவ**
**வயிர்க் கேழ் நுண்ணற னுடங்கும் பொழுதே**

**-ஐங்குறு. 341**

என்று, தலைமகன் பிரிந்து சென்று, மீண்டும் குறித்த பருவம் வரக் கண்ட தலைமகள் கூறும் திறனாக ஓதலாந்தையார் குறிப்பிட்டுள்ளார்.

**முடிவுரை :**

பண்டையத் தமிழர்கள் அகவாழ்வில் மிகச்சிறந்து விளங்கியுள்ளனர். தலைவன், தலைவியோடு கொண்ட அன்பினையும், தலைவி தலைவனோடு கொண்ட அன்பினையும், தலைவன் தலைவிக்கு உளவியல் அடிப்படையில் உதவும் தோழியின் நீதிநெறித்தன்மை போன்ற பல்வேறு அகவாழ்க்கை முறைநிலைகளை பாடல்கள் வாயிலாக அறியமுடிகின்றது. இவற்றின் அடிப்படை நிலைகளில் செந்தமிழ்ப்பாட்டின் தலைவன் தலைவி இயல்புகள் அமைகின்றன.

**துணைமை நின்றவை :**


- பாட்டும் தொகையும்(தொகுப்பு), நியூ செஞ்சுரி புத்தக நிலையம், சென்னை.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 37. பெரியாரின் சுதந்திரப் பார்வையில் புராணக் கதையாடல்கள்

முனைவர் F. மலர்விழி,
இணைப்பேராசிரியர், தமிழ்த்துறைத் தலைவர், பிராவிடன்ஸ் கல்லூரி,(தன்னாட்சி), குன்னூர்.

DOI 10.5281/zenodo.10722280.

**Abstract :**

Periyar's view of literature is subtle. His opinion is that art for art's sake should be swept away by the superstitions that flow through it. Periyar exposed the Tamil literature and mythological works that did not give place to it. What is literature for? How should literature be? What can be called literature? What should they be for? My opinion is that it should be suitable not only for human life but also for the development of human society. According to Periyar, Purana means lie. The brains of the composers of Puranas have been abnormally contradictory brains. Myths are the creation of twisted brains. The Puranas are the manifestation of how the brain works if you pour religion into the brain and throw in the scorpion called caste.

**Keywords : Liberty – Periyar – Ethical literature**

**முன்னுரை :**

இலக்கியம் குறித்த பெரியாரின் பார்வை நுட்பமானது. கலை கலைக்காகவே என்று சொல்லிக் கொண்டு அதன் ஊடாக சரடு பாய்ந்து நிற்கும் மூடப் பழக்கவழக்கங்களை துடைத்து எறிய வேண்டும் என்பது அவரது கருத்து. அதற்கு இடம் கொடுக்காத தமிழ் இலக்கியங்களையும், புராணப் படைப்புகளையும் தோலுரித்துக் காட்டினார் பெரியார்.

"இலக்கியம் எதற்காக? இலக்கியம் எப்படி இருக்க வேண்டும்? எப்படிப்பட்டதை இலக்கியம் என்று சொல்லலாம்?அவை எதற்காக இருக்க வேண்டும்? என்பது பற்றிச் சிந்தித்தால், மனிதனின் உயிர் வாழ்க்கைக்கு மட்டுமல்லாமல், மனித சமுதாய வளர்ச்சிக்கும் ஏற்றதாக இருக்க வேண்டும் என்பது எனது கருத்து" (விடுதலை 24.11.1961)

பெரியாரின் பார்வையில் புராணம் என்றாலே பொய் என்று பொருள். இயல்புக்கு மாறான முரண் மூளைகளாகவே புராணங்கள் இயற்றியவர்களின் மூளைகள் இருந்துள்ளன. கிறுக்கியல் மூளைகளின் படைப்பே புராணங்கள். அக்கிறுக்கியல் மூளைக்கு மதம் என்னும் கள் ஊற்றிச் சாதிநலம் என்னும் தேளையும் கொட்டவிட்டால் அந்த மூளை எப்படிச் செயல்படுமோ அப்படிச் செயல்பட்டதன் வெளிப்பாடே புராணங்கள்.

பழமையான இலக்கியங்களை உருவாக்கிய புலவர்கள்; வாழ்ந்த காலம் காட்டுமிரண்டிக் காலம். எனவே அவர்களது. இலக்கியமும் காட்டுமிராண்டித்தனமாகவே இருக்கும். காட்டுமிராண்டித் தன்மை என்றால் மனிதன் அறிவுப் பக்குவமடையாமல் மிருகப் பிராயத்தில் இருக்கும் தன்மையைக் குறிக்கும் சொல். மூவாயிரம், நாலாயிரம் ஆண்டுகளாகிவிட்டது தமிழ் தோன்றி. எனினும் தமிழினாலும் தமிழ் படித்த புலவனாலும் தமிழ்நாட்டிற்கு தமிழ் இலக்கியத்திற்கு என்ன நன்மை? என்ன முற்போக்கு ஏற்பட்டிருக்கிறது?

(பெரியார் 2001:6) என்பதைப் பற்றியப் பெரியாரின் கருத்துக்களை இந்த ஆய்வுக்கட்டுரையில் காணலாம்.

**பெரியபுராணம் குறித்தான கதையாடல் :**

பெரியபுராணத்திற்கு எவ்வித ஆதாரமும் இல்லை என்கிறார் பெரியார். இராமாயணத்திற்காவது ஏதாவது ஓர் ஆதாரத்தைச் சொல்லலாம். ஆனால் பெரிய புராணத்திற்கு எதைச் சொல்வது? அதிலுள்ள கதைகளுக்காவது எந்த ஆதாரமும் இருக்கிறதா? இது வெறும் அதிசயங்களை நிறைவேற்றுவதாக உள்ளது. யாரோ ஒருவர் ஒரு விருத்தம் பாடினார். கடவுள் அடியெடுத்துக் கொடுத்தார் ஒளி தோன்றியது மூன்று வயதுக்குழந்தை பாடியது, ஏடு எதிர்த்து வந்தது, கல் மிதந்தது, நோய் நீங்கியது, கதவு திறந்தது, நரி பரியாயிற்று, எலும்பு பெண்ணாயிற்று இவை போன்ற எண்ணற்ற அதிசயங்களை நிகழும் ஒன்றாகத்தான் பெரிய புராணம் உள்ளது. இதனை எப்படி அறிவூட்டும் இலக்கியமாக எடுத்துக் கொள்ள முடியும்? (உண்மை 14.02.1973)

**பாரதம்**

பாரதக் கதைகளும் ஆரிய நாகரிகத்தைப் பரப்புவனவாகவே உள்ளன. புத்தரின் அறிவுக் கருத்துகளை அழிக்கவே பாரதக் கதைகள் உருவாக்கப்பட்டன. மக்களை அறிவுநெறியிலிருந்து சிந்தனை நெறியிலிருந்து விலக்கிடவே பாரதம் இராமாயணம் போன்றவை உருவாக்கப்பட்டன.

பாரதம் கடவுள் கதை என்கிறார்கள். அதில் வரும் ஒருவர் கூட அவன் அப்பனுக்குப் பிறக்கவில்லை. வாயுவுக்கு, அக்னிக்கு, வருணனுக்கு என்று புளுகுகிறார்கள். இவர்கள் இருப்பதோ பூலோகத்தில் அவர்கள் இருப்பதோ தேவலோகத்தில் அங்கிருந்து இறங்கிவந்து இவர்களுக்குப் பிள்ளைக் கொடுத்துவிட்டுப் போனான் என்கிறார்கள். கொஞ்சம் கூட சிந்தனையில்லாமல் அறிவிற்கு சம்பந்தமில்லாமல் எதையோ மனம் போனபடி எழுதிவைத்துள்ளார்கள். இவைதான் நமக்குக் கடவுள் கதைகளா? (விடுதலை 14.12.1967)

பலகோடி மைல்களுக்கு அப்பால் சூரியன் உள்ளது. நம்மால் அந்த வெப்பத்தைத் தாங்க முடியவில்லை. ஆனால் பெண் ஒருத்தி சூரியனுடன் சேர்ந்து பிள்ளை பெற்றாளாம். இதை எங்ஙனம் நம்புவது? (விடுதலை 23.03.1966). பாரத திரௌபதியை ஐவர் மணம் புரிந்து வாழ்வதும் அவள் பெயரால் சூதாடுவதும் நாகரிகத் தனமான வாழ்வா? காட்டுமிராண்டிச் செயல் அல்லவா? காட்டில் வாழ்ந்த முன்னோர்களை விட இழிவான வாழ்வு வாழ்ந்த இவர்களின் வாழ்வு ஒரு வாழ்வா? இது எப்படி பாரதக்கதையின் உயர்வுமிக்க ஒன்றாக எடுத்துக்கொள்ள முடியும்? பாரதக்கதையில் வருவோரின் பிறப்பு முறை சரியில்லை. நம்பும்படியும் அறிவுக்கு எட்டும்படியும் இல்லை. அவதாரம் பற்றிக் கூறப்படும் செய்திகளுக்குச் சான்று என்ன? விஷ்ணு மனித அவதாரம் எடுக்க அவரது தவறுகளே காரணமாயிருக்க அவதாரம் எப்படி உயர்ந்ததாகும்? இதுபோன்ற பலவினாக்களை எழுப்பி பாரதம் மக்களை ஏமாற்றப் படைக்கப்பட்டது என்கிறார். (மா.நன்னன் 1993:186)

பாரதத்தில் கிருஷ்ணன் பெயரால் பகவத்கீதை என்னும் வர்ணாசிரம தருமத்தை அடிப்படையாகக் கொண்ட கதை கற்பனை செய்து புகுத்தப்பட்டிருக்கிறது. பார்ப்பனரைக் கடவுளாக ஆக்கியுள்ளது. (உண்மை 14.08.1971).

மகாபாரதக் கதைகள் புனைந்துரைக் கதைகளாக இருப்பினும் அதில் பெண்களுக்குச் சித்தரிக்கப்படும் நிகழ்ச்சிகள் யாவுமே அவலமாக உள்ளன. அக்காலத்திலே பெண் அடிமைநிலையில் வாழ்ந்திருக்கிறார்கள் என்பதை இது காட்டுகிறது. அரிச்சந்திரன் தன் மனைவியைத் தான் பட்ட கடனுக்கு விற்கிறான். நளன் தயந்தியைக் காட்டில் விட்டுப் பிரிகிறான். பாண்டவர் பாஞ்சாலியை அடகு வைக்கின்றனர். இங்ஙனம் பார்க்கின்ற பொழுது பாரதக் கதைகளில் எந்தக் கணவனும் தன் மனைவிக்கு மதிப்பளித்தாகத் தெரியவில்லை. அவள் கருத்தறிந்து செயல்பட்டதாகவும் தெரியவில்லை. ஆண்களுக்குப் பெண்களை அடிமைப்படுத்த வேண்டும் என்பதற்காகப் புராணக்கதைகள் உருவாக்கப்பட்டுள்ளன. (அரசு மணிமேகலை 1981:13)

மனைவியின் நிலை ஒரு அடிமையின் நிலையை விட உயர்ந்ததாக இல்லை என ரிக் வேதத்திலிருந்து காண்கிறோம். தேவகாலத்தில் பெண்கள் ஆண்களின் சொத்து போல் பாவிக்கப்பட்டு வந்திருக்கிறார்கள். பெரியார் பாரதக்கதைகள் யாவுமே மக்களை ஏமாற்றவும் பெண்களை அடிமையாக்கவும் ஆரியர்கள் வாழவுமே உருவாக்கப்பட்டவை என்று கூறுகிறார்.

**புராணக் கதையாடல் - ஒப்பீட்டு நோக்கு :**

கந்தபுராணக் கதையும் இராமாயணக் கதையும் ஒரே அடிப்படைக் கருத்தை உடையதாகும். ஒன்றை ஆதாரமாக வைத்துப் பிறதொன்று இயற்றபட்டுள்ளது. இதில் எது முந்தியது என்பதில் குழப்பமுள்ளது. இராமாயணத்தை முந்தியதே கந்தபுராணம் என்கிறார் பெரியார். கந்தபுராணம் சைவ மரபில் வந்தது. எனவே இதன் கடவுள் சிவன். சிவன் காட்டுக்குக் கடவுள். சிவனின் தோற்றம் அவன் வைத்திருக்கும் பொருள்கள் எல்லாமே காட்டுப் பொருள்களாகவே உள்ளதால் மக்கள் கட்டுமிராண்டிகளாய் வாழ்ந்தபோத உருவாக்கப்பட்ட கடவுளே சிவன் என்கிறார் பெரியார். (பெரியார் 1964:61-62). விஷ்ணு சிறிது நாகரிமடைந்தபின் உருவாக்கப்பட்ட கடவுள். எனவே சிவன் முந்தியவன். அதனால் கந்தபுராணமே இராமாயணத்தைவிட முந்தியதாகும். அசுரர்களால் தேவர்களுக்குக் கேடு ஏற்பட சிவனிடம் தேவர்கள் வேண்ட கந்தன் தோன்றுகிறான். இராமனுக்கும் இதே அடிப்படைதான். கந்தன் பிறக்க சிவன் பார்வதியுடன் நூறு தேவவருடம் கலவி செய்தானாம். குழந்தை பிறக்கவில்லை. சிவனின் கலவியை ரிஷிகள் தடுக்க சிவனின் வீரியம் கங்கையில் விழுந்து ஆறு பிரிவுகளாகப் பிரிந்ததாம் கங்கை. அதனால் கந்தனுக்கு ஆறுமுகம் என்ற பெயரும் உண்டு. இப்படிப் பல கதைகள் கூறப்படுவது காட்டுமிராண்டித் தனமாக இல்லை? (பெரியார் 1964:63-64). கந்தன் என்றால் சிவனின் இந்திரியம் என்பது பொருள். பெயரிலேயே ஆபாசம் நிறைந்த கந்தபுராணம் எப்படி மக்களை நல்வழிப்படுத்தும் எனப் பெரியார் கேட்டிகிறார் (ம.நன்னன் 1963:189)

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

**முடிவுரை**

கலை கலைக்காகவே என்ற நோக்கினை அழித்து, கலை மக்களுக்காகவே என்ற நோக்கினைத் தமிழ் மக்கள் மனத்தில் ஆழமாகப் பதிய வைத்தவர் பெரியார் என்ற முறையிலும், பழந்தமிழ் இலக்கியங்களுக்கும் சமகால வாழ்க்கைக்குமானத் தொடர்பினை ஆழமாகக் கேள்வி கேட்டவர் பெரியார் என்ற முறையிலும் பெரியாரின் இலக்கிய நோக்கின் முக்கியத்துவம் சிறப்பாக அமைகிறது.

**துணைமை நின்றவை :**

- **பெரியார் களஞ்சியம், கி. வீரமணி,பெரியார் சுயமரியாதை பிரச்சார நிறுவன வெளியீடு, சென்னை.**

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 38. பெண் தெய்வ வழிபாடும் சமத்துவச் சிந்தனையும்

**முனைவர் ஜெ.குணசீலி,**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, பிராவிடன்ஸ் கல்லூரி (தன்னாட்சி),குன்னூர்.

DOI 10.5281/zenodo.10722344.

**Abstract :**

Goddesses are explained in the primary position as female deities are in abundance among the folk deities. The woman was worshiped and worshiped as a sign of prosperity and strength in the early days of tribal society. Ancient Tamil literature is full of goddess names and references to goddess worship.

**Key Words : Worship – Folklore - Society**

## முன்னுரை

நாட்டுப்புறத் தெய்வங்களில் பெண்தெய்வங்களே மிகுதி என்பதால் பெண்தெய்வங்கள் முதன்மை நிலையில் வைத்து விளக்கப்படுகின்றன. இனக்குழுச் சமுதாயத்தின் தொடக்கக் காலந்தொட்டுச் செழுமையின் அடையாளமாகவும் வலிமையின் குறியீடாகவும் பெண் கருதப்பட்டதால் பெண் வணங்குதற்கும் வழிபாட்டிற்கும் உரியவளானாள். பண்டைத் தமிழ் இலக்கியங்களில் பெண் தெய்வப் பெயர்களும் பெண் தெய்வ வழிபாடுகள் பற்றிய குறிப்புகளும் நிறைந்து காணப்படுகின்றன.

**"தெய்வ வழிபாட்டில் தாய் தெய்வ வழிபாடு மிகத் தொன்மையானதாகும். வேட்டையாடி உணவு சேகரிக்கும் பணியில் ஈடுபட்டிருந்தவர்கள் பெண்களே"** என்பதைத் தேவிபிரசாத் சட்டோபாத்யாயா நிரூபித்துள்ளார். வேட்டையாடுதல், பயிர்த்தொழில் செய்தல் மூலம் சமூகத்தேவைகளைப் பூர்த்தி செய்யும் பொறுப்பையும் பெண்கள் மேற்கொண்டதால் அவர்களுக்கு அதிக மதிப்பளிக்கப்பட்டுத் தாய்க்குத் தலைமை இடம் அளிக்கப்பட்டது. இத்தகைய சிறப்பு வாய்ந்த தாய் தெய்வமும் ஆணாதிக்கச் சமூகப் போக்கில் சமத்துவத்தை மையமிட்டு சில சிக்கல்களைக் கண்ட பிறகு சிறப்புப் பெற்றுள்ளாள் என்பதை விளக்குவதாகவே இக்கட்டுரை அமையப் பெற்றுள்ளது.

## தாய்த்தெய்வமும் மாரி கதையும்

மாரியம்மன் உடன் பிறந்தவர் ஏழு சகோதரர்கள் ஆவர். மாரியம்மன் அவர்களுடன் சண்டையிட்டுக் கொண்டு வீட்டை விட்டு வெளியேறிவிட்டாள். அப்பொழுது எங்கும் இல்லாத மழை பெய்து, இடுக்கன் குடியில் தங்குவதற்காக வந்த அம்மனை ஆற்றுமணல் மூடிவிட்டது. அக்காலத்தில் குழந்தைகள் சிலர் சாணி பொறுக்கச் சென்றனர். இவர்களுள் ஒருத்தியாய் தன் சாணிக் கூடையைத் தூக்க இயலவில்லை. இதனை மற்ற குழந்தைகள் ஊருக்குள் சென்று கூறினர். எனவே ஊரார், அவ்விடத்திற்குச் சென்றனர். அவர்களாலும் அதனைத் தூக்க முடியவில்லை. காரணம் தெரியாத மக்கள் மண்ணைத் தோண்டினார்கள். உள்ளே லிங்கம் ஒன்று தென்பட்டது. ஓங்கி வெட்டியதால் மாரியின் முகத்தில் பட்டு இரத்தம் தெறித்தது. இதனை

கண்ணுற்ற மண்ணைத் தோண்டிச் சிலையை வெளியே எடுத்து ஊருக்குள் கொண்டு சென்று கோயில் கட்டி வழிபட்டனர்.

**பத்திரகாளி** :

சண்டன், சண்டத்தி என்ற அசுரத் தம்பதியர்க்கு ஏழு பிள்ளைகள் அவர்கள் தக்கன, தொக்கன், இடும்பன், கடுமபன், கண்டன், முண்டன், தாருகன் என்பவராவர். இவ்வெழுவரும் சிவனிடம் வரம் பெற்று வருகையில் பார்வதி அவர்களின் எதிரே வந்தாள். பார்வததி அவர்களிடம் என்னிடம் ஏதாவது வரம் வேண்டுமானால் பெற்றுக் கொள்ளுங்கள் என்று கூறினார். அசுரர்கள் பதிலாக ஒரு வெண்ணிடம் நாங்கள் வரம் பெற மாட்டோம் ‘போடீ” என்று ஏளனமாகக் கூறினர். ஏளன வார்த்தையைக் கேட்ட பார்வதி கோபமடைந்து. இவ் அசுரர்களை அடக்க மாகாளி பிறப்பாளென்று சாபமிட்டாள். பார்வதி பின்னர் அசுரர்கள் ஏளனமாகக் கூறிய செய்தியைச் சிவனிடம் கூறி முறையிட்டாள். அச்செய்தி கேட்டுச் சிவனும் சீற்றம் அடைந்தார். சிவன் தேவர்களை அழைத்துப் பாற்கடலைக் கடையுமாறு கட்டளையிட்டார். அப்பொழுது முதலில் மூதேவி இரண்டாவது இலக்குமி மூன்றாவது ஏழுதலைப் பாம்பு, நான்காவது வேதாளம், ஐந்தாவது மானும் மழுவும் தோன்றின. இறுதியில் நஞ்சு தோன்றியது. சிவன் அள்ளஞ்சினை எடுத்து உண்டார். அதனைக் கண்ட பார்வதி சிவனின் கண்டத்தைப் பிடித்து நஞ்சை தடுத்து நிறுத்தினாள். சிவனுடைய கண்டத்திலேயே நின்ற நஞ்சு கருவாக வளர்ந்து பத்திரகாளியாகத் தோன்றியது.

**வடக்கத்தியம்மன்** :

வடக்கத்தியம்மன் தன் கணவனுடன் வாழ்ந்து வந்தாள். தன் கணவனுடன் ஏற்பட்ட வாய்ச்சண்டையின் காரணமாகக் கோபத்தில் தன் வீட்டை விட்டு மாலை ஆறு மணிக்கு மேல் புறப்பட்டுச் சென்றதாகவும் சாத்தூர் வழியே செல்லும் போது காற்றும் மழையும் வரவே அவற்றிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ள எண்ணிப் பக்கத்தில் வடக்குப் பக்கமாக உள்ளகூரைக் கொட்டாரத்தினுள் நுழைந்ததாகவும் அப்பொழுது கற்று வேகமாக வீசியதன் காரணமாகக் கூரை அவள் மீது விழுந்து இறந்து விட்டதாகவும் இரண்டு மூன்று ஆண்டுகளுக்குப் பின் வடக்கத்தியம்மன் மக்கள் கண்களுக்குப் புலப்படவே தனக்கு ஒரு இருப்பிடம் வடக்குப் பக்கமாக அமைத்துத் தன்னை வழிபட்டு வந்தால் மக்களைப் பாதுகாத்து அருள் புரிவதாகக் கூறியதாகவும் அன்று முதல் அம்மனை நினைத்து ஒரு பீடம் அமைத்து வழிபட்டு வருகின்றனர்.

**சீலைக்காரி** :

சீலைக்காரியம்மன் தூத்துக்குடி மாவட்டத்தில் உள்ள கடம்பாக்குளம் என்னும் கிராமத்தில் பிறந்து தன் கணவனுடன் வாழ்ந்து வந்தாள். இவள் ஆசாரி குலத்தைச் சார்ந்தவள் நிறை சூலியான இவள் தன் கணவனுடன் ஏற்பட்ட வாய்ச்சண்டையின் காரணமாகக் கோபத்தில் தன் வீட்டை விட்டு மாலை ஆறு மணிக்கு புறப்பட்டுச் சென்றாள். கடம்பாக்குளம் கரையின் வழியாகச் செல்லும் போது மழையும் காற்றும் வரவே அவற்றிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ள எண்ணிப் பக்கத்தில் இருந்த கூரைக் கொட்டாரத்திலுள் நுழைந்தாள். அப்பொழுது

அவருக்கு இடுப்பு வலி ஏற்படவே நான்கு பெண்கள் வந்து வைக்கோலை விரித்து, அதன் மீது சீலைக்காரியை படுக்க வைத்து கட மருந்து கொடுத்துப் பிள்ளைப் பேறு பார்த்தனர். சீலைக்காரிக்கும் பெண் குழந்தைப் பிறந்தது. சீலைக்காரி விடியற்காலையில் மயக்கம் தெளிந்து பார்த்த பொழுது அவ்விடத்தில் இருந்த பீடங்கள் அவருடைய கண்களுக்குத் தெரிந்தன. உடனே அவள் தான் தெய்வத்தின் இருப்பிடத்தில் வைத்துக் குழந்தையைப் பெற்றுவிட்டதாக எண்ணி அவள் மிகவும் வருத்தப்பட்டாள்.

சீலைக்காரி தன் குழந்தையையும் வைக்கோலையும் கையில் எடுத்துக்கொண்டு பீடத்தைப் பார்த்து, நீங்கள் நல்ல தெய்வங்கள் என்றால் மேல் கூரையைத் தீப்பிடித்து எரியச் செய்து என்னையும் உங்களுடன் சேர்த்துக் கொள்ள வேண்டும் என வேண்டினாள். பீடத்திலுள்ள தெய்வங்கள் மனமிரங்கிக் கூரையைத் தீப்படித்து எரியச் செய்தன. அத்தீயில் சீலைக்காரியும் குழந்தையும் கருகி இறந்தனர்.

பஞ்சம்பட்டியில் உள்ள மக்கள் தீப்பிடித்ததைப் பார்த்து அங்கு வந்தனர். அங்கே தாயும் மகளும் கருகிய நிலையில் கிடந்ததை அவர்கள் கண்டனர். இந்நிகழ்ச்சி எப்படி நடந்தது என்பதை அறிய அவர்கள் கோடாங்கி அடித்துக் கேட்டனர். அப்படிக் கோடாங்கி அடித்துக் கேட்கையில் சீலைக்காரி, அங்கு வந்ததும் அதன் பின் நிகழ்ந்த நிகழ்ச்சிக்கும் ஒன்றன் பின் ஒன்றாக அவர்களுக்குத் தெரிய வந்தன. கோடாங்கியின் மூலம் கிடைத்த தெய்வவாக்கின்படி அத்தெய்வ பீடங்கிகளுக்கு அருகில் சீலைக்காரிக்குப் பீடம் அமைத்து வணங்கி வந்தனர்.

**கன்னித் தெய்வ வழிபாடு**

கன்னித் தெய்வ வழிபாடு பெரும்பான்மையும் சிறுதெய்வ வழிபாடே ஆகும். கன்னி என்ற சொல்லிற்குப் 'பூப்படைந்து திருமணமாகாத, கன்னித் தன்மை இழக்காத பெண்' என்று அகராதி பொருள் கூறுகிறது. இயல்பாகவோ அல்லது கொலை செய்யப்பட்டோ இறக்கும் பெண்களைக் கன்னித் தெய்வமாக வழிபடும் மரபு தமிழகத்தில் பரவலாகக் காணப்படுகிறது. இறந்த கன்னிப் பெண், தன் வீட்டாருக்கு வளமையும் பாதுகாப்பும் அளிப்பதாகவும், அவள் கன்னிப் பெண்கள் மீது இறங்கி அருள்வாக்குச் சொல்வதாகவும் நம்பப்படுகிறது.

பொதுவாக ஒரு வீட்டின் திசைகளைக் கன்னி மூலை (தென்மேற்குப் பகுதி), அக்னி மூலை (தென்கிழக்குப் பகுதி), வாயு மூலை (வடமேற்குப் பகுதி), ஈசானி மூலை (வடகிழக்குப் பகுதி) என்று பிரித்துக் கூறுவதுண்டு. இதுவே இன்று வாஸ்து சாஸ்திரமாகக் கூறப்படுகிறது. வீட்டின் கன்னி மூலைப் பகுதியைத் தெய்வத்திற்கு உரிய இடமாகக் கருதி வழிபடுவது தொன்று தொட்டு இருந்துவரும் மரபாகும். உங்கள் வீட்டில் உள்ள பெரியவர்களிடம் கேட்டுப் பாருங்கள், மேலும் சில விளக்கங்கள் கிடைக்கும். வீட்டுத் தெய்வமாக, குலதெய்வமாக, கன்னித் தெய்வங்களே வழிபடப்படுவது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

**ஏழு கன்னிமார்**

கன்னித் தெய்வங்கள் ஏழு என்று குறிப்பிடும் வழக்கம் காணப்படுகிறது. ஏழு கன்னிமார், சப்த கன்னியர், ஏழு கன்னித் தெய்வங்கள் என்று இதனைக் கூறுவதுண்டு. ஏழு கன்னித்

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

தேவதைகள் வானத்திலிருந்து இறங்கி வந்து, நீராடிக் களிப்பது, துன்பப் படுவோர்க்கு உதவுவது போன்ற கதைகள் பரவலாக உள்ளன. வனப் பகுதிகளிலும் மலையை ஒட்டிய பகுதிகளிலும் திறந்த வெளியில் கன்னித் தெய்வக் கோயில்கள் இருக்கின்றன. இவற்றை வன தேவதைகளாகக் கொண்டு வனத்தில் வழிபடும் வழக்கமும் காணப்படுகிறது. ஒரே கல்லில் ஏழு பெண் உருவங்கள் வடிவமைக்கப் பட்டு வழிபடப் படுகிறது. இத்தெய்வங்களுக்கு என்று தனித்த வழிபாட்டு முறைகள் இல்லை. பிற தெய்வங்களுடன் இணைத்தே வழிபடப் படுகின்றன.

**முடிவுரை**

தாய்த் தெய்வம் இன்றைய நிலையிலும் கூட சக்தி வாய்ந்த வழிபாட்டுத் தெய்வ நிலையைப் பெற்றதற்கும் சமூக முரண்களை எட்டி நின்று சமத்துவப் போக்கில் உரையாடியதே காரணமாக அமைந்தது என்பதை மேற்கண்ட கதைகளின் மூலமாக அறிய முடிகிறது.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 39. வீரப்பெண்ணும், விடுதலை ஆணும்

தி. பாலமுருகன், M.A., M.Phil., B.Ed., Ph.D.(Doing),
முதுகலை தமிழாசிரியர், அரசு மேல்நிலைப்பள்ளி, சின்னக்கண்ணனூர்,
மானாமதுரை வட்டம், சிவகங்கை மாவட்டம்.

DOI 10.5281/zenodo.10722389.

**Abstract :**

Whether it is a literary study or a study of other fields, a twofold view is required. One is to focus on society. Another is to focus on authenticity. A society can function well only when these two go hand in hand. This article is also focused on this.

**Key Words : Literature – Society – Women's Literature**

## முன்னுரை

இலக்கிய ஆய்வாக இருந்தாலும், பிற துறை ஆய்வாக இருந்தாலும் இருவகையான பார்வை வேண்டும். ஒன்று சமுதாயத்தை மையமாக வைத்து பார்ப்பது. பிறிதொன்று சான்றான்மையை மையமாக வைத்துப் பார்ப்பது. இவ்விரண்டுமே ஒன்றிணைந்து சென்றால் மட்டுமே சமூகமானது சிறப்பாக இயங்கும். இக்கட்டுரையும் இதனை மையமாக வைத்தே நோக்கப்பட்டுள்ளது.

## இருநோக்கில் திருக்குறள்

'பொருளிலார்க்கு இவ்வுலகம் இல்லை'

என்று பேசும் திருக்குறள்

'பொருட்செல்வம் பூரியார் கண்ணும் உள'

என்றும் பேசுகிறது.

பொருள் அல்லவரைப் பொருளாகச் செய்யும்

பொருளல்லது இல்லை பொருள்

என்று கூறுகின்ற திருக்குறளே

"வேண்டாண்மை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை

ஆண்டும் அஃதொப்பது இல்."

என்று முடிவினை வழங்குகிறது. இக்குறனின் கருத்தினை இணைத்துப் பார்த்தால் முரண்பாடுடைய கருத்துக்கள் வருகின்றன. ஆனால் வள்ளுவரே இதற்கும் விடை கூறுகிறார். இருவேறு உலகத்து இயற்கை என்று கூறி சமுதாய, பார்வையையும், சான்றாண்மை பார்வையையும் உற்று நோக்கி ஆராய்ந்தால் முரண்பாடு இல்லா தன்மையினை அறியலாம் என்கிறார்.

**இருநோக்கு**

சமுதாயம் சார்ந்த பார்வையினை 'உலகியல் பார்வை' என்றும் சான்றாண்மை சார்ந்த பார்வையினை 'இலட்சியப் பார்வை' என்றும் அழைக்கலாம். லௌகிகம் என்னும் உலகியல் உண்மையினை, சான்றாண்மையை ஏற்குமாயின் உலகம் ஏற்பதில்லை. இலட்சிய வாழ்வினை சமுதாயம் ஏற்பதில்லை.

**ஈடில்லாக் கண்ணகி**

தமிழ் இலக்கியங்களிலே இரவாப் புகழுடன் நிலைத்திருக்கும் பாத்திரங்களுள் கண்ணகி பெறும் மதிப்பானது ஈடு இணை இல்லாதது. இளங்கோவடிகள் காட்டும் அறத்தின் பிம்பமாகவும், குறைபிலாக் கலை நலமும் கண்ணகியின் படைப்பிலே குறைவுபடாமல் காட்டப்படுகிறது. புவியிலே பெண்ணுக்கு அணியாகவும், விண்ணிலே மாதர்க்கு விருந்தாகவும் திகமும் கண்ணகியை 'வாய் இல்லாப் பூச்சி', பிழைக்கத் தெரியாத அப்பாவி நல்லவன்தான் இருப்பினும் திறமை இல்லாதவள் என்று பிற்போக்கு சிந்தனை உடையவர்களும் இருக்கத்தான் செங்கிறார்கள்.

**இருவேறு சமுதாயம்**

சமுதாய பார்வையிலே சிலப்பதிகாரத்தை இப்படி ஏன் பார்க்கக் கூடாது என்று முட்டுக்கட்டை போடலாம். இருப்பினும் சமுதாய பார்வையில் இலக்கியத்தை காண முற்படுவோர் பிறிதொரு தெளிவினை மணதில் கொள்ள வேண்டும். 'நாம் விரும்பும் சமுதாயம், நாம் காணும் சமுதாயம்' என்ற முறையில் அனைத்தும் அமைந்துவிடுவதில்லை. அந்தந்த படைப்புகளின் தனித்தன்மை குணாதிசயம் போன்றவை, அந்தந்தப் படைப்புகளின் காரணகாரியம் என்ன என்பதை மறக்கக் கூடாது.

**மகளிரெல்லாம் மண்ணரசியா**

சமுதாயத்தில் காணக்கூடிய மகளிரெல்லாம், கண்ணகி ஆவதில்லை. நாம் தினசரி பார்க்கக்கூடிய பெண்களைப் போல கண்ணகி அமையவில்லை.சமுதாயத்தில் காணக்கூடிய பெண்களைப் போலவே இலக்கியத்திலும் படைக்கப்படுகிறார்கள். ஆவங்களை சமுதாய கண்ணோட்டத்தோடு பார்ப்பது எளிது. புரட்சிப் புயலாய் கற்பின் இலக்கணமாய் காட்டுத்தீயாய் படைக்கப்பட்ட கண்ணகியை சான்றாண்மை பார்வையிலே பார்க்க வேண்டும்.

**மாகாத்மா வாழ்வு**

காந்தியடிகளுடைய வாழ்வானது இச்சமூகத்தில் வெற்றியைப் பெற்றதா அல்லது தோல்வியை தழுவியதா. இந்த இரண்டையும் கூர்ந்து நோக்க வேண்டும். அவர் அயல்நாட்டிற்கு சென்று பாரிஸ்டர் பட்டம் பெற்று இந்தியா வந்தார். அவர் நினைத்திருந்தால் செல்வாக்கான வாழ்க்கையினை அமைத்து செல்வந்தராக வாழ்ந்திருக்க முடியும். ஆனால் அதை செய்யவில்லை. அவர் இந்திய நாட்டின் மக்களுக்காக, சுதந்திரத்துக்கான தன்னை

அர்ப்பணித்துக்கொண்டார். ‘சர்ச்சில்’ ஒருமுறை அவரை ‘அரைநிர்வாண பக்கிரி’ என்று கூறினார். அப்படிப்பட்ட எளிமையான வாழ்வுதான வாழ்ந்தார்.

**அவர் ஒரு கண்ணகி**

காந்தியடிகளுடைய வாழ்வானது சாதாரண மனிதனைப் போல தன்னுடைய வாழ்வினை அமைத்துக் கொள்ளவில்லை. உலகத்தின் வேகத்தை, அதன் வெறித்தனத்தை தடுத்து ஒடுக்கி தம் அகிம்சை என்னும் கோட்பாட்டால் கட்டிப்போட்டவர். பிற அரசியல் தலைவர்களைப் போல அறம்பழித்து வாழும் வாழ்க்கை இவரிடமில்லை. அரசியல் அரங்கத்திலே இவர் ஒரு கண்ணகி புரட்சி செய்த மாமணி.

மகாத்மாவின் வாழ்வானது பெரும் பொறுப்பு நிறைந்த வாழ்வு, பிறருக்காக தன்னை வருத்திக்கொண்ட வாழ்வு அழியாப் புகழ்பெற்றதுஇவர் வாழ்வு. இதனை சான்றாண்மை வழியிலே ஆராய வேண்டும்.

**கண்ணகியும் அகிம்சையும்**

“வையத்து வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்தின் வைக்கப் படும்.”

என்ற அடிப்படையிலே கண்ணகியின் வாழ்வு அமைகின்றது. தெய்வமே கண்ணகிக்கு அஞ்வதும், காய் கதிர்ச்செல்வன் அவர் கேட்ட கேள்விக்கு பதிலளிப்பதும், நெருப்புக்கடவுள் கண்ணகியின் ஏவல்படி பணிவதும், மதுராபதி தெய்வம் அவன் முனிவர அஞ்சி, அவன் பின்பாகவே செல்வதும் இன்ன பிற நிகழ்வுக்களுக்கெல்லம் காரணமாய் அமைவது கண்ணகி மேற்கொண்ட பொறுமை நலமே ஆகும். கோவலன் தன்னுடைய குணத்தை மாற்றிக்கொண்டு மீண்டும் கண்ணகியிடம் செல்வதற்கு காரணமும், கண்ணகி மேற்கொண்ட பொறுமையாகும்.

ஊடனடியாக மாற்றிவிட வன்முறை காரணமாய் அமையலாம். ஆனால் நிரந்தா தீர்வு அமைதியான பொறை நெறியே இது தான் கண்ணகியின் வாழ்வு காட்டிய வழி

**நிரந்தர மாற்றம்**

காந்தியின் வாழ்வினையும் இவ்வாறுதான் கணிக்க வேண்டும். அகிம்சை குணமும், நேர்வழி செல்லும் சத்தியமும் உடனடியாக வேண்டுமானால் பலன் தராமல் இருக்கலாம். சிறுதுளி பெருவெள்ளம் ஆவதுபோல் நிரந்தரமான மாற்றத்தை தரவல்லது அகிம்சையும், சத்தியமுமே. இவ்விரண்டையும் கடைபிடித்தால் ‘உற்றநோய் நோன்றால்’, உயிர்க்கு உறுகண் செய்யாமை’ ஆகிய நன்னெறி கூடிவரும்.

காந்தியடிகளின் அகிம்சை கொள்கைதான் அவரை உயர்த்தியது. இன்று அமெரிக்க கருப்பர் இனம் வரை இக்கொள்கையானது பரவிக்கிடக்கிறது. சோழ தேசத்தில் பிறந்து, பாண்டிய நாட்டில் புரட்சி செய்து, சேர நாட்டிலே தெய்வமாகிய கண்ணகியைப் போல, பாரத நாட்டிலே பிறந்து பிற நாட்டினருக்கும், தம் மக்களுக்கும் விடுதலை வாங்கித் தந்தார்.

அவருடைய இறப்பின் போது உலக நாடுகள் மன்றத்தில் அத்துணை நாட்டுக் கொடிகளும் அரைக் கம்பத்தில் பறந்தன.

**முடிவுரை**

சும காலகட்டத்திற்கு தேவையான அனைத்து கருத்துக்களும், நம்போடு ஒத்துப் போகக்கூடிய, நமது வாழ்க்கைக்கு தேவைப்படக் கூடிய அனைத்து கருத்துக்களும் தொல் இலக்கியங்களில் மலிந்து கிடக்கின்றன. ஆகையால் நமது இலக்கியங்களை பழமை என்று புறந்தள்ளாமல் படிந்து இன்றைய வாழ்விற்கு ஏற்றாற்போல பயன்படுத்துமாறு இக்கட்டுரை அமைந்துள்ளது.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 40. பாரதியும் பொதுவுடைமையும்

**முனைவர் ப.கலைவாணி,**
கௌரவ விரிவுரையாளர், தமிழ்த்துறை, அரசு கலை கல்லூரி(தன்னாட்சி), கோவை-18
DOI 10.5281/zenodo.10722539.

**Abstract:**

Our language, which is famous as a classical language, gives highness in words, new style, clarity in style and simplicity in text, firmness in thinking, and height in faith and makes us think of the nation, the deity, the language and the society. Mahakavi Bharati is a revolutionary and innovative person in language. In this way, we will see about the realization of Kanal as a solution voice in Bharathi's poem.

**Key Words : Bharathiyar – Poetry – Communism - Social**

## தோற்றுவாய் :

செம்மொழியாகத் திகழும் நம்மொழி சொல்லிலே உயர்வும், புதிய நடையும், நடையிலே தெளிவும் உரையிலே எளிமையும், சிந்தனையில் உறுதியும், நம்பிக்கையில் உயர்வும் அளித்து தேசத்தையும், தெய்வத்தையும், மொழியையும் சமுதாயத்தையும் நினைக்கச் செய்யும். நினைத்துப் போற்றச் செய்யும் வகையில் மொழியில் புரட்சியையும் புதுமையையும் புகுத்தியவர் மகாகவி பாரதி. அவ்வகையில் பாரதியின் கவிதையில் தெறித்த கனலை தீர்க்கக் குரலாய் மெய்யுறச் செய்தமையைப் பற்றி காண்போம்.

பாரதியை நாம் போற்றி வருவதற்குப் பல காரணங்கள் இருந்த போதிலும் அவையாவற்றிலும் தலையாய காரணம் அவன் ஒரு கவிஞன். அதிலும் இந்திய தேச விடுதலை இயக்கத்தோடு இணைந்து நின்று தேச விடுதலைக்கும், ஏன் மானிடச்சாதியின் விடுதலைக்கும் தனது கவிதைகளைப் படைக்கலமாய் ஆக்கிக் கொடுத்த தனிச்சிறப்பு மிக்க தேசிய மகாகவி என்பதேயாகும். அவனது தேசிய கவிதைகள் யாவும் நாட்டு மக்களுக்கு விடுதலை வேட்கையையும் விடுதலைக்காகப் போராடும் வேகத்தையும், தாகத்தையும் ஊட்டின. அதே சமயத்தில் அன்னியராட்சியை ஆயுதங்தாங்கி எதிர்த்துப் போராட வேண்டும் என்று அவனுக்கிருந்த வேட்கையை நேர்முகமாகவும், மறைமுகமாகவும் புலப்படுத்துகின்ற கவிதைகளும் அவற்றில் இடம் பெற்றே உள்ளன.

## ஒற்றுமையே வலிமை :

வந்தே மாதரம் என்றால் ‘தாயை வணங்குதல்” என்ற அர்த்தம் எனவேதான் பாரதி வந்தே மாதரம் என்ற கோஷத்தைத் தமிழ்நாட்டில் எதிரொலித்த போது,

**‘வந்தே மாதரம் என்போம் எங்கள்**
**மாநிலத் தாயை வணங்குதும் என்பபோம் வந்தே மாதரம்”**

என்று முதலடியில் அந்த கோஷத்தையும் இரண்டாம் அடியில் அதன் பொருளையும் சேர்த்துப் பாடினான். ஜாதி, மதம், வேறுகுலம் எதுவாயினும் ஒன்றே என்றும், மேலும் சகோதரத்துடன் எப்பொழுதும் வாழ வேண்டும் என்றும் கூறுகின்றார்.

'ஆயிர முண்டிங்கு ஜாதி - எனில்

**அன்னியர் வந்து புகலென்ன நீதி - ஓர்**
**தாயின் வயிற்றிற் பிறந்தோர் - தம்முட்**
**சண்டை செய்தாலும் சகோதர ரன்றோ?"** (பா.க. ப.125)

அந்நியரை எதிர்த்து போரிட ஒற்றுமைதான் மிகச்சிறந்த சஞ்சீவி என்கிறார். அதுவே சிறந்த ஞானம் என்கிறார்.

**'ஒன்றுபட் டாலுண்டு வாழ்வே - நம்மில்**
**ஒற்றுமை நீங்கி லனைவர்க்கும் தாழ்வே**
**நன்றிது தேர்ந்திடல் வேண்டும் - இந்த**
**ஞானம் வந்தாற் பின் நமக்கெது வேண்டும்,"** (பா.க. ப.125)

அடிமைத் தொழிலில் இருந்து விடுபட வேணடும். வாழ்ந்தால் முப்பது கோடி மக்களும் வாழ்வோம் இல்லையெனில் அனைவரும் வீழ்வோம் என்ற சுதந்திர உணர்ச்சியின் உச்சியில் கவிதையினைக் கனலாகத் தெரிக்கின்றான்.

**'தொல்லை இகழ்ச்சிகள் தீர - இந்தத்**
**தொண்டு நிலைமையைத் தூவென்று தள்ளி"** (பா.க. ப.126)
**'என்று தணியும் இந்தச் சுதந்திர தாகம்**
**என்று முடியும் எங்கள் அடிமையின் மோகம்"** (பா.க. ப.130)

பாரதியார் நாட்டு விடுதலைக்குப் பல பாடல்களை 'ஆனந்தமடம்" என்ற நாவலுக்குப் பங்கிம் சந்திரர் 1773-இல் வங்காளத்தில் நடத்த சன்னியாசிக்களின் கலகத்தை அடியொற்றியும், சிப்பாய் கலகத்தையும் மனதில் கொண்டே எழுதினார்.

சிலிர்தெழுந்த சிந்தனையாளன் :

வங்காளத்தில் நாட்டைக் காளிதேவியின் வடிவமாகவே கண்டு, சமய தேசியத்தின் அடிப்படையில் புரட்சிகர நடவடிக்கைகளை மேற்கொண்டு வந்த காலத்தில் சீக்கியர்கள் மலிந்த பஞ்சாபில் வீர வணக்கத்தை மேற்கொண்டு குரு கோவிந்தசிங்கின் புகழ்பாடி தீவரவாதிகள் புரட்சி இயக்கத்தையும் தேசிய இயக்கத்தையும் வழி நடத்தினார். பாரதியும் அவ்வாறே இறைவனை வணங்குவது போன்ற விடுதலை உணர்வையும் உள்வைத்து கவிதை வரைந்தார்.

**'பூமியினும் பொறை மிக்குடையாள் பெரும்**
**புண்ணிய நெஞ்சினள் தாய் - எனில்**
**தோமிழைப்பார் முன் நின்றிடுங்கால் கொடும்**
**துர்க்கை யனையவள் தாய்**

**நல்லறம் நாடிய மன்னரை வாழ்த்தி**
**நயம் புரிவாள் எங்கள் தாய் - அவர்**
**அல்லவராயின் அவரை விழுங்கிய பின்**
**ஆனந்தக் கூத்திடுவாள்** (பா.க. ப.69)

எனவே தான் தாயாக விளங்கும் அவள் தருணம் வந்தால் அன்னியரை அழிக்கப் பேயாகவும் மாறிவிடுவாள் என்று உணர்த்தும் விதத்தில்,

**'பேயவள் காண் எங்கள் அன்னை - பெரும்**
**பித்துடையாள் எங்கள் அன்னை"**
**என்றும் தொடங்கி,**
**'பாரதப் போரெனில் எளிதோ - விறல்**
**பார்த்தன்கை வில்லிடை ஒளிர்வாள்**
**மாரதர் கோடி வந்தாலும் கணம்**
**மாய்த்துக் குருதியில் திளைப்பாள்"** (வெறிகொண்ட தாய் பா.1,5)

என்று பாடி முடிக்கிறான் பாரதி. பாரதத்தாய் தனது புத்திரர்களான அர்ஜூனன் போன்ற வீரர்களின் வில்லிற் புகுந்து செயல்படுவாள். இதன் மூலம் அவளை எதிர்ப்பவர்கள் கோடிக்கணக்கில் இருந்தாலும் கூட அவள் அவர்களை மாய்த்து அவர்களது ரத்த வெள்ளத்திலே குதூகலத்தோடு நீந்திக் களிப்பாள் என்ற பாடுகிறான் பாரதி.

பாரதியின் குரல் வல்லமையை அவரது கவிதையே தீர்க்கமாய் உணர்த்தும்.

**'பாரததேசமென்று பெயர் சொல்லுவார் - மிகப்**
**பயங்கொல்லு வார் துயர்ப் பகை வெல்லுவார்"**

**என்ற கவிதையில் எதிர்கால பாரதம் வளமைமிக்கதாய் இருக்கும் என்பதை உணர்த்துவர்.**

**'வெள்ளிப் பனிமலையின் மீதுலவுவோம் - அடி**
**மேலைக் கடல் முழுதும் கப்பல் விடுவோம்**
**பள்ளித் தலமனைத்துங் கோயில் செய்குவோம் எங்கள்**
**பாரத தேசமென்று தோள் கொட்டுவோம்"**

**பொதுவுடையின் நிழல் :**

கடல் கடந்து வாணியம், விண்ணுலகம் சென்று கால் வைப்போம் என்று எத்துறையிலும் தமிழ் மொழியின் மேன்மை செழுமையுறும் என்று செப்பியதை உணர முடிகிறது. மனிதன் வாழ்வில் முன்னேற்றம் அடைய முதலில் அவன், அவனைச் சார்ந்த அச்சத்தை விட வேண்டும். பின்பு மனதில் உறுதி கொண்டு செயல்பட வேண்டும். மனதின்

உறுதி எண்ணத்தை வெற்றி அடையச் செய்யும் என்பதை தீர்க்கமாய் உணர்ந்து வெற்றி கண்டவன் பாரதி.

**'அச்சமில்லை அச்சமில்லை அச்சம் என்பதில்லை"**

எனக் கூறுகையில் பாரதி பிச்சை எடுத்தாலும், பொருளை இழந்தாலும் அந்நியர் அடக்குமுறையில் தாக்கினாலும்,

**'உச்சிமீது வானிடிந்து வீழுகின்ற போதிலும்**
**அச்சமில்லை யச்சமில்லை அச்சமென்ப தில்லையே"** (பா.க. ப.95)

பயமே இருக்கக் கூடாது என்பதில் திண்ணமாக இருக்கிறார். ஆகையால் விடுதலை அடைவோம் என்ற மன உறுதியினை கவிதையாய் புனைகையில்,

**'ஐயமுண்டு பயமில்லை மனமே - இந்த**
**ஜன்மத்திலே விடுதலை யுண்டு நிலையுண்டு"**

என்கிறார் இவ்வாறு சொல்லி விட்டு பின்பு முரசு கொட்டி ஆனந்த கூத்தாடுகின்றான்.

**'ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே**
**ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோ மென்றும்"**
**'ஐய பேரிகை கொட்டடா - கொட்டடா**
**ஐய பேரிகை கொட்டடா,"**

வருவதை முன் கூட்டியே உணர்ந்து சொல்லும் வல்லமை பெற்றவன். பாரதி ஓர் சித்தர் என்றே கூறினாலும் மிகையாகது. காரணம் மௌனவிரதம், உண்ணாநோன்பு மாதத்தில் இரு முறையேனும் மேற்கொள்பவன். அவற்றை அவன் கடைபிடித்ததால் தான் தன்னையும் உணர்ந்து பிறரையும் உணர்ந்து செயல்பட்டதால் அவன் வாக்கு கவியாகி மெய்யானது.

**'வல்லமை தாராயோ, - இந்த**
**மாநிலம் பயனுற வாழ்வதற்கே,"**
**என்று பாடிப்பயனடையச் செய்தான் பாரதி.**
**'எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா"**

என்று பாடுகையில் பாரதியின் கவிப்புலமை சிறுவயதிலேயே முதுமைத் தன்மையினை மொய்ம்புறத்தூண்டுவதை உணரலாம்.

சிறார்களுக்கு அறம் போதிப்பதில் நல்லுணர்வினை விதைத்தவன் பாரதி. பாப்பாபாட்டு, ஆத்திச்சூடி தகுந்த சான்று. காலையில் படிப்பு, புறஞ் சொல்லலாகாது, வேதம் வீரம் நிறைந்த நாடு, சாதிகள் இல்லையடி என்றுபல உரைத்து வாழும் முறைமையை திறனுடன் தீர்க்கமாய் உரைத்தவன் பாரதி. பிள்ளை உள்ளத்தில் பெருவீரத்தை பதியச் செய்தவர் பாரதி.

**'உயிர்களிடத்தில் அன்பு வேணும் - தெய்வம்**
**உண்மையென்று தான்றிதல் வேணும்"**
**'பாதகம் செய்பவரைக் கண்டால் - நாம்**
**பயம் கொள்ளலாகாது பாப்பா**
**மோதி மிதித்துவிடு பாப்பா**
**அவள் முகத்தில் உமிழ்ந்து விடு பாப்பா"**

என்ற பாடுகையில் வன்கொடுமையை எதிர்க்கும் வல்லமையை பிஞ்சுவயதில் தான் வரும். அதனை வைரமாய் பதிக்க வேண்டும் என்பதில் தீர்க்கமாய் இருந்தவன் பாரதி என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

**'வெளிப்புறபேசு குன்றென நிமிர்ந்து நில்**
**கேட்டிலுந் துணிந்து நில், கொடுமையை யெதிர்த்துநில்**
**தோல்வியிற் கலங்கேல்"**

என்று புதிய ஆத்திச்சூடியில் புதுமைக் குரலை புகுத்தியவன் பாரதி. அன்னை நிவேதிதாவைச் சந்தப்பின் 'குருஉபதேசம் பெற்ற பின்னர்தான் பாரதியின் எழுத்தில் விடுதலை உணர்வானது மேலும் வலுப்பெற்று கவிதைக்கனலாய் தீர்க்கமான குரலாய் உருப்பெற்றது. உலகம் சிறக்க வேண்டுமெனில் பெண் விடுதலை அடைய வேண்டும் என்று உறுதியாய் மொழிந்தவன்.

**'பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும்**
**பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்"**

என்றும்,

**'ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்**
**அறிவிலோங்கி யிவ்வையந் தழைக்குமாம்"**
**'எங்கும் சுதந்திரம் என்பதே பேச்சு - நாம்**
**எல்லோரும் சமம் என்பதுறுதியாச்சு"**

என்று எதிர்கால உலகத்தை மேன்மை அடையச் செய்தவன் பாரதி. அவன் கண்ட கனவு ஒவ்வொரு துறையிலும் நிறைவுற்றது.

இந்தியச் சமூகத்தில் காணப்படும் சாதிமுறையைக் கண்டித்தவர்களில் பாரதியார் முதன்மையானவர்.

**'ஏழை என்னும் அடிமை என்றும்**
**எவருமில்லை ஜாதியில்**
**இழிவு கொண்ட மனிதரெல்லாம்**
**இந்தியாவில் இல்லையே"**

என்று சாதி வேற்றுமை இயற்கையானது என்பதை எடுத்துரைத்து கனகலிங்கம் எனும் ஆதிதிராவிடர்க்குப் பூணூல் அணிவித்துப் புரட்சி செய்த பெருமைக்குரியவர்.

**'இனியொரு விதிசெய்வோம் - அதை**
**எந்நாளும் காப்போம்**
**தனியொரு வனுக்கு உணவிலை யெனில்**
**ஜகத்தினை அழித்திடுவோம்"**

என்ற கவிதைவரியில் உணர்ச்சிக் கனல் பாரதியின் லட்சியத்தினையும், பொதுவுடைமைச் சிந்தனையையும் தெளிவுறுத்துகின்றது.

நிறைவு:

பன்முகப் படைப்பாற்றலை உடைய இவரைக் கவிமணி 'பாட்டுக்கொரு புலவன் பாரதியடா" என்கிறார். பாரதி பரம்பரை என்ற ஒரு புதுக்கவிஞர். இனம் உருவாக வித்திட்டவர் பாரதி. பழைய மரபுகளை உடைத்துப் புதிய நெறியை அனைத்து வகையிலும் காட்டி மக்களுக்குப் புரியக்கூடிய முறையில் கவிதை எழுதி இலக்கியத்தைப் பொதுமைப்படுத்தியவர் பாரதி என்றால் மிகையாகாது.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 41. குறுந்தொகைப் பாடல்களில் சமத்துவச் சிந்தனைகள்

**ப.வேணி,**
பகுதிநேர முனைவர்பட்ட
ஆய்வாளர்
தமிழியற்புலம்,
மதுரை காமராசர்பல்கலைக்கழகம்,
மதுரை

**ஆய்வு நெறியாளர்**
முனைவர்**உ.கருப்பத்தேவன்,**
தலைவர்
இலக்கியத்திறனாய்வுத்துறை(பொறு.),
தமிழியற்புலம்,
மதுரை காமராசர்பல்கலைக் கழகம்,மதுரை

DOI 10.5281/zenodo.10726895.

**Abstract :**

Kurunthogai, one of the eight books of Palantami literature, contains four hundred and one songs apart from God's greeting. There are no songs in the mini-series. Only the five hymns of love have been recited by scholars with an emphasis on its themes of existence, weaving, separation, mourning, mourning, such as Mullai Kurinji Balai Marutham Neital.

## முன்னுரை

பழந்தமிழ் இலக்கியமான எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றான குறுந்தொகை என்னும் அகப்பாடல் நூலில் கடவுள் வாழ்த்து நீங்கலாக நானூற்றியொரு பாடல்கள் உள்ளன. குறுந்தொகையில் கைக்கிளை, பெருந்திணைப் பாடல்கள் இல்லை. அன்பின் ஐந்திணைப் பாடல்கள் மட்டுமே முல்லை குறிஞ்சி பாலை மருதம் நெய்தல் என அதனதன் உரிப்பொருள்களுக்கு இருத்தல், புணர்தல், பிரிதல், ஊடல், இரங்கல் - ஆகியவற்றிற்கு முக்கியத்துவம் கொடுத்துப் புலவர்களால் பாடப்பெற்றுள்ளன.

குறுந்தொகையில் முல்லைத் திணையில் 45பாடல்களும், குறிஞ்சித்திணையில் 147 பாடல்களும், பாலைத்திணையில் 90 பாடல்களும், மருதத்திணையில் 48 பாடல்களும், நெய்தல் திணையில் 71 பாடல்களும் காணப்படுகின்றன. குறுந்தொகைப் பாடல்களை 205 புலவர்கள் இயற்றியுள்ளனர் பத்துப் பாடல்களில் இயற்றிய புலவர்கள் பெயரில்லை. உரையாசிரியர்கள் தம் உரைமேற்கோள்களில் குறுந்தொகைப் பாடல்களையே மிகுதியாக எடுத்துக் காட்டியுள்ளார்.

"திணைவகையைச் சேர்ந்த இக்குறுந்தொகைப் பாடல்களில் ஆங்காங்கே சிறுசிறு குறிப்புக்களாக அக்காலத்தில் நிலவிய சமத்துவச் சிந்தனைகள் கோடிட்டுக் காட்டப் பெற்றுள்ளன. அவற்றைச் சுருக்கமாகவும் செறிவாகவும் விளக்கிக் கூறுவதே இந்த ஆய்வுக் கட்டுரையின் சாரமாக அமைகின்றது.

## திணைக் கலப்புக் காதல் வாழ்க்கையும் சமத்துவமும்

வ.சுப.மாணிக்கம் தம் 'தமிழ்க்காதல்' என்ற நூலில் கொல்லன் அழிசியார் என்னும் புலவர் இயற்றிய குறுந்தொகைப் பாடலைச் சுட்டிக் காட்டி அக்காலத்திலேயே திணைக் கலப்புத் திருமணங்கள் நடந்துள்ளன எனக் குறிப்பிட்டுள்ளார். (வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், பாரிநிலையம், சென்னை,1980,ப.129) கொல்லன் அழிசியார் என்னும் சங்கப்புலவர் இயற்றிய பின்வரும் பாடலில் முல்லை நிலத் தலைவிக்கும் குறிஞ்சிநிலத்

தலைவனுக்கும் நிகழ்ந்த திணைக் கலப்புக் காதல் மணம் கூறப்பெற்றுள்ளன. அப்பாடல் வருமாறு,

**"பனிப்புதல் இவர்ந்த பைங்கொடி அவரைக்**
**கிளிவாய் ஒப்பின் ஒளிவிடு பன்மலர்**
**வெருக்குப்பல் உருவின் முல்லையொடு கஞலி**
**வாடை வந்தன் தலையும் நோய்பொரக்**
**கண்டிசின் வாழி தோழி தென்டிரைக்**
**கடல்ஆழ் கலத்தின் தோன்றி**
**மாலை மறையும்அவர் மணிநெடுங்குன்றே" (குறுந்.240)**

இப்பாடலில் புதல் இவர்ந்த அவரைக் கொடியின்பு, முல்லைமலர் ஆகிய இரண்டினையும் கூறி, அவற்றைக் கண்டு வாடையால் வருந்தும் தலைவி முல்லை நிலத்தினள் என்பதைப் புலவர் உறுதிப்படுத்துகின்றார். அத்தலைவி தலைவனது மணிநெடுங்குன்றத்தைப் பார்த்து வருந்துவதிலிருந்து தலைவன் குறிஞ்சி நிலத்தவன் என்பதை அறிய முடிகிறது. இவ்வாறு குறுந்தொகைப் பாடலில் திணைக் கலப்புக் காதல் கூறப்பட்டிருப்பதைக் காணலாம்.

சங்ககாலத்தில் முல்லை குறிஞ்சி பாலை மருதம் நெய்தலென நிலங்களின் அடிப்படையிலேயே தலைவன்-தலைவியர் காதலும் திருமணமும் இல்லற வாழ்க்கையும் நிகழ்ந்த நிலையில், இப்பாடலில்தான் முல்லைநிலத் தலைவி - குறிஞ்சிநிலத் தலைவன் காதல் மணம் பேசப்பட்டுள்ளது. சங்க காலச் சமூக மக்களின் வாழ்க்கையில் இக்காலத்தைப் போன்று மரபுவழிப்பட்ட சாதி, இன, சமய வேறுபாடுகள் பிரிவினைகளும் இருந்ததாகத் தெரியவில்லை என்றும், ஒவ்வொரு நிலத்திலும் வாழ்ந்த நிலமக்களும் திணைமக்களும் வேறு வேறானவர்கள். அந்தந்த நிலமக்களுக்கு இடையேதான் பண்பாடு சார்ந்த காதலும் வாழ்க்கையும் இருந்ததை ஐந்திணைகளின் உரிப்பொருள்கள் கூறுகின்றன. இவற்றைத் தகர்க்கும் முயற்சியாகக் கொல்லன் அழிசியாரின் மேற்குறித்த குறுந்தொகைப் பாடல் அமைந்துள்ளது.

இக்காலத்தில் காதலால் கலப்புமணம் செய்து கொள்பவர்கள் சாதிய வெறியால் ஆணவக்கொலை செய்யப்படுவதை ஒப்புநோக்கி, இப்பாடல் உணர்த்தும் சமத்துவச் சிந்தனையின் முக்கியத்துவத்தை அறியவேண்டும்.

**காதலுக்குச் சாதி, மதம், நாடு, உறவுமுறை தேவையில்லை**

இக்காலச் சீர்திருத்தச் சிந்தனையாளர்கள் பலரும் சாதியைத் தகர்க்கவும், சனாதனத் தீண்டாமைக் கொடுமைகளைப் போக்கவும், மதம் சார்ந்த விடச் சிந்தனைகளைப் போக்கிட மதச்சார்பற்ற சமுதாயத்தைப் படைக்கவும், மனிதநேயத்தை வளர்த்தெடுக்கவும் காதல் சார்ந்த கலப்புத் திருமணங்களை ஆதரித்துக் குரல் கொடுத்து வருகின்றனர் இதற்குச்

சான்றாகச் செம்புலப் பெயனீரார் என்னும் புலவா் இயற்றிய பின்வரும் குறுந்தொகைப் பாடலைக் கூறலாம்.

**"யாயும் ஞாயும் யார் ஆகியரோ?**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்?**
**யானும் நீயும் எவ்வழி அறிதும்?**
**செம்புலப் பெயல் நீர் போல**
**அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே" (குறுந்.40)**

குறிஞ்சித்திணையில் அமைந்த இப்பாடலில் இயற்கைப் புணா்ச்சிக்கும் பின்னா் தலைவன் தன்னைப் பிரிவான் என்றஞ்சிய தலைவியின் மனவேறுபாட்டைக் குறிப்பால் அறிந்த தலைவன், அத்தலைவியை ஆற்றுவிப்பதற்காக இவ்வாறு கூறுகின்றான்.

அவன் தலைவியிடம், 'என் தாயும் நின்தாயும்' என்ன உறவினா் என் தந்தையும் நின்தந்தையும் எம்முறையில் உறவுடையவா்கள்? யானும் நீயும் எக்குடிவழியைச் சோ்ந்தவா்களாக (சாதி, இனம், குலம், கோத்திரம், மதம் முதலியன) அறிதல் கூடும்? செம்மண் நிலத்தில் பெய்யும் மழைநீரைப்போல நம்முடைய நெஞ்சங்கள் தாமாகவே இயல்பாகவே உள்ளம் ஒன்றிக் கலந்தன. நம்மை யாராலும் எதனாலும் பிரிக்க இயலாது எனக் கூறி ஆற்றுப்படுத்துகின்றனா்

ஊழ்வினையால் தோன்றிய அவா்களது காதலுறவு, பிரிவின்றி எந்நாளும் தொடரும் எனக்கூறும் தலைவன், தலைவியின் பிரிவச்சத்தைப் போக்குவதாக உள்ளது. செம்மண்நிலத்தில் பெய்தமழைநீர், அம்மண்ணில் கலந்து அதன் மணத்தையும் சுவையையும் பெற்று, தன் தன்மைமாறி ஒன்றுபடுவதைப் பொல இருவா் உள்ளமும் தம்முள் கலந்து ஒன்றாயின எனத் தலைவன் தலையிடம் கூறுகின்றான். இக்காதலில் சாதி,மதம், மரபு சார்ந்த உறவுமுறைக் குறுக்கீடுகள் ஏதுமில்லை. ஆண்-பெண் என்ற பாலுணா்வு பேதம் மட்டமே உள்ளது. 'எதிர் பாலினரை கவா்ந்திழுப்பதே காதல்' (An attraction of the opposite sex) என்னும் உயரின் இயற்கை உணா்வு சார்ந்த காதலில் இரு உயிர்களின் உணா்வுகள் ஒன்றும் சமத்துவமே மேலோங்கி நிற்கின்றது.

காதல்களின் நெஞ்சு கலந்தமைக்குச் செம்புலப் பெயல் நீரை உவமை கூறிய சிறப்பால் இப்பாடலை இயற்றிய புலவா்'செம்புலப்பெயல் நீரார்' என்னும் பெயரைப் பெற்றார். இப்புலவரின் இயற்பெயரைக் கூட அறிய முடியவில்லை. 'நெஞ்சம்கலந்தன' என்பது சாதி, இன வேறுபாடுகளை நீக்கிய உள்ளப்புணா்ச்சியாகும். மழை பெய்வதற்கு அந்நிலம் எம்முயற்சியையும் மேற்கொள்ளதபோதும், நிலம் குளிர்ந்த வழி ஆண்டுச் செல்லும் மேகமும் ஒருவாறு குளிர்ந்து மழையைத் தரும். தலைவன் ஊழ்வினைப்பானால் தலைவியைப் பெற்று இன்புற்றமைக்கு இந்த உவமை கூறப்பெற்றுள்ளது.

மழைய ஏற்கும் செம்புலத்தின் நெகிழ்ச்சி(flexibility) தலைவன் அன்பினை ஏற்ற தலைவிக்கு உவமையாயிற்று. மேகம் வானிலும், செம்புலம் தரையிறுமாக வெவ்வேறிடங்களில் இருந்த போதும் உரியகாலம் வரும்போது செம்புலமானது மழைநீரைப் பெறுகின்றது. வெவ்வேறிடங்களைச் சோந்த இத்தலைமக்களும் எவ்வித இரத்த உறவும் இனஉறவும் சாதிய மற்றும் செந்த உறவுகளும் இல்லாமல் ஊழினால் விதிக்கப்பட்ட காலத்தில் இணைந்தனா் இந்த 'ஊழ்' தான் இப்பாடலில் சமத்துவச் சிந்தனையின் ஊற்றுக் கண்ணாக உள்ளது. இந்த ஊழினைச் சமயப் சார்பில் கொள்ளாமல் 'மனித இயற்கை' எனக் கொண்டால் சமத்துவச் சிந்தனைகள் மனித உள்ளங்களில் தானாகத் தோன்றிவிடும்.

**வேதங்களில் கூறப்படும் "எழுதாக் கற்பு"**

'வேதங்கள் ஆண்-பெண் சோக்கைக்கும், ஆண்-பெண் சமத்துவத்திற்கும் எதிரானவை. அவை ஆசியச் சிந்தனைகள்' என்னும் கருத்தினை பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணன் என்னும் புலவா் தாம் இயற்றிய குறுந்தொகையின் குறிஞ்சித்திணைப் பாடலில் மறுத்து, வேதங்களை "எழுதாக் கற்பு" எனப் போற்றியுள்ளார். அப்பாடல் வருமாறு,

**"பார்ப்பன மகனே! பார்ப்பன மகனே!**
**செம்பூ முருக்கின் நல்நார் களைந்து**
**தண்டொடு பிடித்த தாழ் கமண்டலத்துப்**
**படிவ உண்டிப் பார்ப்பன மகனே!**
**எழுதாக் கற்பின் நின் சொலுள்ளும்**
**பிரிந்தோர்ப் புணர்க்கும் பண்பின்**
**மருந்தும் உண்டோ மயலோ இதுவே" (குறுந்.156)**

இப்பாடல் "கழறிய பாங்கற்குக் கிழவன்அழிந்து கூறியது" என்றும் துறைப்பகுப்பில் அமைந்துள்ளது. அந்தணனாகிய பாங்கன், அரசனாகிய தலைவனிடம் 'நீவிர் கூறியது வேதத்தால் விளக்கிக் கூறப்படும் மயக்கம்' என்கின்றான். தலைவன் அப்பாங்கனிடம் வேதத்தில் முற்பிறப்பில் பிரிந்தவரை, இப்பிறப்பில் கூட்டுவிக்கும் உபாயம் இருக்குமாயின் அது வேதத்தால் விளக்கப்பட்ட மயக்கம் எனக் கூறுதல் பொருந்தாது என்கிறான்.

பிரிந்தோரைச் சோ்த்து வைக்கும் மொழிகள் வேதத்துள் 'இதோபதேசம்' எனக் கூறபப்பெற்றுள்ளது. அவை மருந்து போல் பயன் தருவன. தலைவன், தான் விரும்பிய கதலி பிறவிகள் தோறும் தன்னுடன் வருபவன் எனக்கூறி, அவளின்றித் தான் வாழ முடியாது என்கின்றாள்.

புணாந்தோரைப் புணாக்கும் மந்திரங்கள் வேதத்தில் 'இதோபதேசம்' பகுதியில் உள்ளன. அவை புணா்சிக்குரிய தடைகளை நீக்கி உதவுவதால் வேதத்தின் அம்மொழிகள் மருந்து போன்றன என்கின்றான் தலைவன். இதில் ஆண்-பெண் சோ்க்கை குறித்த சமத்துவச் சிந்தனைகள் இடம்பெற்றுள்ளன.

**குறுந்தொகைப் பாடல்களில் பிற சமத்துவச் சிந்தனைகள்**

தேவருலகம் இன்பமே நிறைந்த இன்பியல் உலகமாகும். ஆனால் இமண்ணுலகில் தலைவியோடு கூடிவாழும் இல்லறவாழ்க்கை இன்பமும் துன்பமும் நிறைந்ததாகும். இல்வாழ்க்கையில் தலைவி தலைவனுடன் இன்பம் நுகர்வதோடு, துன்பத்திலுும பங்கேற்க வேண்டும். தலைவன் பிரிவு துன்பம் தரினும், அவன் நினைவில் வாழும் தலைவிக்கு அது இன்பமாகவே இருக்கும். பிரிவுத்துயரம் தலைவன்-தலைவியர் இருவருக்குமே சமமானதே ஆகும். ஆதலால் பிரிந்த தலைவன் தலைவியுடன் அன்புடையவனாகவே இருப்பான். இதுவே அன்புடைய ஆண்-பெண் இருவரின் சமத்துவச் சிந்தனையாகும். இத்தகைய தலைவியைக் கபிலா்தம் குறிஞ்சிப் பாடலில் பின்வருமாறு கூறியுள்ளார்.

**"கறிவளா் அடுக்கத்து ஆங்கண் முறியருந்து**
**குரங்கு ஒருங்கிருக்கும் பெருங்கல் நாடன்**
**இனியன் ஆகலின் இனத்தின் இயன்ற**
**இன்னமையினும் இனிதோ**
**இனிதெனப் படூஉம் புத்தேள் நாடே" (குறுந்.288)**

இப்பாடலில் தலைவனிடம் அன்பும் சமத்துவ உரிமையும் கொண்ட தலைவியின் இல்லறச் செம்மையும் கூறப்பட்டுள்ளது.

ஆளுமைமிக்க தலைவன்/ஆண்மகன் தன்முயற்சியால் பொருளீட்டி மற்றவா்களுக்கு ஈந்து அதனால் இன்புற வேண்டும். முன்னோர் தேடிய செல்வங்களை அழிக்கக் கூடாது.

**"உள்ளது சிதைப்போர் உளர்எனப்படார்**
**இல்லோர் வாழ்க்கை இரவினும் இனிவு" (குறுந்.283:1-2)**

நன்றும் தீதும் கூறுபடுத்தலை உடையோராகிய திறவோர் செய்யும் செயல்கள் அறத்தொடு பொருந்தியனவாக இருக்கும். அருளொடு பொருந்திய அவன் செயல்கள் சுற்றத்தைக் கொண்ட மக்களுக்குப் பற்றுக்கோடும் ஆகும் சமத்துவச் சிந்தனை கொண்ட தலைவனைக் குறுந்தொகைத் தோழி சிறப்பித்துக் கூறுகின்றாள்.

**"எழில்மிக உடையது; ஈங்கு அணிப்படூஉம்:**
**திறவோர் செய்வினை அறமது ஆகும்**
**கிளையுடை மாந்தர்க்குப் புணையுமார்" (குறுந்.247:1-3)**

கபிலா் இயற்றிய மற்றொரு குறிஞ்சித்திணைப் பாடலில் தோழி களவுக்காலத்தில் குறையிரந்து வேண்டிய தலைவனிடம் தலைவியைத் தந்து இன்புறுத்திய நன்றியை, தான் கேடுற்ற காலத்தில் பெற்று மகிழ்ந்த உதவியை அரசுக்கட்டிலில் அமரும் சிறப்புப் பெற்ற மன்னனைப் போல மறந்து விடக்கூடாது. நன்றி மறவாமல் அவளை மணந்து கொள்ள வேண்டும் என்கின்றாள்.

E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

**"கெட்ட இடத்து உவந்த உதவி, கட்டில்**
**வீறு பெற்று மறந்த மன்னன் போல**
**நன்றி மறந்து அமையாய் ஆயின்" (குறுந்.225:3-5)**

குறுந்தொகையில் சாத்தன் என்னும் புலவா் இயற்றிய நெய்தல் பாடலில் தலைவனது பரத்தையிற் பிரிவில் வருந்திய தோழி, வறுமையடைந்து இரந்தார்க்கு அவா்வேண்டியதைக் கொடுப்பது அறநெறியின்பாற்படும். அவ்வாறே தலைவன் குறையிரந்தபோது அவன் வேண்டிய இன்பத்தைக் கொடுத்து உதவினாள். கொடுத்தவா் வறுமையுற்றால் கொடைப்பொருளை மீண்டும் தன்னிடம் தரவேண்டுதல் அறமற்றது. சமத்துவம் இல்லை. தமிழ் மரபும் இல்லையெனத் தலைவனிடம் கூறுகின்றாள்.

**"இடுக்கண் அஞ்சி இரந்தோர் வேண்டிய**
**கொடுத்து 'அவைதா' எனக்கூறலின்,**
**இன்னாதோ நம்இன் உயிர் இழப்பே?" (குறுந்.349:5-7)**

வறுமையுற்றோர்க்கு கொடுத்து உதவுதல் அன்புடைமையின் பாற்படும். அதில் அருளும் கலந்திருக்கும். வறுமையில் மெலிதல் கூர்ந்தார்க்கும், தலைவன் அணியின்றி மெலிதல் காதல் தலைவிக்கும், கோடையில் நீரின்றி மெலிதல் ஆறுகளுக்கும் பொதுவானவை. இவற்றைப் போக்குவதே சமத்துவமாகும்.

**"நல்கின் வாழும் நல்கூர்ந்தார் வயின்**
**நயனிலா் ஆகுதல் நன்றென உணா்ந்த**
**குன்ற நாடன் தன்னினும்......" (குறுந்.327:1-3)**

அருள் செய்வதற்கு உரியவனாகிய தலைவன், அருள்செய்யப்படுவதற்கு உரிய காதல் தலைவியைப் பிரிந்து செல்வதற்குரிய பாலை வழியில் பொருளைத் தேடிச் சென்றான். ஆதலால் இந்த உலக வாழ்க்கைக்குரிய பொருள்தான் (Material) அனைவரும் உயர்வாக ஏற்கும் பொருளாகும். யாவரும் உயா்வாக ஏற்காதது அவ்வுலக வாழ்க்கைத் தேவையான அருளாகும் எனத் தலைவி தோழியிடம் கூறுகின்றாள்.

**"பெருள்வயிற பிரிவார் ஆயின், இவ்வுலகத்துப்**
**பொருளே மன்ற பொருளே**
**அருளே மன்ற ஆரும் இல்லதுவே" (குறுந்.174:5-7)**

இவ்வாறே குறுந்தொகைப் பாடல்களில்,

**"பொருள்வயிற் பிரிவோர் உரவோர் ஆயின்**
**உரவோர் உரவோர் ஆக!**
**மடவம் ஆக மடந்தை நாமே" (குறுந்.20:2-4)**

**"இம்மை மாறி மறுமை யாயினும்**

**நீயாகியர் எம் கணவனை;**

**யானாகியர் நின்னெஞ்சு நேர்பவளே" (குறுந்.49:3-5)**

**"இருவேம் ஆகிய உலகத்து**

**ஒருவேம் ஆகிய புன்மை நாம் உயற்கே" (குறுந்.57:5-6)**

**"ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கு இல்லெனச்**

**செய்வினை கைம்மிகு எண்ணுதி" (குறுந்.63:1-3)**

**"நில்லாமையே நிலையிற்று ஆகலின்**

**நல்லிசை வேட்ட நயனுடைய நெஞ்சின்**

**கடப்பாட்டாளனுடைய பொருள்" (குறுந்.143:3-5)**

எனச் சமத்துவச் சிந்தனைகள் சிறுசிறு குறிப்புகளாகப் பயின்று வந்துள்ளன. இவற்றை விவரித்து எழுதினால் கட்டுரை விரியும்.

**நிறைவுரை**

பழந்தமிழ் அகநூலாகிய குறுந்தொகைப் பாடல்களில் அகச் செய்திகளுக்கிடையே அகமாந்தா் கூற்றுக்களில் அறம் சார்ந்தும், சமத்துவச் சிந்தனைகள் சார்ந்தும், வறுமையின் கொடுமை குறித்தும் குறிப்புக்களாக வெளிப்பட்டுள்ளன. எல்லார்க்கும் எல்லாம்' 'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்னும் சமத்துவச் சிந்தனைகள் சங்க காலத்திலேயெ இருந்தன என்பதற்க இவை சான்றளிக்கின்றன.

**பயன்பட்ட நூல்கள்**

- உ.வே.சாமிநாதயைா் (பதி.ஆ) குறுந்தொகை மூலமும் உரையும், தியாகராச விலாச வெளியீடு, சென்னை,1962.
- பொ.வே.சோமசுந்தரனார்(உரை.ஆ), குறுந்தொகை மூலமும் உரையும், கழக வெளியீடு, சென்னை, 1978.
- மு.சண்முகம்பிள்ளை, குறுந்தொகை மூலமும் உரையும், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூா் 1994.
- வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், பாரிநிலையம், சென்னை,1980.
- மு.வரதராசன், குறுந்தொகை விருந்து, பாரிநிலையம், சென்னை,1956.
- நா.செயராமன், தமிழ் இலக்கிய நெறிகள், குமரன் பதிப்பகம், மதுரை,1978.
- ரா.இராகவையங்கார், குறுந்தொகை விளக்கம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகா் 1983.
- ஆ.வே.இராமசாமி, குறுந்தொகை காட்டும் வாழ்வு, மணிவாசகா் நூலகம், சிதம்பரம், 1984.

# 42. பாரதி, பாரதிதாசன் பாடல்களில் பெண், சாதியச் சமத்துவச் சிந்தனைகள்

உ.ச.எ.முகிலன்,

உதவிப் பேராசிரியர் தமிழ்த்துறை (சுயநிதிப்பிரிவு), சைவ பானு சத்திரிய கல்லூரி, அருப்புக்கோட்டை.

DOI 10.5281/zenodo.10723850

**Abstract :**

The literature from Sangam period to this period is full of records about feminism and caste equality ideas. Those records highlight the life environment, women's education, marriage, oppression against women and caste inequalities in the respective periods. In this way Bharathi and Bharathidasan were the first to give voice to women's slavery and anti-caste through poetry. This article explores the ideas of women and caste equality found in such songs of Bharathi and Bharathidasan.

**Key Words : Modern Literature – Bharathi – Bharathidasan - Equality**

சங்க காலம் தொட்டு இக்காலம் வரையிலான இலக்கியங்களில் பெண்மை, சாதிய சமத்துவச் சிந்தனைகள் குறித்தான பதிவுகள் நிரம்ப இருக்கின்றன.அப் பதிவுகள் அந்தந்த காலகட்டங்களில் வாழ்வியல் சார்ந்த சூழல்,பெண் கல்வி, திருமணம்,பெண்களுக்கு எதிராக நிகழ்ந்தஅடக்குமுறைகள், சாதிய ஏற்றத்தாழ்வுகளை எடுத்துரைக்கின்றன. அவ்வகையில் கவிதையின் வழி பாரதியும் பாரதிதாசனும் பெண்ணடிமைத் தனத்திற்கும், சாதிய எதிர்ப்பிற்கும் குரல் கொடுத்தவர்களில் முதன்மையானவர்கள் ஆவர் அத்தகைய பாரதி, பாரதிதாசன் பாடல்களில் காணலாகும் பெண், சாதியச் சமத்துவச் சிந்தனைகளை ஆராய்வதாக இக்கட்டுரை அமைகின்றது.

பெண்ணியம்:

பெண் மையம் சார்ந்த சிந்தனைகளை ஆங்கிலத்தில் Feminism என்றும் தமிழில் பெண்ணியம் என்றும் கூறுவர். பெண்ணியம் இன்று தனி ஒரு துறையாக வளர்ந்து வருகின்றது. பெண்ணுக்கு எதிராக நிகழக்கூடிய எல்லாச் சிக்கல்களையும் நீக்க முயல்வதே பெண்ணியத்தின் அடிப்படை ஆகும். ஆக்ஸ்போர்டு ஆங்கில அகராதி பெமினிசம் என்ற சொல்லுக்கு பெண்களின் தேவையை நிறைவேற்ற அவர்கள் சார்பாக வாதாடுவது போராடுவது என்று பொருள் கூறுகிறது.

பெண் கல்வி

கல்வி கற்பதன் மூலமாக ஒரு குடும்பமும் சமுதாயமும் முன்னேற்றம் அடையும்.பெண் கல்வி கற்கும் போது இவ்வுலகம் சிறந்து விளங்கும் வேற்றுமை நீங்கும் என்பதை,

"பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான்
புவி பேணி வளர்த்திடும் ஈசன்

மண்ணுக்குள்ளே சில மூடர்

நல்ல மாதரறிவைக் கெடுத்தார்"

என்கிறார் பாரதியார்.மேலும்

"பெண்கள் அறிவை வளர்த்தால்

வையம் பேதமை யற்றிடும் காணீர்"

என்று பெண்கல்வியின் முக்கியத்துவத்தை எடுத்துரைக்கிறார்.

பெண்ணை மதிக்க வேண்டும்.அவளுக்கு மேலே ஒரு கடவுளும் இல்லை என்பதை

"தாய்க்கும் மேல் எங்கோர் தெய்வம் உண்டோ"

"பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும்

நற்றவ வானிலும் நனி சிறந்தனவே"

என்று குறிப்பிடுகிறார்.

பெண் சுதந்திரமாக இருப்பதற்கு அவளுக்குக் கல்வி அவசியம் தேவைப்படுகின்றது. பெண் கல்வியின் முக்கியத்துவத்தை உணர்ந்த பாரதி

"பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும்

பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்"

என்று குறிப்பிடுகிறார்.

பாரதியின் தாசனாக விளங்கிய பாரதிதாசனும்

"பெண்களுக்கு கல்வி வேண்டும் நல்ல குடித்தனம் பேணுவதற்கே"

என்றும் முழக்கமிட்டார்.

"செறிவும் நிறைவும் செம்மையும் செப்பும்

அறிவும் அருமையும் பெண்பாலன"

என்று தொல்காப்பியம் பெண்ணின் பண்புகளாக குறிப்பிடுகின்றது. இதில் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னதாகவே அறிவு பெண்மையின் பேராயுதம் என்று சொல்லப்பட்டு இருப்பதை ஆய்ந்தறிய வேண்டும்.

"கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்

மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்

விருந்து புறந் தருதலும் சுற்றும் ஓம்பலும்

பிறவு மன்ன கிழவோள் மாண்புகள்"

என்று பெண்ணுக்கான கடமைகள் தொல்காப்பியம் கற்பியலில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

"ஆணும் பெண்ணும் நிகரென கொள்வதால்
அறிவில் ஓங்கி வையம் தழைக்குமாம்"

என்று இவ்வையம் சிறப்புற ஆணும் பெண்ணும் சரிநிகர்சமானமாக எவ்வித ஏற்றத்தாழ்வும் இன்றி வாழ வேண்டும் என்று குறிப்பிடுகிறார்.

"தெய்வம் தொழாள் கொழுநன் தொழுதழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை"

என்று வள்ளுவர் பெண்மையின் சிறப்பை எடுத்துரைத்தாலும் பாரதியோ

"கற்பு நிலை என்று சொல்ல வந்தால்
இரு கட்சிக்கும் அஃது பொதுவில் வைப்போம்"

ஆணெல்லாம் கற்பை விட்டு தவறு செய்தால் அப்போது பெண்மையும் கற்பழித்திடாதோ காணுகின்ற காட்சி எல்லாம் மறைத்து வைத்து

"கற்பு கற்பு என்று கதைக்கின்றாரே
நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட பார்வையும்
நிலத்தில் யாருக்கும் அஞ்சாத நெறிகளும்
நிமிர்ந்த ஞானச் செருக்கும் இருப்பதால்
செம்மை மாதர் திரும்புவது இல்லையாம்"

என்கிறார்.

"அச்சமும் நாணம் நடனும் முந்துறுத்த
நிச்சமும் பெண்பார்க்கு உரிய வென்ப"

எனத் தொல்காப்பியர் எடுத்துரைக்கின்றார். ஆனால் அச்சமும் நாணமும் நாய்கட்க்கு வேண்டுமாம் என்ற குரல் இருபத்தோராம் நூற்றாண்டில் ஓங்கி ஒலிப்பதைக் காண முடிகிறது.

"திறமை கொண்ட தீமையற்ற
தொழில் புரிந்து யாவரும்
தேர்ந்த கல்வி ஞானம் எய்தி
வாழ்வோம் இந்த நாட்டிலே"

என்று பெண்ணுக்கான கல்வி ஞானம் குறித்து எடுத்துரைத்து, தேடு கல்வி இலாதொரு ஊரை தீயினுக்கு இறையாக்கி அளிக்க சொல்கிறார். மேலும்,

"மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையை கொளுத்துவோம்"

என பெண்ணுக்கு எதிராக நிகழக் கூடிய மடமைச் செயல்களை வேரோடு அறுப்போம் என்கிறார்.

சாதிய எதிர்ப்பு

"சாதி என்பதற்குத் தற்காலத் தமிழ்ச் சொல்லகராதி குலம், மரபு, இனம் எனப் பொருளுரைக்கிறது. மேலும் குலம் என்பதற்குச் சாதி, கூட்டம், இனம், குடி எனப் பொருள் தருகிறது.

செந்தமிழ் அகராதி, "குலம், பிறப்பு, இனம், திரள். சாதிக்காய், பிரம்பு என்று பொருள் தருகின்றது. தமிழ்ச் சமூகம் பன்னெடுங்காலமாக சாதியத்தால் மதத்தால் கட்டுண்டுள்ளது.

பாரதியார் கவிதைகளில் சாதி

மனிதர்கள் வெவ்வேறு தொழில் செய்தாலும் அதில் ஒற்றுமையுடன் நாம் செயல்படல் வேண்டும். ஒரு குடும்பம்போல வாழ வேண்டும் என்கிறார் பாரதியார்.

"ஒற்றைக் குடும்பந் தனிலே பொருள்
ஓங்க வளர்ப்பவன் தந்தை
மற்றைக் கருமங்கள் செய்தே
மனைவாழ்ந்திடச் செய்பவள் அன்னை
ஏவல்கள் செய்பவர் மக்கள்
ஏற்றத்தாழ்வு கண்டு வாழும் முறைமை கூடாது"

என்று குறிப்பிடுகின்றார்.

"சாதிப்பிரிவுகள் சொல்லி அதில்
தாழ்வென்றும் மேலென்றும் சொல்வார்
நீதிப்பிரிவுகள் செய்வார் அங்கு
நித்தமும் சண்டைகள் செய்வார்
சாதிக் கொடுமைகள் வேண்டா அன்பு
தன்னில் செழித்திடும் வையம்"

என்கின்றார். இவ்வாறு சாதியைக் காரணம் காட்டி, நீதிப் பிரிவுகள் செய்து. சண்டைகள் வளர்க்கும் தன்மை உடையவர்களைச் சாடுகின்றார். அன்பு என்ற ஒன்றில்தான் இந்த வையகம் செழிக்கும் என்பது பாரதியின் சிந்தனையாகும்.

சாதிப்பிரிவுகளைத் தமக்குச் சாதகமாக்கிக் கொண்டு பிரித்தாளும் சூழ்ச்சியில் வாழ்வோரை,

"ஆயிரம் உண்டிங்கு சாதி எனில்
அன்னியர் வந்து புகலென்ன நீதி ஓர்
தாயின் வயிற்றிற் பிறந்தோர் தம்முள்
சண்டை செய்தாலும் சகோதரன்றோ?"

என்று கவிதையின்வழிச் சாடும் பாரதியார்,

"எல்லாரும் ஒரு குலம் எல்லாரும் ஓரினம்"

என்ற சமத்துவச் சிந்தனையை விதைக்கின்றார்.

மேலும், ஔவை மூதாட்டி சொல்லியதுபோல் ஆண்சாதி, பெண்சாதி என்ற இரண்டைத் தவிர வேறில்லை என்பதை "சாதி இரண்டொழிய வேறில்லை" என்றுரைக்கின்றார்.

பாரதிதாசனின் சாதிய எதிர்ப்பு

"உலகினில் சாதிகள் இல்லை - என்
உள்ளத்தில் வேற்றுமை இல்லை
கலகத்தைச் செய்கின்ற சாதி - என்
கைகளைப் பற்றி இழுப்பதும் உண்டோ?

என்று ஒரு பெண் சாதியைப் பற்றி எடுத்துரைப்பதாக பாரதிதாசன் குறிப்பிடுகிறார். இப்படிக் கலகத்தைத் தூண்டும் சாதியை ஒழிப்பது மக்களது கடமை என்பதையும் அவர் தெளிவாகப் பதிவு செய்கின்றார்.

"பிறிவியில் உயர்வும் தாழ்வும் சொல்மடமை இந்தப்
பிழை நீக்குவதே உயிர் உள்ளாரின் கடமை"

என்று தமிழர்க்குரிய கடமையை வலியுறுத்தும் பாரதிதாசன் தீண்டாமையை விமர்சனம் பேசுகின்றார்.

"தீண்டாமை என்னும் ஒருபேய் - இந்தத்
தேசத்தில் மாத்திரமே திரியக் கண்டோம் - எனில்
ஈண்டு பிறநாட்டில் இருப்போர் - செவிக்கு
ஏறியதும் இச்செயலைக் காறி உமிழ்வார்"

என்று தீண்டாமை பற்றி எடுத்துரைக்கின்றார். தீண்டாமையைப் பேய் என்றும் அது இந்தத் தேசத்தில் மட்டும்தான் இருப்பதாகவும், இவ்வாறு தீண்டாமை இருப்பதை பிறநாட்டினர் கேட்டால் நம்மைக் காறி உமிழ்வர் என்று கோபத்துடன் கூறுகின்றார். பிற நாடுகளில் இல்லாத இத்தகைய சிந்தனையினையும் நடைமுறையினையும் நாம் பின்பற்றாது விடல் வேண்டும் என்றுரைக்கின்றார்.

சாதிகளால் பிளவுபட்டுச் சண்டையிட்டுச் சீரழியும். மனித சமுதாயத்தைவிட, புறாக்களின் வாழ்க்கை எவ்வளவோ மேலாகத் தெரிகிறது கவிஞனுக்கு. மனிதனாகப் பிறந்த ஒருவனோடு உடன் அமர்ந்து சாப்பிடுவதுகூடத் தீட்டு என்று மனிதக் கூட்டத்தைக் கண்டு பாரதிதாசன் மனம் புயலாகிறது. அது புறாக்களின் வாழ்க்கை வழி வீசுகிறது.

"இட்டதோர் தாமரைப்பூ
இதழ்விரித்திருத்தல் போலே
வட்டமாய்ப் புறாக்கள் கூடி
இரையுண்ணும், அவற்றின் வாழ்வில்
வெட்டில்லை; குத்துமில்லை;
வேறு வேறு இருந்து அருந்தும்
கட்டில்லை; கீழ் மேல் என்னும்
கண்மூடி வழக்கமில்லை

என்று மானுடத்தின் வாழ்க்கையில் காணப்படும் கண்மூடி வழக்கங்கள் யாவும் மண்மூடிப் போக வேண்டும் என்று எடுத்துரைக்கின்றார்.

**முடிவுரை**

பன்னெடுங்காலமாக சாதி, மதத்தால் கட்டுண்டு கிடக்கும் தமிழ்ச்சமூகந்தனையும் பெண்ணுக்கு எதிராக நிகழும் அடக்குமுறைதனையும் பாரதியும் பாரதிதாசனும் தன் கவிதைத்திறத்தால் தட்டி எழுப்புவதை இக்கட்டுரை வாயிலாக அறிந்துகொள்ள முடிகிறது. மேலும், பெண்ணுக்கு எதிரான போக்குநீங்குவதற்கும், சாதியம் அழிவதற்கும் எல்லோரும் அறிவினில் சிறப்புறுதல் வேண்டும். கல்வி மட்டுமே அம்மாற்றத்தைக் கொண்டு வரும் என்பதையும் இருவாதம் கவிதை வாயிலாக அறிந்துகொள்ள முடிகிறது.

**துணைநின்ற நூல்கள்**

1. பாரதியார் கவிதைகள், திருமகள் நிலையம், சென்னை.
2. பாரதிதாசன் கவிதைகள், திருமகள் நிலையம், சென்னை.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 43. சுற்றந்தழால்

முனைவர் லெ.அலமேலு
தமிழ்த்துறைத் தலைவர், ஏல விவசாயிகள் சங்கக் கல்லூரி,போடி நாயக்கனூர் - 625513.

DOI 10.5281/zenodo.10728903.

**Abstract :**

In today's world, every human being is dependent on society. A person is respected by others only if he succeeds through his efforts and acts as a part of the society. A person has to depend on the society in which he lives and the people around him, friends etc. It has been well said by Valluva that one should live with care for one's surroundings as applicable to all situations. Valluvar has explained the nature of the environment, the benefits of the environment and the methods to maintain the environment in the authority of the environment.

**Key Words**: Valluvar – Ethic Literature - Environment

இன்றைய உலகில் ஒவ்வொரு மனிதனும் சமுதாயத்தைச் சார்ந்தே வாழ வேண்டிய கட்டமைப்பில் இருக்கிறான். தன்னுடைய முயற்சியினால் ஒருவன் வெற்றி பெற்றாலும் சமுதாயத்தின் அங்கமாகச் செயல்பட்டால் மட்டுமே மற்றவர்களால் மதிக்கப்படுகிறான். ஒருவன் தான் வாழ்ந்து கொண்டிருக்கும் சமுதாய அமைப்பில் சுற்றத்தார்இ நண்பர் போன்றோரை சார்ந்து வாழ வேண்டியிருக்கிறது. சுற்றத்தாரைப் பேணி வாழ வேண்டும் என்பது அனைத்து சூழலுக்கும் பொருந்தும்படியாக வள்ளுவரால் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது. சுற்றந்தழால் என்ற அதிகாரத்தில் சுற்றத்தாருடைய இயல்பையும்இ சுற்றத்தினரால் ஏற்படும் நன்மைகளையும் சுற்றத்தினரைப் பேண வேண்டிய முறைமைகளையும் பற்றி வள்ளுவர் வழிகாட்டி விளக்கியிருக்கிறார். அன்பில் நீங்காத சுற்றத்தார் அமைந்து விட்டால் அது குறைவில்லாமல் வளருகின்ற பல செல்வங்களையும் ஒருவனுக்குக் கொடுப்பதாகும் என்ற உயரிய கருத்தை,

> ‘விருப்பறாச் சுற்றம் இயையின் அருப்பறா
>
> ஆக்கம் பலவும் தரும்” 522

என்ற திருக்குறள் எடுத்துக் காட்டுகிறது. ஆனால் இன்றைய காலத்தில் சுற்றத்தைப் பேணுதல் என்பது கேள்விக்குறியான ஒன்றாக இருக்கிறது. கடந்த நான்கு ஆண்டுகளாக உலகத்தையே அச்சுறுத்திய பெருந்தொற்று நோயானது அனைவரின் வாழ்க்கையையும் மாற்றிமைத்து விட்டது. அந்நோயின் அச்சுறுத்தல் காரணமாக சுற்றத்தார் வீட்டிற்கும் வருவது என்பது பெரும் சிக்கலாக மாறியது. ஏற்கனவே அறிவியல் அதிதீவிரமாக வளர்ந்து வந்த சூழலில் அனைவருடைய தகவல் பரிமாற்றங்களும் விஞ்ஞான அளவில் விரிந்து உறவின் அளவில் சுருங்கிக் கொண்டு வந்த நிலையில் அவரவர் வீட்டில் அவரவர் மட்டுமே இருக்க வேண்டும் என்று அரசாங்கமே சொல்லும் நிலைக்குத் தள்ளப்பட்டோம். தற்பொழுது அதிலிருந்து நாம் மீண்டு வந்துகொண்டிருந்தாலும் சுற்றத்தாரோடு நேரம் செலவழித்தல் என்பது குறைந்து கொண்டே வருகின்றது என்றுதான் கூற வேண்டும்.

இலக்கியங்களில் வரக்கூடிய உறவு முறைகளின் வழியாக உறவினரோடு எப்படி இருக்க வேண்டும் எப்படி இருக்கக் கூடாது என்பதை நாம் அறிய முடியும். உறவினர்களைப்

பற்றி நல்ல விதமாக எண்ண வேண்டும் என்பது ஒருபுறம் இருந்தாலும் அவர்களைப் பற்றி திருப்திகரமில்லாத பேச்சுக்களே இன்று அதிகம் கேட்கின்றன. அன்றைய காலத்தில் ஒரு வீட்டில் திருமணம் நடக்கிறது என்றால் அவர்களுடைய உறவினர்கள் ஒரு வாரத்திற்கு முன்பே வந்து அந்த வீடு களைகட்டி இருக்கும். மகிழ்ச்சியோடு சண்டைகள் இருந்தாலும் விரைவில் அது மறக்கக்கூடியதாகவும் இருக்கும் ஆனால் இன்று திருமணம் நடக்கும் வீட்டில் உறவினர்கள் வந்து இருக்கின்ற நேரமானது மிகவும் குறைவாகிவிட்டது. இதற்காக காலத்தைக் குறை கூறுவதாஇ அறிவியல் வளர்ச்சியைக் குறை கூறுவதா என்பது சிந்தனைக்குரியது.

நாலடியாரில் ஒரு தாயானவள் கருவுற்றுஇ சுமந்து பெற்றெடுக்கும் வரை தான் அடைந்த துன்பத்தைஇ தன் கையில் குழந்தையைக் கண்ட அளவில் மறந்து விடுவாள். அது போலவே ஒருவன் அடைந்த துன்பம் நலம் விசாரிக்கும் உறவினரைப் பார்த்த பாத்திரத்தில் தெரியாமல் நீங்கும் என்று கூறப்பட்டுள்து என்பதை,

**'அசாஅத்தான் உற்ற வருத்தம் உசாஅத்தன்**
**கேளிரைக் காணக் கெடும்"** 201 - **நாலடியார்**

என்ற பாடலும் விளக்குகிறது. வாழ்க்கையில் இன்பஇ துன்பம் என்பது அனைவருக்கும் வரக்கூடியது. ஆனாலும் அத்தகைய பொழுதில் உறவினர்களோடு இன்பம் இருமடங்காகவும் துன்பம் மிக்க குறைந்தும் இருக்கும் என்பது அனுபவத்தின் வழி அறிய இயலும். உறவினர்களோடு நல்உறவில் இருப்பவர்களுக்குக் கண்டிப்பாக மனபலம் இருக்கும்.

தன்னைச் சார்ந்த உறவினர்களோடு அனுசரித்து வாழ்தல் என்பது அனைவருக்கும் தேவையான பண்பாகும். இவ்வாறு வாழும்பொழுது வரக்கூடிய துன்பங்களுக்குக் கண்டிப்பாக ஆறுதல் கிடைக்கும். ஒவ்வொருவருக்கும் துன்பம் வரும்போது அதை தீர்த்து வைக்காவிட்டாலும் அதற்கான ஆறுதலான வார்த்தைகள் உறவினரிடமிருந்து வரும்பொழுது அத்துன்பத்திலிருந்து மீண்டு வருதல் எளிதாகிறது. மற்றவர்களிடமிருந்து நாம் எதை எதிர்பார்க்கிறோமோ அதை முதலில் நாம் கொடுக்க வேண்டும் என்பது உறவினர்களுக்கும் பொருந்தும். ஆகையால் நல் உறவு வைத்துக் கொள்ள வேண்டியது அவரவரின் பொறுப்பாகும். ஒருவரை நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ இகழ்ந்து பேசுவது என்பது அறச்செயல் அன்று என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும். இதையே

**'எளியர் இவர் என்று இகழ்துரையாராகி ஒளிபட வாழ்தல் இனிது"**

**இனியவை நாற்பது** -.30 : 3 : 4

என்ற பாடலடிகள் விளக்குகிறது. இவ்வாறு பேசாமல் இருந்தாலே உறவுகளைப் பேணி வாழ்தல் எளிதாகவும் இனிதாகவும் இருக்கும்.

ஒருவன் வறுமையாளன் ஆகியபோதும் பழையபடியே அவனிடம் அன்பு பாராட்டுதல் என்பது சுற்றத்தார் இடம் மட்டுமே காணப்படும் தனி இயல்பாகும் என்பதைஇ

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

**'பற்றற்ற கண்ணும் பழைமை பாராட்டுதல்**

**சுற்றத்தார் கண்ணே உள'** -521

என்ற திருக்குறள் எடுத்தியம்புகிறது. ஆனால் இத்தகைய பண்பினை இன்றைய காலத்தில் காண்பது பெரிதும் அரிதாகும். ஏனெனில் போட்டிகள் நிறைந்த உலகில் இன்று உறவினர்களுக்கு இடையிலும் போட்டிகளே நிறைந்து உள்ளது. பெரும்பாலும் இன்று பணம் இல்லையென்றால் மதிப்பு இல்லை என்பது பலரின் இயல்பான பேச்சாக உள்ளது. அனைத்து செயல்களுக்கும் விதி விலக்கு என்று ஒன்றிருக்கும். அதுபோல பழங்காலத்தைய போன்று உறவினர்களோடு சேர்ந்திருக்கும் நேரம் இன்று குறைவானாலும் அதைச் சிந்தித்து சீர்தூக்க வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறோம். இன்றைய தலைமுறையினருக்கு சுற்றத்தாரின் மகத்துவத்தை எடுத்துக் கூற வேண்டும் உறவு முறைகளை எப்படி அழைக்க வேண்டும் என்று கூட தெரியாத அளவில் குழந்தைகள் வளர்வதைக் கண்டு வருத்தப்பட வேண்டியிருக்கிறது. தமிழர்களின் வாழ்வியலை ஊடுருவி பார்த்தால் உறவுகளின் உன்னதநிலை விளங்கும். காக்கையானது உணவைக் கண்டதும் மறைக்காமல் தன் இனத்தைத் தடவி உடனிருந்தே உண்ணும் அத்தகைய இயல்பினருக்கே சுற்றப்பெருக்கமும் உண்டாகும் என்பதை வள்ளுவர்.

**காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்**

**அன்னநீ ரார்க்கே யுலி** 527

என்ற குறளின் வழி விளக்குகிறார். இவ்வாறு சுற்றத்தாரைப் போற்றி வாழ்பவன் சுற்றத்தார் பலராலும் சூழப்படுவான்.

அவ்வாறு ஒருவன் சுற்றம் மிகப் பெற்றவன் என்றால் கண்டிப்பாக அவனுக்கு துன்பம் தர நினைப்பவர்கள் அஞ்சுவார்கள். இன்றைய சூழலில் உறவினர்களைப் பேணுதல் என்பது பெரும் சவாலாகவே இருக்கிறது. அதையும் தாண்டி மனப் பக்குவத்தோடு நல்ல சிந்தனையோடு மற்றவர்களின் மீது மதிப்போடு நடந்து கொண்டு உறவினர்களைப் பேண வேண்டும்.

பொன் பாத்திரத்தில் வைத்த புலியின் நகத்தைப் போன்ற சிறந்த சோற்றைச் சர்க்கரையுடனும் பாலுடனும் உள் அன்பில்லாதவரிடத்து உண்பதைவிட உப்பும் இல்லாத புல்லரிசிக் கஞ்சியை உயிர்போன்ற உற்றாரிடமிருந்து எந்தப் பாத்திரத்திலேனும் உண்ணுதல் இனியதாகும் என்பதை

**உப்பாலில் புற்கை உயிர்போல் கிளைஞர் மாட்டு**

**எக்காலத்தில் தானு மினிது** 206 - **நாலடியார்**

என்ற வரிகளின் வழி நாலடியார் கூறுகிறது. உள்ளன்பு கொண்ட உறவினர்களின் சிறப்பை இப்பாடல் எடுத்துரைக்கிறது. உலக அளவில் பல்வேறு வகையான சமூகங்கள் குடும்ப வாழ்க்கையை நடத்தி வந்தாலும் பண்டைய காலத்திலிருந்து அதற்கென ஒரு கட்டமைப்பை

வைத்து அதை முடிந்தவரையில் காப்பாற்றி வருவதற்கு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகிறது.

இன்பமும் துன்பமும் மாறி மாறி வரும் உலகவாழ்க்கையில் அவற்றைப் பகிர்ந்து கொள்ளும் உரிமையும் கடமையும் உடையார் உறவினரும் நண்பருமாவர்

**அன்பெனப்படுவது தன்கிளை செறா அமை - கலித்தொகை** - 133:9

என்று கலித்தொகை கூறுகின்றது. தன் கேளிர் நெஞ்சு வருத்துமாறு ஒருவன்பால் இருக்கும் செல்வம் தன்னை அழிப்பதோடு தன்னைப் பெற்றவன் குடியை அழிக்கும் என்றும் கூறுகிறது. பண்டைத் தமிழர் போற்றிய சமூக அறங்களுள் விருந்தோம்பல் தனிச் சிறப்புடையது ஆகும்

**விருந்து விதுப்புறூஉம் பெருந்தோட் குறுமகள் - நற்றிணை** : 362: 9

சமூகமாக கூடி வாழும் மனிதர்கள் ஒருவரை ஒருவர் நம்பியே வாழ வேண்டியுள்ளது. ஒருவருக்கு ஒருவர் உதவுதலும் ஒருவர் வாக்கை மற்றவர் நம்பி ஏற்றுக் கொள்ளுதலும் நம் சமூக மரபாகும்.

சுனைப்பூக்களில் தேனுண்டு களித்த வண்டுகள் மாலை நேரத்தில் அவை கூம்பியவுடன் தேனிறைந்த சினைப்பூக்களை நாடிச் செல்லும் நிலையைக் காணும் அந்தி இளங்கீரனார் என்னும் சான்றோர் செல்வமுள்ள போது கூடியிருந்துஇ செல்வம் குறைந்து முடிமையுற்றபோது அவர்களை விட்டு நீங்கிப் பிற செல்வர்களை நாடிச் செல்லும் நன்றியில்லாத மாந்தர்களை,

**நிறைத்தோர்த் தேரும் நெஞ்சமொடு குறைந்தோர்**
**பயனின் மையின் பற்றுவிட் டொரூஉம்**
**நயனின் மாக்கள் போல் வண்டினம்**
**சுனைப்பூ நீத்துச் சினைப்பூப் படர அகநானூறு** - 71 : 1- 4

என்ற பாடலின் வழி நினைவு கூறுகின்றார். அந்தந்தக் காலகட்டத்திற்கு ஏப்ப உறவினர்களின் செயல்பாடுகளைப் பொறுத்தே திரைப்படங்களும் எடுக்கப்பட்டு வருகின்றன. இன்றைய காலகட்டத்தில் இன்றைய சமுதாயத்தினரின் எதிர்பார்ப்பிற்கு இணங்க திரைப்படச் சிந்தனைகளும் வெளிப்படுகின்றன. எந்த ஒரு நல்ல கருத்தாக இருந்தாலும் அதை ஏற்றுக் கொள்ள முடியாவிட்டாலும் ஏற்றுக்கொள்ள முயற்சிப்பதே சமுதாய முன்னேற்றத்திற்கு வழிவகுக்கும். இன்றைய குடும்பத்தில் மூவர் அல்லது நான்குபேர் இருக்கின்றனர். அவர்களும் ஆளுக்கொரு பக்கமாக இருப்பது என்பது வருத்தப்பட வேண்டியதாகும். வீடு எப்படியோ நாடும் அப்படித்தான் என்ற அறிஞர் அண்ணாவின் வாக்கு அனைத்து சிந்தனைக்கும் பொருத்தமானதாகும். கூடி வாழ்ந்தால் கோடி நன்மை என்ற பொன்மொழியானது அனுபவத்துப் பெற வேண்டிய மகிழ்ச்சியின் உச்சமாகும். ஆகையால் ஒவ்வொருவரும் உறவின் உன்னதத்தைப் புரிந்து கொண்டு உண்மையான உள் அன்போடு உறவினர்களிடம் பழக வேண்டும். இளைய சமுதாயத்தினரிடம் உறவுகளின் மேன்மையை உணர்த்தும்

E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024


வகையில் பேச வேண்டும். உறவினர்களோடு நல்உறவு மேற்கொள்ளும் பொழுது கண்டிப்பாக சமுதாயத்தின் மலர்ச்சிக்கும் அது வழிவகுக்கும். தனிமனித மகிழ்ச்சி என்பது சில கணம் மட்டுமே நிலைக்கும். உறவினர்களோடு சேர்ந்து கிடைக்கும் மகிழ்ச்சியானது என்றென்றும் மலரும் மகிழ்ச்சியான நினைவாகவே இருக்கும்.

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

# 44. பெண் சுதந்திரச் சிந்தனைகள்

த.காளீஸ்வரி
முதுகலை இரண்டாம் ஆண்டு தமிழ்த்துறை
திருவள்ளுவர் கலை மற்றும் அறிவியல் மகளிர் கல்லூரி, சூலப்புரம்.

DOI 10.5281/zenodo.10728991.

**Abstract :**

There seems to be a kind of antagonistic relationship between good life and good literature. Bad times and experiences, poverty, personal misery, social twilight, and oppressive regimes lend themselves to producing truly vivid and profound writing. Tamil literature also provides evidence of this, as an example of the women's fiction emerging from India in recent years. This article aims to highlight such evidence.

**முன்னுரை:**

நல்ல வாழ்க்கைக்கும் நல்ல இலக்கியத்துக்கும் இடையே ஒருவித எதிர்ப்பு உறவு இருப்பது தெரிகிறது மோசமான காலங்கள் மற்றும் அனுபவங்கள் வறுமை தனிப்பட்ட துயரங்கள் சமூக அந்திகள் அடக்குமுறை ஆட்சிகள் ஆகியவை உண்மையான தெளிவான மற்றும் ஆழமான எழுத்தை உருவாக்கத் தங்களைக் கடனாகக் கொண்டுள்ளன. சமீபத்திய ஆண்டுகளால் இந்தியாவில் இருந்து வெளிவரும் பெண்களின் புனை கதைகள் ஒரு உதாரணம் இதற்கான சான்றுகளை தமிழ் இலக்கியங்களும் எடுத்துரைக்கின்றது. இவ்வகையான சான்றுகளை எடுத்துரைப்பதற்காக இக்கட்டுரை அமைகின்றது.

**இலக்கியத்தில் பெண்கள்:**

பெண்ணுக்கு முதன்மை தரும் இரு காப்பியங்களாக **சிலப்பதிகாரம், மணிமேகலை** உள்ளன.*செய்யுளின் பாடுபொருள் பெண்ணியத்தை மையமாகக் கொண்டது. பெண்மைக்கு மென்மை பூசி பேரிலக்கியம் படைத்திட்டனர். பெண்கள் மென்மையானவர்கள் என்ற கருத்திலேயே இலக்கியவாதிகள் இலக்கியங்கள் படைத்துள்ளார்கள். பெண்மையை ரணமாக்கி புராணங்கள் படைத்திட்டனர். பெண்களுக்கு துன்பம் தருகின்ற வகையில் பல இலக்கியங்கள் தோன்றியுள்ளது.

சங்க இலக்கியங்களால் நிறைய பெண் பாற் புலவர்கள் இருந்திருகின்றார்கள். என்று பெருமை கொள்கின்றோம். அதே நேரத்தில் பாடப்பட்ட பாடல்களில் எழுதியவர்கள் ஆண்களாக இருந்த போதும் பெண்களாக இருந்த போதும்,தலைவனே அதாவது ஒரு ஆணே (மறந்தும் கூட பெண் தலைமை இடத்தில் இல்லை) சார்ந்து அவன் மன்னன்னாக இருந்தாலும் சரி அவனுக்காக காத்திருப்பது அவனில்லாது போனால் வாழ்க்கை தொலைந்து போனதாய் விரக்தியில் தவிப்பதுமாய் தான் பெண் நிலை சித்தரிக்கப்பட்டிருக்கின்றது. காமத்தை பெண் உணர்வை பேசுவதாய் இருந்த ஔவையின் சில பாடல்களும் அந்த ரகங்களே.

*ஈன்று புறந்த தருதல் என் தலை கடனே” என்று அன்று பாடிய வரிகள் இன்னமும் அதற்கான கட்டமைப்பைச் செய்து கொண்டிருக்கின்றன.பாடப்பட்டவர் பட்டியலில் ஏறக்குறைய 110 பேர்கள்

வரை பாடல் பெற்றவர்களாக இருகின்றார்கள்.அந்த பட்டியலில் ஏன் ஒரு பெண் கூட இடம் பெறவில்லை . பெண்கள் செயல்படவே இடம் இல்லாது போனதாலே? அல்லது அவர்கள் செயல்பட்ட போதும் அதை வெற்றியாக கண்டவர்கள் இல்லாததா? காரணம்

**"வினையே ஆடவர்க்கு உயிரே**

**மனை புற மகளிர்க்கு அவ்வாடவர் உயிரே**

எனும் இந்த கவிதை வரிகள்

இன்று பெண்களின் பேச்சு நிராகரிக்கப்பட்டது போலவே ஔவையின் சொற்களும் மதிக்கப்படாமல் போயிருக்கக் கூடுமென நம்மை நினைக்க வைக்கிறது. அப்படியிருந்த போதும் அங்கீகாரங்களே எதிர்பார்க்காது. யாழிசை போன்று என்று மயங்கவும் வேண்டாம் காலத்தோடு ஒத்து வராது. போல தோன்றவும் செய்யலாம், புரியவில்லை என்று உரைக்கலாம்.

ஆனாலும் அதையெல்லாம் மீறி தந்தைக்கு குழந்தை சொல் எவ்வளவு மதிப்பானதோ என் வாய்ச் சொல்லும் அத்தகையவையே என்று சொல்லும் சொற்களில் தெரியும் தன்னம்பிக்கையே அந்த கவிதையின் வாழ்தலுக்கு காரணமென்று நான் நினைக்கிறேன். அன்று இருந்த அதே நிலை இன்றும் மாறவில்லை.

**"எத்திசை செலினும் அத்திசைச் சோறு"**

என்ற வரியிலும் அந்த கர்வம், தன்னம்பிக்கை கலந்த கர்வம் இருப்பது முக்கியம் என்று எனக்கு படுகின்றது ஆதிக்க சிந்தனையின் அடிமை மனோபாவம் பெண்ணுக்குள்ளும் புரையோடிப் போய் இருந்து கொண்டிருக்க அதை தவிர்க்க முடியாமல் தவிப்பது தொடர் முயற்சியாகவே இருந்து வந்து கொண்டிருக்கின்றது. தொடர்ந்து முயலுதல் என்பதுவே இயக்கமாய் இருக்க இன்று எழுத வந்த பெண்ணெழுத்துக்களிலும் அந்த முயற்சிகளில் வென்று விட்டோமோ என்றால் அப்பவும் பெண்ணே பெண் உணர்வுகளே ஆணுக்கானதாய் படைத்துத் தரும் மனோபாவமும் அல்லது காத்து தவிப்பது மாகவே முன் வைப்பது வருத்தம் தருவதாகவே இருக்கின்றது.

காத்திருப்பதும், மகிழ்விப்பதும், மன்னிப்பதுவுமே தான் பெண்ணுக்கான இயல்புகளாக அடையாளம் படுத்தப் படுவதை அந்த காலம் முதல் இன்று வரை பாலியல் சுதந்திரக் கவிதைகளிலும் கூட ஏன் விட்டு வெளியேற முடியவில்லை என்று நாம் யோசிக்க வேண்டும். உடைத்துக் கொண்டு எங்கு போய் விழுகின்றன என்றால் தொடங்கிய இடமே போய் விழுவதாக இருக்கின்றது.

பட்டினத்தார் பாடல்கள் மிக மோசமாக சித்தரிக்கும் பெண்களே கச்சித் திரு அகவல்-4 பாடலில் முழுக்க பெண் உடலே நிந்தித்து பாடியிருப்பார். பெண்ணே நிந்திப்பதாக சொல்லுகின்ற அப்பாடலிலும் உற்று நோக்கினால் பெண்ணே உடல் சார்ந்து பார்ப்பதைத்தான் வெறுத்திருக்கின்றார்.

காமுதூரை சேரும் சிறு குழி என்றும் போக மாதரை போற்றுதல் ஒழிந்ததே என்றும் அவர் சொல்ல பெண் ஆண் என்றில்லாது உடலே மையப்படுத்தி வாழும் வாழ்க்கையை வெறுத்து அவர் பாடல்கள் அமைந்திருப்பதை காணலாம்.

”மாதவி மயங்காதிருந்தால் மணிமேகலையை மாய்த்திருப்பாள்.
குந்தியவள் நினைத்திருந்தால் கர்ணனையே கலைத்திருப்பாள்.
சீதையவள் கொதித்தெழுந்தாள் இராமனையே எதிர்த்திருப்பாள்.
சந்திரமதி வெகுண்டிருந்தால் அரிச்சந்திரனைப் புதைத்திருப்பாள்.
ஆண் வார்த்த இலக்கியங்கள் ஆணாதிக்க வெளிப்பாடுகள்.
ஆண் வார்த்த காப்பியங்கள் பெண்ணுக்கிழைத்த கொடுமைகள்.”

இப்படி ஒவ்வொரு இலக்கியங்களையும் இலக்கியங்களின் வழியும் ஆணாதிக்கத்தை வெளிப்படுத்தியும் பெண்மையை இழிவுப்படுத்தியதையும் காண முடிகிறது என்று கவிஞர் பெண்ணியத்தை இக்கவிதையின் வழி வெளிப்படுத்தியுள்ளார்.

**சங்க இலக்கியத்தில் பெண்கள்:**

பெண்ணிய சிந்தனை என்பதும் பெண்ணிய இலக்கியம் என்பதும் நமக்கு புதிதல்ல சங்க கால புலவர்களில் பல பெண்பாற் புலவர்கள் வாழ்ந்துள்ளனர் ஔவையார் அவர்களில் புகழ்ப்பெற்றவர் பின்னர் தோன்றிய பக்தி இலக்கிய காலத்திலும் பல பெண் கவிகள் இறையை போற்றி பாடி அமரத்துவம் எய்துள்ளனர். **ஆண்டாள், காரைக்கால் அம்மையார்** போன்றோர் குறிப்பிடத் தக்கவர். அக்கால பெண்பால் கவிகளின் பாடுபொருள் இயற்கை, இறை பக்தி, நன்னெறி கூறுகள் போன்றவற்றை அடிப்படையாக கொண்டிருந்தது. அக்காலகட்ட மக்களின் வாழ்க்கை முறையில் பெண்களின் பங்களிப்பு பலவகையிலும் மாறிக் கொண்டே வந்திருப்பதை இலக்கியங்களில் காண முடிகிறது. சங்க கால மகளிரிடம் இருந்த சுதந்திரம் பின்னர் தோன்றிய பக்தி காலத்தில் குறைந்து காணப்படுகிறது. பெண் தன் துணையை தேர்வு செய்வதில் சங்க காலம் கூடுதல் சுதந்திரம் தந்திருக்க வேண்டும்.

**“யாழொடும் கொள்ள; பொழுதோடும் புணரா;**
**பொருள் அறிவாரா; ஆயினும் தந்தையர்க்கு**
**அருள் வந்தனவால் புதல்வர் தம் மழலை;**
**என் வாய்ச் சொல்லும் அன்ன;ஒன்னார்**
**கடிமதில் அரண் பல கடந்து**
**நெடுமான் அஞ்சி நீ அருளல் மாறே**
**"என் வாய்ச் சொல்லும் அன்ன"**

போன்ற சங்கப் பாடல்கள் உணர்த்தும் பெண் வாழ்க்கை சுதந்திரம்

MUTHTHARASI – ART LITERARY CULTURE TAMIL JOURNAL
முத்தரசி - கலை இலக்கியப் பண்பாட்டுத் தமிழ் ஆய்விதழ்
E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

சங்க காலங்களில் வாழ்ந்தவர்கள் செம்புலப் பெயல்நீராய் இரண்டற கலந்து வாழ்ந்தனர் அவர்களுள் ஏற்ற தாழ்வு ஆண் உயர்ந்தவன் பெண் தாழ்ந்தவள் என்ற பாகுபாடு இல்லை. பெண் என்பவள் இல்லறம் நடத்துவதுடன் நல்லறம் காட்டும் நல்ல மதியூகியாக இருந்தாள் ஆதலால் பெண்கள் எப்போதும் மதிக்கப்பட வேண்டியவள். சங்க காலம் மட்டும் அல்ல எல்லா காலமும் பெண்கள் தாயாய் தமக்கயாய் மனைவியாய் மகளாய் நம் வாழ்வில் ஒன்றர கலந்து நம்மை வழி நடத்துகின்றனர். அவர்களை மதித்து நடந்தால் நம் வாழ்வு செழிக்கும்.

**பெண்மையைப் போற்றுவோம்:**

பொறுமை மற்றும் பண்புக்கு உள்ளடங்கிய சொல் **"பெண்"** பொறுமைக்கு இலக்கணமாய் இருந்தவள் கண்ணகி. பல புராணங்களும் இதிகாசங்களையும் பெண்ணின் பொறுமையை உணர்த்தி உள்ளது. ஏன் இக்காலங்களிலும் வாழும் பல பெண்கள் உயர் பதவிகளிலும் அதிகாரத்தில் இருந்தாலும் தனது வீட்டில் பொறுமை காத்து தான் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

**சங்க காலத்தில் பெண்களின் சிறப்புகள்:**

தனது ஒரு வரியில் புலமையை வெளிப்படுத்தியவர் தான் **"ஔவையார்"** இராணி **"வேலு நாச்சியார்"** இந்தியாவின் முதல் பெண் விடுதலைப் போராட்ட வீராங்கனை ஆவார். **ஜான்சி ராணி"** இவர் இந்திய சுதந்திரத்திற்காக நடந்த முதல் போரில் கலந்து கொண்ட முன்னனி வீரர்களில் ஒருவராவார். **பண்டித இராமாபாய் சரஸ்வதி"** ஒரு சமூக சீர்திருத்தவாதி பெண்கள் முன்னேற்றத்திற்காகப் பாடுபட்டவர்.இப்படி சங்ககாலத்தில் பெண்கள் தனது புலமை, அறிவு ,ஆட்சி, திறமை, போராட்டம் எதையும் கண்டு அஞ்சாமை துணிச்சலாய் எதிரிகளை போரில் வீழ்த்துதல் திறமைகளையும் வெளிப்படுத்துதல் தனக்கென்று ஒரு ஆளுமை திறனை கொண்டவர்கள் பெண்களுக்கெல்லாம் முன் உதாரணமாக வாழ்ந்து வரலாற்றில் முக்கிய இடத்தை பிடித்தவர்கள்.

**சங்க கால ஔவையார்:**

சங்க இலக்கியங்களில் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்ற இருவகைகளிலும், சங்கம் மருவிய நூல்கள், பதினெண் கீழ் கணக்கு என்ற வகையிலும் பகுக்கப் பெற்றன. எட்டுத்தொகை நூல்களில், ஔவையார் இயற்றிய 59 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. ஔவையார் பாடிய பாடல்கள் சங்க இலக்கியங்களில் குறுந்தொகையில் 15,நற்றிணையில் 7,அகநானூற்றில் 4,புறநானூற்றில் 33,என்ற எண்ணிகையில் அமைந்துள்ளன. தம்மை அன்புடன் ஏற்றுக்கொண்டு நெடுங்காலம் தம் அரசவையிலேயே ஔவையாரை அமர்த்தி அவர் புலமையை மதித்தவன் அதியமான் நெடுமான் அஞ்சி ஆவான். ஔவையார் பாடிய அகநானூற்றுப் பாடல் ஒன்றில் "தன்னை விட்டு நீங்கி பொருள் தேடிச் சென்ற காதலர் வரவேண்டிய காலம் கடந்த பின்னும் வாராமையால் காதலியின் மேனியில் சிறுமுளை போன்ற பசலை நோய் தோன்றியது. பிரிவுத் துன்பத்தால் மிக வாடிய நெஞ்சத்தில்

E-ISSN : 2584-1238 SPL.ISSUE – 1
MARCH – 2024

படர்ந்தது அதனைக் கண்ட ஊரர் மெல்ல மெல்ல தமக்குள் இக்காதலைப் பற்றி பேசினர் அம்பல் என்ற வதந்திக் களைகள் பரவின பின்னர் குறையாத காதலால் தளிர்கள் நிறைந்தன. நிலமெங்கும் நிழல் பரப்பிய மரமாய் வளர்ந்தது!" என்ற பொருள்.

**மகளிரின் பெருமை:**

**பெண்ணின் பெருமையை உயர்த்தும் நாடே இந்த மண்ணுலகில் உயர்ந்துள்ளது.** பண்டைய காலத்தில் பாரத நாட்டில் பெண்களுக்குப் பெருமதிப்பு இருந்து பெண்ணை **"வாழ்க்கைத் துணை"** என்று காட்டினார் **ஔவையார்** என்ற பெண்பாற் புலவர் தூதுவராக சென்றதைப் புறநானூறு காட்டுகிறது பெண்களைச் சக்தியின் உருவமாகக் கருதிய பாரத நாடே பெண்களுக்கு இருந்த மதிப்பையும் மரியாதையையும் இடைக்காலத்திலும் பிற்காலத்திலும் குறையலாயின.

**பாரதியும் சமூகச் சீர்திருத்தமும்:**

மண்ணுலகில் உள்ள உயிர்கள் எல்லாம் கடவுள் என்றால் பெண்ணும் தெய்வம் அல்லவா? என்று கேட்டு அவளைத் தெய்வமாக மதிக்க வேண்டும் என்ற நோக்கத்தில்.

**விடுதலைக்கு மகளிரெல்லோரும்**
**வேட்கை கொண்டனம்:**

என்று பெண்கள் விடுதலை மீது விருப்பம் கொண்டதாகப் பாடியிருக்கிறார்.

**முடிவுரை:**

**"கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு**
**என் ஆற்றுங் கொல்லோ உலகு"**

பிறர்க்கு உதவுவது அவ்வுதவினைப் பெற்றவர் திரும்பச் செய்வதை எதிர்பார்த்து அன்று ஒருவர் செய்ததற்குத் திரும்பச் செய்து தான் ஆக வேண்டும் என்றால் மழை தரும் மேகங்களுக்கு இந்த உலகம் திரும்ப என்ன செய்து விட முடியும் என்ற திருக்குறளுக்கு ஏற்றவாறு வாழ்பவள் தான் **"பெண்"**

**துணைநூற்பட்டியல்**

- சுப்பிரமணியன் ச.வே -குறுந்தொகை மெய்யப்பன் பதிப்பகம், புதுத்தெரு.
- புலியூர் கேசிகன் -திருக்குறள்,பாரி நிலையம்,சென்னை.

